# பதி பசு பாச விளக்கம்

33

ஸ்வீடன்பர்க் சுவாமியார்
லத்தீன் பாஷையில் இயற்றிய இந்நூல்
சென்ற "நியு ரிபார்மர்" பத்திராதிபரும்
சுத்தாத்துவித சைவ சித்தாந்தபரமாக நூற்கள் பல
இயற்றியவருமான

D. கோபால செட்டியாரால்
தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு
அவரால்
லண்டன் ஸ்வீடன்பர்க் சொசைட்டியாருக்காக
சென்னையில் பிரசுரிக்கப்பட்டது

சென்னை
B. N. அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது

 1930 [Price Rs. 1-8

# முகவுரை

பதி பசு பாசங்களின் பொதுவியல்பு சிறப்பியல்பு, எனு மிரண்டையும் மயக்கமற காட்டுதற்கு வெளிப்படுத்தப்பட்டது, வேத வேதாந்த சித்தாந்தங்களுக்குத் திறவுகோலாயுள்ள சிவஞானபோத மாகும். அதன் பொருளை தெளிவாய் உணர்த்துதற்கென்றே அவதரித்த திருவருட் தோன்றலாகிய மாதவ சிவஞான் சுவாமிகள், சூத்திரத்துக்கு பிண்ட பொழிப்புரையும், மெய்கண்ட தேவனுர் அருளிய கருத்துரை முதலிய உரைக்கு உரையும் அருளிச் செய்த னர். இவ்வுரை சிவஞானபோத சிற்றுரை என வழங்குகிறது. அம் மட்டோ, பேருரையாகிய பாஷியமும் செய்தனர். இத் தமிழ்மொழி சிவஞான போதத்திற்கு, பாண்டிப் பெருமாள் உரை ஒன்றும் அச்சில் வந்திருக்கிறது. மேலும், நீலகண்ட சிவாச்சாரியார் பிரம சூத்திரத் துக்கு சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை அனுசரித்து பாஷியமும் இயற்றியுள்ளார். இந்த பாஷியங்கள் வெளிவராதிருந்தால் சைவ சித்தாந்தம் உணர்ந்தவர் சிலரேவாக முடிந்திருக்கும். இந்நூலும், பதி, பசு, பாசம் என்பவைகளைக் குறித்தே, சைவ சித்தாந்தத்தை அனுசரித்து, ஸ்வீடன் தேசத்தில் திருவருள்பெற்ற அரும்பெறல் அனுபூதிமானுகிய சுவாமியார் ஸ்வீடன்பர்க் என்பவரால் கி. பி. 1763-ம் வருஷத்தில் லத்தீன் பாஷையில் இயற்றப்பட்டது. இது சிவஞான போத கோட்பாடுகளுக்கு ஓர் பெரும் பாஷியமாகவே யிருக்கிறது. அவர் ஈசுவர விசாரணையில் வைராக்கியமுடையவராய், ஞானக்கண் திறக்கப்பட்டு, அரன் அருளால், உலகத்தில் இதுகாறும் வெளியிடப்படாத பல தெய்வ உண்மைகளை உலகினர் அறிந்து உய்யும்பொருட்டு, திருவாய்மலர்ந்தருளிய நூல்களில், இது மிகவும் சிறப்புடையது. பல அறிஞர்கள் இந்நூலை வாசித்துப்பார்த்த பிறகு, இதிலில்லாத ஞானம், உலகத்தில் எந்த ஞான நூலிலும் கிடையா தென்பர்.

இந்த பாஷியத்திற்கும், முன்னிருக்கும் பாஷியங்களுக்கும் உள்ள பேதம் யாதெனில், முன் பாஷியங்கள் நவீன மேல்நாட்டு பூத சாஸ்திரங்களை (Science) அனுசரித்து எழுதப்பட்டவைக ளல்ல. இப்பாஷியம் அப்படி எழுதப்பட்டுள்ளது. இதுவரையில் வெளிவந்த நூல்கள், கடவுளைப்பற்றியும் ஆன்மாவைப்பற்றியும் அவ ருடன் ஐக்கியப்படுதலைப்பற்றியும் கூறியவைகள் எல்லாம், அவை களைக் குறித்து மனிதர்களுக்கு ஒரு திட்டமான அபிப்பிராயத்தை வெளியிடாமல் புதைப்பொருளாகக் கூறியதால் மானிடர் மயங்கி நிற்கின்றனர். இந்நூல் அவைகளைப்பற்றி நூதன வழியில் யாவரும் அறிந்துகொள்ள விளக்கிக்காட்டுகின்றது. புது கருத்துக்கள் இதில் அமைந்திருப்பதால் உலகத்தினர் அவைகளை கவனித்தல் ஆவசியகமாகிறது. பழகினவழியில் கீர்த்தியுடன் செல்பவர் பலரே யாவர். புது பாதைகளை திறப்பவர் சிலரேயாகும். அநேக நூற்றாண்டு களாக இததேசத்தில் தத்துவ சாஸ்திரிகள் மலைவுவுற்ற விஷயங்களை நம் சுவாமியார் தெளிவாய் விளக்கிக் காட்டுகின்றனர். இந்நூல் ஓர் புதிய வெளிப்பாடு என்றே சொல்லலாம். கொஞ்சம் விடா முயற்சி யைக்கைக்கொண்டால், இந்நூலின் கருத்துக்களை எளிதில் அறிந்து கொள்ளலாம்.

கடவுள் இருக்கிறாரென்பதற்கு கர்ண பரம்பரையாக ஏற்பட்ட ரூபகாரங்கள், தற்கால(Science)நவீன பூதசாஸ்திரங்களால் உறுதிப் படுத்தப்பட்டபோதிலும், அவர் இருக்கிறார் என்கிற ரூபகாரத்துக்கு மேல் சென்று, கடவுளின் சில பிரதான சுபாவத்தையும், பிரபஞ்சத் துக்கும் அவருக்குமுள்ள சம்பந்தத்தையும் காட்டும் சில நூதன விஷயங்கள் சொல்லப்படவேண்டும். அவ்விஷயங்கள் இந்நூலில் கூறப்பட்டுள்ளன. இந்நூலில் வெளிபடும் தத்துவதிரயங்களைக் குறித்த விவரங்களை எந்த மேல்நாட்டுப் பூதசாஸ்திரமும் (Science), தத்துவ சாஸ்திரமும் எட்டமுடியாது. இதில் கூறும் விஷயங்கள் சாதாரண சோதனைக்கடுத்த ரூபகாரங்களுக்கு மேற்பட்டிருப்பதால், அவ்விஷயங்கள் மேம்பாடுள்ளதாகவே இருக்கின்றன. இந்நூலா

சிரியர் (Science) மேல் நாட்டுப் பூதசாஸ்திரங்களை நன்கு உணர்ந்த ஓர் Engineer என்றும், அவர்தான் முதலில் உலகில் கீழ் நீர்க் கப்பல், ஆகாயக் கப்பல் முதலியவைகளை ஏற்படுத்த வழிவகைகளைக் கண்டுபிடித்தவரென்பதையும் மனதில் வைக்கவேண்டும்.

சுத்தாத்துவித சைவசித்தாந்த நூலாயிருக்கும் இந்நூல் வெளிவந்த பின் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் அநேகர் இக் கருத்துக்களை ஏற்ற ஓர்வகை சைவராயினர். நான் இயற்றிய "Swedenborg and Saiva Siddhantha" எனும் நூலை ஆயிரம் ஆயிரங்களாக அப்பிரதேசங்களிலுள்ளவர்கள் வாசித்தனர். அங்கே சைவ சித்தாந்தமும் வெளிப்பட்டது. அங்ஙனமே ஸ்வீடன்பார்க் இயற்றிய நூல்களும் இந்தியாவில் ஆவலுடன் வாசிக்கப்பட்டு, பெரும் நன்மைகளை விளைவிக்கின்றன.

பூர்வகாலமுதல், தத்துவ சாஸ்திர ஞானம் உலாவிய இத் தேசத்திலும்கூட அறிந்திராத, அநேக ஞான உண்மைகள் இதில் கூறியிருப்பதினாலும், நம் இந்திய சகோதரர்கள் அதன் பயனை அடையும்பொருட்டு, லத்தீன் பாஷையில் உள்ள இந் நூலை தமிழில் மொழிபெயர்த்துள்ளேன். அதை யாவரும் வாசித்து அதன் பயனை யடையவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

"எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என திருவள்ளுவ நாயனார் கூறினார். ஆகையினால், உண்மை யார் மாட்டுளதாயினும், நாம் அவரிடமிருந்து அறிதல் நம் கடமையே யாகும்.

பதி பசு பாச விளக்கம் எனும் இந்நூல் பிரபஞ்சத்தைக் குறித்த தத்துவ சாஸ்திர இணையற்ற சங்கிரகமாயிருப்பதுடன், ஸ்வீடன்பார்க் சுவாமியாரின் தத்துவ சாஸ்திர ஞானத்தின் முழு சங்

கிரகமாகவுமிருக்கிறது. முழு நூலையும் சுருக்கமாய்க் கூறினால், இது விசதமாகும்.

முதல் பாகமானது பின்வரும் பாகங்களில் குறிப்பாய் சொல்லப்படுகிற சித்தாந்தங்களின் முகவுரையாயிருக்கிறது. இப்பாகத்தில் கடவுளின் சுபாவத்தைப்பற்றி நூதனமாக அநேக விஷயங்கள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. பரம இச்சாசத்தியும் பரமஞானசத்தியும் பொருளென்றும், உருவமென்றும், கடவுள் காலஇடவரைக்குட்படாதவர் என்றும் விளக்கும் விஷயங்கள் அதிசயிக்கத்தக்கதாயிருக்கின்றன. இரண்டாவது பாகம், சிவாதித்தன் அல்லது சிவசூரியனைப்பற்றிப் பேசுகிறது. இச்சிவசூரியன்தான் பராசத்தி யாகியவெளிவரும் பிரான். இவரிட அதிசூக்கும பஞ்சகிருத்தியங்களும், பரநடனங்களும் இப்பாகத்தில் தெளிவாய் கூறப்பட்டுள்ளன. நம் திருமுறைகளில் அமரர் உலகு என்று கூறப்படும், சூக்குமலோகத்துடன் அநேக வருஷகால அனுபவத்திலிருந்தும் பார்வையிலிருந்தும், நம் ஞானியார் அறிந்துகொண்ட அநேக இறந்த பின் ஏற்படும் வாழ்க்கையின் விஷயங்கள் கூறப்பட்டுள்ளன. மேலும் அவ்வானோர் உலகத்து சுபாவங்களும் விரித்துரைக்கப்பட்டிருக்கின்றன. மூன்றாவது பாகம், சுத்தாத்துவித சைவசித்தாந்தத்தின் கொள்கையாகியதும், நீலகண்ட சிவாச்சாரிய சுவாமிகள் அபூர்வபரிணாமமென்று பெயரிட்டதுமாகிய, காரண காரியவேற்றுமையை நம் நூற்களில் காணப்படாத அநேக விவரங்களுடன் தெரிவிக்கிறது. சுவீடன்பர்க் சுவாமியார் மானிட சரீரத்தின் சாஸ்திரத்தை பரிசோதனை செய்த காலத்தில்,பிரகுருதியில் அபூர்வபரிணாம காரியப்பாட்டின் சிறப்பைக் கவனித்தார். தான் பின்னர் எழுதிய நூல்களில் அந்த ஞானத்தை மனிதனிட மனதுக்கும் ஞானநிலைக்கும் பரப்பினார். அதனால் அறிந்துகொள்ளக்கூடாத அநேக விஷயங்களை அறிந்துகொள்ளும் படி செய்தனர். இந்த அபூர்வபரிணாம வாதத்தை ஏகான்மவாதிகள் வாசித்தால், தங்கள் குற்றமுள்ள பேச்சுகளை விட்டு விடுவார்கள். நான்காவது பாகம் சிருஷ்டியை விளக்குகிறது.

தாயுமானவர் கூறிய,

ஆக்கி யளித்துத் துடைக்கு மத்தொழில்
அத்தனை வைத்து மெள்ளத் தனையேனும்
தாக்கற நிற்கும்''

திறமும்,

"பாராதி பூதமெல்லாம் பார்க்குங்கா லப்பரத்தின்
சீராக நிற்குந் திறங்கண்டாய்"

என்கிற திறமும் வெகு நன்றாய் விளங்கும்படி கூறப்பட்டிருக்கின்றன.

ஐந்தாவது பாகம் அன்னுவயசித்தாந்தமாகிய காரண காரிய சம்பந்தக் கொள்கையை மனிதனுடைய சரீரத்துக்கு ஆரோபித்து கடவுள் இருதயத்திலிருக்கிறார் என்கிற இரகசியத்தை வெளிப்படுத்துகிறது. இது மேல்நாட்டு பூத சாஸ்திரத்தை அனுசரித்து கூறப்பட்டுள்ளது. இந்த விவரங்கள் நம் தமிழ் நாட்டில் கூறப்பட்டதே யில்லை என்பது சத்தியம். இந்த பாகத்தை வாசித்துப் பார்த்தால் இதன் உண்மை விளங்கும். மேலும் இப்பாகத்தில்,

"மன்னும் பரவெளியை மனவெளியி லடைத்தறிவை
என்னு மொருநினைவை யெழுப்பிநிற்ப தெக்காலம் ?"

அப்படித் திருவருளை நினைத்துக்கொண்டிருக்க வழிவகையும்,

"தன்னுயிரைக் கொண்டு தான்பிரிந்த வாறதுபோல்
உன்னுயிரைக் கொண்டிங் கொடுங்குவது எக்காலம் ?"

அப்படித் திருவருளை ஆதரவாகக்கொண்டு இவ்வுலகில் ஜீவன் முத்தனாய் வாழும் விதமும் கூறப்பட்டிருக்கின்றன.

சுவாமியார் ஸ்வீடன்பர்க் என்பவர் இந்நூலில் அன்பைக் குறித்த முழு சித்தாந்தத்தையும் வெளியிடுகின்றனர். சுருங்கச் சொல்லில், அச்சித்தாந்தமானது அன்பு உயிரென்றும், உயிர் அன்பென்றும், கடவுள் அன்பென்றும், அன்பே கடவுள் என்றும், அன்பே சிருட்டிக்கப்பட்ட பொருளென்றும் ஏற்படுகிறது.

இந்த பிரதிக்ஞைகளின் உண்மை அன்பின் சுபாவத்தை அனுசரித்திருக்கிறது. இவர் வெளிப்படுத்தும் அன்பைக் குறித்த சித்தாந்தத்தை ஒருவர் நன்கு அறிந்துகொண்டால், பதி பசு, பாச விஷயங்களெல்லாம் கரதலாமலகம்போல் அறிந்து கொள்ளலாம்.

சிவம் அன்பென்று எல்லாருக்கும் தெரியும். அன்பே சிவம் என்பது சிலருக்குதான் தெரியும். திருமூலர் கூறிய அடியில் கண்ட பாட்டின் கருத்து அறிந்தவர் சிலரேயாம்.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவதாரு மறிந்திலார்
அன்பே சிவமாவதாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந் திருந்தாரே."

சிவம் அன்பு என்று கூறினல், சிவம் இறுதியான உண்மைப் பொருளாகிறது. அன்பே சிவமென்று கூறினல், அன்பு இறுதியான உண்மைப் பொருளாகிறது. இவ்விரண்டுக்கும் வித்தியாசங்கள் பல வாகின்றன.

இந்நூலின் முதல்பாகம் அன்பு மனிதன் உயிரென்று ஆரம் பிக்கிறது. இதை விவரித்தல் இப்புத்தகத்தின் முதல்கருத்து. "அன்புகூறல்" அல்லது "நேசித்த"லென்பது யாவரும் சாதாரண மாய் உபயோகிக்கும் பதமாயிருக்கிறது. அங்ஙனமாயினும் அவ் வன்பு என்னவென்று யாருக்கும் தெரியாது. ஏனென்றால், அன் பின் சுபாவம் என்னவென்று ஒருவர் கேட்டால், நாம் அதைப்பற்றி திட்டமான அபிப்பிராயம் கொடுக்க சக்தியற்றவர்களாயிருக்கிறோம். அன்பென்பதை நாம் ஓர் உணர்ச்சியாகவும், கருத்தாகவும், ஊக்க மாகவும், மனேசலனமாகவும் மட்டும் அறிந்துகொள்ளுகிறோம். அதை ஓர் குறிப்பிட்ட ஆசையின் நிலையாகமட்டும் அறிகிறோம். இவ்வித அபிப்பிராயமானது அதை அறிந்துகொள்வதற்கு தடை யாயிருக்கிறது. அப்படி ஒருவன் அன்பின் சுபாவத்தை அறிந்து

கொள்ளாவிட்டால், அது சூனியமென்றும்; சில புலன்களிலிருந்தும், சம்பாஷணைகளிலிருந்தும் வரப்பட்டதென்றும், இம்மாதிரியாக, தன்னை அசைக்கிற ஏதோ ஒன்று என்றும் தீர்மானிக்கிறான். அன்பு ஒரு பொருளாக இருக்கவேண்டுமானால் புறம்பான ஒரு பொருளாக இருக்கவேண்டுமென்று சொல்லுவார்கள். இந்நூலாசிரியர் அது பிழையானதென்றும், அன்பு புறம்பானதாய் அல்லாமல், ஒரு பொருளுக்கு சேர்ந்ததாய் அறியப்படுகிறதென்றும் கூறுகிறார். மேலும் அன்பைப்பற்றி, "அது ஒருவனிட உயிராகவே யிருக்கிறதென்றும். ஒருவன் முழு சரீரத்துக்கும், அவன் எல்லா சிந்தனைகளுக்கும் உயிராக இருப்பது மட்டுமல்லாமல், இவைகளின் விவரணங்களுக்கும் கூட உயிராக இருக்கிறதென்று" அவர் சொல்லுகிறார். வேறுவிதமாய்க் கூறில், அன்பு, மனிதனிடவும், சரீரத்தினிடவும், மனதினிடவும், அந்தரங்கமானதும் சர்வவியாபகமானதுமான உயிராயிருக்கிறது. ஒருவன் அன்பின் ஆசைகளை நீக்கி, அதனால் உண்டாகும் பலனை யோசித்தால, அன்பு உயிரென்பது அவனுக்குத் தெரியவரும். அன்பின் ஆசை நீங்கினபோது நாம் ஒன்றையும் நினைக்கமுடியாது. அது குளிர்பட்டால், சிந்தையும், பேச்சும், செயல்களும் சோர்வடைகின்றன. அன்பு, மனிதனிட உயிர் என்று ஒருவனுக்குத் தெரியாவிட்டால், அந்த உயிரானது இந்திரிய ஞானமென்றும், செயலென்றும், சிந்தனையென்றும் அவன் நினைப்பான். அங்ஙனமே, பூர்வ தத்துவ சாஸ்திரிகள் குற்றமான கருத்துக்களை கொண்டனர். நமது சுவாமியார் இவைகளை எல்லாம் கடந்து, சிந்தனையின் சுபாவத்தை ஆழ்ந்து யோசித்து, முடிவு அல்லது நோக்கம் என்பதின் ஓர் தத்துவ ஞானத்தை அடைந்து, முடிவு, காரணம் காரியம் என்கிறதைக் குறித்த ஓர் சித்தாந்தத்தை நூதனமாக உரைக்கலாயினர். அதற்கு அன்னுவய சித்தாந்தம் எனப்பெயரிடலாம். இந்திரிய ஞானமும், செய்கையும், சிந்தனையும், உயிராகாது. ஆனால் சிந்தனையானது உயிரின் முதல் காரியம், இந்திரிய ஞானமும் செய்கையும், இரண்டாவது காரியம். சிந்தனையானது உள்ளுக்குள்

ளானதாகவும் புறம்பானதாகவு மிருக்கலாமாகையால், நோக்கங்களை யுணரும் மிகவும் அந்தரங்கமான சிந்தனை மட்டும், நிஜமாய் உயிரின் முதல்காரியமாகிறது. இந்நூலில் அவர் இது விஷயம் கூறுவதை நன்கு அறிந்துகொண்டால், இந்த உண்மை விளங்கும். இவ்வித மாக அன்பு மனிதன் உயிர் என்று கூறிய பின், அன்பிற்கே, அதாவது, தானேவாக இருக்கும் அன்பைக் குறித்து பேசுகிறார். முன்னரே, அன்பும் உயிரும் மனிதனில் ஒன்றென்றும், மனிதனிருப் பதும் செய்வதுமாகிய எல்லாவற்றிற்கும் அன்பானது மூலமென் றும் கூறினேம். தங்கள் சாரத்தில் அன்பும் உயிரும் ஒன்ருகு மென்ருல், உயிரேகூட அன்பாகவே யிருக்கிறது என்பது ஏற்படு கிறது. ஆகையினுல், சிவம் உயிராகுல், அவர் அன்பாகவும்கூட இருக்கிருர். அதனுல் அன்பே சிவமாகிறது. இது அறிந்துகொண்ட பின்;பதி, பசு, பாசத்தின் தன்மைகள், உறவுகள் முதலியன கரதலா மலகம்போல் அறிந்துகொள்ளக் கூடினவைகளாகின்றன.

முதல் இரண்டு பிரிவுகளிலிருந்து மட்டும் இவ்வளவு ஞானம் உதயமாகக் கூடுமானுல், இந்நூலின் சிறப்பை என்னென்று உரைப்பாம்: ஆகையினுல், சகோதரர்களே, இந்நூலை வாசித்து ஞானத்தில் நீங்கள் வளரவேண்டுமென்றும், அதற்கு தக்க நன்னெறி யில் நின்று எல்லாம்வல்ல இறைவன் அருள் பெறவேண்டுமென்றும் பிரார்த்திக்கிறேன்.

ராயப்பேட்டை
சென்னபட்டணம்
1930-ம்ஸு ஜூன்மீ 3உ

D. கோபால் செட்டி.

---

# விஷய அட்டவணை

## பாகம் I.

### பதி

பிரிவு



## பாகம் II.

### சிவ சூரியன்.

பிரிவு

## பாகம் III.

### காரண காரிய வேற்றுமைகள்.

## பாகம் IV

### சிருட்டி

## பாகம். V.

### பசு.

# பதி பசு பாச விளக்கம்

## பாகம் 1.

### பதி

#### அன்பு மனிதன் உயிர்.

1. மனிதனுக்கு அன்பென ஓர்பொரு ளுண்டென்று தெரியும். ஆனால் அது என்னவென்று அவனுக்குத் தெரியாது. ஒருவன் என்னை நேசிக்கிறானென்றும், அரசன் குடிகளை நேசிக்கிறானென்றும், குடிகள் அரசனை நேசிக்கிறார்களென்றும், புருஷனும் பெண்ஜாதியும், தாயும் பிள்ளைகளும் ஒருவரை ஒருவர் நேசிக்கிறார்களென்றும், மேலும் இன்னவன் தன் தேசத்தையும், தன்னகரத்தானையும், தன் அயலானையும் நேசிக்கிறானென்றும், அங்ஙனமே, ஒருவனைக் குறிக்காமல் பொருள்களைப்பற்றி பேசுங்கால் ஒருவன் எதோ ஒன்றை நேசிக்கிறானென்றும் சாதாரண சம்பாஷணையில் கூறப்படும்போது, மனிதனுக்கு அன்பு என்பது ஓர் பொருளென்று தெரியும். ஆனால், அன்பென்பது பிரதிதின சம்பாஷணையில் அவ்வளவு வியாபகமாயிருந்தாலும், அது என்னவென்று யாருக்கும் சாதாரணமாய் தெரியாது. மனிதன் அந்த விஷயத்தை யோசிக்கும்போது, அதைக்குறித்து யாதொரு மனோபாவனையையும் உண்டாக்க முடியாதபடியினால், அது சூனியமென்றாவது, பார்வையினாலும், கேள்வி மூலத்தினாலும், பரிசத்தினாலும், சம்பாஷணை

யினும், ஒருவனை இயக்குகிற ஒரு பொருளென்றும் சொல்லுகிறுன். மனிதனுக்கு அன்பானது அவனிட உயிராக வே யிருக்கிறதென்றும், அவன் முழு சரீரத்தினிடமும், சிந் தனைகளிடமும், சாதாரண உயிராகமட்டுமல்லாமல், அவை களின் விவரணங்களுக்கும் உயிராயிருக்கிறதென்றும் முழு மையும் தெரியாது. ஞானமுள்ளவன் இந்த உண்மையை பின் வரும் ஆலோசனைகளால் அறிந்துகொள்ளுகிறுன். அன்புக்கு சேர்ந்த ஆசையை நீர் நீக்கிவிட்டால், நீர் எதையாவது நினைக்க முடியுமா, எதையாவது செய்ய முடியுமா? அன்பைச் சேர்ந்த ஆசை குளிர் படுமளவு, சிந்தனையும், பேச்சும், செய்கையும் குளிரபடுவதில்லையா? ஆசை சூடு படுமளவு, அவைகளும் சூடு படுகிறதில்லையா ? ஆனுல், ஒரு ஞானி, அன்பானது, மனிதன் உயிரென்கிற ஞானத்தினுல் அல்லாமல், இவைகளின் அனுப வத்தினுல் தெரிந்து கொள்ளுகிறுன்.

2. மனிதனிட உயிரானது அன்பென்று தெரிந்தாலொ ழிய அது என்னவென்று யாருக்கும் தெரியாது. இது தெரி யாவிடில், சிந்தனையானது உயிரின் முதல் பலனுகவும், இந் திரிய ஞானமும் செய்கையும் உயிரின் இரண்டாவதுபலனுகவு மிருந்தபோதிலும், ஒருவன், மனிதனிட ஜீவன் உணர்வதும் சேட்டிப்பது மாத்திரமென்றும், மற்றவன், சிந்திப்பது என் றும் நம்பலாம். சிந்தனையானது உயிரின் முதற்பலன் என்று கூறப்பட்டது; ஆனுல் சிந்தனையானது உள்ளானதாயும் உள் ளுக்குள்ளானதாயு மிருக்கக்கூடும். அன்றியும் வெளியான தாகவும், அதிக வெளியானதாகவும் இருக்கக்கூடும். முடிவு களை அறிதலாகிய உள்ளுக்குள்ளான சிந்தனை மெய்யாய் உயி ரின் முதற்பலனுயிருக்கிறது. ஆனுல் உயிரின் அளவுகளை ஆலோசிக்கும்போது இவ்விஷயங்களைப்பற்றி இன்னும் பின் னர் அதிகம் கூறப்படும்.

3. அன்பு, மனிதனிட உயிராக இருக்கும் கருத்தை பூலோக சூரியனிட சூட்டிலிருந்து தெரிந்துகொள்ளலாம். இந்த சூடானது பூமியின் பேரிலுள்ள எல்லா கந்தமூலங்களுக்கும் ஓர்வித பொது உயிரென்று நன்றாய் தெரிந்திருக்கிறது. வசந்தகாலத்தில் இந்த சூடானது அதிகமாகும்போது, எல்லாவித செடிகளும் பூமியிலிருந்து தோன்றி, இலைகளாலும், பின்னர் புஷ்பங்களாலும், கடைசியில் கனிகளாலும், அலங்கரிக்கப்பட்டு, இவ்விதமாய் ஓர்விதத்தில் உயிரோடிருக்கின்றன. ஆனால் இலையுதிர் காலத்திலும், மாரிகாலத்திலும், சூடு விலகியபோது, செடிகள், தங்கள் உயிரின் இந்த அடையாளங்கள் நீக்கப்பட்டு, கீழே விழுகின்றன. மனிதனிட அன்பும் அம்மாதிரியே இருக்கிறது. ஏனென்றால், அன்பும், சூடும் ஒன்றோடொன்று அன்னுவயப்படுகிறது; அதனால் கூட அன்பு சூடாயிருக்கிறது.

கடவுள் மாத்திரம், அதனால் ஆண்டவரும், அவர் உயிராகவே இருப்பதால் அன்பாகதானே யிருக்கிறார்; ஆனால் தேவர்களும் மனிதரும் உயிரை ஏற்பவர்களா யிருக்கிறார்கள்.

4. இது கடவுள் பராமரிப்பு, உயிர் என்பவைகளைக் குறித்த நூல்களில் அதிகமாய் தெளிவிக்கப்படும். இங்கே பிரபஞ்சத்துக்குக் கடவுளாகிய ஆண்டவர் சிருட்டிக்கப்படாதவரும் முடிவற்றவருமானவரென்றும், மனிதனும், தேவனும் சிருட்டிக்கப்பட்டவரும் முடிவுள்ளவர்களென்றும் மட்டும் கூறுவோம். அந்த ஆண்டவர் சிருட்டிக்கப்படாதவரும் முடிவற்றவருமானபடியினால், யெகோவா என்று சொல்லப்பட்ட சொரூப நிலை இறைவனாகவும், உயிரேயாகவும், தம்மில் தாமே உயிராகவு மிருக்கிறார். பரம்பொருள் ஒன்றாகவும், பகுக்கக் கூடாதவருமாக இருப்பதால், அந்த சிருட்டிக்

கப்படாதவரும், முடிவற்றவருமாகிய அந்த சிவமாக தானேயும் உயிராகத்தானேயும் இருக்கும் பொருளி லிருந்து எந்த மனிதனும் நேராய் சிருட்டிக்கப்பட முடியாது; ஆனால், பரம்பொருள் அவைகளில் இருக்கும்படியாக உருவாக்கப்பட்ட, சிருட்டிக்கப்பட்டதும் முடிவு பெற்ற பொருள்களிலிருந்து, மனிதன் சிருட்டிக்கப்படவேண்டும். மனிதர்களும், தேவர்களும் அவ்வகையினரானபடியினால், அவர்கள் உயிரை ஏற்பவர்களா யிருக்கிறார்கள். ஆகையினால், தான் உயிரை ஏற்பவனல்லாமல் உயிரே என்று எந்த மனிதனாவது நினைக்கும்படி அவ்வளவு துர்நெறி காட்டப்பட இடம் கொடுத்தால், அவனை, தான் ஒரு கடவுள் என்கிற எண்ணத்திலிருந்து நீக்கமுடியாது. ஒரு மனிதன் தான் ஒரு உயிராக இருக்கிறானென்று அறிதலும், ஆகையினால் தான் ஒரு உள் பொருளென்று நம்புதலுமாகிய விஷயம் போலி நியாயத்தினால் உண்டாகிறது; ஏனென்றால், துணைக்காரணத்தில், முதல் காரணம் அதனோடு ஒன்றாக அல்லாமல் வேறு விதமாய் அறியப்படுகிறதில்லை. இறைவன் தம்மில் தாமே உயிராக இருக்கிறாரென்று, யோவானில் தாமே கற்பிக்கிறார். "பிதாவானவர் தம்மில் தாமே ஜீவனுடையவரா யிருப்பது போல் குமாரனும் தம்மில் தாமே ஜீவனுடையவரா யிருக்கும்படி அருள் செய்திருக்கிறார். (V. 26). அவர் தான் "ஜீவனாகவே" இருக்கிறாரென்றும் கூட கூறுகிறார். (யோவான் XI. 25; XIV. 6). மேல் கூறியதிலிருந்து (பிரிவுகள் 1, 2) தோன்றுகிறபடி, உயிரும் அன்பும் ஒன்றாயிருப்பதால், இறைவன், தான் உயிராகத்தானே யிருப்பதால், அன்பாகத்தானே இருக்கிறாரென்று ஏற்படுகிறது.

5. இது புத்திக்கு எட்டவேண்டுமானால், பரம்பொருள் தன் சுய சொரூபத்தில் அன்பாயிருப்பதால், அதாவது பரம

அன்பானபடியினுல், சுவர்க்கலோகத்தில் தேவர்கள் முன்பாக ஒரு சூரியனைப்போல் தோன்றுகிருரென்றும், அந்த சூரியனி லிருந்து சூடும் ஒளியும் புறப்படுகிறதென்றும், அதிலிருந்து புறப்படும் சூடு, அதன் சத்தில் அன்பென்றும், அதிலிருந்து புறப்படும் ஒளி, அதன் சத்தில் ஞானமென்றும், தேவர்கள் அந்த பரமார்த்த சூட்டையும், அந்த பரமார்த்த ஒளியையும் ஏற்பவர்களாயிருக்குமளவு, அன்புகளாகவும் ஞானங்களாக வும் இருக்கிருர்களென்றும், அந்த அன்பும் ஞானமும் தங்க ளிட மிருந்தல்லாமல் கடவுளிட மிருந்து வந்ததென்றும் தீர தெரிந்திருக்க வேண்டும். அந்த பரமார்த்த சூடும், ஒளியும், தேவர்களிடத்தில் பாய்ந்து அவர்களை இயக்குவதுமட்டு மல் லாமல், மனிதர்களிடத்தில் அவைகளை அவர்கள் எவ்வளவு ஏற்பவர்களா யிருக்கிருர்களோ அதற்கு தக்கபடி சென்று, அவர்களை இயக்குகின்றன. அவர்கள் ஏற்கும் சக்தி, கடவு ளிடத்திலும் அயலானிடத்திலும் செலுத்தும் அன்புக்கு சரியாயிருக்கிறது. இந்த சூரியன்தானே அல்லது பரம அன்பு, அதின் சூட்டினுலும், ஒளியினுலும் தன்னிடமிருந்தே யாரையும் நேராய் சிருட்டிக்கமுடியாது; ஏனென்ருல், அப்படி சிருட்டிக்கப்பட்ட எவனும் இறைவனுகவே யிருக்கிற தன் இயல்பில் அன்பாகயிருப்பான். ஆனுல் பூலோக சூரியன் தன் னிட சூட்டினுலும், ஒளியினுலும், பூமியில் நேராய் தழைப்பு களை உற்பத்தி செய்யமுடியாமல், சூட்டினுலும், ஒளியினுலும் அது உள்ளே யிருக்கக்கூடியதும், கந்தமூல பதார்த்தங்களை உண்டாக்கக்கூடியதுமான பூமியின் பதார்த்தங்களிலிருந்து அவைகளை உற்பத்தி செய்வதுபோல், இந்த சூரியன் சூட்டை யும் ஒளியையுமே ஏற்றுக்கொள்ளும்படி உருவாக்கப்பட்ட பதார்த்தங்களிலிருந்தும், பொருள்களிலிருந்தும் சிருட்டிக்கக்

கூடும். சுவர்க்கமும் நரகமும் எனும் நூலில் 116—140 வரை யிலுள்ள பிரிவுகளில் இறைவனிட பரமஅன்பு பரமார்த்த உலகத்தில் ஓர் சூரியனைப்போல் தோன்றுகிறதென்றும், தேவர்கள் அன்பும் ஞானமும் அடைகிற பரமார்ந்த சூடும் ஒளியும் அந்த சூரியனிடத்திலிருந்து புறப்படுகிறதென்றும் அறிந்து கொள்ளலாம்.

6. மனிதன் உயிராயில்லாமல், உயிரை ஏற்றுக்கொள் பவனுயிருப்பதால், ஒரு மனிதன் தன் தகப்பனுல் கருப்ப உற் பத்தி என்பது, உயிரை உற்பத்தி செய்தலல்லாமல், உயிரை ஏற்றுக்கொள்ள சக்தியுடைய பிரதமமானதும், மிகவும் சுத்தி யானதுமான உருவத்தை தரித்தலாகமட்டு மிருக்கிறது; அத னுடன், ஓர் மூலம் அல்லது ஆரம்பம்போல், தன் ஒழுங்கிலும் பிரமாணத்திலும் உயிரை ஏற்றுக்கொள்ள இசைந்த பொருள் களையும் உபகரணங்களையும் கருப்பையில் படிப்படியாய் சேர்க்கப்படுகின்றன.

## பரம்பொருள் இடவரைக் குட்பட்டதல்ல.

7. தெய்வம் அல்லது கடவுள் இடவரைக் குட்படா தவரென்பது, அவர் எங்கும் நிறைந்தவராயும், உலகத்தி லுள்ள ஒவ்வொரு மனிதனிடத்திலும், சுவர்க்கத்திலுள்ள ஒவ்வொரு தேவனேடும், சுவர்க்கத்துக்குக் கீழ் உள்ள ஸ்தூல சரீரமில்லாத ஆன்மாக்களோடும் இருந்தாலும்,ஜடமான கருத் தினுல் மட்டும் கிரகிக்க முடியாது. ஆனுல் பரமார்த்த கருத் தில் அப்படி செய்ய முடியும். ஸ்தூல பாவனையில் இடவரை ஏற்பட்டிருப்பதால், அதனுல் அது கிரகிக்கப்பட முடியாது. ஏனெனில் உலகத்திலுள்ள பொருள்களிலிருந்து அது உண் டாக்கப்படுகிறது ; அவைகளில் ஒவ்வொன்றிலும் எல்லாவற்

றிலும், கண்களுக்குத் தெரியும்படி இடமிருக்கிறது. அங்கே பெரியதும் சிறியதுமான ஒவ்வொன்றும் இடவரைக் குட்பட்டது ; அங்கே நீண்டதும், அகலமானதும், உயரமானதுமான ஒவ்வொன்றும் இடவரைக் குட்பட்டது; சுருங்கச் சொல்லில் அங்கே ஒவ்வொரு அளவும், வடிவமும், சாயலும் இடவரைக் குட்பட்டது. ஆதலால், தெய்வம் எங்கும் நிறைந்ததென்று சொல்லப்படும்போது, தெய்வம் இடவரைக் குட்பட்டதல்லவென்று, ஸ்தூலமான கருத்தில் மாத்திரம் கிரகிக்க முடியாதென்று கூறப்படுகிறது. ஆனாலும், மனிதன் ஸ்தூல பாவனையில் கொஞ்சமாவது பரமார்த்த ஒளியை ஏற்றுக்கொண்டால், ஸ்தூல சிந்தனையால் இதை கிரகிக்கக்கூடும். ஆகையால், பரமார்த்த பாவனையைப்பற்றியும், அதிலிருந்து உண்டாகும் சிந்தனையைப்பற்றியும், சிலது முதலில் சொல்லப்படவேண்டும். பரமார்த்த பாவனை இடத்துடன் சம்பந்தப்பட்டதல்ல, நிலைமையின்பேரில் முழுமையும் நிற்கிறது. நிலைமை என்பது, அன்பிற்கும், உயிருக்கும், ஞானத்துக்கும், ஆசைகளுக்கும், அவைகளின் சந்தோஷங்களுக்கும், பொதுவாய் நன்மைக்கும் உண்மைக்கும் பொருந்தியிருக்கிறது. இவைகளைக் குறித்த பரமார்த்த பாவனைக்கும், இடத்துக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. அது மேலானது. அது அதன் கீழ் உள்ள இடம் சம்பந்தமான கருத்துகளை, சுவர்க்கம் பூமியைப் பார்ப்பது போல், பார்க்கிறது. தேவர்களும், அசரீர ஆன்மாக்களும், உலகத்திலுள்ள மனிதர்களுக்கு சமமாய்க் கண்களால் பார்க்கிறபடியினாலும், பொருள்கள் இடவரைக்குட்படாமல் பாக்க முடியாதபடியினாலும், அவர்கள் இருக்கப்பட்ட சூக்கும உலகத்தில் இடங்கள் பூமியிலுள்ள இடங்களைப்போல் தோன்றுகின்றன ; ஆயினும் அவைகள் இடங்களல்ல; தோற்

றங்களாயிருக்கின்றன. பூமியின்பேரிலிருப்பதுபோல் அவைகள் நிலைபடுத்தப்படும் நிச்சயப்படுத்தப்படுமில்லை; அவைகளை நீட்டவும் குறுக்கவும் கூடும்; அவைகளை வேறு இடத்துக்கு மாற்றவும், வேருக மாற்றவும் கூடும்; ஆகையால், அளவினால் அவைகளை நிச்சயிக்க முடியாதபடியினால், அவைகள் அந்த உலகத்தில் எந்த ஸ்தூல பாவனையாலுமட்டும் கிரகிக்க படமுடியாது. ஆனால் அவைகள் பரமார்த்த கருத்தினால் மட்டும் கிரகிக்கப்படக்கூடும். இடசம்பந்தமான தூரங்களைக் குறித்த பரமார்த்த கருத்தும், தங்கள் நிலைமைகளை அநுசரித்து உடன்பாடுகளாகவும், ஒப்பனைகளாகவுமிருக்கிற நன்மை அல்லது உண்மையின் தூரங்களைக் குறித்த கருத்தும் ஒன்று யிருக்கின்றது.

8. இந்தப் பிரதிக்கினைகளால், ஒரு மனிதனானவன் ஸ்தூலபாவனைகளால் மட்டும், தெய்வம் எங்கு முளதென்றும், அங்ஙனமாயினும் இடவரைக் குட்பட்டதல்லவென்றும் கிரகிக்க முடியாதென்றும், தேவர்களும் அசரீர ஆன்மாக்களும் இதை தெளிவாய் கிரகிக்கிறார்களென்றும், ஆதலால் ஒரு மனிதனும் கூட தன்னிட சிந்தனையில் பரமார்த்த ஒளியில் கொஞ்சம் ஏற்றுக்கொண்டால், அதை கிரகிக்கலாமென்றும், வெளிப்படும். ஒருமனிதன் இங்ஙனம் ஏன் கிரகிக்கலாமென்பதற்குக் காரணம், அவனிட சரீரம் அல்லாமல் அவன் ஆன்மா, ஆதலால் அவனிட ஸ்தூலபாகமன்றி பரமார்த்த பாகம் நினைக்கிறதென்பதாயிருக்கிறது.

9. இதை அநேகர் கிரகிக்காததற்குக் காரணம், அவர்கள் ஸ்தூலப்பொருள்களை நேசிக்கிறார்களென்பதும், ஆதலால் அந்த ஸ்தூலமானதற்கு மேற்பட்டு பரமார்த்த ஒளியில் தங்கள் புத்தியின் சிந்தனைகளை ஏற்ற இஷ்டப்படவில்லை என்

பதமா யிருக்கிறது; இவ்வண்ணம் செய்யாதவர்கள், கடவுளைக்குறித்துகூட இடவரைக்குட்பட்டுமட்டும் நினைக்கவேண்டியிருக்கிறது; இடவரைக்குட்பட்டு கடவுளை நினைத்தல் என்பது, பிருகிருதியின் பண்பாகிய விரிவிலிருந்து நினைத்தலாகும். தெய்வம் இடவரைக் குட்பட்டதல்லவென்கிற அறிவும் அனுபவமும் இல்லாவிடில், இங்கே எடுத்துக்கொண்ட விஷயங்களாகிய அன்பும் ஞானமுமாயிருக்கிற தெய்வ உயிரைப் பற்றி யாதொன்றும் அறிந்துகொள்ள முடியாதாகையால் இது முன்னர்க் கூறவேண்டி நேரிட்டது; ஆகவே, பின் தொடர்ச்சியாக கூறப்படும், தெய்வ பராமரிப்பு, சர்வ வியாபகத்துவம், முற்று முணர்தல், முடிவிலாற்றலுடைமை, வரம்பின்மை, நித்தியத்துவம் முதலியவைகளைக் குறித்து மிகவும் கொஞ்சம் தான் அறிந்து கொள்ளப்படக் கூடும்.

10. சூக்கும உலகத்தில் தூலலோகத்தில்போல் சமமாய் இடங்களும், அதனால் தூரங்களும் தோன்றுகின்றனவென்று சொல்லப்பட்டது; ஆனால் அந்த தூரங்கள் அன்புக்கும் ஞானத்துக்கும் அல்லது நன்மைக்கும் உண்மைக்கும் சேர்ந்த பரமார்த்த உறவுகளுக்குத் தக்கபடி தோற்றங்களா யிருக்கின்றன. அதனால்தான், ஆண்டவன் எங்கும் தேவர்களோடு பரமண்டலங்களிலிருந்தாலும், சூரியனைப்போல் அவர்களுக்கு மேல் உயரத்தில் தோன்றுகிறார். அன்பையும் ஞானத்தையும் ஏற்றுக்கொள்ளுதல் அவரோடு உறவை உண்டாக்குகிறபடியினால், அந்த ஏற்கையின் நிமித்தம் தேவர்கள் அதிக சமீப உறவிலிருக்கும் சுவர்க்கங்கள் அதிக தூரத்திலிருக்கும் உறவிலிருப்பவைகளை விட அவருக்கு சமீபமாக இருப்பதாகத் தோன்றுகின்றன. இந்த காரணத்தினால்தான், மூன்றாயிருக்கிற சுவர்க்கங்கள் ஒன்றிலிருந்து மற்றவை வேறுவேறாயிருக்

கின்றன; அம்மாதிரியே, ஒவ்வொரு சுவர்க்கலோகத்தின் கூட்டங்களு மிருக்கின்றன; மேலும், அவைகளுக்கு கீழ் உள்ள நரகங்களும் அன்பையும் ஞானத்தையும் தள்ளுதலுக்குத் தக்கபடி தூரத்திலிருக்கின்றன. முழு உலகத்திலும், தங்களிலும், தங்களோடும் ஆண்டவ னிருக்கப்பட்ட மனிதருடன் விஷயம் அம்மாதிரி இருக்கிறது; ஆண்டவன் இடவரைக்குட்பட்டவர் அல்ல என்கிற உண்மையினாலேயே இது ஏற்படுகிறது.

## கடவுள் மனிதனாகவே யிருக்கிறார்

11. எல்லா பரமண்டலங்களிலும் கடவுளைக் குறித்த பாவனை, மனிதன் என்பதே தவிர வேறொன்றுமில்லை; சுவர்க்கலோகம் முழுவதும், ஒவ்வொரு பாகமும், உருவத்தில் மனிதனை இருக்கிறதென்பதும், தேவர்களோடு இருக்கும் தெய்வம் சுவர்க்கத்தை ஏற்படுத்துகிறதென்பதும், சிந்தனையானது சுவர்க்க உருவத்தை அனுசரித்து இருக்கிறதென்பதும் இதற்குக் காரணமாயிருக்கிறது. ஆகையினால், கடவுளைக்குறித்து, வேறு விதமாய் தேவர்கள் நினைக்க முடியாது. அதனால்தான், சுவர்க்கத்தோடு இணைக்கப்பட்ட உலகத்திலுள்ள யாவரும், தாங்களே அந்தரங்கமாய் அல்லது தங்களிட ஆன்மாவாலேயே மட்டும் நினைத்தால், அம்மாதிரியாகவே கடவுளைப்பற்றி நினைக்கிறார்கள். கடவுள் ஓர் மனிதனாயிருக்கிறாரென்கிற காரணத்தினால், எல்லா தேவர்களும், ஆன்மாக்களும் பரிபூரணமான வடிவத்திலுள்ள மனிதர்களா யிருக்கிறார்கள். மிகப் பெரியதிலும் சின்னஞ் சிரியதிலும் ஓரேமாதிரி யிருக்கிற சுவர்க்கத்தின் வடிவம் இதற்குக் காரணமாயிருக்கிறது. சுவர்க்கம் முழுவதும், ஒவ்வொரு பாகமும், உருவத்தில் மனிதனைப் போலிருக்கிற தென்பதை சுவர்க்கமும் நரகமும் எனும்

நூலில் 59 முதல் 87-வது வரையிலுள்ள பிரிவுகளிலும், சுவர்க்கத்தின் உருவத்தை அனுசரித்து சிந்தனைகள் இருக்கின்றன வென்பதை 203, 204 பிரிவுகளிலும் காணலாம். மனிதர்கள் ஆண்டவனிட சாயலாகவும் ரூபத்தின்படியும் சிருட்டிக்கப்பட்டிருக்கிறார்களென்பது, ஆதி ஆகமம் I. 26, 27-வது பிரிவுகளில் தெரிகிறது. மேலும் அந்த கடவுள் மனிதனைப்போல் ஆபிரகாமாலும், மற்றவர்களாலும் பார்க்கப்பட்டிருக்கிறார். பூர்வ காலத்தாரில் ஞானி முதல் அஞ்ஞானி வரையில் எல்லாரும் கடவுளை, மனிதனைப்போலல்லாமல் வேறுவிதமாய் நினைக்கவில்லை. கடைசியில், அநேக கடவுளர்களை, ஆதென்ஸ் நகரத்திலும், ரோம் நகரத்திலும் செய்தது போல், அவர்கள் தொழ ஆரம்பித்தபோது, அவர்களெல்லாம் அவைகளை மனிதர்களாக ஆராதித்தார்கள். இவைகளெல்லாம், கொஞ்ச காலத்துக்கு முன் பிரசுரம் செய்த ஓர் சிறிய நூலிலிருந்து பின்தொடரும் அனுபவங்களால் தெளிவாக்கலாம்.

“பிரபஞ்ச சிருஷ்டிகர்த்தாவாகிய ஒரு கடவுளை ஏற்றுக்கொண்டு அவரை முக்கியமாய்த் தொழுகிற ஆபிரிக்கா தேசத்தாரும், கிறிஸ்தவர் அல்லாத இதர சமயத்தாரும் கடவுளைக் குறித்துமனிதனாக கருதுகிறார்கள்; யாருக்கும் கடவுளைப்பற்றி வேறுபாவனை யிருக்கமுடியாதென்று அவர்கள் சொல்லுகிறார்கள். நடு ஆகாயத்திலுள்ள ஓர் சிறிய மேகத்தைப்போல் கடவுளிருக்கிறா ரென்கிற கருத்தை அநேக ஜனங்கள் கொள்ளுகிறார்களென்று அவர்கள் கேள்விப்பட்டபோது, இந்த ஜனங்கள் எங்கே யிருக்கிறார்களென்று அவர்கள் கேட்டார்கள்; கிறிஸ்தவர்களில் அப்பேர்ப்பட்டவர்க ளிருப்பதாகச் சொல்லப்பட்டபோது, அது முடியாத காரியமென்று நிரா

கரிக்கிறார்கள். ஆனால் வேதத்தில் கடவுள் ஓர் ஆவி என்று சொல்லப்படுவதால், அவர்களுக்கு இந்த கருத்து உண்டாகிறதென்று தெரிவிக்கப்படுகிறார்கள். அவ்வித ஜனங்களுக்கு ஜீவ ஆன்மாக்களும் தேவர்களும் மனிதர்களென்று தெரியாத படியினால், அவர்கள் ஜீவ ஆன்மா ஓர்வித மேகமென்று நினைக்கிறார்கள். அப்படியிருந்தாலும், அவர்களிட பரமார்த்த கருத்து ஸ்தூலக் கருத்துடன் ஒத்திருக்கிறதாவென்று சோதனைசெய்ததில், ஆண்டவன் சுவர்க்கத்துக்கும் பூமிக்கும் கடவுளென்று அகத்தில் ஒத்துக்கொள்ளுகிறவர்களிடத்தில், அது ஒரேமாதிரி இல்லையென்று கண்டுபிடிக்கப்பட்டது. கிறிஸ்தவர்களில் ஓர் மூப்பன் தெய்வ மனிதனைப்பற்றி எவனுக்கும் ஓர் பாவனை இருக்க முடியாதென்று சொல்லுவதை நான் கேட்டிருக்கிறேன்; கிறிஸ்தவரல்லாத இதர சமயத்தார் பலரிடத்திலும், அதிக மதிகமாய் உள் நோக்கமுள்ளவர்களில் ஒருவர் பின்னர் ஒருவரிடத்திலும், இவர்களுக்குப் பின் அவர்களிட சுவர்க்கங்களுக்கும் கடைசியில் கிறிஸ்தவ சுவர்க்கத்துக்கும், அவனைக் கொண்டுபோவதை நான் பார்த்தேன்; எல்லாவிடத்திலும், கடவுளைக் குறித்து அவர்களிட உள் நோக்கம் என்னவென்று தெரிந்துகொள்ள அவனுக்கு அருள் செய்யப்பட்டது. அவர்கள் கடவுளை ஓர் மனிதனைப்போலல்லாமல் வேறு விதமாய் நினைக்கவில்லையென்று அவன் சொன்னான். அது தெய்வ மனிதனைக் குறித்து நினைக்கும் பாவனைக்கு ஒத்திருந்தது.''

12. அதேனேசியஸ் என்பவர் ஏற்படுத்திய திரியேகத்துவமெனும் கொள்கையில், கடவுளை ஓர் மனிதனாகக் கூறப்பட்டிருப்பதால், கிறிஸ்துவ லோகத்தில் பாமர ஜனங்கள் கடவுளை மனிதனாக பாவிக்கிறார்கள். ஆனால் அவர்களைவிட

அதிக புத்தியுள்ளவர்கள் கடவுள் கட்புலனுக்கு எட்டாதவரென்று சொல்லுகிறார்கள். கடவுள், ஓர் மனிதனாக பரமண்டலத்தையும் பூமியையும் எப்படி சிருஷ்டிக்கக்கூடுமென்றும், அவர் பிரபஞ்சத்தில் எங்கும் எப்படி நிறைந்திருக்கக்கூடுமென்றும் கிரகிக்க அவர்களால் முடியாதபடியினால், இம்மாதிரி நினைக்கிறார்கள். தெய்வம் இடவரைக் குட்பட்டதல்லவென்று தெரியாதிருக்கிறவரையில், புத்திக்கு எட்டாத இன்னும் அநேக விஷயங்கள் நிற்கும். ஆனால் ஆண்டவனை மட்டும் அணுகுகிறவர்கள், தேய்வ மனிதனை, இம்மாதிரியாகக் கடவுளை ஓர் மனிதனாக நினைக்கக்கூடும்.

13. சமயத்துக்கும் ஆராதனைக்கும் சேர்ந்த ஒவ்வொன்றும், கடவுளுக்கு சம்மந்தப்பட்டிருப்பதால், எந்த சமயத்தைச் சேர்ந்தவர்களுக்கும் கடவுளைக் குறித்த பாவனை சிந்தனையில் அந்தரங்கமான தென்பதிலிருந்து கடவுளைக் குறித்து திருத்தமான அபிப்பிராயம் கொள்ளல் எம்மட்டும் முக்கியமானதென்று விசதமாகிறது. சமயத்துக்கும் ஆராதனைக்கும் சேர்ந்த ஒவ்வொன்றிலும் கடவுளானவர் பொதுவாயும் குறிப்பாயுமிருப்பதால், அவரைக் குறித்து, திருத்தமான அபிப்பிராயமிருந்தாலொழிய சுவர்க்கலோகங்களோடு எவ்வித சம்பந்தமும் வைக்க முடியாது. இந்த காரணத்துக்காகதான், பரமார்த்த உலகத்திலுள்ள ஒவ்வொரு தேசத்தாரும், கடவுளை மனிதனாகக்கொள்ளும் பாவனைக்குத் தக்கபடி இடம் கொடுக்கப்படுகிறார்கள்; ஏனென்றால், ஆண்டவன் அதில் அல்லாமல், வேறெந்த பாவனையிலுமில்லை. இறந்தபின் மனிதனிட உயிரின் நிலைமை, அவன் கடவுளைக் குறித்துக் கொள்ளும் கருத்துக்குத் தக்கபடி இணங்குகிறதென்பது, இந்த பிரமேயத்துக்கு எதிரிடையானதிலிருந்தும், அதாவது கடவுளை நிராகரித்தல்

நரகத்தை உண்டாக்குகிறதென்பதிலிருந்தும் கிறிஸ்தவமதத்தில் ஆண்டவனுடைய தெய்வத்தன்மையை மறுத்தலாகிறதென்பதிலிருந்தும் வெளிப்படையாய்த் தெரிகிறது.

## தேய்வ மனிதனில் சொரூபமும் தடத்தமும் வேருய் ஒன்று.

14. சொரூபமிருக்கும்போது தடத்தமுமிருக்கிறது; ஒன்று மற்ருென்றுக்கு பிரத்தியேகமாயிருக்க முடியாது. சொரூபம் தடத்திஞல் அறியப்படுகிறது. அதறகு பிரத்தியேகமாய் அறிய முடியாது. வெளிப்படாத ஒரு சொரூபம் இருக்குமாவென்றும், ஒரு சொரூப பொருளிலிருந்து தவிர எந்த தடத்தபொருளுமிருக்குமாவென்றும் யோசித்தால், இது புத்திக்கு எட்டும். ஒன்று மற்ருென்றிருந்தால்மட்டும் இருக்கவும், மற்றது இல்லாமல் முடியாதாகையால், அவைகள் ஒன்றென்றும், ஆனல் வேருய்ஒன்றென்றும் ஏற்படுகிறது. அவைகள் அன்பையும் ஞானத்தையும் போன்று வேருய் ஒன்ருயிருக்கின்றன; அன்புகூட சொருபமாயும், ஞானம் தடத்தமாயுமிருக்கிறது; ஞானத்தில் தவிர அன்பு ஜீவிக்காது; அம்மாதிரியே அன்பிலிருந்து தவிர ஞானம் ஜீவிக்காது; ஆகையால், அன்பு ஞானத்திலிருக்கும்போது, அது வெளிப்பட்டு நிற்கிறது. செய்கையிலில்லாமல் சிந்தனையில் அவைகள் நிஜமாகவே குறிகொள்ளக்கூடும்படியாய் ஏகமாய் இந்த இரண்டுமிருக்கின்றன. அவைகள் செய்கையிலில்லாமல் சிந்தனையில் குறிகொள்ளலாமாகையால், அவைகளைவேருய் ஒன்றென்று கூறப்படுகின்றன. தேவமனிதனல் சொரூப நிலையும் தடத்த நிலையும் கூட, ஆன்மாவையும் சரீரத்தையும் போன்று, வேருய் ஒன்ருயிருக்கின்றன. சரீர

மின்றி ஆன்மா யிருக்காது; அம்மாதிரியே, சரீரம் ஆன்மா வின்றி யிருக்க முடியாது. தெய்வ சொரூப மென்பதினுல், தெய்வ மனிதனிட தெய்வ ஆன்மாவென்று அருத்தம் கொள்ளப்படுகிறது. தெய்வதடத்த மென்பதினுல் தெய்வசரீரம் என்று அருத்தம் கொள்ளப்படுகிறது. சரீரத்துக்கு பிரத்தியேகமாய் ஆன்மா தோன்றி, நினைத்து, அறியக்கூடுமென்பது போலி நியாயங்களிலிருந்து உற்பவிக்கிற ஓர் பிழை; ஏனென்ருல், உலகத்தில் சுடமந்த ஸ்தூல போர்வைகளே புறத்திலெறிந்த பிறகு, ஒவ்வொரு மனிதனிட ஆன்மாவும், சூட்சும சரீரத்தில் நிலைக்கிறது.

15. சொரூபமான பொருள் வெளிப்பட்டால் ஒழிய சொரூபம் பொருளாகாது. ஏனென்ருல், இதற்கு முன்னிட்டு அது ஒரு உருவத்திலில்லை. அது ஒரு உருவத்திலில்லாவிட்டால், அதற்கு குணமில்லை; குணமில்லாதது சூனியம். ஒரு சொரூபப் பொருளிலிருந்து வெளிபடுவது, அது சொரூபப் பொருளிலிருந்து வந்தது என்கிற காரணத்தினுல், அந்த சொரூபப் பொருளோடு ஒன்ருகிறது. அதனுல் ஒன்ருக ஐக்கியம் உண்டாகிறது; அதனுல்தான் ஒன்று மற்றென்ருேடு பரஸ்பரமாய் ஐக்கியப்படுகிறது. ஒன்று தன்னிலிருப்பது போல, மற்றதின் ஒவ்வொன்றிலு மிருக்கிறது.

16. இவைகளினுல் கடவுள் ஓர் மனிதனென்றும், அதனுல் அவர் தன்னிலிருந்தே வெளிப்படாமல் தன்னில் தானே இருக்கும் கடவுளென்றும் தோன்றும். தன்னில் தானே நிலைபடும்பொருள் எல்லா பொருள்களேயும் உண்டாக்கும் கடவுளாயுமிருக்கிருர்.

## தெய்வ மனிதனிடத்தில் முடிவற்ற பொருள்கள் வேறாய் ஒன்றாயிருக்கின்றன.

17. கடவுள் முடிவற்றவரென்று கூறப்படுகிறதினால் அவர் முடிவற்றவரென்று நன்றாய் தெரிந்திருக்கிறது. ஆனால், முடிவற்றவர் அவரேயானபடியினால், அவர் முடிவற்றவரென்று சொல்லப்படுகிறார். அவர் தானே சொரூபப் பொருளாகவும், தடத்த பொருளாகவுமிருக்கும் காரணத்தினால்மட்டு மல்லாமல் அவரிடத்தில் முடிவற்றப் பொருள்க ளிருப்பதாலும்கூட முடிவற்றவராயிருக்கிறார். முடிவற்ற பொருள்கள் தன்னிட மில்லாமலிருக்கும் முடிவற்றவர், பெயருக்கு மாத்திரம் முடிவற்றவராயிருப்பார். இந்த சொற்களோடு சேர்ந்த ஸ்தூல அபிப்பிராயத்தின் பொருட்டு அவரிடத்திலிருக்கும் முடிவற்ற பொருள்கள் முடிவற்ற அநேக மென்றும், முடிவற்ற எல்லாமென்றும் சொல்ல முடியாது; ஏனென்றால், முடிவற்ற அநேகம் என்கிற ஸ்தூல அபிப்பிராயம் எல்லைப் படுத்தப் பட்டதாகவும்,முடிவற்ற எல்லா மென்பது, நிஜமாகவே எல்லையில்லாததாயு மிருக்கிறது. அப்படியிருந்தாலும், அது பிரபஞ்சத்தின் எல்லைகளுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆகையால், ஒரு மனிதன் சிந்தனையை சுத்தம் செய்தலினாலும் சமீபித்தலினாலும், அவனிட பாவனைகள் ஸ்தூலமாயிருப்பதால், கடவுளிடத்தில் முடிவற்றப் பொருள்களைக் காணமாட்டான்; ஆனால் ஒரு வானவன், சூட்சும பாவனையிலிருப்பதால், இவ்விதம் சுத்தம் செய்தலினாலும் சமீபித்தலினாலும், மானிட உணர்ச்சிக்கு மேல்பட சக்தியுள்ளவனாகிறான்; ஆயினும் அந்தப் பொருளை அவன் சேரமாட்டான்.

18. கடவுள் ஒரு மனிதனென்று நம்புகிற ஒவ்வொருவனும், அவரிடத்தில் முடிவற்ற பொருள்கள் இருக்கின்றன

வென்று தனக்குள்ளே நிச்சயித்துக் கொள்கிறான். அவர் மனி தருணபடியினால் அவருக்கு ஒரு சரீரமும், சரீரத்துக்கேற்ற யாவு மிருக்கின்றன; இம்மாதிரியாக அவருக்கு ஒருமுகமும், மார்பும், வயிறும், இடுப்புகளும் பாதங்களுமுண்டு; ஏனென் றால், இவைகள் இல்லாமல் அவர் ஒருமனிதனாகார். அவ ருக்கு இவைக ளிருக்கிறபடியினால், கண்களும், காதுகளும், நாசித் துவாரங்களும், வாயும், நாவும் கூட அவருக்குண்டு. மேலும் இருதயத்தைப் போன்றும், சுவாசாசயத்தைப் போன் றும், ஓர் மனிதனுக்குளுள்ள அவயவங்களும் இவைகள் பேரில் சார்ந்திருக்கும் பாகங்களும், இவைகள் எல்லாம் சேர்ந்து, ஓர் மனிதனை மனிதனாக்குகிறது. சிருஷ்டிக்கப்பட்ட மனிதனில் இந்தப் பொருள்கள் அநேக மிருக்கின்றன. அவை களின் நிர்மாணங்களை யோசித்தால் எண்ணுக் கடங்காதவை களா யிருக்கின்றன. ஆனால் தேவ மனிதனில் இவைகள் முடி வற்றதாயும் யாதொரு குறைவற்றதாயு மிருக்கின்றன: ஆகை யினால் அவர் முடிவற்ற பரிபூரணரா யிருக்கிறார். கடவுள் மனிதனாயிருக்கிறபடியாலும், மனிதன் தமது சாயலாகவும், தமது ரூபத்தின்படியேயும் சிருஷ்டிக்கப்பட்டதாக அவர் சொன்னபடியாலும், சிருஷ்டிக்கப்படாத தேவமனிதனுக்கும், சிருஷ்டிக்கப்பட்ட மனிதனுக்கும் உவமானப் படுத்தினோம். (ஆதியா. I. 26, 27.)

19. கடவுளிடத்தில் முடிவற்ற பொருள்களிருக்கின் றன வென்பது தேவர்களுக்கு, தாங்கள் இருக்கப்பட்ட சுவர்க் கங்களிலிருந்து அதிக வெளிப்படையாய்த் தோன்றுகிறது. அயுதங்கள் அயுதங்கள் கணக்கான தேவர்களால் நிறைந்த முழு சுவர்க்கமும், தன் வழக்கமான உருவத்தில் ஓர் மனிதனா யிருக்கிறது. சிறியதாயினும் பெரியதாயினும் சுவர்க்கத்தின்

ஒவ்வொரு கூட்டமும் அம்மாதிரியே யிருக்கிறது. ஓர் தேவன், மிகவும் சிறிய உருவத்தில் சுவர்க்கமாயிருக்கிறபடியினால், அவனும் கூட மனிதனாயிருக்கிறான். விஷயம் அப்படி யிருக்கிறதென்பது **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலில் 51-முதல் 87 வரையிலுள்ள பிரிவுகளில் காணலாம். வானோர்கள் அடையும் தெய்வத்தின் பொருட்டு, சுவர்க்கமானது முழுமையும் ஒவ்வொரு பாகத்திலும், ஒவ்வொருவரிலும், அவ்வித உருவத்திலிருக்கிறது. ஏனென்றால், ஓர் வானவன் தெய்வத்தினின்று அடைவதற்குத் தக்கபடி, பரிபூரண உருவத்தில் அவன் ஒரு மனிதனாயிருக்கிறான். ஆகையால்தான் தேவர்கள் கடவுளிருப்பதாகவும், கடவுள் அவர்களிலிருப்பதாகவும், மேலும், கடவுள் அவர்களுக்கு எல்லாமாய யிருக்கிறதாகவும் சொல்லப்படுகின்றன. சுவர்க்கத்தில் எத்தனை பொருள்களிருக்கின்றனவென்று விவரிக்க முடியாது; தெய்வமே சுவர்க்கமாகிற படியாலும், அந்த தெய்வத்திலிருந்து இந்த எண்ணற்ற பொருள்கள் வெளிப்படுகிறபடியாலும், கடவுளாயிருக்கிற அதே மனிதனிடத்தில், முடிவற்ற பொருள்களிருக்கின்றன வென்று தெளிவாயிருக்கிறது.

20. பலன்களிலிருந்தும் அதன் அன்னுவயங்களிலிருந்தும் இதை ஆலோசிக்குங்கால், சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்திலிருந்து அதே அனுமானம் கொள்ளலாம். ஆனால், இது கிரகிக்கப்படுவதற்கு முன், அந்த விஷயம் திருஷ்டாந்தப்படுத்தப்பட வேண்டும்.

21. கண்ணாடியில் பார்ப்பதுபோல், சுவர்க்கத்திலும் வானோர்களிடத்திலும், மனிதரிடத்திலும் தோன்றுகிற **தேய்வ மனிதனிடத்தில்** முடிவற்ற பொருள்க ளிருக்கிறபடியாலும், **தேய்வ மனிதன்**, மேலே 7, 8, 9, 10 பிரிவுகளில் கூறியபடி

இடவரைக் குட்படாதவ ரானபடியாலும், கடவுள் சர்வ வியாபகராகவும், சர்வஞ் ஞத்துவமுள்ளவராகவும், சர்வ பராமரிப்புள்ளவராகவும், எப்படி இருக்கக்கூடுமென்றும், ஒரு மனிதனுக எல்லா பொருள்களேயும் எப்படி சிருஷ்டிக்கக்கூடுமென்றும், தானே சிருஷ்டித்த பொருள்களே அவைகளின் ஒழுங்கில் எப்படி சந்ததமும் வைக்கக்கூடுமென்றும் கொஞ்சமட்டும் அறிந்து கிரகிக்கப்படலாம்.

22. முடிவற்ற பொருள்கள் தேய்வ மனிதனில் வேருக ஒன்ருயிருக்கிறதென்பது, மனிதன் மூலமாய் ஓர் கண்ணுடியில் பார்ப்பதுபோல அறிந்து கொள்ளக்கூடும். மேற்கூறியபடி, மனிதனில் எண்ணற்ற பொருள்களிருக்கின்றன; ஆயினும், மனிதனனவன் இப்பொருள்களே ஒரு பொருளாக உணருகிருன். அவனுக்கு, அவனிட மூளேகளேப்பற்றியும், இருதயத்தைப்பற்றியும், சுவாசாசயங்களேப்பற்றியும் பித்தாசயத்தைப்பற்றியும், மண்ணீரல்களேப்பற்றியும், பான்கிரியாஸ் என்னும் அவயவத்தைப்பற்றியும் யாதொரு இந்திரிய ஞானமுமில்லே. அவன் கண்களேயும், காதுகளேயும், நாவையும், அன்னுசயத்தையும், ஜனிப்பிக்கும் அவயவங்களேயும் உள்பாகங்களின் மற்றவைகளேயும் உருவாக்கும், கணக்கிட முடியாத பொருள்களேப்பற்றியும், அவனுக்குத் தெரியாது; இந்தப் பொருள்களேப்பற்றி அவனுக்கு இந்திரிய ஞானமில்லாதபடியினுல், அவன் அவனுக்கு தோன்றுகிறபடி ஒருவனுக யிருக்கிருன். ஒன்றுகூட குறைவு படக்கூடாதபடி இந்த பொருள்களெல்லாம் ஓர் வடிவத்திலிருப்பது அதற்குக் காரணமாயிருக்கிறது. ஏனென்ருல், மேலே, 4, 5, 6, பிரிவுகளில் காண்பித்தபடி அது கடவுளிடமிருந்து உயிரை ஏற்றுக்கொள்ளுகிற ஒருருவமா யிருக்கிறது. இவ்வித ஓர் அவயவத்திலிருக்கும்

எல்லா பொருள்களின் ஒழுங்கிலிருந்தும், சம்பந்தத்திலிருந்தும், அது எண்ணற்ற பாகங்களாக அல்லாமல் ஓர் பொருள் என்றே ஓர் மனோபாவனை உண்டாகிறது. மனிதனில் ஒன்றைப்போலாகிற எண்ணற்ற பொருள்கள் கடவுளாகிய அதே மனிதனில், வேறாய், உண்மையில் மிகவும் வேறாய், ஒன்றாயிருக்கின்றன.

## எல்லா பொருள்களும் உற்பத்தியாகிற ஒரு தேய்வ மனிதர் இருக்கிறார்.

23. மானிட அறிவு, பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தாவாகிய ஒரு கடவுளிருக்கிறாரென்கிற இந்த ஒரு விஷயத்தை முழுமையும் நிரூபிக்கிறது. அப்படியிருப்பதால், அறிவுள்ள ஒரு மனிதன் தன்னிட சாமானிய புத்தியினால் வேறுவிதமாய் நினைக்கிறதில்லை. மேலும் வேறுவிதமாய் நினைக்கவும் முடியாது. பிரபஞ்சத்துக்கு இரண்டு சிருஷ்டி கர்த்தாக்களிருப்பதாகச் சரியான அறிவுள்ள எந்த மனிதனிடமாவது நீர் சொன்னால், அவன் காதில் இவ்வார்த்தைகளின் சப்தம் கூட விழக்கூடாதென்று இதற்கு அவன் விகாதம் செய்வான் என்பதை நீர் அறிவீர். கடவுள் ஒருவர் என்பதை மானிட அறிவைச் சேர்ந்த எல்லா பொருள்களும் முழுமையும் நிரூபிக்கிறதென்பது வெளிப்பொருளாயிருக்கிறது. இது ஏன் அப்படி இருக்கிறதென்பதற்கு இரு காரணங்களுள. முதலாவது காரணம், விவேகத்தோடு நினைக்கும் மனோ சக்தியையே யோசித்தால், அது மனிதனுடையதல்லாமல், மனிதனுள்ளிருக்கும் கடவுளுடையதென்பதாகும். மானிட அறிவு சாமானியமாய் இந்த மனோசக்தியை சார்ந்திருக்கும். இந்த சாமானிய அறிவு மனிதனை தன்னிடமிருந்தேபோல் இதை அறிந்து கொள்ளச் செய்கிறது. இரண்டாவது காரணம்,

மனிதனுனவன் அந்த மனேசக்தியினுல், சுவர்க்க ஒளியிலிருக் கிருன், அல்லது அதிலிருந்து தன்னிட சிந்தனையின் சாமா ணிய அறிவை அடைகிருனென்பதா யிருக்கிறது. சுவர்க்க ஒளியின் சர்வ வியாபக பத்ததி, கடவுள் ஒருவர் என்பதே. ஒரு மனிதனுனவன் அந்த சக்தியைக்கொண்டு, அவனிட புத்தி யின் கீழ்ப்பட்ட பாகங்களேக் கெடுத்தால், அது வேறுவிதமா யிருக்கிறது. அப்பேர்ப்பட்ட மனிதன் இந்த சக்தியை நிஜ மாக உபயோகப்படுத்துகிருன், ஆனுல் அந்த கீழ்ப்பட்ட பாகங்களின் மாறுதலினுல், அவன் அதை வேறுவழியில் திருப்புகிருன் ; அப்படிச் செய்வதால் அவனிட புத்தி கெட் டுப் போகிறது.

24. ஒவ்வொரு மனிதனும், தனக்கு தெரியாவிட்டா லும், மனிதர்கள் கூட்டத்தை ஒரு மனிதனுக நினேக்கிருன். ஆகையால் அரசன் தலே என்றும், குடிகள் சரீரமென்றும் சொல்லப்பட்டபோதும் பொதுக்கூட்டத்தில் அதாவது இராஜ்ஜியத்தில் இந்த அல்லது அந்த மனிதன் இவ்வித இடத்திலிருக்கிருனென்று சொல்லப்பட்டபோதும், என்ன கருத்து கொள்ளப்பட்டதென்று அவன் உடனே அறிந்து கொள்ளுகிருன். ராஜாங்கமுறையி லிருப்பதுபோல், பர மார்த்த கூட்டத்திலும் அப்படியே இருக்கிறது ; பரமார்த்த கூட்டமென்பது **திருச்சபை.** கடவுளாகிய மனிதன் அதன் தலே. ஆகையால், உலகத்திற்கு சிருஷ்டிகர்த்தா வும், ஆதரிப்பவருமாகிய ஒரு கடவுளே நினேக்காமல், அநேக கடவுளர்களே நினேத்தால், இந்த மனேபாவனேயில் மனிதனுக திருச்சபையின் தோற்றம் என்னமாயிருக்குமென் பது வெளிப்படையா யிருக்கிறது. அது அப்பொழுது அநேக தலேகளேயுடைய ஒரு சரீரத்தைப்போல் இந்த பாவனேயில்

தோன்றும்; இம்மாதிரியாக மனிதனைப்போலல்லாமல், ஒரு குரூ பாங்கியைப்போல் தோன்றும். இந்த சிரசுகள் ஓரியல்பைக் கொண்டதென்றும், இம்மாதிரியாக அவைகள் சேர்ந்து ஒரு சிரசாகிறதென்றும் சொல்லப்பட்டால், ஒரு தலைக்கு அநேக முகங்களிலிருக்கிறதென்றாவது, அநேக தலைகள் ஒரு முகத்தை யுடைத்தாயிருக்கின்றன வென்றாவது ஒருவன் அபிப்பிராயம் கொள்ள நேரிடும். ஆகையால் மனிதனிடத்திலிருப்பதுபோல் கூட, அந்த ஒரு கடவுள் சிரசாகவும் திருச்சபையானது சிரசின் உத்திரவுபடி அல்லாமல் தன்னாலேயே செயல் படாத சரீரமாகவுமிருந்தாலும், இந்த காட்சியில் திருச்சபையானது அவலக்ஷணமாகக் காண்பிக்கப்படும். இந்தக் காரணத்துக்காக ஒரு இராச்சியத்தில் ஒரு அரசனே மட்டும் இருக்கிறான்; ஏனென்றால், அநேக அரசர்கள் அதை பிளப்பார்கள். ஆனால் ஒரு அரசன் அதைச் சேர்த்துப் பிடிக்கக்கூடும்.

25. ஒரு சிரசின்கீழ் ஒரு சரீரத்தைப்போல் இருப்பதால் ஓர் கூட்டம் என்று சொல்லப்பட்ட, உலகம் முழுவதும் சிதறியிருக்கும் திருச்சபைக்கும் விஷயம் அம்மாதிரியேயிருக்கிறது. புத்தியும் சித்தமும் சிரசில் இருப்பதாலும், புத்தியினாலும் சித்தத்தினாலும்,சரீரமானது கீழ்ப்படிதலாகவே மாத்திரம் இருக்கிறதென்று சொல்லும்படியாக ஏவப்படுகிறதினாலும், சிரசானது சரீரத்தை அரசாளுகிறதென்று நன்றாய் தெரிந்திருக்கிறது. சிரசிலிருக்கும் புத்தியிலிருந்தும் சித்தத்திலிருந்தும் தவிர, சரீரம் எதையும் செய்ய முடியாது; அம்மாதிரியே திருச்சபைக்கு சேர்ந்தவன் கடவுளிடமிருந்தல்லாமல் எதையும் செய்ய முடியாது. சரீரமானது தன்னில் தானே சேட்டிக்கிறதென்றுதோன்றுகிறது. உதாரணமாக சித்தத்தின்

ஆசையிலிருந்தும், அதனால், சிரசிலுள்ள புத்தியின் சிந்தனையிலிருந்துமன்றி தாங்களே ஒன்றும் செய்யாவிட்டாலும் கைகளும் கால்களும் சேட்டிப்பதில் தாங்களே இயங்குகிறது போலும், வாயும், நாவும் பேசுவதில் தாங்களே அசைகிறது போலும், தோன்றுகிறது. ஒரு சரீரத்துக்கு, பல சிரசுகள் இருந்து, ஒவ்வொரு சிரசும், தன்னிட சொந்த புத்தியிலிருந்தும் சித்தத்திலிருந்தும் சேட்டிக்கவிட்டால், சரீரமானது நிலைக்குமாவென்று இப்பொழுது யோசித்துப் பார். ஒரு சிரசிலிருந்து ஏற்படும் ஏகசிந்தை பல சிரசுகளில் இருக்க முடியாது. திருச்சபையிலிருப்பது போலவே அநேக மநேகம் ஆயிரக்கணக்கான தேவர்கள் நிறைந்த சுவர்க்கங்களிலும் அப்படியே யிருக்கிறது. இவர்களெல்லாரும் தனித்தனியாய் ஒரு கடவுளை எதிர்பாராவிட்டால், ஒருவரிடமிருந்து ஒருவர் பிரிந்து, சுவர்க்கமும் கலைந்துபோகும். ஆகையால் சுவர்க்க லோகத்துதேவன் ஒருவன் பல கடவுளர்களை நினைத்தாலேயே அவன் உடனே பிரிக்கப்படுகிறான்; சுவர்க்கத்தின் அதிக தூரமான எல்லையில் எறியப்பட்டு, கீழே விழுகிறான்.

26. சர்வவியாபகமுள்ள சுவர்க்கமும், சுவர்க்க லோகத்தின் எல்லா பொருள்களும் ஒரு கடவுளுடன் சம்மந்தப்பட்டிருப்பதால்,தேவபாஷையானது சுவர்க்கத்திலுள்ள ஒற்றுமையிலிருந்துவரும் ஓர்வித ஒற்றுமையால் பேதமின்றி ஒன்றாக முடிவாகிற ஓர்வித சுபாவமுடையதா யிருக்கிறது. பேச்சு சிந்தனையிலிருந்து வருவதால், தேவர்கள் ஒரு கடவுளுக்கு அதிகமாக நினைக்க முடியாதென்பதற்கு இது அடையாளமா யிருக்கிறது.

27. தெய்வம் பிரிக்க முடியாதென்றும், அநேக முடிவற்றவைகளும், சிருஷ்டிக்கப்படாதவைகளும், சர்வவல்லமையுள்ள

வைகளும், கடவுள்களும் இருக்கமுடியாதென்றும், தெரிந்து கொள்ளாதபடி, சரியான அறிவுள்ள எந்தமனிதனிருக்கிறான்? சரியான அறிவில்லாத வேறொருவன், ஒரே இயல்புள்ளவர்களாகில், அநேக முடிவற்றவர்களும், சிருஷ்டிக்கப்படாதவர்களும், சர்வ வல்லமையுள்ளவர்களும், கடவுள்களும் இருக்கக்கூடுமென்றும், இவ்விதத்தில் ஒரு முடிவற்றவரும் சிருஷ்டிக்கப்படாதவரும், கடவுளு மிருக்கக்கூடுமென்றும் சொன்னால், ஒரே இயல்பென்பது அபேத மின்மையல்லவா என்று நாம் கேட்கிறோம். அநேகருக்குள் அபேத மின்மை இருக்க முடியாது. ஒன்று மற்றொன்றிலிருந்து வந்ததென்று கூறப்பட்டால், மற்றதிலிருந்து வந்தவன் தன்னில் தானே கடவுளாக மாட்டான். அல்லாமலும் தன்னில் தானே கடவுளாயிருப்பவர் எல்லா பொருள்களும் தன்னிடமிருந்து வெளிப்படும் கடவுளாயிருக்கிறார். (மேலே 16-வது பிரிவைப் பார்க்கவும்).

தெய்வத்தினியல்பே அன்பும் ஞானமுமாயிருக்கிறது.

28. உனக்குத் தெரிந்த எல்லாபொருள்களையும்சேர்த்து, மானசமாய் ஆராய்ந்து பார்த்து, அவைகளுக்கெல்லாம் பொதுவானதெதுவென்று ஜாக்கிரதையாய் ஆன்ம உயர்ச்சியில் யோசித்தால்,அன்பும் ஞானமுமே அந்தபொதுப் பொருளென்கிற முடிவுக்கே நீர் வரவேண்டும். ஏனென்றால், இந்த இரண்டும் மனிதனிட உயிருக்குச் சேர்ந்த எல்லா பொருள்களின் பிரதானமானவைகளா யிருக்கின்றன. மனிதனைச் சேர்ந்த தேசாசாரமானதும், சன்மார்க்க சம்பந்தமானதும், பரமார்த்தமானதுமாகிய ஒவ்வொன்றும் இந்த இரண்டையும் சார்ந்திருக்கிறது. இந்த இரண்டுமின்றி, யாதொரு பொருளுமில்லை. மேல் சொல்லியபடி, பெரியது அல்லது சிறியதாகிய ஓர் கூட்டமா

கவும், ஒரு இராச்சியமாயும், சக்கிரவர்த்தி அரசாலும் இராச்சியமாகவும், ஓர் திருச்சபையாகவும், தேவலோகமாகவு மிருக்கிற சேர்வையான மனிதனிட உயிருக்குச் சேர்ந்த எல்லா பொருள்களுக்கும் விஷயம் அப்படியேயிருக்கிறது. அவைகளிலிருந்து அன்பையும் ஞானத்தையும் நீக்கிவிட்டு, அவைகள் என்னவென்று நீர் யோசித்தால், இவைகள் மூலப் பொருள்களாக இல்லாவிட்டால், அவைகள் சூனியம் என்பதை அறிவாய்.

29. பராபரன் எல்லாரையும் தன்னிலே யிருக்கும் அன்பினால் நேசிக்கின்றபடியாலும், தன்னிலே யிருக்கும் ஞானத்தினால் நடத்துகிறபடியாலும், அவரிடத்தில் அன்பும் அதே காலத்தில் ஞானமும் அவைகளின் சாரத்திலேயே இருக்கின்றனவென்று யாவரும் மறுக்க முடியாது. ஒழுங்கு என்கிற விஷயத்தை யோசிக்குங்கால், மொத்தத்தில் எல்லா பொருள்களும் அந்த ஞானமே என்று நீர் சொல்லும்படியாக சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சங்கூட அன்பிலிருந்து வந்த ஞானத்தினால் அவ்வளவு நிறைந்திருக்கிறது; ஏனென்றால் வரையறையற்ற அநேக பொருள்களை ஒருமிக்கச் சேர்த்து பார்த்தால் அவைகள் ஒன்றாகும்படியாக, படிப்படியாய் ஏககாலத்தில் அவ்வித ஒழுங்கிலிருக்கின்றன. மற்ற காரணங்களாலல்லாமல், இந்த காரணத்தினாலேதான் அவைகள் சேர்த்துப் பிடிக்கப்படவும் சாசுவித காலம் பத்திரப்படுத்தி வைக்கப்படவும் கூடும்.

30. தெய்வத்தின் சாரமே அன்பாகவும் ஞானமாகவு மிருக்கிறதென்பதும், ஒன்றிலிருந்து புத்தியையும், மற்றதிலிருந்து சித்தத்தையும் மனிதன் அடையும், உயிரின் இரண்டு மனோசக்திகள் அவனுக் கிருக்கிறதென்பதும், இந்த கார

ணத்தினுல்தான். புத்தி உற்பத்தியாகுமிடமாகிய மனோ சக்தி, கடவுளிடமிருந்துவரும் ஞானத்தின் உட்பிரவேசத்தால் தன்னுள்ளிருக்கும் எல்லாவற்றையும் அடைகிறது. சித்தம் உற்பத்தியாகுமிடமாகிய மனோசக்தி கடவுளிடமிருந்துவரும்அன்பின் உட்பிரவேசத்தால் தன்னுள்ளிருக்கும் எல்லாவற்றையுமடைகிறது. ஒரு மனிதன் சரியான புத்தியுள்ளனல்லன் என்பதும், சரியாய் நேசிக்கிறதில்லை என்பதுமாகிய விஷயம் மனோசக்திகளை அழிக்கிறதில்லை. ஆனுல் அது அவைகளை மூடிவிடுகிறது; அது அவைகளை மூடிக்கொண்டிருக்கும் காலம் வரையில், புத்தியானது புத்தியென்றும், சித்தமானது சித்தமென்றும், நிஜமாகவே சொல்லப்பட்டாலும், அவைகள் பிரதானமாய் புத்தியும் சித்தமுமல்ல. ஆகையால் இந்த மனோசக்திகள் நீக்கப்பட்டால், சிந்தனையிலிருந்து நினைப்பதிலும் பேசுவதிலும், சித்தத்திலிருந்து இச்சிப்பதிலும்சேட்டிப்பதிலும் அமைந்திருக்கும் மனுஷத்தன்மையைச் சேர்ந்த எல்லாம் அழிந்துபோகும். ஆகையினுல், புத்தியுள்ளவனுயிருக்கும் சக்தி, நேசிக்கும் சக்தியாகிய இந்த இரண்டு மனோசக்திகளிலும், தெய்வமானது மனிதனேடு வாசம் செய்வதாகத் தோன்றுகிறது. மனிதனுனவன் தனக்கு சக்தியுள்ளவரையில் புத்தியுள்ளவனுகவும், அன்புபாராட்டுகிறவனுக இல்லாவிட்டாலும் புத்தியுள்ளவனுகவும் அன்புள்ளவனுகமிருக்கும் சக்தி அவனிடத்திலிருப்பதாக அதிக அனுபவத்தில் எனக்கு தெரியப்படுத்தப்பட்டிருக்கிறது. அதை வேறு இடத்தில் மிகுதியாய் நீர் காண்பீர்.

31. தெய்வ சொரூபமே அன்பும் ஞானமுமாய் இருக்கிறதென்கிற காரணத்தினுல்தான், பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும் நன்மைக்கும் உண்மைக்கும் சம்பந்தம் காட்டத்

தருந்தவைகளாயிருக்கின்றன. ஏனென்றால், அன்பிலிருந்து புறப்படும் ஒவ்வொன்றும் நன்மை என்று சொல்லப்படும். ஞானத்திலிருந்து புறப்படும் ஒவ்வொன்றும் உண்மை என்று சொல்லப்படும். ஆனால் இதைப்பற்றி இனிமேல் அதிகம் பேசலாம்.

32. தெய்வ சொருபமே அன்பும் ஞானமுமாய் இருக்கும் காரணத்தினால்தான், பிரபஞ்சமும், உயிருள்ளதும் உயிரில்லாததுமாகிய இருவகைப் பொருள்களாகிய அதிலுள்ள எல்லா பொருள்களும், சூட்டினாலும் ஒளியினாலும் நிலைத்திருக்கின்றன. ஏனென்றால், சூடு அன்பிற்கும், ஒளி ஞானத்திற்கும் அன்னுவயப்படுகின்றன என்பதாலாகும். ஆகையினால் கூட பரமார்த்த சூடு அன்பாயிருக்கின்றது; பரமார்த்த ஒளி ஞானமாயிருக்கிறது. ஆனால் இதைப்பற்றியும் கூட இனிமேல் அதிகம் பேசலாம்.

33. கடவுளாயிருக்கிற சொரூப நிலையேயாகிற பரம அன்பிலிருந்தும் பரம ஞானத்திலிருந்தும் மனிதனுக்கு இருக்கும் எல்லா ஆசைகளும் சிந்தனைகளும், அதாவது பரம அன்பிலிருந்து வரும் ஆசைகளும், பரம ஞானத்திலிருந்து வரும் சிந்தனைகளும் தோன்றுகின்றன; மனிதனிலிருக்கும் எல்லா பொருள்களும் பொதுவாயும் சிறப்பாயும், ஆசையும் சிந்தனையும் தவிர வேறொன்றுமில்லை. இந்த இரண்டும் அவனிட உயிருக்குச் சேர்ந்த எல்லா பொருள்களுக்கும் உற்பத்திஸ்தானங்களைப்போலிருக்கின்றன. அவன் உயிரைச் சேர்ந்த எல்லா சந்தோஷங்களும், களிப்புகளும், அவைகளிலிருந்து வருகின்றன; சந்தோஷங்கள் அவன் அன்பின் ஆசையிலிருந்தும், களிப்புகள் அதிலிருந்து உண்டாகும் சிந்தனையிலிருந்தும் வருகின்றன. மனிதன் ஒன்றை எற்பவனாய் சிருஷ்டிக்

கப்பட்டிருக்கிறபடியினலும், அவன் கடவுளிடத்தில் அன்பு பாராட்டி, அந்த கடவுளிடத்து காட்டும் அன்பினல் புத்தியுள்ளவனயிருக்கிற அளவு, அதாவது கடவுளிடத்திலிருந்து வரும் பொருள்களால் மாறுதலடைந்து, அந்த ஆசையிலிருந்து அவன் நினைக்கிற அளவு, ஏற்பவன யிருக்கிறபடியினலும், சிருஷ்டிக்கும் சக்தியாயிருக்கு.ம் தெய்வ சொரூபமே பரம அன்பும் பரம ஞானமு மாயிருக்கிறதென்று ஏற்படுகிறது.

## பரம இச்சாசக்தி பரம ஞானசக்திக்கு சேர்ந்தது, பரம ஞானசக்தி பரம இச்சாசக்திக்குச் சேர்ந்தது.

34. கடவுளின் சொரூப நிலையும் தடத்தநிலையும் வேறு வேருன ஒன்ருயிருக்கிற தென்பதை மேலே (14 முதல் 16 வரையில்) பார்க்கலாம். தெய்வ சொரூபம் பரம அன்பாயிருப்பதாலும், தெய்வதடத்தம் பரம ஞானமாயிருப்பதாலும் இவைகளும் அங்ஙனமே வேறு வேருக ஒன்ருயிருக்கிறது. அன்பும் ஞானமும் இரண்டு வேருன பொருள்களாயிருந்தும், அன்பு ஞானத்துக்குச் சேரும்படியாயும், ஞானம் அன்புக்குச் சேரும்படியாயும் ஐக்கியப்பட்டிருப்பதால், அவைகள் வேருன ஒன்றென்று சொல்லப்படுகின்றன. இம்மாதிரியாக அன்பு ஞானத்திலிருக்கிறது, ஞானம் அன்பில் வெளிப்படையாயிருக்கிறது; மேலே (15-வது பிரிவில்) கூறியபடி, ஞானம் அன்பிலிருந்து தடத்த நிலையை யடைகிறபடியினல், பரம ஞானம் பரம சொரூபமாயிருக்கிறது. அன்பும் ஞானமும் சேர்க்கப்பட்டால், தெய்வ சொரூபமே என்றும், வேருய் எடுத்துக்கொண்டால் அன்பு தெய்வ சொரூபமென்றும், ஞானம் தெய்வ தடத்தமென்றும், இதனல் ஏற்படுகிறது. பரம அன்பைப்பற்றியும் பரம ஞானத்தைப்பற்றி

யும் தேவஞானசம்பந்தமான அபிப்பிராயம் இவ்விதமாயிருக்கிறது.

35. கடவுளில் அன்பினிடமும் ஞானத்தினிடமும், ஞானத்தினிடமும் அன்பினிடமும் அவ்வித ஐக்கிய மிருப்பதால் பரம சொரூபம் ஏகமாயிருக்கிறது. தெய்வ சொரூபம், பரம ஞானத்திற்கு சேர்ந்ததால், அது பரம அன்பாயிருக்கிறது. அது பரம அன்புக்கு சேர்ந்ததால், பரம ஞானமாயிருக்கிறது. இவைகளுக்கு அவ்வித ஐக்கிய மிருப்பதால், கூட, பரம உயிர் ஒன்றாயிருக்கிறது; தெய்வ சொரூபம் உயிராயிருக்கிறது. அந்த ஐக்கியம் பரஸ் பரமாயிருப்பதாலும், பரஸ்பர ஐக்கியம் ஏகத்வத்தை உண்டாக்குகிறதாலும், தெய்வ அன்பும் தெய்வ ஞானமும் ஒன்றாயிருக்கின்றன. ஆனால் பரஸ்பர ஐக்கியத்தைப்பற்றி வேறு இடத்தில் அதிகம் சொல்லப்படும்.

36. ஒவ்வொரு தெய்வச் செயலிலும், அன்பு ஞானத்தினிட ஐக்கியம்கூட இருக்கிறது; இதிலிருந்து, அதன் நீட்டித்தலும், உண்மையில் அதன் நித்தியமும் உண்டாகிறது. எந்த சிருஷ்டிக்கப்பட்ட பொருளிலும், பரம ஞானத்தைவிட பரம அன்பு அதிகமாயிருந்தாலும், பரம அன்பைவிட பரம ஞானம் அதிகமாயிருந்தாலும், அது ஜீவிக்காது; அந்த இரண்டும் சமமாயிருக்கவேண்டும்; அதிகமா யிருப்பது ஏதாகிலும் போய்விகிறது.

37. மனிதர்கள் சீர்திருத்தத்திலும், சீர்படுகையிலும், ஈடேற்றத்திலும் தெய்வ பராமரிப்பு பரம அன்பையும் பரம ஞானத்தையும் சமமாய்ப் பகிர்ந்து கொள்ளுகிறது. பரம ஞானத்தைவிட பரம அன்பு அதிகமாயிருந்தாலும், பரம அன்பைவிட பரம ஞானம் அதிகமாயிருந்தாலும், மனிதன்

திருத்தப்படவும், சீர்படவும், ஈடேறவும் முடியாது. பரம அன்பு எல்லாரையும் ஈடேற்ற இச்சிக்கிறது; ஆனால் பரம ஞானத்தின் மூலமாயல்லாமல் அது ஈடேற்ற முடியாது; ஈடேற்றத்தை உண்டாக்கும் எல்லா சட்டங்களும், பரம ஞானத்தைச் சேர்ந்தது; பரம அன்பும் பரமஞானமும் ஒன்றானபடியினாலும், ஐக்கியப்பட்டு செயல்படுகிற படியினாலும், அன்பானது அந்த சட்டங்களை மீறி நடக்கமுடியாது.

38. வேதத்தில் பரம அன்பும் பரமஞானமும், நீதியும் நியாயமுமென்றும், பரமஅன்பு நீதி என்றும் பரமஞானம் நியாயமென்றும் அர்த்தம் கொள்ளப்படுகின்றன. ஆகையினால் வேதத்தில் நீதியும் நியாயமும் கடவுளுக்கு உபயோகப் படுத்தப்படுகிறது. தாவீதில் சொல்லியபடி, "நீதியும் நியாயமும் அவருடைய சிங்காசனத்தின் ஆதாரம்." (சங். XCVII. 2.); "எகோவா நீதியை வெளிச்சத்தைப்போலவும், நியாயத்தை பட்டப்பகலைப்போலவும் விளங்கப்பண்ணுவார்" (சங். XXXVII. 6). ஓசியாவில் "நீதியிலும் நியாயத்திலும், நித்திய விவாகத்துக்கென்று உன்னை எனக்கு நியமித்துக்கொள்ளுவேன்" (II. 19). எரேமியாவில் "நான் தாவீதுக்கு ஒரு நீதியுள்ள கிளையை எழும்பப் பண்ணுவேன், அவர் ராஜாவாயிருந்து பூமியிலே நியாயத்தையும் நீதியையும் நடப்பிப்பார்" (XXIII. 5). எசாயாவில் "நியாயத்தினாலும் நீதியினாலும் நிலைப்படுத்தும்படிக்கு, அவர் தாவீதின் சிங்காசனத்தையும் அவனுடைய ராஜ்யத்தையும் திடப்படுத்துவார்" (IX. 7). "அவர் பூமியை நியாயத்தினாலும், நீதியினாலும் நிரப்பினபடியினால், அவர் உயர்ந்தவர்" (XXXIII. 5). தாவீதில் "உங்களுடைய நீதியின் நியாயங்களை நான் தெரிந்துகொண்டபோது, "உம்மிட நீதியின் நியாயங்களுக்காக நான் உம்மை

ஒரு நாளைக்கு ஏழுதரம் போற்றுகிறேன்" (CXIX. 7, 164) யோவானில் ஜீவன் என்பதும் ஒளி என்பதும் அதே அருத்தம் கொள்ளுகிறது: "அவருக்குள் ஜீவன் இருந்தது, அந்த ஜீவன் மனுஷருக்கு ஒளியாயிருந்தது" (I. 4). இந்தவாக்கியத்தில் ஜீவன் என்பது ஆண்டவனிட பரமஅன்பென்றும், ஒளி என்பது அவரிட பரம ஞானமென்றும் அருத்தம் கொள்ளப் படுகின்றன. யோவானில் ஜீவன் என்பதும் ஆவி என்பதும் அதே அருத்தம்கூட கொள்ளப்படுகிறது: "ஏசுவானவர், நான் உங்களுக்குச் சொல்லுகிற வசனங்கள் ஆவியாயும் ஜீவனுயு மிருக்கிறதென்று சொன்னார்" (VI. 63).

39. மனிதனிடத்தில், ஞானம் அன்பைப்போலவும், அன்பு ஞானத்தைப்போலவுமிருப்பதால், அவனிடத்தில் அன்பும் ஞானமும் இரண்டு வேறானப் பொருள்களைப்போல் தோன்றுகின்றன. ஆயினும், அவைகள் தம்மில் தாமே வேறான ஒரு பொருளாயிருக்கின்றன. தன்னிட அன்போடு ஒன்றாகாத ஞானம் ஞானத்தைப்போல் தோன்றுகிறது. ஆயினும் அது அப்படி இல்லை. தன்னிட ஞானத்தோடு ஒன்றாகாத அன்பு அப்படியில்லாவிட்டாலும், ஞானத்தின் அன்புபோல் தோன்றுகிறது. ஏனென்றால் ஒன்று தன்னிட சத்தையும் உயிரையும் மற்றதிலிருந்து பரஸ்பரமாய் அடைகிறது. மனிதனிடத்தில் அறிந்துகொள்ளும் சக்தி தெய்வலோகத்தின் வெளிச்சம் வரையில் உயர்த்தப்படக்கூடுமாகையாலும், மனிதன் தான் அறிந்து கொண்டதை செய்தாலொழிய நேசிக்கும் சக்தியை அப்படி உயர்த்த முடியாதபடியினாலும், அவனிடத்தில் அன்பும் ஞானமும் இரண்டு வேறான பொருள்களாகத் தோன்றுகின்றன. ஞானத்தின் அன்புடன் ஒன்றாகாத வெளிவேஷமான ஞானத்தின் எது

வும், ஒன்றுகும் அன்புடன் கலக்கிறது. மேலும் இது ஞானத்திலிருந்து வராத அன்பாயிருக்கலாம், உண்மையில், அது உன்மத்தமான அன்பாயிருக்கலாம். அறிவைக்கொண்டு ஒரு மனிதன், இது அல்லது அதை தான் செய்யவேண்டிய தென்று தெரிந்திருக்கலாம். ஆயினும், அதை நேசிக்காதபடி யினுல், செய்கிறதில்லை. ஆனுல், ஞானத்தைச் சேர்ந்ததை. அன்பினுல் எவ்வளவு அவன் செய்கிறுனே, அவ்வளவு கடவு ளின் சாயலாயிருக்கிறுன்.

## பரம அன்பும் பரம ஞானமும் ஒரு போருளாகவும் ஒரு ரூபக்குறிப்பாகவு மிருக்கின்றது.

40. அன்பைக்குறித்தும் ஞானத்தைக் குறித்தும் சாதாரணமாய் மனிதருடைய அபிப்பிராயம், நுண்மையான காற்று அல்லது (Ether) எனும் ஆகாயத்தில் பரக்கிற அல்லது மிதக்கிற எதுவோ ஒரு பொருளைப்போலும், அவ்விதப் பொருள்களில் ஏதுவோ ஒன்றிலிருந்துவரும் ஆவியைப்போலவு மிருக்கிறது. யாரும் அவைகள் நிஜமாய் ஒரு பொருளென்றும், ரூபம் என்றும், நினைக்கிறதில்லை. அவைகள் ஒரு பொருளென்றும் ரூபக்குறியென்றும் தெரிந்துகொள்ளப்பட்டவர்களும், பதார்த்தத்திற்கு புறம்பான அன்பையும் ஞானத்தையும், அதிலிருந்து வெளிப்படும் பொருள்களாகக் காண்கிறுர்கள்; பதார்த்தத்தின் புறம்பு அதிலிருந்து வெளிவருவதுபோல் அவர்கள் காண்பதை, அவர்களுக்கு பறக்கிறதும் மிதக்கிறதுமா யிருந்தபோதிலும், பொருளென்றும் ரூபக்குறியென்றும் கூட சொல்லுகிறுர்கள். ஏனென்றுல், அன்பும் ஞானமும் பதார்த்தமே என்றும், பறக்கிறது போலவும் மிதக்கிறது போலவும், அதற்கு புறம்பே அவர்கள் பார்ப்பது சுயமாய் பதார்த்தத்தின் நிலைமையின்

தோற்றமாகமாத்திரம் இருக்கிறதென்றும் அவர்கள் தெரிந்து கொள்ளுகிறதில்லை. இதுவரையில் அது தெரிந்துகொள்ளப் படாததற்கு அநேக காரணங்களிருக்கின்றன. ஒரு காரணம் என்னவென்றால், தோற்றங்கள் மானிட மனதானது தன்னிட புத்தியை உருவாக்குகிற முதற்பொருள்களா யிருக்கின்றன என்பதாயிருக்கிறது; அதன் காரணத்தை சோதித்தாலன்றி அது இவைகளை உதறிப்போட முடியாது. காரணமானது ஆழமாய் மறைக்கப்பட்டிருந்தால், புத்தியானது நெடுங்காலம் பரமார்த்த வெளிச்சத்தில் வைக்கப்பட்டாலன்றி மனது அதை சோதிக்க முடியாது. ஆனால், புத்தியை தொடர்ச்சியாய் கீழே இழுக்கிற ஸ்தூல ஒளியின் பொருட்டு இது செய்ய முடியாது. அப்படி யிருந்தாலும், அன்பும் ஞானமும் பதார்த்தத்தையே உண்டாக்குகிற நிஜமான பொருளும் ரூபக்குறியும் என்பது உண்மையாயிருக்கிறது.

41. ஆனால், இது தோற்றத்துடன் முரணுகிறபடியினால், அது நிரூபிக்கப்பட்டாலொழிய, நம்பிக்கைக்கு பாத்திரமாயில்லை எனத் தோன்றலாம்; அது, ஒரு மனிதன் தன் சொந்த சரீரத்தின் ஐம்புலன்களால் தெரிந்துகொள்ளக் கூடிய பொருள்களால் மட்டும் நிரூபிக்கக்கூடுமாகையால், இவைகளின் மூலமாகவே அது நிரூபிக்கப்படும். பரிசம், ரசம், கந்தம், சத்தம், ரூபம் என்று சொல்லப்பட்ட ஐந்து புறப்புலன்கள் ஒரு மனிதனுக்குண்டு. பரிசத்தின் பதார்த்தம் ஒரு மனிதனை மூடப்பட்டிருக்கிற சருமமாகும்; சருமத்தின் பொருளும் ரூபக்குறியுமே அதன்பேரில் பிரயோகித்த பொருள்களை உணர அதைச்செய்கிறது; பிரயோகித்தபொருள்களில் பரிச புலனில்லை; ஆனால் பதார்த்தமாயிருக்கிற சருமத்தின் பொருளிலும் ரூபக்குறியிலும் அது இருக்கிறது; இந்தப்

3

புலன், பிரயோகித்த பொருள்களிலிருந்து பதார்த்தத்தின் ஒருமாறுதலாக மாத்திரம் இருக்கிறது. ரசப்புலனுக்கும் அதே வாகிறது; இந்தப் புலன் நாக்கின் பொருளிடவும், ரூபக்குறியி னிடவும் மாறுதலாக மாத்திர மிருக்கிறது; நாக்கு அந்த பதார்த்தமாயிருக்கிறது. கந்தபுலனுடனும் விஷயம்அப்படியே. மணமானது நாசித்துவாரங்களை மாறுதலடையச் செய்கின்ற தென்றும் அது நாசித்துவாரங்களிலிருக்கிறதென்றும், அவை களை முட்டுகிற சுகந்த வாசனையுள்ள பொடிகளால், அவைகள் மாறுதல் அடைகின்றனவென்றும் நன்முய் தெரிந்திருக்கி றது. சத்தப் புலனுக்கும் அம்மாதிரியே. சத்தம் ஆரம் பிக்குமிடத்தில் அது கேட்பதுபோலத் தோன்றுகிறறு. ஆனல் அப்படி கேட்டல் காதிலிருக்கிறது. அது அதன் பொரு ளிடவும் ரூபக்குறியினிடவும் ஒரு மாறுதலாயிருக்கிறது; சத் தம் கேட்டல் காதுக்கு தூரத்திலிருக்கிறது என்பது ஒரு தோற்றமாயிருக்கிறது. ரூபப்புலனுக்கும் விஷயம் அப்படியே, ஒரு மனிதன் தூரத்திலிருக்கும் பொருள்களைப் பார்த்தால், பார்வை அங்கே இருப்பதாகத் தோன்றுகிறது. ஆயினும் பதார்த்தமாகியதும் அம்மாதிரியே அதன் மாறுதலாயுமிருக் கிற கண்ணில் அது இருக்கிறது. இடையில் வரும் பொருள் களிலிருந்து இடத்தைப்பற்றி விவேகமானது கொள்ளும் ஓர் அனுமானத்திலிருந்தாவது, பார்க்கும் விதத்திற்கு தக்கபடி கண்ணின் உள்ளே அதின் சாயல் உண்டாகும் பொருளின் பரி மாணத்திலும், மந்தாரத்திலும் உண்டாகும் குறைவிலிருந்தா வது மாத்திரம் தூரம் என்பது உண்டாகிறது. ஆகையினல் பார்வையானது கண்ணிலிருந்து பதார்த்தத்தினிடம் வெளியே போகாமல் பார்க்கப்பட்ட பொருளின் சாயல் கண்ணில் பிர வேசித்து, அதன் பொருளையும் ரூபக்குறியையும் மாறுதல

டையச் செய்கிறது என்பது வெளிப்படையா யிருக்கிறது. கேட்டலுடன் இருப்பதுபோல், பார்வையுடனும் விஷயம் ஒரேமாதிரி இருக்கிறது; கேட்டலும் கூட காதிலிருந்து சத்தத்தைப் பிடிக்க வெளியேபோகிறதில்லை; ஆனால், சத்தமானது காதில் பிரவேசித்து அதை மாறுதலடையச் செய்கிறது. இவைகளினாலே, இந்திரிய ஞானத்தை உண்டாக்கும் பொருளினிடவும் ரூபக்குறியினிடவும் மாறுதலானது, பதார்த்தத்திலிருந்து வேறான எதுவுமில்லை என்றும், ஆனால் அப்பொழுதும் பதார்த்தமானது பதார்த்தமாகவே முன்போலவும் பின்னிட்டும் இருந்துகொண்டு, அதில் ஒரு மாறுதலை மாத்திரம் உண்டாக்குகிறதென்றும் விசதமாகிறது. ஆகையினாலே, ரூபமும், சத்தமும், கந்தமும், ரசமும், பரிசமும், தங்களிட அவயவங்களிலிருந்து வெளிப்படும் ஆவியாய் பறக்கிற எந்த பொருளுமல்லாமல் தங்களிட பொருளிலும் ரூபக்குறியிலும் நோக்கப்பட்டபோது அவைகள் அவயவங்களென்றும், அவயவங்கள் மாறுதலடையும்போது, இந்திரிய ஞானம் உண்டாகிறதென்றும் ஏற்படுகிறது.

42. அன்பும் ஞானமுமாயிருக்கிற பதாத்தங்களும் ரூபக்குறிகளும், புறப்புலங்களின் அங்கங்களைப்போல கண்களுக்குத் தெரிகிறதில்லை என்கிற இந்த வித்தியாசத்துடன் மாத்திரம், இச்சாசத்தியோடும் ஞானசத்தியோடும், விஷயம் ஒரேமாதிரி யிருக்கிறது. என்றாலும், சிந்தனைகளென்றும் உணர்ச்சிகளென்றும், பிரியங்களென்றும் சொல்லப்பட்ட அன்புக்கும் ஞானத்துக்கும் சேர்ந்த பொருள்கள், ஆவியாய்ப் போகப்பட்டதும், தொடக்கமில்லாததும் அல்லது பதார்தங்களாயிருக்கிற நிஜமானதும் உண்மையானதுமான பொருளோடும் ரூபக்குறியோடும் சம்பந்தப்படாததுமான

பொருள்கள் அல்லாமல், பொருள்கள் என்றும் ரூபங்கள் என்றும் மறுக்க முடியாது. ஏனென்றால், புத்திக்கும் சித்தத்துக்கும் சம்பந்தப்பட்ட ஒவ்வொரு அகப்புலனும் வசிக்கும் எண்ணற்ற பொருள்களும் ரூபக்குறிகளும் மூளையில் இருக்கின்றன. அங்கே எல்லா ஆசைகளும், உணர்ச்சிகளும், சிந்தனைகளும் இந்த பொருள்களிலிருந்து வெளிப்படும் ஆவிகளல்லாமல், தங்களிடமிருந்து ஒன்றையும் வெளிவிடாமல், மேல் விழுந்து வேறு படுத்துகிற பொருள்களுக்கு தக்கபடிமாறுதல்கள் அடைகிறபதார்த்தங்களாய் உண்மையில் அவைகளிருக்கின்றன என்பது புறப்புலன்களைக் குறித்து மேலே சொல்லியவற்றால் தெரியவரும். அப்படி மேல் விழுந்து வேறுபடுத்தும் பொருள்களைக் குறித்து கீழே அதிகமாய் சொல்லப்படும்.

43. பரம இச்சாசத்தியும் பரம ஞானசத்தியும் சொரூபமும் தடத்தமுமாயிருப்பதால், அவைகள் தம்மில் தாமே ஒரு பொருளாயும் ரூபக்குறியாயும் இருக்கின்றனவென்று, இவைகளிலெல்லா மிருந்து இப்பொழுது முதலில் தெரிந்து கொள்ளலாம். அவைகள் ஒரு பதார்த்தமும் ரூபக்குறியாயும் இருப்பதுபோல் சொரூபமும் தடத்தமுமா யில்லாவிட்டால், தங்களுக்குள்ளே சூனியமாயிருக்கும் மனக்கற்பனையான பொருள்களாய் மாத்திரம் முடியும்.

**பரம இச்சாசத்தியும் பரம ஞானசத்தியும் தாமே உள் பொருளாகவும் ரூபக்குறியாகவும் இம்மாதிரியாக உண்மையேயாகவும், ஒரே உண்மையாகவு மிருக்கின்றன.**

44. பரம இச்சாசத்தியும் பரம ஞானசத்தியும் ஒரு பொருளாகவும் ஒரு ரூபக்குறியாகவும் இருக்கிறதாக சற்று மேலே நிரூபித்தோம்; மேலும் தெய்வ சொரூபமும் தடத்த

மும் சுயமாய் தானே சொரூபமும் தடத்தமுமா யிருக்கிற தென்றும் கூட நிரூபித்தோம். ஒரு ஆரம்பத்தையும், தன்னி லேயே சொரூபமும் தடத்தமுமா யிருக்க வேண்டிய அதி லுள்ள ஏதோ ஒன்றிலிருந்து வந்த ஒரு உற்பவத்தையும்கூட ஏற்றுகிறபடியினால், தன்னிடமிருந்தே அது சொரூபமும் தடத்தமுமென்று சொல்ல முடியாது. ஆனால் தன்னில் தானே சொரூபமும் தடத்தமுமானது அனாதியானது. சுயமாய் சொரூபமும் தடத்தமுமானது, சிருஷ்டிக்கப்படாததாயு மிருக்கிறது. மேலும் சிருஷ்டிக்கப்பட்ட ஒவ்வொன்றும் சிருஷ்டிக்கப்படாத ஒன்றிலிருந்து தோன்ற வேண்டும்; சிருஷ்டிக்கப்பட்டது முடிவுள்ளதாயும் கூட இருக்கிறது. முடிவுள்ளது முடிவற்றப் பொருளிலிருந்தல்லாமல் நிலைக்க மாட்டாது.

45. சிந்தனையை கொஞ்சம் விசாலப்படுத்துவதால், சுய மாய் சொரூபமும் தடத்தமுமாயிருப்பதைக் கிரகித்துமனதில் வைக்கக்கூடிய ஒருவன் அது அதே உண்மைப்பொருள் என் றும் ஒரே உண்மைப் பொருளென்றும், பின்பற்றிக் கிரகித்துக் கொள்வான். ஏகாந்தமாய் இருக்கப்பட்டதை உண்மைப் பொருளே என்று சொல்லப்படுகிறது; மற்ற ஒவ்வொரு பொருளும் தன்னிடமிருந்து தோன்றுவதை ஒரே உண்மைப் பொருளென்று சொல்லப்படுகிறது. இதே உண்மைப் பொரு ளும் ஒரே உண்மைப்பொருளும், உள் பொருளும் ரூபக் குறியாயு மிருப்பதால், அது அதே ஒரே உள்பொருளாயும் ரூபக்குறியாயு மிருக்கிறது இப்பொழுது ஏற்படுகிறது. இதே உள் பொருளும் ரூபக்குறியும் பரம இச்சாசத்தியும் பரம ஞானசத்தியுமாயிருப்பதால், அதே ஒரே அன்பாகவும், அதே ஒரே ஞானமாகவும் ஏற்படுகிறது; அதனால், அன்பும் ஞான

மும் ஜீவனுயிருப்பதால், அது அதே ஒரே சொரூபமென்றும் ஜீவனென்றும்கூட ஏற்படுகிறது.

46. பிரகுருதியானது தன்னிடமிருந்தே தானேஉற்பத்தியாகிறதென்று சொல்லுகிற மனிதர்கள், எவ்வளவு இந்திரிய சம்பந்தமாய், அதாவது உடலின் புலன்களிலிருந்தும், பரமார்த்தவிஷயங்களில் அவர்களுக்கு இருக்கும் அஞ்ஞானத்திலிருந்தும் எவ்வளவு தூரம் நினைக்கிறார்களென்பது விசதமாயிருக்கிறது. அவர்கள் கண்ணில் பார்த்து பின் நினைக்கிறார்கள். அவர்களுக்கு புத்தியினால் பார்த்து நினைக்க முடியாது. கண்மூலமாய் உண்டாகும் சிந்தனை புத்தியை மூடிவிடுகிறது. ஆனால் புத்தியின் மூலமாய் உண்டாகும் சிந்தனை கண்ணை திறக்கிறது. தன்னில் தானே சொரூபமாயும் கடத்தமாயுமிருக்கும் பொருளைப்பற்றியும், அது நித்தியமாயும், சிருஷ்டிக்கப்படாததாயும், முடிவற்றதாயும் இருக்கிறதென்பதைப்பற்றியும், இந்த மனிதர்களுக்கு நினைக்கவே முடியாது. அதுவுமல்லாமல், சூனியமாய்ப் போகிற ஒருநிலையற்ற பொருளாகத்தவிர வேறுவிதமாய் உயிரைப்பற்றி நினைக்கவே அவர்களால் முடியாது. அதுவுமல்லாமல், இச்சாசத்தியையும், ஞான சத்தியையும் பற்றி வேறுவிதமாய் அவர்களுக்கு நினைக்க முடியாது. மேலும் பிரகுருதியிலுள்ள எல்லா பொருள்களும் அவைகளிலிருந்து உற்பத்தியானதென்கிற தூரத்து அபிப்பிராயமும் அவர்களுக்குக் கிடையாது. கண்ணுக்கு மாத்திரம் இதம்செய்கிற அதன் ரூபங்களின் சிலவற்றிலிருந்தல்லாமல் பிரகுருதியானது, அவைகளின் வரிசையிலும் ஒழுங்கிலும் காரியப்படும் பொருள்களிலிருந்து பார்க்கப்பட்டாலொழிய பிரகுருதியிலுள்ள எல்லாம் பொருள்களும் அவைகளிலிருந்து தோன்றுகின்றனவென்று நிஜமாகவே அறிந்துகொள்ள முடியாது.

ஏனென்றால், காரியப்படும் பொருள்கள் ஜீவனிலிருந்துதான் வரக்கூடும். அவைகளின் வரிசையும் ஒழுங்கும் ஞானத்தி லிருந்தும் அன்பிலிருந்தும் வரக்கூடும்; ஆனால் ரூபக்குறிகள் காரியப்பொருள்களைக் கொள்ளப்பட்டவைகள். ஆகையினால் ரூபக்குறிகளையே யோசித்தால், பிரகுருதியில் உயிரின் எதை யும், சுத்தமாய் அன்பினிடவும் ஞானத்தினிடவும் எதையும் அதனால் கடவுளின் எதையும் பார்க்கவே முடியாது.

**பரம இச்சாசத்தியும் ஞானசத்தியும் தானே சிருஷ்டித்த மற்றவைகளில் நிலைத்து ஜீவிக்க வேண்டும்.**

47. அன்பின் பிரதான குணம் தன்னைத்தானே நேசித் தலல்ல. ஆனால் அது மற்றவர்களை நேசித்து, அவர்களுடன் அன்பினால் ஒன்றுபடலாகும். சேர்க்கையை உண்டாக்குகிற படியினால், அன்பின் பிரதான குணம், மற்றவர்களால் நேசிக் கப்படுதலுமாய் கூட இருக்கிறது. எல்லா அன்பின் சாரமும் சேர்க்கையிலும், உண்மையில், சந்தோஷமென்றும், சுகானு பவமென்றும், இனிப்பென்றும், பேரின்பமென்றும், சுக மென்றும், ஆனந்தமென்றும் சொல்லப்பட்ட அதன் ஜீவனி லும் அமைந்திருக்கிறது. தனக்குச் சொந்தமானது மற்றவர்க ளுடையதா யிருத்தலிலும், மற்றவனிட சந்தோஷம், தன் னிட சந்தோஷமாக உணர்தலிலும், அன்பு அமைந்திருக் கிறது. இதுதான் நேசித்தலென்பது. ஆனால், மற்றவனிட சந்தோஷத்தை தன்னுடையதா யறியாமல், தன்னுடைய சந் தோஷத்தை அயலானிடத்தில் உணர்தல், நேசித்தலாகாது; ஏனென்றால், பின்சொன்னது தன்னைத்தானேநேசித்தலாகும். முன் சொல்லியது அயலானை நேசித்தலாகும். அன்பின் இந்த இரண்டு வகைகளும், ஒன்றுக்கொன்று நேர்விரோதமா யிருக்கின்றன; அந்த இரண்டுக்கும் சேர்க்கையை உண்டாக்

கும் சக்தி யிருக்கின்றன; இவ்விதமாக எவன் ஒருவன் மற்ற வனை எவ்வளவு நேசித்தானே, அவ்வளவு அவனை அவன் பின் னிட்டு வெறுக்கும்படி வேருக்கினுலும், தன்னுடைய சுய லாபத்தை நேசித்தல், அதாவது தன்னையே பிறரில் நேசித்தல் வேருக பிரிக்கிறதென்று தெரிந்து கொள்ளப்படுகிறதில்லை. ஏனென்றால், அந்த சேர்க்கையானது தானே படிப்படியாய் குறைந்துபோய், பிறகு அன்பானது அவ்வளவு தூரம் வெறுப்பாய் விடுகிறது.

48. அன்பின் சாரம் என்னவென்று உணர சக்தி யுள்ள வன் எவன் இதைத் தெரிந்துகொள்ளமாட்டான்? திரும்ப, ஒருவன் மற்றவனால் நேசிக்கப்பட அவனை தன்னிடமிருந்தே நேசிக்காமல், தன்னைத்தானே நேசித்தல் என்பதற்கு அர்த்த மென்ன? சேர்க்கை என்பதைவிட பிரிவினை என்று அது அர்த்தம் கொள்ளுகிறது. அன்பினால் உண்டாகும் சேர்க் கை அன்னியோன்யத்தால் உண்டாகிறது. அந்த அன்னி யோன்னியம் ஒருவனிடத்தில் மாத்திரம் இருக்க முடியாது. அது இருக்கக்கூடும் என்று நினைக்கப்பட்டால் அது மனக் கற்பனையாக மாத்திர மிருக்கிறது. ஆகையினால், பரம இச்சா சத்தி அது நேசிக்கக்கூடியதும், அவர்களால் நேசிக்கப்படு வதுமான மற்றவர்களிடத்தில் இருந்தே ஜீவிக்க வேண்டு மென்று வெளிப்படையாயிருக்கிறது. எல்லா அன்பிலும் அவ்வித நியமம் இருப்பதால், இச்சாசத்தியிலேயே அது விசேஷமாய் அதாவது முடிவற்றதாய் இருக்க வேண் டும்.

49. கடவுள் சம்பந்தப்பட்டவரையில், முடிவின்மையின் யாதாகிலும், அதாவது, தன்னில்தானே அன்பின்சாரத்தினிட வும் உயிரினிடவும் யாதாகிலும், அல்லது தெய்வத்தன்மையா

தாகிலும்,உடைத்தாயிருக்கிற மற்றவர்களிடததில்நேசித்தலும் அவர்களால் பரஸ்பரமாய் நேசிக்கப்படுதலும் இருக்காது. அவர்களிடத்தில் முடிவின்மையில் யாதாகிலும், அதாவது தன்னில் தானே அன்பின் சாரமும் அல்லது உயிரும், அதாவது தெய்வத்தின் தன்மை யாதாகிலு மிருந்தால், கடவுள் மற்றவர்களால் நேசிக்கப்படமாட்டார். ஆனால், முடிவற்றவர் அதாவது தெய்வமானது ஏகமாயிருப்பதால், அவர் தன்னைத் தானே நேசிப்பார். இது மற்றவர்களிடத்திலிருந்தால், அது கடவுளே யாகும். மேலும் தன்னிடத்தில் கொஞ்சம் கூட இருக்கக்கூடாத சுயநன்மை பிரியராய் கடவுளிருப்பார். ஏனென்றால், அது தெய்வத்தன்மைக்கு முழுமையும் எதிர்மறையானது. ஆகையினால், தன்னிலேயே தெய்வத் தன்மை ஒன்றுமில்லாத மற்றவர்களிடத்தில் அன்பு இருக்க வேண்டும்; தெய்வம் சிருஷ்டித்தவைகளில் அது இருக்கிறதென்று கீழே வருவதில் காணலாம். ஆனால், அது அப்படியிருக்க வேண்டுமானால் முடிவற்ற இச்சாசத்தியோடு ஒன்றுபட வேண்டிய முடிவற்ற ஞானசத்தி இருக்கவேண்டும்; அதாவது, பரம ஞான சத்தியின் பரம இச்சாசத்தியும், பரம இச்சாசத்தியின் பரமஞானசத்தியும் இருக்க வேண்டும். அதைப் பற்றி மேலே (34-வது பிரிவு முதல் 39-வது பிரிவு வரையில்) பார்க்கவும்.

50. இந்த பரம இரகசியத்தை உணர்தலின் பேரிலும் கிரகித்தலின் பேரிலும், திதி அல்லது சிருஷ்டிக்குச் சேர்ந்த எல்லா பொருள்களிடவும், நிலைத்தலுக்கும் அல்லது கடவுளின் பரிபாலனத்துக்கும் சேர்ந்த எல்லா பொருள்களிடவும், அதாவது சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்திலுள்ள கடவுளின் எல்லா காரியப்பொருள்களினிடவும் உணர்ச்சியும் பற்றுத

லும் சார்ந்திருக்கின்றன. பின்வருவதில் இந்த விஷயங்கள் சொல்லப்படும்.

51. கால இடவரைக்கு அவைகளை உட்படுத்தினால் என்ன ஏற்படுகின்றதென்று நீங்கள் தெரிந்துகொள்ளமாட்டீர்களானபடியினால், உங்களுடைய சிந்தனைகளை கால இடவரைக்கு உட்படுத்தி, பிரமிக்காதீர்களென்று உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன். ஏனென்றால் தெய்வமானது கால இடவரைக் குட்படாதது. நித்தியத்துவமும், அளவின்மையும், சர்வ வியாபகமும் குறிப்பாய் சொல்லப்பட்ட இந்த நூலின் தொடர்ச்சியில் இது தெளிவாய் தெரிந்துகொள்ளலாம்.

**பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொன்றும், தேவமனிதனின் இச்சாசத்தியாலும் ஞானசத்தியாலும் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது.**

52. பிரபஞ்சமானது, மிக பெரியதிலும் சின்னஞ்சிறியதிலும், முதற்பொருள்களிலும் இறுதிப்பொருள்களிலும் சாயலில் பரம இச்சாசத்தியென்றும் பரம ஞானசத்தியென்றும் சொல்லப்படும்படியாக பரம இச்சாசத்தியாலும் பரம ஞானசத்தியாலும் அவ்வளவு நிறைந்திருக்கிறது. இது அப்படி இருக்கிறதென்பது பிரபஞ்சத்தின் எல்லா பொருள்களும், மனிதனிட எல்லாப் பொருள்களோடும் உடைத்தாயிருக்கிற அன்னுவயத்தினால் வெளிப்படையாய்த் தோன்றுகிறது. சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தில் பொதுவாயும் விசேஷமாயும் இருக்கப்பட்ட எல்லா பொருள்களும், அவனும் கூட ஓர்வித பிரபஞ்சமென்று சொல்லப்படும்படியாக, மனிதனில் இருக்கும் ஒவ்வொன்றோடும் அவ்வித அன்னுவயத்தை உடைத்தாயிருக்கிறது. பிராணிவர்க்கத்திலுள்ள எல்லா பொருள்களோடும் அவனிட ஆசைகளிடவும், ஆகையால் அவனிட சிந்தனைகளிடவும் ஓர் அன்னுவயமிருக்கிறது.

விருக்ஷ வர்க்கத்திலுள்ள எல்லா பொருள்களோடும், அவனிட சித்தத்தினிடவும், ஆகையால் அவனிட புத்தியினிடவும் ஓர் அன்னுவய மிருக்கிறது. தாவர வர்க்கத்திலுள்ள எல்லா பொருள்களோடும் அவனிட இறுதியான உயிரினிட ஓர் அன்னுவய மிருக்கிறது. இவ்வித அன்னுவய மிருக்கிற தென்று ஸ்தூல லோகத்திலுள்ள எவனுக்கும் தெரியாது. ஆனல், சூக்கும லோகத்தில் அதை கவனிக்கும் ஒவ்வொரு வனுக்கும் அதுதெரியும். சூக்கும லோகத்தில், ஸ்தூல லோகத் தின் மூன்று வர்க்கங்களிலும் இருக்கப்பட்ட எல்லா பொருள் களுமிருக்கின்றன. சித்தத்திலிருந்து ஆசைகளிடவும், புத்தியிலிருந்து சிந்தனைகளிடவும், ஆகையால் ஆசைக ளிடவும் சிந்தனைகளிடவும், அங்கே இருக்கப்பட்டவர்களின் உயிரின் பிண்டப் பொருள்களிடவும் கூட அன்னுவயங்க ளாய் அவைகளிருக்கின்றன. பொருள்களின் இந்த ஒழுங்கு, அவைகளின் திரட்டு சிறியதாயிருக்கிறதென்கிற வித்தியா சத்துடன், அவைகளைச் சுற்றி சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத் தின் தோற்றம்போல் தோற்றத்தை காண்பிக்கிறது. சிருஷ் டிக்கப்பட்ட பிரபஞ்சம், தெய்வமனிதனிட அரிகுறியான ஓர் சாயலென்றும், பிரபஞ்சத்தில் ஓர் சாயலாக காண்பிக்கப் பட்டது அவரிட அன்பும் ஞானமுமென்றும் இதனல் தேவர் களுக்கு நன்ருய்த் தெரியும். சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சம் தேவ மனிதன் என்றல்ல,ஆனல் அது அவரிடமிருந்துவந்தது என்பதாகும், ஏனென்றல், சிருட்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தில் ஏதுவும், சுயமாய் பதார்த்தமும் ரூபக்குறியுமாகவாவது, தன் னில்தானே உயிராகவாவது, சுயமாய் அன்பும் ஞானமாகவா வது இல்லை; உண்மையில் மனிதன் தன்னில் தானே மனிதனு யில்லை; தன்னில் தானே மனிதனுகவும், ஞானமாகவும்,

அன்பாகவும், உருவமாகவும், பதார்த்தமாகவும் இருக்கிற கடவுளிடமிருந்து ஒவ்வொரு பொருளும் வெளிப்படுகிறது. தன்னில் தானே இருக்கும் பொருள் சிருஷ்டிக்கப்படாததாயும் முடிவற்றதாயு மிருக்கிறது ; ஆனால் அவரிடமிருந்து தோன்றும் பொருளில், சுயம்புவான யாதொன்று மில்லாதபடியினால், அது சிருஷ்டிக்கப்பட்டதும் முடிவாக்கப்பட்டதுமாயிருக்கிறது. அது தோன்றி ஜீவிக்கும் கடவுளின் ஒரு சாயலை இது காண்பிக்கிறது.

53. சிருஷ்டிக்கப்பட்டதும் முடிவாக்கப்பட்டதுமான பொருள்களுக்கு, சொரூபமும், தடத்தமும், மேலும் பதார்த்தமும் உருவமும், அம்மாதிரியே உயிரும், உண்மையில் அன்பும் ஞானமும், இருப்பதாகச் சொல்லலாம். ஆனால் இவைகளெல்லாம், சிருஷ்டிக்கப்பட்டதாகவும் முடிவாக்கப்பட்டதாகவு மிருக்கின்றன. இவைகளுக்கு இந்த குணங்களை அமைப்பதற்குக் காரணம், இந்தப் பொருள்களில் எந்த தெய்வத்தன்மையு மிருக்கிறதென்பதல்லாமல், அவைகள் தெய்வத்திலிருக்கின்றனவென்பதும், தெய்வம் அவைகளில் இருக்கின்றனவென்பதுமாயிருக்கிறது. ஏனென்றால் சிருஷ்டிக்கப்பட்டதெல்லாம் தன்னில் தானே உயிரற்றதாயும் இறந்ததாயு மிருக்கின்றன. ஆனால் பொருள்கள், தெய்வம் அவைகளிலிருக்கிறதென்பதினாலும், அவைகள் தெய்வத்திலிருக்கிறதென்பதினாலும் தூண்டப்பட்டு உயிர்ப்பிக்கப்படுகின்றன.

54. தெய்வமானது, ஒரு பொருளில், மற்றொரு பொருளிலிருப்பதற்குவேறு விதமாய் இருக்கிறதில்லை. ஆனால் இந்த இரண்டுபொருள்களும் ஒரேமாதிரி யில்லாதபடியினால் சிருஷ்டிக்கபட்ட ஒரு பொருள் மற்ற பொருளுக்கு மாறுபட்டிருக்கிறது. அதனால் ஒவ்வொரு பொருளும் தெய்வத்தின்

வேறு வேறான பொருள்களைக் கொள்ளுகின்றது. இந்தக் காரணத்துக்காக, தெய்வமானது தன் சாயலில் பலவிதமாய் தோன்றுகிறது. எதிர் மறையானவைகளில் தெய்வத்தின் சந்நிதானம் பின்வருவதில் சொல்லப்படும்.

**சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும், தேவ மனிதனிட இச்சாசக்தியையும் ஞானசக்தியையும் ஏற்றுக் கொள்பவைகளாயிருக்கின்றன.**

55. பொதுவாயும் சிறப்பாயும், பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும் கடவுளால் சிருஷ்டிக்கப்படுகின்றனவென்று நன்றாய்த் தெரிந்திருக்கிறது. ஆகையினால் பிரபஞ்சமும் அதிலுள்ள எல்லா பொருள்களும் வேதத்தில் **யேகோவாவின்** கைவேலை என்று சொல்லப்பட்டிருக்கிறது. முழு உலகமும் சூனியத்திலிருந்து சிருஷ்டிக்கப்பட்டதாக சாதாரணமாய் சொல்லப்படுகிறது. இந்த சூனியத்தை குறித்த லோகக்கருத்து, சுத்த சூனியமென்பதா யிருக்கிறது. ஆயினும், அவ்வித சுத்த சூனியத்திலிருந்து, ஒன்றும் உண்டாக்கப்படுகிறதில்லை, ஒன்றையும் உண்டாக்க முடியாது. இது ஒரு மாறுபடாத உண்மை. ஆகையினாலே, கடவுளின் சாயலாயிருக்கிற அதினால் கடவுளால் நிறைந்த பிரபஞ்சமானது, கடவுளிலே, கடவுளால் தவிர சிருஷ்டிக்கப்படமுடியாது. ஏனென்றால் கடவுளானவர் **சத்தாகவே** யிருக்கிறார். இருக்கப்பட்ட பொருள், அந்த சத்திலிருந்து உண்டாகவேண்டும். அசத்தான சூனியத்திலிருந்து இருக்கப்பட்ட பொருளை சிருஷ்டித்தலென்பது முழு எதிர்பேச்சாயிருக்கிறது. அப்படி இருந்தாலும் கடவுளில்கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட பொருள்அவரிடமிருந்து தொடர்ச்சியாய் வரவில்லை; ஏனென்றால், கடவுள் தன்னில் தானே **சத்தாக** இருக்கிறார், சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களில்

தன்னில் தானே சத்து ஒன்றுமில்லை. சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களில், தன்னில் தானே எதாவது சத்து இருந்தால், அது கடவுளிடமிருந்து தொடர்ச்சியாயிருக்கும். அப்படி கடவுளிலிருந்து தொடர்ச்சியாயிருப்பது கடவுளேயாகும். கடவுளில் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட பொருளானது, மனிதனில் தன்னிடஉயிரிலிருந்து தான் அடைந்ததாய், ஆனால் உயிர் நீக்கப்பட்டதாயிருப்பதும், அவனுடைய உயிருக்குத் தகுதியானதாய், ஆயினும் உயிராயில்லாததுமா யிருப்பது மான பொருளைப் போலிருக்கிறது என்பது, இந்தவிஷயத்தைப் பற்றி தேவர்கள் கொள்ளும் அபிப்பிராயமாயிருக்கிறது. தங்களில் இயல்பாய், கடவுளாயிருக்கப்பட்ட கடவுள் தன்மை ஒன்றுமில்லாமல், தாங்கள் கடவுளிலும் கடவுள் தங்களிலும் இருப்பதாகத் தாங்கள் சொல்லுகிற தங்களிட சுவர்க்கலோகத்தில் இருக்கும் அநேக பொருள்களால் தேவர்கள் இதை நிரூபிக்கிறார்கள். இதை அவர்கள் நிரூபிக்கும் அநேக பிறப் பொருள்கள் பின்வருவதில் எடுத்துக்காட்டப்படும். இங்கே அதைக் குறித்து தெரியப்பட வேண்டிய விஷயமென்று மாத்திரம் பேசுகிறோம்.

56. இந்தவித உற்பத்தி இருப்பதினால், சிருஷ்டிக்கப்பட்டவைகளெல்லாம், தொடர்ச்சியினாலல்லாமல் அருகிருப்பதால், கடவுளை ஏற்கும்படியான இயல்புடையதா யிருக்கிறது. தொடர்ச்சியினாலல்லாமல், அருகிருப்பதால், சேர்க்கை உண்டாகிறது. அது கடவுளில் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட படியினால், அதன் சிருஷ்டி இணக்கமானதா யிருக்கிறது. அது அம்மாதிரி சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறபடியினால், அது ஒரு உபமிதியாயிருக்கிறது, அந்த சேர்க்கையால் தர்ப்பணத்தில் கடவுளின் ஓர் சாயலைப்போலிருக்கிறது.

57. இந்த காரணத்தால்தான், தேவர்கள் தங்களிடமிருந்தே தேவர்களாயில்லாமல், **தேவமனிதனோடு** இருக்கும் சேர்க்கையின் பொருட்டு தேவர்களா யிருக்கிறார்கள்; அவைகள் **அவரிட** மிருந்தாலும், கடவுளாயிருப்பதும், அவரிடமிருந்து புறப்படுவதுபோல் தோன்றுகிறதுமான தெய்வ நன்மையையும் தெய்வ உண்மையையும் ஏற்றுக்கொள்ளுவதற்குத் தக்கபடி இந்த சேர்க்கை இருக்கிறது. ஆண்டவனிடமிருந்து அவர்கள் தங்களுக்கு சொந்தமானதாக அடைகிற அறிவுக்குத் தக்கபடி இச்சித்து நினைக்கக் கொடுத்திருக்கும் சுயாதீனத்திலிருந்து தெய்வ உண்மைகளாயிருக்கிற ஒழுங்கின் சட்டங்களை தங்களுக்கே பிரயோகிப்பதற்குத் தக்கபடி ஏற்கையிருக்கிறது. இவைகளின் மூலமாய், தெய்வ நன்மையும், தெய்வ உண்மையும் தங்களிட மிருந்தேபோல் அவர்கள் அடைகிறார்கள். இதனால் அன்பின் அன்யோன்னியம் உண்டாகிறது. ஏனென்றால், முன்கூறியபடி, பரஸ்பரமாயிருந்தாலொழிய அன்பு நிலைக்காது. பூமியின்பேரிலுள்ள மனிதர்களுக்கும் விஷயம் அம்மாதிரியே இருக்கிறது. இப்பொழுது சொன்னதிலிருந்து, பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும் தேவ மனிதனிட இச்சாசத்தியையும் ஞானசத்தியையும் ஏற்பவைகளாயிருக்கின்றனவென்று இப்பொழுது முதலில் தெரிந்து கொள்ளலாம்.

58. தேவர்களைப்போலும் மனிதர்களைப்போலு மல்லாமல், பிரபஞ்சத்திலிருக்கும் மிச்சமான பொருள்கள், உதாரணமாக, பிராணி வர்க்கத்தில் மனிதர்களுக்குக் கீழேயிருப்பவைகளும், விருக்ஷ வர்க்கத்தில் இவைகளுக்குக் கீழே இருப்பவைகளும், மறுபடியும் தாவர வர்க்கத்தில் இவைகளுக்குக் கீழேஇருப்பவைகளும்,தேவ மனிதனிட இச்சாசத்

தியையும் ஞான சத்தியையும் ஏற்பவைகளாயும் கூட இருக்கின்றன வென்பதை இன்னும் விசதமாக விளக்கமுடியாது. ஏனென்ருல், உயிரின் தாரதம்மியத்தைப்பற்றியும், உயிரை ஏற்றுக்கொள்பவைகளின் தாரதம்மியத்தைப்பற்றியும் முதலில் விஸ்தாரமாக அதிகம் சொல்லவேண்டியிருக்கிறது. இந்த பொருள்களோடு சேர்க்கை என்பது அவைகளின் உபயோகங்களுக்குத் தக்கபடியிருக்கிறது; ஏனென்ருல், எல்லா நற்காரியங்களும், தாரதம்மியத்துக்குத் தக்கபடி ஒவ்வாதிருக்கிற கடவுளோடு ஒப்பான சேர்க்கையைவிட வேறு எந்த மூலத்திலிருந்தும், உற்பத்தியாகிறதில்லை. இந்த சேர்க்கையானது, தன் இறக்கத்தில், எந்த சுதந்தரமும் எந்த அறிவும், ஆகையினுல் உயிரின் எந்த தோற்றமும் விடப்படாதபடியிருந்தும் அவைகள் ஏற்பவைகளாயிருக்கும்படி, படிப்படியாய் அவ்வித இயல்புடையதாகிறது. அவைகள் ஏற்பவைகளாயிருப்பதால், மறுபடியும் கர்த்தாக்களாகவும்கூட இருக்கின்றன. ஏனென்ருல், மீண்டும் கர்த்தாக்களாயிருப்பதின் மூலமாய், அவைகள் பொருள்களை கொள்பவைகளாயிருக்கின்றன. நல்லவைகளாயில்லாத காரியங்களோடு இருக்கும் சேர்க்கையைப்பற்றி, தீமையின் மூலம் காண்பிக்கப்பட்ட பிறகு, பேசப்படும்.

59. இவைகளினுல் பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு பொருளிலும், பொதுவாயும் சிறப்பாயும் தெய்வ மிருக்கிறதென்றும், ஆகையால் வேதத்தில் சொல்லியபடி சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சமானது **எகோவாவின்** கரங்களின் வேலை என்றும் அதாவது, **எகோவாவின்** கரங்கள் என்பதால் பரம இச்சாசத்தியும் பரம ஞானசத்தியுமென்று அருத்தம் கொள்ளப்படுகிறபடியினுல், அவைகளின் வேலை

யென்றும் விசதமாகிறது. சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் எல்லா பொருள்களிலும் பொதுவாயும் சிறப்பாயும் தெய்வ மிருந்தபோதிலும், அவைகளின் இயல்பில் தன்னில் தானே தெய்வமா யிருப்பது ஒன்றுமில்லை; ஏனென்றால் சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சம் கடவுளல்ல, ஆனால் கடவுளிட மிருந்து அது உற்பதியானது ; அது கடவுளிடமிருந்து தோன்றியதால், அதில் நிஜமாக மனிதன் தோன்றினாலும், மனிதனிட யாதொன்றும் இல்லாதிருக்கிற ஓர் தர்ப்பணத்தில் தோன்றும் மனிதனிட சாயலைப்போல், அவரிடசாயல் அதி லிருக்கிறது.

60. சூக்கும லோகத்தில் அநேகர், அவைகளில் கடவுளின் ஆச்சரியமான பொருள்களையும், உள்ளுக்குள்ளாய் சோதனை செய்தால், மேலும் மேலும் ஆச்சரியமான பொருள்களையும் பார்க்கிறபடியினால், பிரபஞ்சத்தின் எல்லா பொருள்களிலும் தெய்வம் இருப்பதாகத் தாங்கள் ஒத்துக்கொள்ளமுழு இஷ்டமுள்ளவர்களாக இருப்பதாக என்னைச் சுற்றி சம்பாஷித்துக்கொண்டு, சொல்லிக் கொண்டிருப்பதை நான் கேட்டிருக்கிறேன். அப்படி இருந்தாலும், சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் எல்லா பொருள்களிலும் தெய்வமானது மெய்யாயிருக்கிறதென்று அவர்கள் கேள்விப்பட்டபோது, அவர்கள் அதிகமாய்க் கோபமூட்டப்படுகிறார்கள்; இதை அவர்கள் சொன்னபோதிலும், அவர்கள் அதை நம்பவில்லை என்பதற்கு இது ஒரு அடையாளம். ஆகையால் புதுவித்துகள் தோன்ற தன்னிட குறிப்பிட்ட செடியை உற்பத்திசெய்ய ஒவ்வொரு வித்திலுமிருக்கிற அதிசயமான சக்தியிலிருந்து மாத்திரம் அவர்கள் தெரிந்துகொள்ள முடியாதாவென்று கேட்கப்பட்டார்கள். ஒவ்வொரு வித்திலும் முடிவற்றதும் நித்தியமானது

மானதின் ஒரு சாயல் இருக்கிறதென்கிற உண்மையிலிருந்தும் கூட அப்படி கேட்கப்பட்டார்கள்; ஏனென்றால், வித்துகள் தங்களுக்குள்ளே முடிவற்றும் சதாகாலமும் பெருகி, கனிகொடுக்க ஒரு முயற்சியை உடைத்தாயிருக்கின்றன. ஒவ்வொரு உயிருள்ள பிராணியும், சின்னஞ் சிறியதும்கூட அதற்கே உதாரணமா யிருக்கிறது. ஏனென்றால், அநேக புஸ்தகங்கள் எழுதப்பட்டிருக்கும் அவைகளிட அதிசயிக்கத்தக்கஇயற்கை அறிவுடன் ஞானேந்திரியங்களிருக்கின்றன. அவையாவன, சுத்தரத்த நாடிகளும் கருத்த ரத்தநரளங்களும், இயக்கத்துக்குக் காரணமாயிருக்கிற நார்களும், தசைநார்களும் இருப்பதுடன்கூட ஒரு மூளையும், ஓர் இருதயமும், சுவாசாசயங்களும், மற்ற அங்கங்களும் இருக்கின்றன. இந்த பிரமிப்பிக்கிற பொருள்களெல்லாம் கடவுளிடமிருந்து வருகின்றன. ஆனால், அவைகள் மூடப்பட்டிருக்கிற உருவங்கள், பூமியிலுள்ள பிரதான வஸ்துக்களிலிருந்து வருகின்றன; இவைகளிலிருந்து செடிகள் தோன்றுகின்றன. பின் ஒழுங்கின்படி மனிதர்கள் தோன்றுகிறார்கள்; ஆகையினால் மனிதனைப்பற்றி அவன் பூமியின் மண்ணினாலே உருவாக்கப்பட்டானென்றும், அவன் பூமியின் தூசியென்றும், ஜீவசுவாசம் அவனில் ஊதப்பட்டதென்றும் சொல்லப்படுகிறது. (ஆதி ஆகமம் II. 7) இதனால் தெய்வமனிதனுக்கு சேர்ந்ததல்லவென்றும், ஆனால் அவனுடன் சேர்க்கப்பட்டிருக்கிறதென்றும் விசதமாகிறது.

## சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களெல்லாம் மனிதனுக்கு ஓர்வித சாயலில் சம்பந்தப்பட்டிருக்கிறது.

61. பிராணி வர்க்கத்திலும் விருக்ஷ வர்க்கத்திலும் தாவர வர்க்கத்திலும் உள்ள ஒவ்வொரு பொருளிலுமிருந்து, பொதுவாயும் சிறப்பாயும் இது விசதமாகிறது.

பிராணி வர்க்கத்தின் ஒவ்வொரு பொருளிலும் பொது வாயும் சிறப்பாயும் மனிதனுக்கு இருக்கும் சம்பந்தம், இந்த ஆலோசனைகளால் விளங்குகிறது; எல்லாவித பிராணிகளுக்கும், சலனத்துக்கு வழிவகைகளும் பஞ் சேந்திரியங்களும், இவைகளை இயக்கும் அந்திரங்களும் இருக்கின்றன; இவைகளை மனிதனோடு அவைகள் பொதுவாய் உடைத்தாயிருக்கின்றன. மனிதனிடத்திலிருப் பவைகள் போல இயற்கையான அவாக்களும் உணர்ச்சி களும் அவைகளுக்குமுண்டு; சிலதில் ஓர்வித பரமார்த்த அம்சமிருப்பதாகத் தோன்றுகிற அவைகளின் உணர்ச்சி களுக்குத் தக்கபடி, உடன்பிறந்த அறிவு அவைகளுக்குண்டு; பூமியின்மேலுள்ள மிருகங்களிலும், ஆகாயத்தின் பட்சிகளி லும், தேனீக்களிலும், பட்டுபூச்சி முதலியவைகளிலும் இது ஏறக்குறைய விசதமாயிருக்கிறது. இந்த காரணத்துக்காக, ஜடயாய் மாத்திரமிருக்கும் மனிதர்கள், இந்த வர்க்கத்தில் உயிருள்ளவைகளை, பேச்சு விஷயம் தவிர மற்றவைகளில் தங் களைப்போலிருப்பதாக நினைக்கிறார்கள். விருக்ஷ வர்க்கத்தி லிருக்கும் ஒவ்வொரு பொருளுக்கும் மனிதனுக்கும் பொதுவா கவும் சிறப்பாகவும் இருக்கும் சம்பந்தம் கீழ்வரும் உண்மை களிலிருந்து அதாவது, அவைகள் வித்திலிருந்து முளைத்து, அங்கிருந்து, படிப்படியாய் அவைகளின் பல நிலைமைகளில் செல்லுகிற தென்பதிலிருந்தும், அவைகளுக்குள்ளே விவா கத்துக்கு ஒத்தது ஏதோ ஒன்றிலிருந்தும், அதன் பின்னர் கனி கொடுத்தலிலிருந்தும், அவைகளின் வளரும் சக்தி, அதனிட உருவங்களாயிருக்கிற பலன்களா யிருக்கிறதென் பதிலிருந்தும் விசதமாகிறது. இவைகளுடன்கூட மனித னுடன் சம்பந்தத்தைக் காண்பிக்கிறதும் பல நூலாசிரியர்

களால் விவரிக்கப்பட்டதுமான பிற விசேஷங்களிருக்கின்றன. தாவர வர்க்கத்திலுள்ள ஒவ்வொரு பொருளுக்கும் மனிதனுக்கும் பொதுவாயும் சிறப்பாயும் இருக்கும் சம்பந்தமானது, அவ்வித சம்பந்தத்தை ஏற்படுத்தும் உருவங்களை உற்பத்தி செய்ய அவைகள் செய்யும்முயற்சியிலிருந்தும், (மேல் கூறியபடி அந்த உருவங்கள் பொதுவாயும் சிறப்பாயும் விருக்ஷவர்க்கத்தின் எல்லா பொருள்களாயிருக்கின்றன) இவ்விதமாக உபயோகங்களை செய்வதிலிருந்தும் மாத்திரம் விசதமாயிருக்கிறது. ஏனென்றால், மண்ணின் பேரில் வித்து விழுந்தவுடன் பூமியானது அதை போஷித்து, அந்த வித்தானது முளைத்து மனிதனைப்போலிருக்கிற ஓர் உருவத்தை எடுத்துக்கொள்ள எல்லா திக்குகளிலிருந்தும் வழிவகைகளை சோதிக்கிறது. அதன் கல்லான பாகங்களில் கூட அவ்வித முயற்சி இருக்கிறதென்பது, சமுத்திரத்தின் அடியிலிருக்கும் பவளங்களினாலும், சுரங்கங்களில் தாதுக்களிலிருந்தும் உலோகங்களிலிருந்தும் கூட உற்பத்தியாகிற அதிலிருக்கும் புஷ்பங்களினாலும் வெளிப்படையாயிருக்கிறது. முளைக்கவும், இம்மாதிரியாக உபயோகங்களைச் செய்யவும், செய்யும் முயற்சியானது, சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களில் தெய்வத்திலிருந்துவரும் இறுதியானதாயிருக்கிறது.

62. பூமியின் உலோகாதிகளுக்கு தழைக்க ஓர் முயற்சி இருப்பதுபோல், விருக்ஷாதிகள் சம்பந்தமான வளர்ச்சிகளுக்கும், உயிர்ப்பிக்க, ஓர் முயற்சி இருக்கிறது; ஆகையினால், தங்களிட வாசனைகளுக்கு தக்கபடி பலவித பூச்சிகளிருக்கின்றன. இது, பூலோக சூரியனிட சூட்டிலிருந்து அல்லாமல் ஏற்பவர்களுக்குத் தக்கபடி, அந்த சூட்டினால் உண்டாகும் உயிரிலிருந்து உண்டாகிறதென்பது, பின் வருவதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

63. சிருஷ்டிக்கப்பட்ட எல்லா பொருள்களும் மனித னுடன் ஓர் சம்பந்தத்தை உடைத்தாயிருக்கிறதென்று மேலே சொல்லிய சங்கதிகளிலிருந்து, நிஜமாக, கிரகிக்கப்பட லாம்; என்றாலும், அந்த விஷயமானது புதைப்பொருளாய் மாத்திரம் அறிந்து கொள்ளக்கூடும்; சூக்கும லோகத்தில் அது தெளிவாய் அறியப்படுகிறது. அந்த உலகத்தில் கூட மூன்று வர்க்கங்களுக்கும் சேர்ந்த எல்லாபொருள்களு மிருக் கின்றன அவைகள் மத்தியில் தேவர்கள் இருக்கிறார்கள்; தங்களைச்சுற்றி இவைகளைப் பார்த்து, தங்களைப் போலவே அவைகள்இருக்கின்றனவென்று தெரிந்து கொள்ளுகிறார்கள். உண்மையில், அவர்கள் புத்தியின் உள்ளுக்குள்ளான பாகம் திறக்கப்பட்டபோது, தங்களைத் தாங்களே அறிந்துகொண்டு, அவைகளில், ஓர் தர்ப்பணத்தில்போல் தங்களுடைய சாயலைப் பார்க்கிறார்கள்.

64. இங்கே சொல்ல இடம் மில்லாதபடி யிருக்கிற இதிலிருந்தும், இன்னும் அநேக இதர, ஒற்றுமையான விஷ யங்களிலிருந்தும், கடவுளானவர் ஓர் மனிதன் என்றும் சிருஷ் டிக்கப்பட்ட பிரபஞ்சம் அவரிட சாயலென்றும் உறுதியாய் தெரிந்திருக்கலாம்; ஏனென்றால், எல்லா பொருள்களுக்கும், மனிதனுடன் அவைகளுக்கு விசேஷ சம்பந்தம் இருப்பது போல, கடவுளுடன் பொது சம்பந்த மிருக்கிறது.

சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற எல்லா பொருள்களின் பலன் களும், இறுதியான பொருள்களிலிருந்து மனிதன் வரையிலும், மனிதன் மூலமாய் தாங்கள் உற்பத்தியாகிற கடவுளாகிய சிருஷ்டி கர்த்தாவரையிலும், படிப்படியாய் ஏறுகின்றன.

65. மேல்கூறியபடி இறுதியான பொருள்கள், பல் விதங்களான, தாவரவர்க்கத்தில் பொதுவாயும் சிறப்பாயு முள்ள எல்லா பொருள்களுமாயிருக்கின்றன. நுண்மையான

ரூபங்களாக செய்யப்பட்ட விருக்ஷவர்க்க பிராணிவர்க்க பதார்த்தங்களால் நிறைந்த மண்ணினால் மூடப்பட்டிருக்கும் கல்லான, உப்பான, எண்ணெய் பற்றுன, லோகாதி சம்பந்தமான, உலோகத்தாலாகிய பொருள் ஆகிய பலவித ஜடப் பொருள்கள் இருக்கின்றன. உயிரிலிருந்து உண்டாகப்பட்ட எல்லா உபயோகங்களின் முடிவும், ஆரம்பமும் கூட, இந்த பொருள்களில் மறைந்திருக்கின்றன. எல்லா உபயோகங்களின் முடிவும் இந்த உபயோகங்களை விளைவிக்கச்செய்யும் முயற்சியாயிருக்கிறது, ஆரம்பமானது, அந்த முயற்சியிலிருந்து செயல்படும் சக்தியாயிருக்கிறது. இவைகள் தாவர வர்க்கத்தை சேர்ந்தவைகள். மத்தியிலுள்ள பொருள்கள் விருக்ஷவர்க்கத்தை சேர்ந்த எல்லா பொருள்களுமா யிருக்கின்றன. எல்லாவித புற்களும், பூண்டுகளும், எல்லாவித செடிகளும் புதர்களும், எல்லாவித மரங்களும் அவ்விதமானவைகள் இவைகள் தரும் பலன்கள் பிராணிவர்க்கத்திலுள்ள பூரண அபூரணமான எல்லா பொருள்களுக்கும் உண்டு. அவைகள் இவைகளைப் போஷித்து, களிப்பித்து, உயிர்ப்பிக்கின்றன; அவைகளின் சரீரங்களைத் தங்கள் விளைவுகளினால் போஷித்து, அவைகளின் புலன்களைத் தங்கள் ரசம், கந்தம், சௌந்திரியங்களினால் களிப்பித்து, அவைகளின் பற்றுக்களை உயிர்ப்பிக்கின்றன. இவைகளை நிறைவேற்ற அவைகள் செய்யும் முயற்சிகள் உயிரிலிருந்து சேட்டிக்கின்றன. பிரதமப் பொருள்கள் பிராணி வர்க்கத்திலுள்ள எல்லா பொருள்களுமா யிருக்கின்றன. இதில் மிகவும் தாழ்ந்தவைகள் புழுக்களென்றும், பூச்சிகளென்றும், மத்தியிலுள்ளவைகள் பறவைகளென்றும் மிருகங்களென்றும், எல்லாவற்றிலும் உயர்ந்தவைகள் மனிதர்களென்றும் சொல்லப்படுகின்றன. ஏனென்றால் ஒவ்வொரு வர்க்கத்

திலும், மிகவும் தாழ்ந்தவைகள், மத்தியமானவைகள் மிகவும் உயர்ந்தவைகளென்று பொருள்களிருக்கின்றன; மிகவும் தாழ்ந்தவைகள் மத்தியமானவைகளின் உபயோகத்துக்கும், மத்தியமானவைகள் மிகவும் உயர்ந்தவைகளின் உபயோகத்துக்கும் இருக்கின்றன. இம்மாதிரியாக, சிருஷ்டிக்கப்பட்ட எல்லா பொருள்களின் உபயோகங்கள், இறுதியான பொருள்களிலிருந்து, வரிசையில் முதன்மையான மனிதவரையில் ஒழுங்கில் மேல்போகின்றன.

66. ஏற்றத்தில் ஸ்தூல லோகத்தில் மூன்று படிகளும், சூக்கும லோகத்தில் மூன்று படிகளுமிருக்கின்றன. எல்லா பிராணிகளும் உயிரை ஏற்பவைகள்; அதைவிட பூரணமான பிராணிகள் ஸ்தூல லோகத்தின் மூன்று அந்தஸ்துகளின் உயிரை ஏற்பவைகளாயிருக்கின்றன; குறைந்த பூரணமானவைகள் அந்த உலகத்தின் இரண்டு படிகள் உயிரை ஏற்பவைகளா யிருக்கின்றன; அபூரணமான பிராணிகள் அதன் படிகளில் ஒன்றை ஏற்பவைகளாயிருக்கின்றன. ஆனால் மனிதன் மாத்திரம், ஸ்தூல லோகத்தின் மூன்று படிகளின் உயிரைமட்டு மல்லாமல், பரமார்த்த லோகத்தின் மூன்று படிகளின் உயிரையும் ஏற்பவனாயிருக்கின்றான். எந்த பிராணியும் போலல்லாமல், மனிதன் பிரகுருதிக்கு மேல் ஏன் உயர்த்தப்படக்கூடுமென்பதற்கு இது காரணமாயிருக்கிறது. பிரகுருதிக்குள்ளிருக்கும் தேசாசாரமானதும் சன்மார்க்கமானதுமாகிய விஷயங்களைப்பற்றி அவன் பகுப்போடும் விவேகத்தோடும் நினைக்கச் சக்தியுள்ளவனாயிருக்கிறான். மேலும், பிரகுருதிக்கு மேற்பட்ட பரமார்த்த பொருள்களைப்பற்றியும் சுவர்க்கச் சம்பந்தமான பொருள்களையும் நினைக்க அவன் சக்தியுள்ளவனாகவும்கூட இருக்

கிறான்; நிஜமாகவே, கடவுளைப் பார்க்கவும்கூட வேண்டிய ஞானத்துக்கு உயர்த்தப்படக் கூடியவனாயு மிருக்கிறான். ஆனால் சிருஷ்டிக்கப்பட்ட எல்லா பொருள்களின் பலன்களும் தங்கள் ஒழுங்கில் கடவுளாகிய சிருஷ்டிகர்த்தாவரையில் ஏறுவதற்குக் காரணமான இந்த ஆறு அந்தஸ்துகளைப்பற்றி யும் சரியான இடத்தில் சொல்லப்படும். சிருஷ்டிக்கப்பட்ட எல்லா பொருள்களின் ஒரு ஏற்றம் தான் மட்டும் உயிராயி ருக்கிற அந்த முதற்பொருளுக்கு இருக்கின்றனவென்றும் எல்லாபொருள்களுக்கும் சேர்ந்த உபயோகங்கள் உயிரை ஏற் பவைகளாகவே யிருக்கின்றனவென்றும், ஆகையினால் உபயோ கங்களின் உருவங்கள் அவ்விதமானவைகளாகக்கூட இருக்கின் றனவென்றும், இந்த சுருக்கமாய் சொன்னதிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

67. மனிதனானவன், கடைசி படியிலிருந்து முதல் படிக்கு, எப்படி ஏறுகிறானென்று அதாவது உயர்த்தப்படுகிற னென்று சுருக்கமாய்ச் சொல்லப்படவேண்டும். ஸ்தூல லோகத் தின் கடைசி படியில் அவன் பிறந்திருக்கிறான்; பிறகு, அறி வினால் இரண்டாவது படிக்கு உயர்த்தப்படுகிறான்; அவ்வித அறிவினால் அவன் புத்தியை பூரணமாக்கும்போது, மூன்று வது படிக்கு உயர்த்தப்படுகிறான், பிறகு பகுத்தறிவுள்ளவனா கிறான். அவனில், பரமார்த்த உலகத்திலுள்ள உயர்வின் மூன்று படிகளும், மூன்று ஸ்தூல படிகளுக்கு மேலேயிருக் கின்றன. ஆனால் அவன் இந்த உலக சம்பந்தமான சரீரத்தை போட்டுவிடுகிறவரையில், அவைகள் விசதமாகிறதில்லை. இதை அவன் நீக்கினபோது, முதல் பரமார்த்தபடியும், பின்னிட்டு இரண்டாவதும், அவனுக்கு திறக்கப்படுகிறது; கடைசியில் மூன்றுவதும், அதுகூட மூன்றுவது சுவர்க்கத்தின் தேவர்க

ளாக்கப்பட்டவர்களுக்கு மட்டும் திறக்கப்படுகிறது. இவர்கள் தான் கடவுளைப் பார்க்கப்பட்டவர்கள். இரண்டாவதுபடியும் கடைசிபடியும் திறக்கப்படக்கூடியவர்கள், இரண்டாவது சுவர்க்கத்தினிடவும், கடைசி சுவர்க்கத்தினிடவும் தேவர்களாகிறார்கள். மனிதனிலிருக்கும் ஒவ்வொரு பரமார்த்த படியும் கடவுளிடமிருந்துவரும் இச்சாசக்தியையும் ஞானசக்தியையும் அடைதலுக்குத் தகுந்தபடி திறக்கப்படுகிறது. இவைகளில் கொஞ்சம் ஏற்றுக்கொள்ளப்பட்டவர்கள், முதலாவது அல்லது மிகவும் தாழ்ந்த பரமார்த்தபடிக்கும், அதிகம் பெற்றுக்கொள்ளப்பட்டவர்கள், இரண்டாவது அல்லது நடு பரமார்த்தபடிக்கும், அதைவிட அதிகம் பெற்றுக்கொள்ளப்பட்டவர்கள் மூன்றாவது அல்லது மிகவும் உயர்ந்த படிக்கும் வருகிறார்கள். ஆனால் இந்த படிகளில் யாதொன்றையும் அடையாதவர்கள் ஸ்தூல படிகளில் நிற்கிறார்கள். விவேகமாய் இல்லாவிட்டாலும் நினைக்கவும், ஆகையால் பேசவும், இச்சிக்கவும் ஆகையால் செயல்படவும், அவர்களுக்கு சக்தி யிருக்கிறதென்கிற உண்மை தவிர, பரமார்த்த படிகளிலிருந்து அவர்கள் யாதொன்றையும் அடைகிறதில்லை.

68. மனிதனிட மனதுக்குச் சேர்ந்த அவனுள்ளேயிருப்பவைகளின் உயர்ச்சிகளின் சுபாவத்தைப் பற்றியும்கூட தெரிந்திருக்கவேண்டும். கடவுள் சிருஷ்டித்த ஒவ்வொன்றிலும் எதிர்தாக்கல் உண்டு. உயிருக்கு மாத்திரம் சலனமிருக்கிறது. உயிரின் சலனத்தால் எதிர்சலனம் உண்டாகிறது. ஒரு பொருளானது இயக்கப்படும்பொழுது, அது இருக்கிறதென்கிற உண்மையிலிருந்து, இந்த எதிர்சலனம், அந்த சிருஷ்டிக்கப்பட்டபொருளுக்குச் சேர்ந்ததைப்போல் தோன்றுகிறது. மனிதனவன் உயிரை ஏற்பவனாகமட்டும் இருந்தபோதிலும், உயி

ரானது தன்னுடையதென்பதைவிட வேறு விதமாய் அவன் உணராதபடியினல், மனிதனில் அந்த எதிர்சலனம் தன்னுடையதுபோல் தோன்றுகிறது. இந்த காரணத்தினல் தான் மனிதன் தன்னிட பரம்பரையான தீமையிலிருந்து கடவுளுக்கு விரோதமாய் நடக்கிறன். ஆனல், தன் உயிர்முழுதும் கடவுளிடத்திலிருந்து வருகிறதென்றும், உயிரின் எல்லா நன்மைகளும் தெய்வச் செயலால் உண்டாகிறதென்றும், உயிரின் எல்லா தீமைகளும் மனிதன் எதிர்த்து நடப்பதால் உண்டாகிறதென்றும் அவன் எவ்வளவு நம்புகிருனே, அவ்வளவு, எதிர்சலனம் சலனத்துக்கு இணங்குகிறது, மேலும் அவன் தன்னிடமிருந்தே போல, கடவுளுடன் செயல்படுகிறன். எல்லா பொருள்களிலும் சமநிலே என்பது சலனம், எதிர் சலனம் இந்த இரண்டிலிருந்தும் உண்டாகிறது, ஒவ்வொரு பொருளும் சமநிலேயிலிருக்கவேண்டும். மனிதனைவன் கடவுளின் அருளினல் அல்லாமல், கடவுளிடம் தானே போவதாக நம்பாதிருக்கும்படி இவைகளெல்லாம் சொல்லப்பட்டது.

69. **தெய்வமானது இடவரைக்குட்படாமல், பிரபஞ்சத்திலுள்ள எல்லா விடங்களிலும் நிறைந்திருக்கின்றது.**

பிரகுருதிக்கு சிறப்பான, இடம், காலம் என்கிற இரண்டு பொருள்களிருக்கின்றன. இவைகளிலிருந்து ஸ்தூல லோகத்திலுள்ள மனிதன், தன்னிட சிந்தனேயின், ஆகையால் புத்தியின் நினேவுகளே உருவாக்குகிறன். இந்த பாவனேகளில் இருந்துகொண்டு, அவைகளுக்கு மேலே தன்னிட மனதை உயர்த்தாவிட்டால், பரமார்த்தமானதும் தெய்வீகமானதுமாகிய எதையும் அவன் எப்பொழுதும் அறியமாட்டான்; ஏனென்றல், இடம்,காலம் என்பதிலிருந்துவரும் கருத்துகளாகிய சிக்கில் அவைகளே அகப்படுத்துகிறன் ;

இதை செய்வதற்குத் தக்கபடி புத்தியின் சோதி ஜடமாக மட்டும் ஆய்விடுகிறது. பரமார்த்தமானதும் தெய்வீகமானதுமாகிய விஷயங்களைப்பற்றி யூகித்து அறிகையில், இந்த சோதியிலிருந்து நினைத்தலானது, பகல் வெளிச்சத்தில் மாத்திரம் காணப்படுகிற பொருள்களை இரவின் இருட்டின் வல்லமையால் நினைப்பதுபோலிருக்கிறது. இதுதான் லோகாயுத மதத்தின் உற்பத்திக்குக் காரணம். கால இடவரைக்குட்பட்ட சிந்தனையின் பாவனைகளுக்கு மேலே தன் மனதை எப்படி உயர்த்தலாமென்று தெரிந்தவன், கருஇருளிலிருந்து வெளிச்சத்துக்குப் போய், பரமார்த்தமானவைகளையும் தெய்வீகமானவைகளையும் பற்றிகொண்டு கடைசியில், அவைகளிருப்பதையும் அவைகளிலிருந்து வருவதையும் பார்க்கிறான்; பிறகு, அந்த வெளிச்சத்தினாலே, ஸ்தூல வெளிச்சத்தினிட கருஇருட்டை ஓட்டி, அதினுடைய போலி நியாயங்களை விலக்கிவைக்கிறான். புத்தியுள்ள ஒவ்வொருவனும் பிரகுருதியின் குணங்களுக்கு மேலே நினைக்கக்கூடும். உள்ளபடி அப்படியே நினைக்கிறான்; பிறகு, தெய்வமானது சர்வ வியாபகவத்துவமானபடியினால், இடவரைக்குட்பட்டதல்லவென்று சொல்லி, அறிந்து கொள்ளுகிறான். மேலே சொல்லிய பொருள்களைப்பற்றி உறுதிப்படுத்தவும் அறிந்து கொள்ளவும்கூட அவனுக்கு சக்தியுண்டு. ஆனால் தெய்வதின் சர்வ வியாபகத்துவத்தை அவன் தள்ளிவிட்டு, எல்லாம் பிரகுருதிக்கே ஆரோபித்தால், தன்னால் கூடுமானாலும் அவன் உயர்த்தப்பட இஷ்டமில்லாதவனாயிருக்கிறான்.

70. இறந்து, தேவர்களாகப்பட்ட எல்லாரும், மேல் கூறியபடி, காலமென்றும் இடமென்றும் பிரகுருதிக்கு இயல்பான அந்த இரண்டு பொருளையும் போட்டு விடுகிறார்கள்;

சிந்தனைக்குச் சேர்ந்த விஷயங்கள் உண்மைகளாகவும், பார்க்கும் பொருள்கள் ஸ்தூல லோகத்திலுள்ள பொருள்களைப்போன்றதாகவும், ஆனால் அவர்களிட சிந்தனைகளுக்கு ஒத்ததாகவுமிருக்கிற ஞான ஒளியில் அவர்கள் பின்னிட்டு பிரவேசிக்கிறார்கள். சற்று முன்னே சொல்லியபடி, உண்மைகளாயிருக்கிற அவர்கள் சிந்தனைகள் நோக்கும் விஷயங்கள், இடத்திலிருந்தும் காலத்திலிருந்தும் யாதொன்றையும் அடைகிறதில்லை; ஆனால், அவர்கள் பார்க்கப்பட்ட பொருள்கள் இடம் காலம் என்பவைகளிலே நிஜமாக இருப்பதாகத் தோன்றுகிறது, ஆனாலும், இவைகளிலிருந்து அவர்கள் நினைக்கிறதில்லை. அங்கே இடங்களும் காலங்களும் ஸ்தூல லோகத்திலிருப்பதுபோல் நிறுத்தப்படாமல், அவர்களின் உயிர்நிலைமைகளுக்குத் தக்கபடி மாறுகின்றனவென்பது காரணமாயிருக்கிறது. ஆகையினால், அவர்களிட சிந்தனையின் பாவனைகளில் இடங்களுக்கும் காலங்களுக்கும் பதிலாக, உயிரின் நிலைமைகளிருக்கின்றன; இடங்களுக்குப் பதிலாக அன்பின் நிலைமைகளுக்குச் சம்பந்தமுள்ள பொருள்களும், காலங்களுக்குப் பதிலாக ஞானத்தின் நிலைமைகளுக்கு சம்பந்தமுள்ள பொருள்களும் இருக்கின்றன. ஆகையினால்தான் பரமார்த்த சிந்தனையும், ஆகையால் பரமார்த்த பேச்சும்கூட, ஸ்தூல சிந்தனையிலிருந்தும், ஆகையால் ஸ்தூல பேச்சிலிருந்தும், எல்லாம் பரமார்த்தமாயிருக்கிற பொருள்களின் உட்பாகங்கள் தவிர பொதுவானது ஒன்றுமில்லாதபடி, அவ்வளவு பேதப்படுகிறது. இந்த வித்தியாசத்தைப்பற்றி வேறு இடங்களில், அதிகம் சொல்லப்படும். தேவர்களின் சிந்தனைகள் கால இடவரைக்குட்படாமல், உயிரின் நிலைகளிலிருந்து எல்லாவற்றையு மடைகிறபடியினால், தெய்வமானது எல்லா இடங்களிலும் நிறைந்திருக்கிற

தென்று சொல்லப்பட்டபோது அவர்கள் அறிந்து கொள்ளு கிறதில்லை என்பது தெளிவாகிறது; ஏனென்றால், அவர்களுக்கு இடங்களென்பது என்னவென்று தெரியாது; ஆனால் இடவரைக்குட்படுத்தாமல், தெய்வம் எல்லா பொருள்களிலும் நிறைந்திருக்கிறதென்று சொல்லப்பட்டால், அவர்கள் தெளிவாய் அறிந்துக் கொள்ளுகிறார்கள்.

71. சுத்தம் ஸ்தூலமாயிருக்கப்பட்ட மனிதன், பரமார்த்த விஷயங்களைப்பற்றியும், தெய்வீக பொருள்களைப் பற்றியும், இடவரைக்குட்பட்டு நினைக்கிறானென்றும், ஞானியானவன் இடவரைக்குட்படாமல் நினைக்கிறானென்றும், தெளிவுபட, பின்வருவதை திருஷ்டாந்தமாக எடுத்துக்கொள்ளுங்கள். நீளமும், அகலமும், உயரமும், கோணமாக அல்லது வட்டமாகயிருக்கிற, இவைகளால் எல்லைக்கட்டப்பட்ட உருவமும் இருக்கிற, பார்க்கும் பொருள்களிலிருந்து தான் அடைந்த மனோபாவனைகளின் வழி வகையால் சுத்தம் ஸ்தூலமாயிருக்கும் மனிதன் நினைக்கிறான். இந்த பொருள்கள் எல்லாம், பூமியின்பேரில் காணக்கூடிய பொருள்களைப்பற்றி, அவனிட சிந்தனையின் அபிப்பிராயங்களில், பகிரங்கமாய் சேர்ந்திருக்கின்றன. மேலும் தேசாசாரமானதும் சன்மார்க்கமானதுமாகிய, பொருள்களைப்போன்ற கட்புலனுக்கெட்டாதவைகளைப்பற்றி அவன் கொள்ளும் சிந்தனையின் அபிப்பிராயங்களில் கூட அவைகள் சேர்ந்திருக்கின்றன. நிஜமாகவே அவன் பின்சொன்னவைகளைப் பார்க்கிறதில்லை, அப்படியிருந்தாலும் அவைகள் அதனுடன் தொடர்ச்சியான பொருள்களாயிருக்கின்றன. ஞானியுடன், முக்கியமாய், சுவர்க்கலோகத்துத் தேவனுடன் விஷயம் வேறுமாதிரி யிருக்கிறது. இடத்துக்கு சம்பந்தப்பட்ட நீளத்தையும், அகலத்தையும், உயரத்தையும்,

கருதுகிற வடிவத்தோடு அவன் சிந்தனைக்கு யாதொரு சம்பந்தமுமில்லை. ஆனால் உயிரின் நிலைமையிலிருந்து அந்தப் பொருளின் நிலைமையோடு அது சேர்ந்திருக்கிறது. ஆகையினால், இடத்துக்குச் சம்பந்தப்பட்ட நீளத்திற்கு பதிலாக, உயிரின் நன்மையிலிருந்து ஒரு பொருளின் நன்மையையும், அகலத்துக்கு பதிலாக, உயிரின் உண்மையிலிருந்து ஒரு பொருளின் உண்மையையும், உயரத்துக்குப் பதிலாக இவைகளின் அந்தஸ்துகளையும், அவன் நினைக்கிறான். இவ்விதமாக சூக்குமப் பொருளுக்கும் ஸ்தூலப்பொருளுக்கும், ஒன்றுக்கொன்று சம்பந்தமாக இருக்கிற காரண காரிய சம்பந்தத்திலிருந்து அவன் நினைக்கிறான். இந்த அன்னுவயத்தால்தான் வேதத்தில் நீளம் என்பது ஒரு பொருளின் நன்மையையும், அகலம், ஒருபொருளின் உண்மையையும், உயரம் இவைகளின் அந்தஸ்துகளையும், குறியிடுகிறது. அதனால்தான், சுவர்க்கலோகத்து தேவன் ஒருவன் தெய்வ சர்வ வியாபகத்துவத்தைக் குறித்து நினைக்கும்போது, தெய்வமானது எல்லா பொருள்களிலும் இடவரைக் குட்படாமல் நிறைந்திருக்கிறதென்பதை விட வேறு விதமாய் நினைக்க அவனால் முடியாதென்று தெளிவாயிருக்கிறது. வானவனுடைய புத்தியை பிரகாசிக்கச் செய்கிற ஒளியானது பரமஞான சத்தியானபடியினால், அவன் நினைப்பது உண்மையாகவே இருக்கிறது.

72. கடவுளைக் குறித்த இந்த அபிப்பிராயம் பிரதானமானது ; அது இல்லாமல், தேவ மனிதனால் பிரபஞ்சம் சிருட்டிக்கப் படுதலைப்பற்றியும், அவரிட பராமரிப்பைபற்றியும், சர்வ வல்லமையைபற்றியும், சர்வ வியாபகத்துவத்தைப்பற்றியும், முற்றறிவைப் பற்றியும், சொல்லப்படுவதெல்லாம், நிஜமாகவே அறிந்து கொள்ளக்கூடும் ; ஆனால் அவைகளை நிறுத்தி

வைக்க முடியாது ; ஏனென்றால், சுத்த ஸ்தூலமான மனிதன், அவைகளை அறிந்து கொண்டாலும் அவன் சித்தத்திற்கு சேர்ந்த அவனிட உயிரின் ஆசைகளில் தவறுகிறான் ; இந்த ஆசையானது இவைகளை சிதறடித்து, அவன் பகுத்தறியும் ஒளி என்று சொல்லப்பட்ட அவனிட சோதி இருக்கும் இடவரை என்பதில் சிந்தனையை ஆழ்த்துகிறது ; இவைகளை நிராகரிக்கிற அளவு அவன் மதியீனமானவனென்று அவனுக்குத் தெரியாது. கடவுள் மனிதனாயிருக்கிறாரென்கிற இந்த உண்மையைக் குறித்து கொள்ளும் அபிப்பிராயத்தின் வழிவகையால் விஷயம் அவ்விதமிருக்கிறதென்பதை நிரூபிக்கலாம். மேலே (பிரிவுகள் II-13) சொன்னவைகளையும், பின் வரப்பட்டவைகளையும் நீர் கவனமாய் வாசித்து பாரும்,நீர் அப்படி செய்தால் அந்த சித்தாந்தத்தை அறிந்துகொள்வீர். ஆனால் உம்மிட சிந்தனையை, இடவரைக்குட்பட்ட ஸ்தூல ஒளியினுள்ளே கீழே விட்டால், இவைகளெல்லாம் அசத்தியாபாசங்களாக தோன்றும். இன்னும் அதிகமாக கீழே விட்டால், நீர் அவைகளை தள்ளி விடுவாய். தெய்வமானது பிரபஞ்சத்தின் எல்லா இடங்களிலும் நிறைந்திருக்கிறதென்று ஏன் சொல்லப்படுகிறதென்பதற்கும், தேவமனிதன் அவைகளை நிரப்புகிறார் என்று ஏன் சொல்லப்படுகிறதில்லை என்பதற்கும் இது தான் காரணம். ஏனென்றால், பின் சொல்லியதை சொன்னால் சுத்த ஸ்தூல புத்தி ஒத்துகொள்ளாது. ஆனால், கடவுள் எங்குமிருந்து எல்லா பொருள்களை கேட்டுக் கொண்டு, தெரிந்து கொள்ளுகிறாரென்கிற வேத சாஸ்திரிகளின் பேச்சின் விதி வாய்ப்பாடுகளுடன் இது ஒத்துப் போகிறபடியினால், தெய்வம் எல்லா இடங்களையும் நிரப்புகிறது என்கிற பிரமேயத்தோடு அது உடன்படுகிறது. இந்த

விஷயத்தைப் பற்றி, மேலே (பிரிவுகள் 7 முதல் 10 வரையில் அதிகம் பார்க்கலாம்.

**73. தெய்வமானது காலவரைக் குட்படாமல் எல்லா காலததிலுமிருக்கிறது.**

தெய்வமானது இடவரைக் குட்படாமல் எல்லா இடங்களிலு மிருப்பதுபோல், காலவரைக் குட்படாமல் எல்லாகாலத்திலும் அது இருக்கிறது; ஏனென்றால், பிரகுருதிக்கு இயல்பான எதையும் தெய்வத்துக்கு அமைக்கமுடியாது. இடமும் காலமும் பிரகுருதிககு இயல்பானது. பிரகுருதியில் இடமானது அளக்கப்படும் தன்மையுள்ளது, அம்மாதிரியே காலமுமிருக்கிறது. காலமானது, நாட்களினுலும், வாரங்களினுலும், மாதங்களாலும், வருஷங்களாலும் நூற்றுண்டுகளாலும், நாட்கள் மணிகளாலும், வாரங்களும் மாதங்களும் நாட்களினுலும், வருஷங்கள் நான்கு பருவங்களாலும், நூற்றுண்டுகள் வருஷங்களாலும் அளவிடப்படுகின்றன. உலகத்து சூரியனிட பிரத்தியக்ஷமான தினகதியிலிருந்தும் சுழற்சியிலிருந்தும் இந்த அளவு ஏற்படுகிறது. சூக்கும லோகத்தில் அது வேறு விதமாயிருக்கிறது. அங்கே, உயிரின்கதியானது அம்மாதிரியே காலத்தோடு இணைந்திருப்பதாகத் தோன்றுகிறது; ஏனென்றால் உலகத்திலுள்ள மனிதர்கள் ஒருவரோடொருவர் வசிப்பதுபோல, அங்கே வசிப்போர்கள் ஒருவரோடொருவர் சேர்ந்திருக்கிறார்கள் ; காலத் தோற்றமன்றி, இது முடியாது. ஆனால் அங்கே காலமானது, உலகத்தில் போல், காலங்களாகவும் பருவங்களாகவும் வகையறுக்கப்படவில்லை. ஏனென்றால், அவர்களிட சூரியன் நிலைகுலையாமல் அதன் கிழக்கிலேயே, இடைவிடாமலிருக்கிறது; ஏனென்றால், அவர்களுக்கு சூரியனாகத் தோன்றுவது ஆண்டவனிட இச்சாசத்தியாயிருக்கிறது. ஆகையால்

அவர்களுக்கு, நாட்களும், வாரங்களும், மாதங்களும், வருஷங்களும், நூற்றாண்டுகளுமில்லை, ஆனால் இவைகளுக்குப் பதிலாக அவர்களுக்கு உயிரின் நிலைமைகளுண்டு; காலபேதங்களென்று சொல்லக்கூடாமல், நிலைமைகள் பேதமென்று சொல்லக்கூடிய ஒரு பேதம் அவைகளால் உண்டாகிறது. அதனால் தான் தேவர்களுக்கு காலமென்பது என்னவென்று தெரியாது. அதைப்பற்றிச் சொன்னால், அதற்குப் பதிலாக நிலைமையைக்குறித்த ஓர் அபிப்பிராயத்தைக் கொள்ளுகிறார்கள்; நிலைமையானது காலத்தை நிச்சயிக்கும்போது, காலமானது ஓர் தோற்றமாக மாத்திர மிருக்கிறது. ஏனென்றால், சுகநிலை காலத்தை குறைவாகத் தோன்ற செய்கிறது. துக்கநிலை காலத்தை நீடித்து தோன்ற செய்கிறது. சூர்கும லோகத்தில் காலமானது, நிலைமையின் குணம் தவிர வேறொன்று மில்லையென்று இதிலிருந்து தெளிவாகிறது. இந்த காரணத்தினால் தான், மணிகளும், நாட்களும், வாரங்களும், மாதங்களும், வருஷங்களும், வேதத்தில் நிலைமைகளென்றும், தொடர்ச்சியிலும் மொத்தத்திலும் அவைகளின் கதிகளென்றும் அருத்தம் கொள்ளுகிறது. மேலும் திருச்சபைக்கு காலங்களை அமைத்தபோது, அதன் காலை என்பதினால், அதன் முதல் நிலையும், மத்தியானமென்பதால் அதன் நிறைவும், சாயங்காலம் என்பதினால் அதன் இறக்கமும், இரவு என்பதனால் அதன் முடிவும் என்று அருத்தம் கொள்ளப்படுகிறது. வருஷத்தின் நாலு பருவங்களாகிய வசந்தகாலமும், கோடைகாலமும், இலையுதிர்காலமும், மாரிகாலமும், அதே அருத்தம் கொள்ளுகின்றன.

74. காலமானது அன்பிலிருந்து சிந்தனையோடு ஒன்றுபடுகிற தென்பது இவைகளிலிருந்து விசதமாகிறது; ஏனென்

ருல், மனிதனிட நிலைமையின் சீலம் இதிலிருந்து வருகின்றது. பரமார்த்த உலகத்தில் இடங்கள் மூலமாய் உண்டாகும் கதிக ளின் தூரங்கள் காலகதிகளோடு ஐக்கியப்படுகிறதென்பதை அநேக விஷயங்களால் திருஷ்டாந்தப் படுத்தலாம். இவ்விதமாய், அங்கே வழிகளானது, அன்பிலிருந்து உண்டாகும் சிந்தனைக்கு சேர்ந்த ஆசைகளுக்கு தக்கபடி, நிஜ மாய் குறைக்கப்படுகின்றன; மேலும் அவைகள் எதிரிடையா னல் நீட்டப்படுகின்றன. இந்த காரணத்துக்காகத்தான் கால அவகாசங்களைக் குறித்துகூட நாம் பேசுகிறோம். தூக்கத்தில் போல், சிந்தனையானது, மனிதனுக்கு இயல்பான அன்போடு சேர்க்கப்படாத, இவ்வித சந்தர்ப்பங்களில் காலமானது தோன் றுகிறதில்லை.

75. தேவர்களும் ஜீவான்மாக்களும் முடிவுள்ளவர் களா யிருக்கிறபடியினல் அதன் உலகத்தில் பிரகுருதிக்கு இயல்பான காலங்கள், முன் செல்லுகிறதாய் தோன்றுகிற கலப்பற்ற அவஸ்தைகளாய் பரலோகத்தி லிருக்கிறபடியால், கடவுளானவர் முடிவற்றவராயிருக்கிற படியினல், மேலே (பிரிவுகள் 17-முதல் 22-வரையில்) காண்பித்தபடி முடிவற்ற பொருள்கள் அவரிடத்தில் ஒன்றுயிருப்பதினலேயும், அவரி டத்தில் அவைகள் வளர்ச்சி யுள்ளவைகளல்ல என்று விசதமா கிறது. இதனல் தெய்வமானது காலவரைக் குட்படாமல், எல்லாகாலத்திலு மிருக்கிறதென்று ஏற்படுகிறது.

76. கடவுளை காலவரைக் குட்படுத்தாமல் எந்த உணர்ச் சியினலும் அவரை நினைக்கமுடியாதவனும் அவரை அறிந்து கொள்ளாதவனும், நித்தியத்தை, காலநித்தியமாகத் தவிர வேறு விதத்தில் உணர முழுமையும் சக்தியில்லாதவனயிருக் கிருன்; அப்படியிருப்பதால், நித்தியத்திலிருந்து கடவுளை

நினைப்பதில், அவன் அவசியமாய் மனக்கலக்கத்தில் விழவேண்டும். ஏனென்றால், அவன் ஒரு தொடக்கத்திலிருந்து நினைக்கிறான், தொடக்கம் என்பது பிரத்தியேகமாய் காலத்தின் ஓர் இலட்சணமா யிருக்கிறது. கடவுளானவர் தன்னிடமிருந்தே உள்பொருளானா ரென்பது அவனிட அடுத்த சித்தப்பிரமை; இதிலிருந்து, பிரகுருதியானது தன்னிடமே இருந்து வந்தது என்கிற அபிப்பிராயத்தில், அவன் தலைகீழாய் விழுகிறான். காலவரைக்குட்படாத நித்தியத்தைப் பற்றிய பரமார்த்த சம்பந்தமான அல்லது தேவதா சம்பந்தமான அபிப்பிராயத்தாலல்லாமல் இந்த அபிப்பிராயத்திலிருந்து அவனை விடுதலை செய்ய முடியாது; அந்த கருத்தானது காலவரைக்கு உட்படுத்தப்படாவிட்டால், அந்த நித்தியமானதும் தெய்வமும் ஒன்றாகவே காணப்படுகின்றன. தன்னிலிருந்தலல்லாமல் தெய்வமானது சுயமாய் தெய்வமாயிருக்கிறது. தேவர்கள் தாங்கள் கடவுளை நித்தியத்திலிருந்து நிஜமாய் பார்க்கக்கூடுமென்றும், ஆனால் நித்தியத்திலிருந்து பிரகுருதியை எந்த வழிவகையிலும் பார்க்கமுடியாதென்றும், அதற்கு குறைவாய் அதனிடமிருந்தே பிரகுருதியை பார்க்கமுடியாதென்றும், பிரகுருதியை தன்னில் தானே பிரகுருதியாக எவ்விதத்திலும் பார்க்கவே முடியாதென்றும் சொல்லுகிறார்கள். ஏனென்றால், தன்னில் தானே இருக்கப்பட்ட பொருள், எல்லா பொருள்களும் உற்பத்தியாகப்பட்ட அந்த சொரூப பொருளாகவே யிருக்கிறது; தன்னில் தானே அந்த சொரூப பொருளானது, சித்சத்தியின் இச்சாசத்தியாகவும், இச்சாசத்தியின் சித்சத்தியாகவு மிருக்கிற உயிராகவே இருக்கிறது. ஒன்றுக்கொன்று உவமானமில்லாத, சிருஷ்டிக்கப்படாத பொருள் சிருட்டிக்கப்பட்டதிலிருந்து வேறாயிருப்பதுபோலும், முடிவற்ற பொருள் முடிவுள்

ளதிலிருந்து வேறுயிருப்பது போலும், இது தேவர்களுக்கு, காலவரைக்குட்படாமல், நித்தியமாயிருக்கிறது.

தெய்வமானது மிகப் பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும் ஒரே மாதிரி யிருக்கிறது.

77. முன் சென்ற இரண்டு பிரிவுகளிலிருந்தும் அதாவது, தெய்வமானது இடவரைக்குட்படாமல் எல்லா இடங்களிலும், காலவரைக்குட்படாமல் எல்லா காலத்திலுமிருக்கிறதென்பதிலிருந்தும், இது ஏற்படுகிறது. இடங்களானது அதிக பெரியதாயும் மிகவும் பெரியதாயும், அதிக சிறியதாயும் சின்னஞ் சிறியதாயு மிருக்கின்றன. மேல் சொல்லியபடி இடங்களும் காலங்களும் ஒன்றுகிறபடியால், காலங்களோடும் விஷயம் அம்மாதிரியே யிருக்கிறது. காலத்துக்கும் இடத்துக்கும் சேர்ந்த ஒவ்வொரு பொருளேயும், பிரகுருதிக்கு சேர்ந்த ஒவ்வொரு பொருளேயும் போல தெய்வமானது நானு விதமானதாயும் மாறக்கூடியதாயுமல்லாமல், நிலைமையானதாயும் மாருததாயு மிருப்பதால், அவைகளில் அந்த தெய்வம் ஒரே தன்மையுள்ளதா யிருக்கிறது; ஆகையால் அது எங்குமிருக்கிறது, எப்பொழுதும் ஒரே தன்மையா யிருக்கிறது.

78. ஒரு மனிதனிலிருப்பதுபோல மற்றவனில், தெய்வம் ஒரே மாதிரி இல்லாததுபோல தோன்றுகிறது. உதாரணமாக அது ஒரு ஞானியிடத்திலும் அஞ்ஞானியிடத்திலும், ஒரு கிழவனிடத்திலும் ஒரு சிறு குழந்தையிடத்திலும் வேறு வேறுயிருப்பதுபோல் தோன்றுகிறது. ஆனல் இது தோற்றத்திலிருந்து உண்டான ஒரு மாயை; மனிதன் வேறு யிருக்கிறுன், ஆனல் அவனிலிருக்கும் தெய்வம் வேறுனதல்ல. மனிதனனவன் ஏற்பவனுயிருக்கிறுன், அப்படி ஏற்பவன் அல்லது கொள்கலம் பலவிதமாயிருக்கிறது. ஒரு ஞானி

பானவன் சாதாரண மனிதனைவிட பரமஇச்சா சத்தியையும் பரமஞான சத்தியையும் தகுதியாய், ஆகையால் நிறைவாய் ஏற்பவனுயிருக்கிறுன்; ஞானியாய் கூடயுள்ள ஒரு கிழவன், ஒரு குழந்தை அல்லது வாலிபனைவிட மேல்கண்டபடி அதிகமா யிருக்கிறுன்; அப்படி யிருந்தாலும், தேய்வமானது ஒன்றில் மற்றதிலிருப்பதுபோல ஒரே மாதிரி யிருக்கிறது. வானோர்கள் ஞானத்தில் சொல்லி முடியாதவர்களாகவும், மனிதர்கள் அப்படி யில்லாமலும் இருப்பதால், தெய்வ லோகத்து தேவர்களோடும்; பூலோகத்து மனிதர்களோடும் தெய்வம் வெவ்வேறு யிருக்கிறதென்பது அம்மாதிரியே தோற்றத்திலிருந்துண்டாகும் ஓர் பொய் கோலமாயிருக்கிறது; ஆனுல், காணப்படும் வித்திபாசம், ஆண்டவனிடத்தல்லாமல், தேய்வத்தை ஏற்றுக்கொள்ளும் சுபாவத்துக்கு தக்கபடி பொருள்களில் இருக்கிறது.

79. தெய்வமானது மிக பெரியதிலும், சின்னஞ் சிறிய திலும் ஒரே மாதிரியாயிருக்கிற தென்பதை, தெய்வலோகத் தாலும், அங்கிருக்கும் வானவனுலும், திருஷ்டாந்த படுத்த லாம். முழு தெய்வலோகத்திலும், ஒரு தேவனிலும் இருக்கும் தெய்வம் ஒரே மாதிரியானதா யிருக்கிறது; ஆகையினுல்கூட முழு சுவர்க்கமும் ஒரு வானவனைப்போல தோன்ற சக்தி யுடையதா யிருக்கிறது. திருச்சபையோடும், சபையைச் சேர்ந்தவனேடும் விஷயம் அம் மாதிரியே யிருக்கிறது. தெய்வமிருக்கப்பட்ட மிகவும் பெரியதென்பது முழு சுவர்க்க மும் முழு திருச்சபையுமா யிருக்கிறது; சின்னஞ் சிறிய தென் பது சுவர்க்கத்து ஒரு தேவனும் திருச்சபையைச் சேர்ந்த ஒரு மனிதனுமா யிருக்கிறது. சில வேலைகளில் சுவர்க்கத்திலுள்ள ஒரு முழு கூட்டமும், ஒரு மனிதனுயிருந்து தேவனுை

வைப்போல் எனக்கு தோற்றப்பட்டிருக்கிறது ; அது ஒரு இராட்சதனைப்போல் பெரிய மனிதனுகவும், ஒரு குழந்தை யைப்போல் சிறிய மனிதனுகவும், தோன்றுமென்று நரன் கேழ்விப்பட்டிருக்கிறேன்; தெய்வமானது மிகப்பெரியதிலும் சின்னஞ் சிரியதிலும் ஒரே மாதிரியிருப்பதால், இது நடக்கக்கூடுமென்றும் நான் கேழ்விபட்டிருக்கிறேன்.

80. தெய்வமானது, சிருட்டிக்கப்பட்டதும், உயிரில் லாததுமான எல்லா பொருள்களின் மிகவும் பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும்கூட ஒரே மாதிரியாக இருக்கிறது ; ஏனென்ருல், அவைகளிட உபயோகத்தின் எல்லா நன்மையி லும் அது இருக்கிறது. ஆனுல் அவைகள் உயிரின் உருவங் களாக அல்லாமல், உபயோகங்களின் உருவங்களாக இருக் கின்றனவென்பது, அவைகள் ஏன் உயிரோடில்லை என்பதற்கு காரணமாயிருக்கிறது ; உபயோகத்தின் நன்மைக்கு தக்கபடி உருவமானது பலவிதமாயிருக்கிறது. சிருட்டியைக் குறித்து சொல்லப்படும் பின்வருவதில், இந்த பொருள்களில் தெய் வம் எப்படி இருக்கிறதென்பதை சொல்லப்படும்.

81. இடத்தை நீக்கி, சூனியமென்பதை முழுமையும் மறுத்து, பிறகு, பரம இச்சாசத்தியையும் சித்சத்தியையும், நீக்கிய இடத்திலும், மறுத்த சூனியத்திலும் பரம சொரூபமே என்று நினைத்துப் பார். பிறகு இடவரைக்குட்பட்டு நீ நினைத் தால், இடத்தின் மிகபெரியதிலும் சின்னஞ் சிறியதிலும் தெய்வமானது ஒரேமாதிரி யிருக்கிறதென்று நீ அறிவாய் ; ஏனென்ருல், இடத்திலிருந்து பிரிக்கப்பட்ட சொரூபத்தில் பெரியதென்றும் சிறியதென்று மில்லாமல், அபேதம் என்கிற ஒன்றே இருக்கிறது.

82. வெட்டவெளியைப்பற்றி இங்கே சிலது சொல்லப்படவேண்டும். வெட்ட வெளியைப்பற்றி நியூடன் என்பவருடன் தேவர்கள் சம்பாஷித்துக் கொண்டிருந்ததை நான் கேட்டுக் கொண்டிருந்தேன். பரமார்த்தமாயும், ஸ்தூல லோகத்தின் இடத்துடனும் காலத்துடனும் சம்பந்தப்படாததாயு மிருக்கப்பட்ட தங்கள் உலகத்தில், அவர்கள் உணரவும், நினைக்கவும், ஆசைகளினால் மனது உருக்கப்படவும், அன்புபாராட்டவும், இச்சிக்கவும், சுவாசிக்கவும், பேசவும், செயல்படவும் கூடுமாகையால், வெட்டவெளியைக் குறித்த கருத்து சூனியமென்று சொல்வதை தாங்கள் பொருக்க முடியாதென்று அவர்கள் சொன்னார்கள்; வெட்ட வெளி சூனியமாயிருந்தால் பின் கூறியவைகளைச் செய்யவே முடியாது; ஏனென்றால், அபாவமென்பது அபாவமே, அந்த அபாவத்துக்கு, எதையும் சொல்லமுடியாது. உள்பொருளாகிய தெய்வமானது எல்லா பொருள்களையும் நிரப்புகிறதென்று தனக்கு தெரியுமென்றும் எல்லா பொருள்களையும் நாசப்படுத்துகிற படியினால், வெட்ட வெளியைக்குறித்த அபாவமென்கிற அபிப்பிராயத்தைக் குறித்துதான் நடுங்குகிறதாகவும், நியுடன் என்பவர் சொன்னார். தன்னுடன் வெட்டவெளியைப்பற்றி பேசுகிறவர்களை அபாவத்தில் மனது அமைதியடைய முடியாதபடியினால் அதை மூர்ச்சை என்று சொல்லி, அந்த அபாவ கருத்தைக்குறித்து ஜாக்கிறதையாயிருக்கும்படி அவர் போதிக்கிறார்.

---

# இரண்டாம் பாகம்

---

## சிவ சூரியன்

**பரம இச்சாசத்தியும், பரம ஞானசத்தியும் தேவலோகத்தில் ஒரு சூரியனைப்போல் தோன்றுகின்றன.**

83. சூக்கும லோகமென்றும் ஸ்தூல லோகமென்றும் இரண்டு லோகங்களிலிருக்கின்றன; சூக்கும உலகமானது ஸ்தூல லோகத்திலிருந்து யாதொன்றையும் அடைகிறதில்லை, அம்மாதிரியே ஸ்தூல லோகமானது சூக்கும லோகத்திலிருந்து யாதொன்றையு மடைகிறதில்லை. அவைகள் இரண்டும் முழுமையும் வேறு வேறானது; காரணகாரிய சம்பந்தங்களால் மட்டும் அவைகள் சம்பந்தப்பட்டிருக்கின்றன; அதன் சுபாவம் வேறிடத்தில் மிகுதியாய் சொல்லப்பட்டிருக்கிறது. இதை திருஷ்டாந்தப்படுத்த பின்வரும் உதாரணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். ஸ்தூல லோகத்திலுள்ள சூடானது சூக்கும லோகத்தினிட தருமத்தின் நன்மைக்கு ஒத்திருக்கிறது. ஸ்தூல லோகத்தின் ஒளியானது தேவலோகத்தினிட பக்தியின் உண்மைக்கு யொத்திருக்கிறது. சூடும் தருமத்தின் நன்மையும், ஒளியும் பக்தியின் உண்மையும், முற்றும் வேறு வேறானதென்று யாருக்கு தெரியாது? முதல் க்ஷன தரிசனத்தில் அவைகள் முழுமையும் வேறான இரண்டு பொருள்கள் போல் வேறுவேறாக தோன்றுகின்றன. தருமத்தின் நன்மைக்கும் சூட்டிற்கும், பக்தியின் உண்மைக்கும் ஒளிக்கும் பொதுவானது எதுவென்று நீர் நினைத்துப் பார்த்தால், அவைகள் அப்படி தோன்றுகின்றன. அப்படியிருந்தாலும் சூக்குமசூடு அந்த நன்மையாகவும், சூக்கும ஒளி அந்த உண்மையாகவும்

இருக்கின்றன. இந்தப் பொருள்கள் எல்லாம் சுயமாய் அப்படி வேறு வேறுனதாயினும், காரணகாரிய சம்பந்தத்தால் பின் கூறும் வழியில் ஒன்றுகின்றன; ஒருமனிதன், வேதத்தில், சூடு, ஒளி என்கிற வார்த்தைகளை வாசித்தால், அப்பொழுது அவனுடனிருக்கும் அசரீர ஆன்மாக்களும், தேவர்களும், சூடு என்பதற்கு பதிலாக தருமத்தையும், ஒளிக்கு பதிலாக பக்தியையும், தெரிந்து கொள்ளுகிறுர்கள். தேவலோகம், ஸ்தூல லோகமாகிய இரண்டு லோகங்களும் ஒன்றுக்கொன்று பொதுவானது ஒன்றுமில்லாமல் அவ்வளவு வேறுவேறுன தென்றும், அப்படியிருந்தாலும், காரண காரியசம்பந்தத்தால் அவைகள் சம்பந்தப்படவும், உண்மையில் சேர்க்கப்பட்டிருக்கவும் சிருஷ்டிக்கப்பட் டிருக்கிறதென்றும், தெரிந்திருக்க இந்த உதாரணம் எடுத்து காட்டப்பட்டது.

84. இந்த இரண்டு லோகங்களும் இவ்விதமாக வேறு வேறுனதாயிருப்பதால், தேவ லோகமானது, ஸ்தூல லோக சூரியனைவிட வேறு சூரியனை உடைத்தாயிருப்பதாக தெளிவாய் அறிந்து கொள்ளலாம். ஏனென்றுல், தேவ லோகத்தில் ஸ்தூல லோகத்தைப் போல் சமமாய் சூடும், ஒளியும் இருக்கின்றன ; ஆனுல், அங்கிருக்கும் சூடு சூக்குமமானது, அம்மாதிரியேதான் ஒளியுமிருக்கிறது ; சூக்கும சூடு தருமத்தின் நன்மையா யிருக்கிறது, சூக்குமஒளி பக்தியின் உண்மையா யிருக்கிறது. சூடும் ஒளியும் சூரியனைவிட வேறு எந்த மூலத்திலிருந்தும் உற்பத்தியாக கூடாதபடியினுல், ஸ்தூல லோகத்திலிருக்கும் சூரியனுக்கு வேருக தேவ லோகத்தில் வேறு சூரியன் இருக்கிறதாக விசதமாகிறது ; மேலும், சூக்கும சூடும் ஒளியும் தன்னிடமிருந்து நிலைக்கும்படியாக, தேவ லோகத்து சூரியன் தன் சுபாவத்திலும், ஸ்தூல சூடு

தன்னிடமிருந்து நிலைக்கும்படி, ஸ்தூல லோகத்து சூரியன் தன் சுபாவத்திலும் இருக்கின்றன. நன்மைக்கும் உண்மைக்கும், சம்பந்தப்பட்ட பரமார்த்தமான யாதொன்றும், பரம இச்சா சத்தியும் பரம ஞான சத்தியும் தவிர வேறு எந்த மூலத்திலிருந்தும் உண்டாகாது ; ஏனென்றால் எல்லா நன்மையும் அன்பிற்கும், எல்லா உண்மையும் ஞானத்துக்கும் சேர்ந்தது. அவைகளுக்கு வேறு உற்பத்தி ஸ்தானமில்லை என்று ஒவ்வொரு ஞானிக்கும் தெரியும்.

85. ஸ்தூல லோகத்து சூரியனைக் காட்டிலும் வேறு சூரியன் இருக்கிறதாக, இதுவரையில் தெரியாதிருந்தது. ஆத்மார்த்தமானது என்னவென்று தெரியாத படிக்கும், ஆதலால், ஸ்தூல லோகத்திற்கு வேறானதாக, அசரீர ஆன்மாக்களும் தேவர்களும் இருக்கப்பட்ட ஒரு தேவ லோகமிருப்பதாக தெரியாத படிக்கும், மனிதனிட ஆத்மார்த்தமானவைகள் அவனிட ஸ்தூலமானவைகளில் அவ்வளவு அமிழ்ந்து போய் விட்டதென்பது காரணமாயிருக்கிறது. தேவ லோகம், ஸ்தூல லோகத்திலுள்ளவர்களுக்கு தெரியாத படி அவ்வளவு ஆழ்ந்து மறைந்து கிடப்பதால், ஸ்தூல லோகத்திலுள்ளவைகளை நான் பார்ப்பதுபோல், அந்த உலகத்திலுள்ளவைகளை பார்த்து, பின்னிட்டு அந்த உலகத்தைக் குறித்து விவரமாய் சொல்ல, என்னிட ஞானக் கண்களை திறக்க ஆண்டவர் அருள் புரிந்தார்; தேவலோகத்து சூரியனைக் குறித்து ஓர் பிரிவில் சொல்லப்பட்டிருக்கும் சுவர்க்கமும் நகரமும் எனும் நூலில் இது செய்யப்பட்டது. நான் இந்த சூரியனை பார்த்திருக்கிறேன். ஸ்தூல லோகத்து சூரியனைப்போல் அதே பரிமாணமுள்ளதாக அது எனக்கு தோன்றினது; அதனுடைய தோற்றமானதுகூட பின் கூறிய

தின் சூரியனைப்போல, தீபோன்றதாயிருந்தது, ஆனால் அதிக காந்தியுள்ளதா யிருந்தது. சர்வ வியாபக தேவதாசம்பந்த மான சுவர்க்கம், அந்த சூரியன் கீழிருப்பதாகவும், மூன்ரு வது சுவர்க்கத்திலுள்ள தேவர்கள் அதை இடைவிடாது பார்க்கிறதாகவும், இரண்டாவது சுவர்க்கத்து தேவர்கள் அடிக்கடியும், முதல் அல்லது இறுதியான சுவர்க்கத்து தேவர்கள் சில வேளைகளிலும் பார்க்கிறதாகவும், எனக்கு தெரியப்படுத்தப்பட்டது. அவர்களுக்கு இருக்கும் எல்லா சூடும் ஒளியும், அந்த உலகத்தில் பார்க்கப்படும் எல்லாப் பொருள்களும்கூட, அந்த சூரியனிலிருந்து உண்டானதாக பின் வருவதினல் தெரிந்து கொள்ளலாம்.

86. அந்த சூரியன் ஆண்டவனே யாகமாட்டார். ஆனல் அது, ஆண்டவனிடமிருந்து தோன்றியது. அது அந்த உலகத் தில் சூரியனைப்போல் தோன்றுகிற வெளிபடும் பரம இச்சா சத்தியும் பரமஞான சத்தியுமா யிருக்கிறது. முதல் பாகத் தில் காண்பித்தபடி ஆண்டவனிடத்தில் அன்பும் ஞானமும் ஒன்ருயிருக்கிறபடியினல், அந்த சூரியனுனவன் பரம இச்சா சத்தி என்று சொல்லப்படுகிறது; ஏனென்ருல், பரமஞான சத்தி பரமஇச்சாசத்தியி லிருந்துவருகிறது. இவ்விதமாக கூட அது அன்பாயிருக்கிறது.

87. அன்பும் நெருப்பும் ஒன்றுக்கொன்று காரண காரிய சம்பந்தத்திலிருப்பதால், அந்த சூரியனுனவன் தேவர் கள் கண்கள் முன்பாக தீபோன்று தோன்றுகிருன்; ஏனென் ருல், தேவர்கள் தங்கள் கண்களால் அன்பைப் பார்க்க முடி யாது, ஆனல், அன்புக்கு பதிலாக அதற்கு அனுவயப்படு வதை பார்க்கக்கூடும். ஏனென்ருல், தேவர்கள், மனிதர் களுக்கு சமமாய், ஒரு உள்ளும், ஒருபுறமும் உடைத்தா

யிருக்கிறார்கள்: நினைப்பதும், அறிகிறதும், இச்சிப்பதும், அன்பு பாராட்டுகிறதும், அவர்களின் அந்தரங்கமான வைகள், உணருகிறதும், பார்க்கிறதும், பேசுகிறதும், செயல்படுகிறதும், அவர்களிட புறம்பானவைகள்; அவர் களிட எல்லா புறம்பானவைகளும் அந்தரங்கமானவை களுக்கு காரண காரிய சம்பந்தப்பட் டிருக்கின்றன; ஆனால் அவைகள் ஸ்தூலமல்லாமல் சுக்கும அன்னுவயங் களாயிருக்கின்றன. பரம அன்புகூட தேவர்களால் தீபோன்று உணரப்படுகின்றது. அதனால்தான் வேதத்தில் நெருப்பு என்று சொல்லப்பட்டபோது, அது அன்பு என்று அருத்தம் கொள் ளுகிறது. இஸ்ரவேல் சமயத்தில் பரிசுத்த நெருப்பு, அன்பு என்று கருதப்பட்டது; அந்த காரணத்தினால்தான், கடவுளை பிரார்த்திக்கும்போது, அந்த சுவர்க்கலோகத்து நெருப்பு, அதாவது பரமஇச்சாசத்தி இருதயத்தை பற்றவைக்கவேண்டு மென்று வேண்டுவது வழக்கமா யிருக்கிறது.

88. மேலே (83-வது பிரிவில்) சொல்லியபடி ஆத் மார்த்தமானதிற்கும், ஸ்தூலமானதிற்கும் அவ்வித வித்தி யாச மிருப்பதால், ஸ்தூலோகத்து சூரியனிடமிருந்து தேவ லோகத்துக்கு யாதொன்றும், அதாவது அதின் சூட்டினிடவும் ஒளியினிடவும் எதுவும் பூமியின் மேல் உள்ள எந்த பொரு ளும் செல்லமுடியாது. அங்கே, ஸ்தூல லோகத்தின் ஒளி யானது நள்ளிருளாயிருக்கிறது. அதன் சூடு அங்கே மரண மாயிருக்கிறது. அப்படியிருந்தாலும் உலகத்தின் சூடு, சுவர்க் கத்து சூட்டின் பெருக்கினால் உயிர்ப்பிக்கபடக்கூடும்; உலகத்து ஒளி சுவர்க்கத்து ஒளியின் பெருக்கினால் பிரகாசிக்க செய்யக் கூடும். உட்பிரவேசம் காரண காரிய சம்பந்தங்களால் உண் டாகிறது, தொடர்ச்சியினால் உண்டாகமுடியாது.

இறைவன் இச்சாசத்தியிலிருந்தும் ஞானசத்தியிலிருந்தும் தோன்றும் சூரியினிடமிருந்து சூடும் ஒளியும் புறப்படுகின்றன.

89 தேவர்களும் அசரீர ஆன்மாக்களுமிருக்கும் தேவ லோகத்தில், மனிதர்கள் இருக்கும் ஸ்தூல லோகத்தில் போல சூடும் ஒளியும் சமமாய் இருக்கின்றன ; அல்லாமலும் சூடானது அதைப்போன்று சூடாக உணரப்படுகிறது, ஒளியானது ஒளியாகப் பார்க்கப்படுகிறது. அப்படியிருந்தாலும் தேவ லோகத்தினிடவும் ஸ்தூல லோகத்தினிடவும் சூடும் ஒளியும், தங்களுக்குள் பொதுவானது ஒன்றுமில்லாதபடி, மேற்கூறிய விதம், அவ்வளவு பேதப்படுகின்றன. உயிருள்ளதும் இல்லாததும்போல் ஒன்றுக்கொன்று அவைகள் பேதப்படுகின்றன. தேவலோகத்து சூடு தன்னில்தானே ஜீவன் உள்ளதாயிருக்கிறது, அம்மாதிரியேகூட அதன் ஒளியுமிருக்கிறது. ஆனால் ஸ்தூலலோகத்து சூடு தன்னில்தானே உயிரற்றதாயிருக்கிறது, அம்மாதிரியேகூட அதன்ஒளியுமிருக்கிறது. ஏனென்றால்தேவ லோகத்து சூடும் ஒளியும் தூய்மையான அன்பாயிருக்கிற ஒரு சூரியனிடமிருந்து புறப்படுகின்றன. ஸ்தூல லோகத்து சூடும் ஒளியும் சுத்தமான நெருப்பாயிருக்கிற ஒரு சூரியனிடமிருந்து புறப்படுகின்றன ; அன்பானது உயிருள்ளது, இறைவன் இச்சாசத்தி உயிராகவேயிருக்கிறது, நெருப்பு உயிரில்லாதது, சூரியனிட நெருப்பு மரணமாகவே யிருக்கிறது ; அதில் சுத்தமாய் உயிரேயில்லாத படியினால், அப்படி சொல்லலாம்.

90. தேவர்கள் பரமார்த்தமானவர்களான படியினால், சூக்கும சூட்டிலும் சூக்கும ஒளியிலும் தவிர வேறு எதிலும் ஜீவிக்க சக்தியற்றவர்களா யிருக்கிறார்கள் ; ஆனால், மனிதர்கள் ஸ்தூல சூட்டிலும் ஒளியிலும் தவிர வேறு எந்த பொருளிலும் ஜீவிக்க சக்தியற்றவர்களா யிருக்கிறார்கள் ; ஏனென்

ருல், சூக்குமமானது சூக்குமமானதுடனும், ஸ்தூல மானது ஸ்தூல மானதுடனும் இணங்குகின்றன. ஒரு தேவலோகத்தான் ஸ்தூலசூட்டிலிருந்தும் ஒளியிலிருந்தும் மிக சொற்ப மான யாதொன்றை யடைந்தாலும், அவன் இறந்துபோவான்; ஏனென்ருல், அது அவனிட உயிருடன் முழுமையும் உடன் படுகிறதில்லை. ஒவ்வொரு மனிதனும், தன்னிட மனதின் அந்தரங்கங்களில், ஆன்மாவாயிருக்கிருன். ஒரு மனிதன் இறக்கும் போது, பிரகுருதி சம்பந்தமான உலகத்தி லிருந்து முழுமையும் நீங்கி, அதற்கு சேர்ந்த பொருள்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டு, பிரகுருதி சம்பந்தம் ஒன்றுமில்லாத ஒரு உலகத்தில் பிரவேசிக்கிருன் ; சுத்த மானதற்கும் தடித்ததற்கும் உள்ள சம்பந்தம் போல தொடர்ச்சியான சம்பந்தமில்லாமல், முந்தினதற்கும் பிந்தின தற்கும் உள்ள சம்பந்தம்போல் சம்பந்த மிருக்கும்படியாக பிரகுருதியிலிருந்து அவ்வளவு பிரிக்கப்பட்டு அந்த உலகத்தில் அவன் ஜீவிக்கிருன்; பின் சொன்னவைகளுக்குள்ளே காரண காரிய சம்பந்தத்தால் தவிர எந்த சம்பந்தமும் இருக்கமுடியாது. ஆகையினுல் பரமார்த்த சூடு, சுத்தமான ஸதூல சூடு யல்லவென்றும், பரமார்த்த ஒளி, சுத்தமான ஸ்தூல ஒளியல்ல வென்றும், ஆனுல் அவைகள் முழுமையும் வேருன ஒரு தத்துவத்திலிருந்து தோன்றுகிறதென்றும் அறிந்துகொள்ளலாம்; ஏனென்ருல், சூக்கும சூடும் ஒளியும், உயிராகவே யிருக்கிற சுத்தமான அன்பாயிருக்கும் ஓர் சூரியனிலிருந்து தன் சத்தை யடைகின்றன; மேலே கூறியபடி, சுத்தமாய் உயிர் ஒன்றுமில் லாத சுத்த நெருப்பாயிருக்கும் ஓர் சூரியனிலிருந்து ஸ்தூல சூடும் ஒளியும் தங்கள் தத்துவத்தை அடைகின்றன.

91. இந்த இரண்டு உலகத்திற்கும் அததற்கேற்ற சூட்டுக்கும் ஒளிக்கும் அவ்வித வித்தியாச மிருக்கிறபடியினுல்,

ஒருகைத்தி லிருக்கப்பட்டவர்கள் மற்றதிலிருக்கப் பட்டவர் களை ஏன் பார்க்கமுடியா தென்பது தெளிவாய் தெரிகிறது. ஏனென்றால், ஸ்தூல வெளிச்சத்தில் பார்க்கிற மனிதனுடைய கண்கள், அவனிட உலகத்து பொருளிலிருந்து உண்டாகின் றன; ஒரு வானவனுடைய கண்கள் அவனிட உலகத்து பொருளிலிருந்து உண்டாகின்றன; இம்மாதிரியாக இதாயி னும் அதாயினும் அவைகள் தங்களிட சொந்தவெளிச்சத்தை தகுதியாகப் பெற உருவாக்கப் பட்டிருக்கின்றன. தாங்கள் பார்க்காதபடியினால், தேவர்களும் ஆவிகளும் மனிதர்க ளென்று நம்பாதவர்கள், எவ்வளவு அறிவீனமாய் நினைக்கிறார் களென்று இவைகளிலெல்லாமிருந்து அறிந்து கொள்ளலாம்.

92. தேவர்களும் ஆவிகளும் மனிதர்களிடமிருந்து முழுமையும் பேதுமான வெளிச்சத்திலும் சூட்டிலு மிருக்கி றார்களென்று இதுவரையில் தெரியாதிருந்தது. இதுவுமன்றி, வேறு ஒளியும் வேறு சூடும் இருக்கிறதாயும் தெரியாமலி ருந்தது. ஏனென்றால், மனிதனெனவன், தன் ஆலோசனை யில், பிரகுருதியின் அந்தரங்கமான அல்லது சுத்தமான பொருள்களைக் காட்டிலும் ஆழமாய் செல்லவில்லை. இந்த காரணத்திற்காககூட அநேகர் தேவர்களிடவும் ஆவிகளிடவும் வாசஸ்தானங்கள் சூக்குமஆகாயத்திலிருப்பதாக நினைத்தார் கள். சிலர் அவர்கள் நட்சத்திரங்களிலிருப்பதாக நம்புகிறார் கள், அதாவது அவர்கள் பிரகுருதிக்கு மேலும் வெளிப்புறமு மல்லாமல், அதற்கு உள்ளாகவே யிருப்பதாக நினைத்தார்கள். அப்படியிருந்தாலும், தேவர்களும் ஆவிகளும், முழுமையும் பிரகுருதிக்கு மேலும் வெளிபுறத்திலும், வேறு ஒரு சூரியன் கீழிருக்கும் தங்களிட சொந்த உலகத்திலும் இருக்கிறார்கள். அந்த உலகத்தில், இடங்கள் என்பது மேல் காண்பித்தபடி

தோற்றங்களா யிருப்பதால், அவர்கள் (Ether) என்றும் சூக்கும ஆகாயத்திலும் அல்லது நட்சத்திரங்களிலுமிருப்பதாக சொல்லமுடியாது. ஏனென்றால் அவர்கள் மனிதனோடு, அவன் ஆன்மாவின் ஆசையுடனும் சிந்தனையுடனும் சேர்க்கப்பட்டு, கூடியிருக்கிறார்கள். மனிதன் ஒரு ஆன்மா; அந்த ஆன்மாவினால் அவன் சிந்தித்து, இச்சிக்கிறான். ஆகையினால் தேவலோகம் என்பது எவ்விதத்திலும் மனிதனுக்கு தூரத்தி லில்லாமல், அவனிருக்கும் இடத்திலேயே யிருக்கிறது. சுருங்கச் சொல்லில் ஒவ்வொரு மனிதனும் அவனிட மனதின் உட்பாகங்கள் சம்பந்தப்பட்டவரையில் அங்கே யிருக்கும் தேவர்களுக்கும் ஆவிகளுக்கும் மத்தியில் இருக்கிறான். அவன் அதன் ஒளியிலிருந்து நினைக்கிறான், அதன் சூட்டிலிருந்து நேசிக்கிறான்.

அந்த சூரியன் கடவுள் அல்ல, ஆனால் அது கடவுளாகிய மனிதனிட இச்சா சத்தியிலிருந்தும் ஞானசத்தியி லிருந்தும் வெளிப்படும் பொருள்; அந்த சூரியனிட சூட்டிற்கும் ஒளிக்கும் விஷயம் அப்படியே.

93. தேவர்களுக்கு விளக்கமானதும், அதிலிருந்து சூட்டையும் ஒளியையும் அடைகிறதுமான அந்த சூரியனை பராபரன் என்று தெரிந்துகொள்ளுகிறதில்லை, ஆனால் ஞான சூட்டின் உயர்ந்த வடிவமான அவரிடமிருந்து புறப்படும் முதற் பொருள் என்று அறிந்துகொள்ளப்படுகிறது. அவைகளிட முதன்மையான காரண காரிய சம்பந்தத்தில் பரமனிட இச்சா சத்தியும் ஞானசத்தியுமாயிருக்கிற சூக்கும தீ, சூக்கும சூட்டின் உயர்ந்த உருவமாக யிருக்கிறது. இந்த காரணத்துக்காகத்தான், அந்த சூரியன் தீ போன்றும், மேலும் மனிதர்களுக் கல்லாமல் தேவர்களுக்கும் தீபோன்றும் தோன்று

கிறது. மனிதர்களுக்கு நெருப்பாயிருக்கும் நெருப்பு சூக்குமமானதல்ல, ஆனால் ஸ்தூலமானது; அந்த இரண்டு நெருப்புகளுக்கும் உள்ள பேதம், உயிருள்ளதற்கும், உயிரில்லாததற்கும் உள்ள பேதத்தைப் போலிருக்கிறது. ஆகையினால் சிவசூரியன் அதன் சூட்டினால், ஞானமுள்ளவர்களை உயிர்ப்பித்து, பரமார்த்த பொருள்களை புதுப்பிக்கிறான் ; ஆனால் ஸ்தூல சூரியனானவன், தன்னிடமிருந்ததல்லாமல் சூக்கும சூட்டின் உட்பிரவேசத்தால்,ஸ்தூலமானவர்களுக்கும், ஸ்தூலமான பொருள்களுக்கும் நிஜமாகவே அம்மாதிரியே செய்கிறது ; அதற்கு அது பிரதியாக ஊழியம் செய்கிறது.

94. ஒளியானது உற்பத்தியாகும் இந்த ஞானஜோதி அவைகள் அபிவிர்த்தி யாகுங்கால் குறைவுபடுகிற சூக்கும சூடும் ஒளியுமாகிறது; அந்த குறைவுபடுதலானது படிப்படியாக சம்பவிக்கிறது, அதைப்பற்றி பின்வருவதில் பேசுவோம். பூர்வ ஜனங்கள், நெருப்பாக எறிகிறதும், கடவுளின் சிரசைச் சுற்றி வெளிச்சத்தால் அதிக பிரகாசமுள்ளதுமான வட்டங்களால் இதை சாயல் காட்டினார்கள்; கடவுளை மனிதனாக சித்தரிக்கப்பட்டபோது, அவ்வித பாவனையைக்கூட தற்காலத்தில் சாதாரணமாய் காணலாம்.

95. அன்பானது சூட்டையும், ஞானமானது ஒளியையும் உண்டாக்குகிறதென்பது, நிஜமான அனுபவத்தில் தெளிவாகிறது. ஒரு மனிதன் நேசிக்கும்போது அவன் சூடுள்ளவனாகிறான், அவன் ஞானத்தோடு நினைக்கும்போது, பொருள்களை வெளிச்சத்திலிருப்பது போல பார்க்கிறான். அன்பின் முதன்மையான வெளிபடும் பொருள் சூடென்றும், ஞானத்தின் முதன்மையான வெளிபடும் பொருள் ஒளியென்றும்,

இதிலிருந்து விசதமாகிறது. அவைகள் காரண காரிய சம்பந்தமான பொருள்கள் என்றுகூட தெளிவாயிருக்கிறது ; ஏனென்றால், சூடானது அன்பிலேயே ஜீவிக்காமல், சித்தத்திலிருக்கும் அன்பிலிருந்தும், அதிலிருந்து சரீரத்திலும் ஜீவிக்கிறது ; ஒளியானது ஞானத்தில் ஜீவிக்காமல்,புத்தியின் சிந்தனையிலும், அதிலிருந்து பேச்சிலும் ஜீவிக்கிறது. ஆகையினால், அன்பும் ஞானமும் சூட்டினிடவும் ஒளியினிடவும் சத்தாகவும் உயிராகவு மிருக்கின்றன : சூடும் ஒளியும் தடத்த காட்சிப் பொருள்கள், அவைகள் தடத்த காட்சிப் பொருள்களா யிருப்பதால் காரண காரியசம்பந்தமுள்ளவைகளாய் கூட யிருக்கின்றன.

96. ஞானசோதி ஸ்தூல ஒளியிலிருந்து முழுமையும் பேதமான தென்பது, தனது மனதின் சிந்தனைகளை கவனித்தால், எவனும் அறிந்துகொள்ளலாம். ஏனென்றால், மனது நினைக்கும்போது, அது நினைக்கும் பொருளை வெளிச்சத்தில் பார்க்கிறது ; ஞானக்கண்ணால் பார்க்கப்பட்டவர்கள், உண்மைகளைப் பார்க்கிறார்கள். அவைகளை அவர்கள் பகலில் பார்ப்பதுபோல நடுராத்திரியிலும் பார்க்கிறார்கள். இந்த காரணத்திற்காக கூட, புத்தியைப்பற்றி பேசுங்கால் ஒளி என்பது சொல்லப்படுகிறது, மேலும், புத்தியானது பார்ப்பதாகவும் சொல்லப்படுகிறது. ஏனென்றால், மற்றவன் பேசப்பட்ட விஷயத்தைப்பற்றி, ஒருவன் சில வேலைகளில், அது அப்படிதான் என்று தான் பார்க்கிறதாகவும், அதாவது தான் தெரிந்துகொள்வதாகவும், சொல்லுகிறான். புத்தியானது ஆத்மார்த்தமானதால், ஸ்தூல வெளிச்சத்தினால் இம்மாதிரி பார்க்கமுடியாது; ஏனென்றால், ஸ்தூல ஒளி மனிதனில் இல்லை, ஆனால் சூரியனோடு நீங்கிப் போய்விடுகிறது. ஆகையினால் புத்தியானது கண்ணின் ஒளியைவிட வேறு ஒளியை

அனுபவிப்பதாகவும், இந்த ஒளியானது வேறு உற்பத்தி ஸ்தானத்தை உடைத்தா யிருப்பதாக விசதமாகிறது.

97. ஞான லோகத்து சூரியன் கடவுளே யென்று நினைக்காதபடி ஒவ்வொருவனும் எச்சரிக்கையா யிருக்கவேண்டும். கடவுளே **மனிதனுயிருக்கிறார்**. அவரிட இச்சா சத்தியிலிருந்தும் சித்சத்தியிலிருந்தும் புறப்படும் முதல் தடத்த பொருள், தேவர்கள் முன்பாக சூரியனுக தோன்றுகிற தீபோன்ற ஞானக்காட்சியா யிருக்கிறது. ஆகையினுல் ஆண்டவன் தேவர்கள் முன்பாக நேராக பிரசன்னமாகும் போது, ஒரு மனிதனைப் போல் காட்சி அருளுகிறார்; இது சில வேலைகளில் சூரியனிலும், சில வேலைகளில் அதற்கு வெளி புறத்திலும் சம்பவிக்கிறது.

98. இந்த காரண காரிய சம்பந்தத்தால்தான் வேதத்தில் ஆண்டவனை சூரியனென்று மட்டும் சொல்லப் படாமல், நெருப் பென்றும் ஒளியென்றும் கூட சொல்லப்படுகிறது ; சூரியன் என்பதால் பரம இச்சாசத்தியும் சித்சத்தியும் சேர்த்து சம்பந்தப் பட்ட வரையில் அவரே என்று அருத்தம் கொள்ளப்படுகிறது ; நெருப்பு என்பதினுல், இச்சா சத்தி சம்பந்தப்பட்ட வரையில் அவரே என்றும், ஒளி என்பதினுல், சித்சத்தி சம்பந்தப்பட்ட வரையில் அவரே என்றும் அருத்தம் கொள்ளப்படுகிறது.

இறைவன் இச்சாசத்தியும் சித்சத்தியும் ஒன்றுகிறது போல, ஆண்டவனிடமிருந்து ஒரு சூரியனுக வெளிப்படுவேதினுல், ஞான சூடும் ஒளியும் ஒன்றுகிறது.

99. இறைவனில் இச்சா சத்தியும் ஞான சத்தியும் எப்படி ஒன்றுகிறது என்பது முதல் பாகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. வெளிப்படுவதினுல், சூடும் ஒளிவும் அம்மா

திரியே ஒன்ருகின்றன. அப்படி வெளிப்படும் பொருள்கள் காரண காரிய சம்பந்தத்தால் ஒன்ருகின்றன; ஏனென்ருல் சூடு அன்பிற்கும், ஒளி ஞானத்திற்கும், அவ்விதமாய் சம்பந் தப் பட்டிருக்கின்றன. ஆண்டவன் இச்சா சத்தியானது சொரூப தெய்வமாகவும், ஞான சத்தியானது தடத்த தெய்வ மாகவும் மேல் (14-வது பிரிவுமுதல் 16-வது பிரிவு வரையில்) காண்பித்தபடி இருப்பதினுல், ஞானசூடு சொரூப தெய்வத் திலிருந்து புறப்படும் தெய்வமாகவும்,ஞான ஒளி தடத்ததெய் வத்தினின்று புறப்படும் தெய்வமாகவும் இருக்கிறதாக இத ஞல் ஏற்படுகிறது. ஆகையினுல், அந்த ஐக்கியத்தினுல், (34-வது பிரிவு முதல் 39 வரையில்) கூறியபடி இறைவன் இச்சாசத்தி, அவரிட ஞான சத்திக்கு சேர்ந்த படியினுலும், அவரிட ஞானசத்தி இச்சாசத்திக்கு சேர்ந்தபடியினுலும் ஞானசூடு, ஞான ஒலிக்கும், ஞான ஒலி, ஞான சூட்டிற்கும், சேர்ந்திருக்கின்றன. அவ்வித ஐக்கிய மிருக்கிற படியினுல், ஆண்டவனிடமிருந்து ஒரு சூரியனுகை புறப்படுவதில், சூடும் ஒளியும் ஒன்ருகின்றன வென்று ஏற்படுகிறது. ஆனுல் அவைகள் பின்வருவதில், தேவர்களாலும் மனிதர்களாலும் ஒன்ருக ஏற்றுக்கொள்ளப்படுகிற தில்லை என்று அறிந்து கொள்ளலாம்.

100. ஆண்டவனிட மிருந்து ஒரு சூரியனுகை புறப் படும் சூடும் ஒளியும், சிறந்த அருத்தத்தில், பரமார்த்த மானது என்று சொல்லப்படுகிற பொருள்களாயிருக்கின்றன, அவைகள் ஒன்ருகிற படியினுல், ஒருமையில் பரமார்த்தமான தென்று சொல்லப்படுகிறது; ஆகையால், பின்வரும் பக்கங் களில், பரமார்த்த மென்று சொல்லப்பட்ட இடங்களில் இரண்டும் சேர்த்து அறிந்துக் கொள்ளப்படுகிறது. இந்த பர

மார்த்தத்திலிருந்துதான், முழு உலகமும் பரமார்த்தமான தென்று கூறப்படுகிறது. இந்த பரமார்த்தமானதின் மூலமாய் அந்த உலகத்து எல்லா பொருள்களும் உற்பத்தியாகின்றன, அதனால் கூட அதன் நாமதராணத்தையும் அடைகின்றன. அந்த சூடும் அந்த ஒளியும் பரமார்த்தமானதென்று ஏன் சொல்லப்படுகிறது என்பதற்கு காரணம், கடவுள் ஆவி என்று சொல்லப்படுகிறார் என்பதும், ஆவியாக தோன்றும் கடவுள் அந்த புறப்படும் பொருள் என்பது மாயிருக்கிறது. கடவுள், தன்னிட சொந்த சொரூபத்திலிருந்து, யேகோவா எனப்படு கிறார்; ஆனால் அந்த வெளிப்படும் பொருள் மூலமாய், சுவர்க் கத்து தேவர்களையும், திருச்சபையின் மனிதர்களையும் அவர் உயிர்ப்பித்து தெளிவிக்கிறார்; ஆகையினால் கூட அந்த உயிர் பிக்கையும் ஞானமுண்டாகலும், யேகோவாவின் ஆவியினால் நிறைவேறுகின்றதென்று சொல்லப் படுகின்றன.

101. அந்த சூடும் ஒளியும் அதாவது,கடவுளிடமிருந்து ஒரு சூரியனாக புறப்படும் பரமாத்த போருள் ஒன்றாகின்றன வென்பதை, ஸ்தூலலோகத்து சூரியனிடமிருந்து வெளிப்படு கிற சூட்டினாலும் ஒளியினாலும் திருஷ்டாந்தப்படுத்தலாம். இந்த இரண்டும் கூட இந்த சூரிய னிடமிருந்து புறப்படு வதில் ஒன்றாகின்றன. பூமியின் பேரில் அவைகள் ஒன்றாகிறதில்லை யென்பது, இந்த சூரியனாலல்லாமல் பூமியினால் சம்பவிக்கிறது: ஏனென்றால், பின் சொல்லி யது தன்னிட சொந்த கோளத்தின் மையத்தை அல் லது இருசைச் சுற்றி, தினமும் சுழன்று அயன விருத் தத்திற்கு தக்கபடி வருஷந்தோறும் சுற்றுகிறது. ஆகையினால் சூடும் ஒளியும் ஒன்றாகாதது போல் காட்சி தருகிறது; ஏனென்றால், கோடை காலத்தின் மத்தியில் ஒளியைவிட

சூடு அதிகமாயிருக்கிறது, மாரிகாலத்தின் மத்தியில் சூட்டை விட, ஒளி அதிகமாயிருக்கிறது. பரமார்த்த உலகத்தில் விஷயம் அம்மாதிரியே; ஆனால் அங்கே பூமியானது சுழலாமலும் உருளாமலுமிருக்கிறது; ஆனால்,தேவர்கள் ஆண்டவனை நோக்கி ஏறக்குறைய தாங்களே திரும்புகிறார்கள்; அதிகம் திரும்புகிறவர்கள் சூட்டில் அதிகமாகவும், ஒளியில் குறைவாகவும் ஆண்டவனை குறைவாய் நோக்குகிறவர்கள், ஒளியில் அதிகமாயும், சூட்டில் குறைவாகவும் அடைகிறார்கள். இந்த காரணத்திற்காகதான், தேவர்களிலிருந்து வரும் விண்ணுலகங்கள் இரண்டு இராச்சியங்களாக வகையறுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் ஒன்று அதிசூக்குமமானதென்றும் மற்றது சூக்கும சம்பந்தமானதென்றும் சொல்லப்படுகிறது. பரமார்த்த சம்பந்தமான தேவர்கள் சூட்டை அதிகமாய் அடைகிறார்கள், ஞான சம்பந்தமான தேவர்கள் வெளிச்சத்தை அதிகமாய் அடைகிறார்கள். அல்லாமலும், அவர்கள் சூட்டையும் ஒளியையும் ஏற்றுக்கொள்வதற்கு, தக்கபடி அவர்கள் வசிக்கும் நிலங்களின் தோற்ற மிருக்கிறது. பூமியின் சலனத்திற்கு பதிலாக மட்டும், தேவர்கள் நிலைமைகளின் மாறுதலை நீர் பிரதிகரித்தால், அந்த காரணகாரிய சம்பந்தம் பூர்த்தியாய்விடும்'

102. தங்களுடைய சொந்த சூரியனிட சூட்டினாலும் ஒளியினாலும் உற்பத்தியாகும் எல்லா சூக்கும பொருள்களையே யோசித்தால் அவைகள் ஒன்றுகின்றன என்பதும், ஆனால் தேவர்கள் அன்புகளிலிருந்து புறப்படுவதாக எண்ணுங்கால் இந்த பொருள்கள் ஒன்றுகிறதில்லை யென்பதும், பின் வருவதில் அறிந்து கொள்ளலாம். விண்ணுலகங்களில் சூடும் ஒளியும் ஒன்றும்போது, தேவர்களுக்கு வசந்தகாலம்

போலிருக்கிறது; ஆனால் அப்படி ஒன்ருகாதபோது, கோடை காலம் போன்ருவது, மாரிகாலம் போன்ருவது இருக்கிறது; சீதளமண்டலத்தில் இருக்கும் மாரிகாலத்தைப் போலல்லாமல் உஷ்ணதேசத்து மாரிகாலத்தைப் போலிருக்கிறது. ஏனென்ருல், அன்பையும் ஞானத்தையும் சமமாய் பெறுதல் நிஜதேவர்கள் தன்மைக்கு அடையாளமாயிருக்கிறது; ஆகையினால், ஒரு வானவன் தன்னில் அன்பினிடவும் ஞானத்தி னிடவும் ஐக்கியத்திற்குத் தக்கபடி விண்ணுலகத்து வானவனுயிருக்கின்ருன். அன்பும் ஞானமும் அல்லது தருமமும் பக்தியும் ஒன்றுபட்டால், திருச்சபையைச் சேர்ந்தவனுக்கும் விஷயம் அம்மாதிரியே.

மண்ணுலகத்து சூரியன் மனிதர்களுக்கு தூரத்திலிருப்பதாக தோன்றுகிறதுபோல, விண்ணுலகத்து சூரியன் தேவர்களுக்கு தூரமாகவும் நடு உயரத்தில் இருப்பதாகவும் தோன்றுகின்றது.

103. மண்ணுலகத்திலிருந்து அதிகமான ஜனங்கள் கடவுளைப்பற்றி கொண்டுவரும் அபிப்பிராயம், அவர் சிரசுக்கு மேலே உயரத்திலிருக்கிறதாகவும், ஆண்டவனைக் குறித்து அவர் தேவர்களுக்கு மத்தியில் சுவர்க்கத்தி லிருப்பதாகவும், இருக்கிறது. வேதத்தில் கடவுள் மிகவும் அதிகம் உயர்ந்தவரென்று சொல்லப்படுவதாலும், அவர் உயரத்திலிருப்பதாக சொல்லப்படுவதாலும், கடவுள் சிரசுக்குமேல் உயர்த்தியிருப்பதாக அபிப்பிராயம் கொள்ளுகிருர்கள்; ஆகையால், அவர்கள், மிகவும் உயரமானவர் என்பதினுல் உள்ளுக்குள்ளானதைகுறிக்கிறதென்று தெரியாமல், தங்களிட கண்களையும் கரங்களையும் பிரார்த்தனை காலத்திலும் உபாசனை காலத்திலும் மேலே தூக்குகிருர்கள். ஆண்டவரைக் குறித்து, சிலர் அவரை பிர

பஞ்சத்தை ஆளும் ஒரே கடவுளென்றும் அதே கடவுளென்றும், தெரிந்துகொள்ளாமல், ஒரு வானவனை நினைக்கையில், அவர் ஒரு சாதாரண மனிதனைப் போலிருப்பதாக மட்டும் அவர்கள் நினைக்கிறபடியினால், தேவர்களுக்கு மத்தியில் சுவர்க்கத்தில் அவர் இருப்பதாக அபிப்பிராயம் கொள்ளுகிறார்கள். அவர் சுவர்க்கத்தில் தேவர்களுக்கு மத்தியிலிருந்தால், பிரபஞ்சத்தை தன் கண் பார்வையிலும், வசத்திலும் ஆளுகையிலும் வைத்திருக்க முடியாது. விண்ணுலகத்தில் உள்ளவர்கள் முன்பாக ஓர் சூரியனை அவர் பிரகாசிக்காவிட்டால், தேவர்களுக்கு ஒளி இருக்கமுடியாது; ஏனென்றால், தேவர்கள் பரமார்த்தமானவர்கள், ஆகையால் அவர்கள் சுபாவத்திற்கு ஞான ஒளி தவிர வேறு யாதொன்றும் தகாது. பூமியிலுள்ள வெளிச்சத்தைவிட மிகுதியாய் வெளிச்ச மிருக்கிறதென்பது அந்தஸ்துகள் விஷயங்களைப் பற்றி பேசுங்கால் அறிந்து கொள்ளலாம்.

104. ஆகையால், தேவர்கள் ஒளியையும் சூட்டையும் அடைகிற சூரியன் சம்பந்தப்பட்டவரையில், நடு உயரமாகிற சுமார் நார்பத்தைந்து பாகைகள் உயரத்தில், தேவர்கள் வசிக்கும் நிலங்களுக்கு மேலே அது தோன்றுகிறது; மண்ணுலகத்து சூரியன் மனிதர்களுக்கு தூரத்திலிருப்பதாக தோன்றுவதுபோல, அதுகூட தேவர்களுக்கு தூரமாக யிருப்பதாக தோன்றுகிறது. அந்த சூரியன், அந்த உச்சத்திலும், அந்த தூரத்திலும் நிலையாய் தோன்றுகிறது. மேலும் அது தன்னிட நிலையிலிருந்து நீங்குகிறதில்லை. இந்த காரணத்துக்காக தான் தேவர்களுக்கு, காலங்கள், நாட்களென்றும் வருஷங்களென்றும் பிரிக்கப்படவில்லை. அதுவுமல்லாமல், நாளானது, காலையிலிருந்து, மத்தியானத்தின் மூலமாய் மாலைக்கும் இரவுக்கும்

செல்லுகிற தென்பதுமில்லை; வருஷமானது, வசந்தகாலத்தி லிருந்து, கோடைகாலத்தின் மூலமாய் இலை யுதிர்காலத்துக் கும் மாரிகாலத்துக்கும் செல்லுகிறதுமில்லை; ஆனால் நித்திய ஒளியும் நித்திய வசந்தமும் அங்கே யிருக்கின்றன. இம் மாதிரியாக காலங்களுக்கு பதிலாக மேல் கூறியபடி நிலைமை கள் கூறியிருக்கின்றன.

105. விண்ணுலகத்து சூரியன் நடு உச்சத்திலிருப்பதாக ஏன் தோன்றுகிற தென்பதற்கு பின் கூறியவைகள் முக்கிய மான காரணங்களாயிருக்கின்றன. முதலாவது, அந்த சூரிய னிட மிருந்து புறப்படும் சூடும் ஒளியும், இவ்விதமாக அவை களின் மத்திய பாகையிலும், ஆகையினால் சமான பிரமாணத் திலும், அதனால் அவைகளின் சரியான பதப்படுத்தப்படுவதி லும் இருக்கின்றன. அதாவது அவைகள் சமப்படுத்தப்பட்டும் மிதப்படுத்தப்பட்டு மிருக்கின்றன. ஏனென்றால் அந்த சூரியன் நடு உச்சத்திற்கு மேலே தோன்றும் பட்சத்தில், ஒளியைவிட சூடு அதிகமாய் காணப்படும். அதற்கு கீழ் தோன்றும் பட் சத்தில், சூரியன் நடு உச்சத்திற்கு மேல் அல்லது கீழ் இருக் கும்போது விஷயம் பூமியில் இருப்பது போல், சூட்டைவிட அதிக வெளிச்சம் காணப்படும்; மேலேயிருக்கும்போது, சூடானது வெளிச்சத்துக்கு மேலே அதிகரிக்கிறது; கீழே இருக்கும்போது ஒளியானது சூட்டிற்கு மேலே அதிகரிக் கிறது. வெளிச்சமானது கோடை காலத்திலும் மாரிகாலத் திலும் ஒரே மாதிரியாயிருக்கிறது. ஆனால் சூடானது, சூரிய னிட உயரத்திற்குத் தக்கபடி அதிகரிக்கிறது அல்லது குறைவு படுகிறது. தேவர்கள் உலகத்துக்கு மேலே நடு உயரத்தில் ஞான லோகத்து சூரியன் ஏன் தோன்றுகிறானென்பதற்கு இரண்டாவது காரணமானது, எல்லா தேவர்களும், அமைதி

யிலுள்ள எல்லா தேவலோகங்களிலும் இம்மாதிரியாக இடைவிடாத வசந்த காலமிருக்கிறதென்பதாயிருக்கிறது. ஏனென்றால், இந்த நிலைமை பூமியின் பேரில் உள்ள வசந்த காலத்திற்கு ஒத்திருக்கிறது. மூன்றாவது காரணமானது, இம்மாதிரியாக, தேவர்கள் எப்பொழுதும் ஆண்டவனை நோக்கி தங்கள் முகங்களை திருப்பி, தங்கள் கண்களாலே அவரைக் காணக்கூடுமென்பதாயிருக்கிறது. ஏனென்றால், சரீரம், ஒவ்வொரு தரமும் திரும்பும் போது, தேவர்களுக்கு கிழக்கு திக்கு உண்டு, இவ்விதமாக அவர்களுக்கு முன்பாக ஆண்டவரிருக்கிறார்; இது அந்த உலகத்திற்கு சிறப்பானது. அந்த உலகத்து சூரியன் நடு உயரத்திற்கு மேல் அல்லது கீழ் தோன்றும் பட்சத்தில், விஷயம் இம்மாதிரி யிருக்காது. மேலும் தலைக்கு மேல் ஆகாச உச்சியில் அது தோன்றினால் இன்னும் கொஞ்சுட முடியாது.

106. மனிதர்கள் சம்பந்தப்பட்ட வரையில் ஸ்தூல லோகத்து சூரியன் விஷபத்திலிருப்பது போல, தேவலோகத்து சூரியன் தேவர்களுக்கு தூரத்தில் தோன்றாவிடில், பிறகு முழு தேவதா சம்பந்தமான சுவர்க்கமும், அதின் கீழ் உள்ள நரகமும், இவைகளுக்கு கீழ் உள்ள நமது கோளமும், ஆண்டவனிட கண்பார்வையிலும், வசத்திலும், சர்வவியாபகத்திலும் சர்வஞ்ஞத்துவத்திலும், சர்வ வல்லமையிலும், பராமரிப்பிலும் இருக்கமுடியாது.நம்ம உலகத்து சூரியனுக்கும் அம்மாதிரியே; அது இருக்கிறதாக நாம் பார்க்கிறதுபோல, பூமியிலிருந்து இது அவ்வளவு தூரத்திலிருந்தாலொழிய, எல்லாபூமிகளிலும் அதன் சூட்டினாலும் ஒளியினாலும் ஹாஜராய் சத்துவமுள்ளதாக இருக்கமுடியாது. அதனால் தேவ லோகத்து சூரியனுக்கு பிரதிநிதியாக ஊழியம் செய்யவும் முடியாது.

107. ஒன்று சூக்குமமானதும், மற்றொன்று ஸ்தூல மானதுமான இரண்டு ஆதித்தர்கள் இருப்பதாக தெரிந் திருக்கவேண்டியது அதிக அவசியம். தேவலோகத்திலுள்ள வர்களுக்கு சூக்கும சூரியனும் ஸ்தூல லோகத்தி லுள்ளவர் களுக்கு ஸ்தூல சூரியனும் ஏற்பட்டிருக்கின்றன. இது தெரியாவிட்டால், பின்னிட்டு பேசவேண்டிய விஷயங்களாகிய சிருட்டியைப்பற்றியும், மனிதனைப்பற்றியும், சரியாக தெரிந்து கொள்ள முடியாது. நிஜமாகவே, காரிய சித்திகளை அறிய லாம், ஆனால், காரியங்களின் காரணங்கள் கூட தெரிந்தா லொழிய, காரிய சித்திகள், இரவின் இருட்டில் இருந்தது போல மட்டும் தோன்றும்.

**தேவலோகத்தில் சூரியனுக்கும் தேவர்களுக்கும் மத்தியி லுள்ள தூரம், அவர்களால் இறைவன் இச்சா சத்தியையும் சித் சத்தியையும் ஏற்பதற்கு தக்கபடி ஓர் தோற்றமாயிருக்கிறது.**

108. துன்மார்க்கர்களிடத்திலும் அறிவில்லாதவர்களி டத்திலும் பரவியிருக்கும் போலி நியாயங்கள் ஸ்தா பிக்கப்பட்ட தோற்றங்களால் உண்டாகின்றன. தோற்றங்கள் தோற்றங்களா யிருக்கிறவரையில் அதை அனுசரித்து, ஒவ்வொருவரும் நினைக்கவும் பேசவும் கூடிய வெளிவேஷமான உண்மைகளாயிருக்கின்றன. ஆனால் அவைகள் ஸ்தாபிக்கப் பட்டபோது இருக்கிறபடி, நிஜமான உண்மைகளாக அவை கள் அங்கீகரிக்கப்பட்டால், அப்போது வெளிவேஷமான உண்மைகள்பொய்களாகவும் போலி நியாயங்களாகவும் ஆகின் றன. உதாரணமாக, சூரியன் பூமியை பிரதிதினமும் சுற்று கிறதென்பதும், ஒவ்வொரு வருஷத்திலும் அயன விருத்தத் தினூடு அதன் கதியை அடைகிற தென்பதும் ஒரு தோற்ற மாகயிருக்கிறது. இந்த தோற்றமானது ஸ்தாபிக்கப்படாத

வரையில் அதன்படி ஒருவன் நினைக்கவும் பேசவும் கூடிய ஒரு வெளி வேஷமான உண்மையாயிருக்கிறது; ஏனென்றால், சூரியன் உதயமாய் அஸ்தமிக்கிறானென்றும், அதனால் காலை, மத்தியானம், மாலை, இரவு இவைகளை உண்டாக்குகிறானென்றும், மேலும் சூரியன் அயனவிருத்தத்தில் அல்லது அதன் உயரத்தில் இந்த இந்த பாதையில் இப்போது இருக்கிறானென்றும் அதனால் அதுவசந்த காலத்தையும், கோடைகாலத்தையும், இலையுதிர் காலத்தையும்,மாரிகாலத்தையும் உண்டாக்குகிறானென்றும் அவன் சொல்லக்கூடும். ஆனால் எவனாவது இந்த தோற்றமானது உண்மையே என்கிற நம்பிக்கையில் ஸ்திரப்பட்டால், அப்போது போலி நியாயத்திலிருந்து உற்பத்தியான ஒரு பொய்யை நினைத்து அவன் பேசுகிறான். சகஜமானதிலும், தேசாசாரமானதிலும், சன்மார்க்க மானதிலும் மட்டு மல்லாமல், ஞான விஷயங்களிலும்கூட இருக்கும் கணக்கற்ற இதர தோற்றங்களுக்கும் சங்கதி அம்மாதிரியே இருக்கிறது.

109. இறைவனிட இச்சா ஞான சத்திகளினின்று முதல் புறப்படும் பொருளான ஞானலோகத்து சூரியனிட தூரத்திற்கும் விஷயம் அம்மாதிரியே தூரமென்பதுஇல்லை என்பது உண்மையிருக்கிறது; தூரம் என்பது தேவர்களால் இறைவன் **இச்சாசத்தியையும் ஞானசத்தியையும்** தங்களிட நிலைமைக்கு தக்கபடி ஏற்றுக்கொள்ளுவதின் பிரகாரம் ஒரு தோற்றமாயிருக்கிறது. தேவலோகத்தில் தூரங்களானது தோற்றங்களாயிருக்கின்றன என்பது மேல்சொல்லியதிலிருந்து உதாரணமான தெய்வம் இடவரைக்குட்பட்டதல்ல வென்று 7-முதல் 9-வது பிரிவுவரையிலும் சொல்லியதிலிருந்தும் தெய்வம் இடவரைக்குட்படாமல் எல்லா இடங்களையும் நிரப்புகிற

தென்று 69 முதல் 72 பிரிவுகள் வரையில் சொல்லியதிலுமி ருந்தும் அறிந்து கொள்ளலாம். இடங்களில்லாவிட்டால், தூரங்களுமில்லை, அல்லது அதே அருத்தம் கொள்ளும், இடங் கள் தோற்றங்களாயிருந்தால்,தூரங்கள்,இடத்துக்கு சம்பந்தப் பட்டிருக்கிறபடியினுல், தூரங்களும்கூட தோற்றங்களாயிருக் கின்றன.

110. இறைவன் இச்சாசத்தியும் ஞானசத்தியும், தேவர் களால் தகுதியான சூட்டிலும் ஒளியிலும் ஏற்றுக்கொள்ளப் படுகிறபடியினுல், தேவலோகத்து சூரியன் அவர்களுக்கு தூரத் திலிருப்பதாக தோன்றுகிறது. ஏனென்றுல் வானவன் சிருஷ் டிக்கப்பட்டவனுகவும் முடிவுள்ளவனுகமிருப்பதால், சூரியனி லிருப்பதுபோல், சூட்டினிடவும் ஒளியினிடவும் முதல்நிலைமை யில் ஆண்டவனை ஏற்றுக்கொள்ள அவனுல் முடியாது. அப்படி ஏற்றுக்கொண்டால் அவன் முழுமையும் அழிந்துபோவான். ஆகையினுல் தங்களிட அன்பிற்கும் ஞானத்துக்கும் ஒத்து, சூட்டினிடவும் ஒளியினிடவும் நிலைமைக்கு தக்கபடி, ஆண்ட வன் தேவர்களால் ஏற்றுக்கொள்ளப்படுகிறுன். பின்வருவது ஒரு திருஷ்டாந்தமாக உதவும். கடைசியான அல்லது இறுதி யான சுவர்க்கத்து தேவன் மூன்றுவது சுவர்க்கத்து தேவர்களி ருக்குமிடத்திற்கு ஏறமுடியாது; ஏனென்றுல், அவர்களிட சுவர்க்கத்திற்கு அவன் ஏறி அதில் பிரவேசித்தால், ஓர்வித மூர்ச்சையில் விழுவான், அவனிட உயிரானது மரணத்தோடு சண்டை செய்வதுபோல மல்லுகட்டும். அவனிட அன்பும் ஞானமும் குறைந்த நிலைமையிலிருக்கிறதென்பதும், அவன் அன்பின்சூடும்,அவன் ஞானத்தின் ஒளியும் அதே நிலைமையிலி ருக்கிறதென்பதும் காரணமாயிருக்கிறது. ஆகவே, ஒரு வான வன் அந்தசூரியனிடத்துக்கு ஏறி, அதன்நெருப்பிற்குள் சென்

ருல் சங்கதி எப்படியிருக்கும். தேவர்கள் ஆண்டவரை ஏற்றுக் கொள்வதின் பேதங்களின் பொருட்டு, சுவர்க்கங்களும் கூட ஒன்றுக்கொன்று பேதமாய் தோன்றுகின்றன. மூன்ருவது என்று சொல்லப்பட்ட எல்லாவற்றிலும் உயர்ந்த சுவர்க்கம் இரண்டாவதற்கு மேலேயும், இரண்டாவது முதலானதற்கு மேலேயும், தோன்றுகின்றன; சுவர்க்கங்கள் தூரத்திலிருக்கின் றனவென்பது அல்ல, ஆனால் அவைகள் தூரத்திலிருப்பதாக தோன்றுகின்றன; ஏனென்ருல் ஆண்டவன் மூன்ருவது சுவாக்கத்தி லிருப்பவர்களோடு இருப்பதுபோல, இறுதியான சுவர்க்கத்தி லிருப்பவர்களோடும் அவர் சமமாயிருக்கிருர். தூரக்காட்சியை உண்டாக்குவது ஆண்டவனில் அல்லாமல், பொருள்களில் அதாவது தேவர்களில் இருக்கிறது.

111. இது இப்படியிருக்கிறதென்பது, ஸ்தூலபாவனை இடவரைக்குட்பட்டபடியினுல், அதனுல் கிரகிக்கப்பட முடி யாது; ஆனுல் இடவரைக்குட்படாதபடியினுல் ஞானபாவனை யினுல் அது கிரகிக்கப்படக்கூடும். தேவர்கள் இந்த கடைசி பாவனையிலிருக்கிருர்கள். ஆனபோதிலும், அன்பும் ஞான மும், அல்லது அதே ஆகிற இச்சாசத்தியும் ஞானசத்தியுமா யிருக்கிற ஆண்டவன் இடங்கள் மூலமாய் செல்லாமல், ஏற் கைக்கு தக்கபடி ஒவ்வொருவனிலுமிருக்கிருரென்கிற வரை யில் ஸ்தூல ஒரு பாவனையால் கிரகிக்கப்படக்கூடும். ஆண்ட வன் எல்லாருடனும்இருக்கிருர் என்பதை மத்தே: XXVIII. 20விலும், தன்னிடம் அன்பு பாராட்டுகிறவர்களோடு தான் வாசம் செய்வதாகவும், யோவா: XIV. 21விலும் அவர் கற்பிக் கிருர்.

112. இது, சுவர்க்கங்களாலும் தேவர்களாலும் ஸ்தாபிக் கப்பட்டிருப்பதால், மேலான ஞானத்தைச்சேர்ந்த விஷய

மாக தோன்றும்; அப்படியிருந்தாலும், மனிதர்களோடும் விஷயம் அம்மாதிரி யிருக்கிறது. மனிதர்களிட மனதுகளின் உள்ளான பாகங்கள் அதே சூரியனால் சூடுள்ளதாக்கப்பட்டு தெளிவிக்கப்படுகின்றன. ஆண்டவனிடமிருந்து அன்பை யும் ஞானத்தையும் அடைகிற அளவு அவர்கள் அதன் சூட் டினால் சூடுள்ளவர்களாக்கப்பட்டு, அதன் ஒளியினால் தெளி வாக்கப்படுகிறார்கள். தேவர்கள் ஞானசூரியன் கீழே மட்டும் இருக்கிறார்களென்பதும், ஆனால் மனிதர்கள் அந்த சூரியன் கீழே மட்டுமல்லாமல், இந்த உலகத்து சூரியன் கீழேகூட இருக்கிறார்களென்பதும், தேவர்களுக்கும் மனிதர்களுக்கு முள்ள பேதமாயிருக்கிறது; ஏனென்றால் மனிதர்கள் சரீரங் கள் இரண்டு ஆதித்தர்கள் கீழே இருந்தாலொழிய, நிலைத் திருக்கவும் ஜீவிக்கவும் முடியாது; பரமார்த்தமாயுள்ள தேவர்களின் சரீரங்களுக்கு விஷயம் அப்படி இல்லை.

தேவர்கள் ஆண்டவனிலிருக்கிறார்கள், ஆண்டவர் அவர் களிலிருக்கிறார்; தேவர்கள் பெற்றுக்கொள்பவர்களானபடியி னால், ஆண்டவர் மாத்திரம் சுவர்க்கமா யிருக்கிறார்.

113. சுவர்க்கமானது கடவுளுடைய வாசஸ்தானமாக வும், சிங்காசனமாகவும் சொல்லப்படுகிறது, ஆகையினால், ஒரு அரசன் தன்னிட இராச்சியத்திலிருப்பதுபோல கடவுள் அங்கே இருக்கிறாரென்று நம்பப்படுகிறது. ஆனால், ஆண்ட வனாயிருக்கிற கடவுள், கடைசி இரண்டு பிரிவுகளில் காண் பித்தபடி, சுவர்க்கங்களுக்குமேலே இருக்கும் சூரியனிலும் சூட்டிலும் ஒளியிலும் அவர் இருப்பதால் சுவர்க்கங்களிலு மிருக்கிறார். ஆண்டவன் இவ்விதமாக சுவர்க்கத்திலிருந் தாலும், அவர் அங்கே தன்னில்தானே இருப்பதுபோல இருக்கிறார். ஏனென்றால், 108 முதல் 112 வரையிலுள்ள

பிரிவுகளில் மேலே சொல்லியபடி, சூரியனுக்கும் சுவர்க்கத்துக்கும் மத்தியில் உள்ள தூரம், தூரமல்லாமல், தூரத்தின் தோற்றமாக யிருக்கிறது. இந்த தூரம் தோற்றமாய்மட்டு மிருப்பதால், ஆண்டவன் சுவர்க்கத்து தேவர்களின் அன்பிலும் ஞானத்திலுமிருக்கிறபடியினுல், ஆண்டவர்தாமே, சுவர்க்கத்தி லிருப்பதாக ஏற்படுகிறது. எல்லா தேவர்களிட அன்பிலும் ஞானத்திலும் அவர் இருக்கிறபடியினுலும், தேவர்கள் சுவர்க்க மாகிறபடியினுலும், அவர் சர்வவியாபக சுவர்க்கத்திலிருக்கிருர்.

114. அன்பும் ஞானமும் தேவனுகிறபடியினுலும், இந்த இரண்டும் தேவர்களிட மிருக்கும் ஆண்டவனிட பொருள்களான படியினுலும், ஆண்டவன் சுவர்க்கத்தில் மட்டு மிருப்பது மல்லாமல், அந்த சுவர்க்கமே யாகக்கூட இருக்கிருர். ஆகவே, ஆண்டவன் சுவர்க்கமென்று ஏற்படு கிறது. தேவர்களுக்கு சொந்தமானவைகள், தீமையாயிருக் கிற, மனிதனுக்கு சொந்தமானவைகள்போல் முழுமையும் இருப்பதால், தேவர்கள், தங்களுக்கு சொந்தமானவைகளி லிருந்து தேவர்களல்ல. எல்லா தேவர்களும் மனிதர்களா யிருந்திருக்கிறபடியினுலும், அவர்களுக்கு சொந்தமானவை கள் பிறப்பு முதல் அவர்களில் தங்குவதினுலும், தேவர்களுக்கு சொந்தமானவைகள் அம்மாதிரி யிருக்கிறது. அது நீக்கப் பட்டு மாத்திரமிருக்கிறது; அது நீக்கப்படுவதற்குதக்கபடி, தேவர்கள் அன்பையும் ஞானத்தையும் அதாவது ஆண்டவனை தங்களுக்குள்ளே ஏற்றுக்கொள்ளுகிருர்கள். எவனுவது ஒரு வன் தன்னிட புத்தியை கொஞ்சம் உயர்த்தினுல், ஆண்டவர், அன்பும் ஞானமுமாயிருக்கிற அவருக்கு சொந்தமானவை களில் தேவர்களோடு இருக்கவேண்டுமென்றும், தீமையாயிருக் கிற, தேவர்களுக்கு சொந்தமானவைகளில் இருக்கவே முடியா தென்றும், அவன் அறிந்துகொள்வான். ஆகையினுல்தான்

நிமையானது எவ்வளவு நீக்கப்படுகிறதோ, அவ்வளவு ஆண்டவன் அவர்களிலிருக்கிறார், அவர்களும் அவ்வளவு தேவர்களா யிருக்கிறார்கள். சுவர்க்கத்தின் வானவர் தன்மையே இறைவன் இச்சாசத்தியும் ஞானசத்தியுமா யிருக்கிறது. இந்த தெய்வம் தேவர்களிடத்தில் இருக்கும்போது, அது தேவதா சம்பந்த மானதென்று சொல்லப்படுகிறது. ஆகவே தேவர்கள், தங்க ளிடமிருந்தல்லாமல் ஆண்டவனிட மிருந்து தேவர்களா யிருக்கிறார்கள் என்று மறுபடியும் வெளிபடுகிறது ; ஆத லால், இம்மாதிரியாக கூட சுவர்க்கம் சுவர்க்கமாயிருக்கிறது.

115. ஆனால் ஆண்டவன் ஓர் வானவனிலும், ஓர் வானவன் ஆண்டவனிலும் எப்படியிருக்கிறதென்பது, அந்த சேர்க்கையின் சுபாவம் தெரிந்தாலொழிய, கிரகிக்க முடியாது. அந்த சேர்க்கையானது ஆண்டவன் தேவனோ டும், தேவன் ஆண்டவனோடும் சேர்வதாயிருக்கிறது ; ஆகையி னால் அந்த சேர்க்கை பரஸ்பரமான தாயிருக்கிறது. தேவன் பக்கத்தில் இந்த சேர்க்கை பின் வருமாறு இருக்கிறது. மனித னோடு விஷயமிருப்பதுபோல தன்னிடமிருந்தே அன்பிலும் ஞானத்திலும் தான் இருப்பதாக வானவன் காண்கிறான், அதனால், அன்பும் ஞானமும் தன்னுடையதென்றும் அல் லது தனக்கு சேர்ந்ததென்றும் நினைக்கிறான். அவன் அப் படி கண்டால் ஒழிய, எந்த சேர்க்கையுமிருக்காது; இம்மாதிரி யாக ஆண்டவன் அவனிலும் அவன் ஆண்டவனிலும் இருக் காது. ஆண்டவன் அன்புடனும் ஞானத்துடனும் தன்னில் இருக்கப் பெற்றவன், இவைகளை தன்னிட சொந்தமானவை களாக தெரிந்துகொண்டு, உணர்ந்தாலொழிய, ஆண்டவன் எந்த தேவனிடமாவது அல்லது எந்தமனிதனிடமாவது இருக் கவும் முடியாது. இந்த வழிவகையால் ஆண்டவன் ஏற்றுக்

கொள்ளப்படுவது மட்டுமல்லாமல், ஏற்றுக்கொள்ளப்பட்ட போது பத்திரமாய் நிருத்தி வைக்கப்பட்டு, திரும்பவும்கூட நேசிக்கப்படுகிருர் ; இதனுல் ஒருவானவன் ஞானியாகிருன், அப்படியே ஞானியாக இருக்கிருன். ஒருவன் தான் நேசித்து, அறிந்து உட்கொள்ளுவது தன்னிட சொந்த மானதென்று உணர்ந்து கண்டால் ஒழிய, யார் ஆண்டவனை யும் அயலானையும் நேசிக்க விரும்புவார், யார் ஞானியாயிருக்க விரும்புவார்? வேறுவிதத்தில் யார் அதை நிருத்தி வைக்கக் கூடும்? இது அப்படியில்லாவிட்டால், உள்ளே ஓடும் அன்பிற் கும் ஞானத்திற்கும் தங்குமிடமில்லாமல்போகும் ; ஒரு தேவன் தேவனுகாதபடிக்கும், மனிதன் மனிதனுகாத படிக்கும், நிஜமாகவே அவன் உயிரில்லா ஒரு பொருளாக மாத்திரம் இருக்க, அவைகள் ஒரு பிரயோசனமுமில்லாமல் போய்விடும். இவைகளினுல், பரஸ்பரம் சேர்க்கைக்கு அவ சியமானதென்று விசிதமாகிறது.

116. மேல் கூறியபடி, ஒரு வானவன் தன் சொந்தமான தெதிலிருந்தும் வானவனுகாமல், ஆண்டவனிடமிருந்து வரும் பொருள்களினுல் வானவனுகிறபடியினுல், தனக்கு இன்னும் சொந்தமல்லாததை எப்படி சொந்தமாகக் கண்டு உணர்ந்து, இம்மாதிரியாகக் ஏற்றுக்கொண்டு நிறுத்தி வைக்கிருனென் பதை இப்பொழுது விளக்கவேண்டும். விஷயம் பின்வரு மாறு இருக்கிறது. ஒவ்வொரு வானவனுக்கும் சுதந்திரமும் பகுத்தறி உடைமையு மிருக்கின்றன : ஆண்டவனிடமிருந்து அன்பையும் ஞானத்தையும் அவன் பெற்றுக்கொள்ள சக்தி யுள்ளவனுயிருக்க அவனுக்கு இந்த இரண்டு மிருக்கின்றன. என்றுலும், சுதந்தரமும் பகுத்தறிதலும், அவனுடையதல்லா மல், அவனேடு யிருக்கும் ஆண்டவனுடையது. அவைகள்

அவன் உயிருக்கு விதிக்கப்பட்டதென்று சொல்லும்படியாக, அவ்வளவு நெருங்கி, இந்த இரண்டும் அவன் உயிரோடு நெருக்கமாய் சேர்க்கப்பட்டிருக்கிறபடியினால், அவைகள் அவனிட சொந்தமான சொத்துகளைப்போல் தோன்றுகின்றன. அவைகளிலிருந்து, அவன் நினைக்கவும், இச்சிக்கவும், பேசவும், செயல்படவும் சக்தியுள்ளவனாயிருக்கிறான் ; அவைகளிலிருந்து அவன் நினைத்து, இச்சித்து, பேசி, செய்கிறவைகள், தன்னிடமிருந்தே வந்ததுபோல் தோன்றுகின்றன. இது, ஐக்கியம் உண்டாகும் பரஸ்பரத்தை உண்டு பண்ணுகிறது. ஆயினும், ஒரு வானவன் அன்பும் ஞானமும் தன்னிட மிருப்பதாக நம்பி, இம்மாதிரியாக அவைகளை தனக்கே சொந்தமென்று எவ்வளவு தூரம் பாத்தியதை கொண்டாடுகிறானோ, அவ்வளவு தூரம் தேவதா சம்பந்தமானது அவனிடத்தில் இல்லாமலிருக்கிறது. அதனால் அவ்வளவு தூரம் ஆண்டவனோடு ஐக்கியப்படுகிறதில்லை. ஏனென்றால், அவன் உண்மையில் இல்லை ; உண்மையானது சுவர்க்கத்து ஒளியோடு ஐக்கியப்படுகிறபடியினால், அவ்வளவு தூரம் அவன் சுவர்க்கத்திலிருக்க முடியாது. அதைக்கொண்டு, அவன் ஆண்டவனால் உயிரோடிருப்பதாகவும், அதனால் தன்னிடம் தெய்வீக சத்து இருப்பதாகவும், நம்புகிறான். சுதந்தரமும், பகுத்தறிதலுமாகிய இந்த இரண்டிலும், தேவதா சம்பந்தமானதும் மானிட சம்பந்தமானதுமாகிய உயிர் அடங்கியிருக்கிறது. இவைகளினால், ஒரு வானவனுக்கு, ஆண்டவனோடு ஐக்கியப்படும் பொருட்டு பரஸ்பரம் உண்டென்று தோன்றும்; என்றாலும் பரஸ்பரமானது, ஒரு தொழிலாக யோசிக்குங்கால் அவனுடையதல்ல, ஆண்டவனுடையது. அதனால் தான் அதை தனக்கே சேர்ந்ததாக கருதுவதால், ஆண்டவனுடையதை

அவன் தனதாக கண்டு உணருகிற அந்த பரஸ்பரத்தை அவன் கெடுத்தால், வானவர் தன்மையிலிருந்து அவன் நீங்குகிறான். ஐக்கியம் பரஸ்பரமானதென்று ஆண்டவர் கற்பிக்கிறார். (யோவா. XIV. 20—24, XV. 4, 5, 6); ஆண்டவன் மனிதனோடும், மனிதன் ஆண்டவனோடும், ஏற்படும் ஐக்கியம் ஆண்டவனுடைய பொருள்களின்பேரில் சார்ந்திருக்கிறது. இவைகளை அவரிட வசனங்களென்று சொல்லப்படுகிறது. (யோவா. XV. 7).

117. ஆதாம் கடவுளை நேசிக்கவும், தன்னிடமிருந்தே ஞானியாயிருக்கவும் சக்தியுள்ளவனாக இருக்கும்படி, அவ்வித இச்சா சுதந்திரத்தில் அவன் இருந்ததாகவும், இந்த இச்சா சுதந்தரம் அவனிட சந்ததியார் இழந்துவிட்டதாகவும் நினைக்கும் சிலர் இருக்கிறார்கள். ஆனால் இது ஒரு பிழையாயிருக்கிறது. ஏனென்றால், மனிதன் உயிரல்ல, உயிரை அடைபவன் (மேலே 4-முதல் 6-வரையிலும், 54-முதல் 60-வரையிலுமுள்ள பிரிவுகளில் பார்க்கவும்). உயிரை ஏற்றுக்கொள்பவனாக யிருப்பவன், தனக்கு சொந்தமான எதிலிருந்தும், நோக்கியும் புத்தியுள்ளவனாகவு மிருக்கமுடியாது. ஆகையினால், ஆதாம் கூட, தன் சொந்த நிமித்தமாக ஞானமுள்ளவனாகவும் நேசிக்கவும் இச்சித்தபோது, ஞானத்திலிருந்தும் அன்பிலிருந்தும் நீங்கி, ஏதேன் தோட்டத்திலிருந்து தள்ளப்பட்டான்.

118. மேலே 77-முதல் 82-வது பிரிவுகள் வரையில் காண்பிக்கப்பட்டபடி தெய்வமானது மிகப்பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும் ஒரேமாதிரி யிருக்கிறபடியினால், ஒரு வானவனைக் குறித்து இப்பொழுது சொல்லப்பட்டதே, வானவர்களால் நிறைந்த சுவர்க்கத்தைப்பற்றியும் சொல்லப்படவேண்டும். வானவனைப்பற்றியும் சுவர்க்கத்தைப்பற்றியும் சொல்லிய

தையே, மனிதனைப்பற்றியும், திருச்சபையைப்பற்றியும் சொல்லக்கூடும். ஏனென்றால், சுவர்க்கத்துதேவனும், திருச்சபையின் மனிதனும்,சேர்க்கையினால் ஒன்றுபடுகிறார்கள்; மேலும், திருச்சபையைச் சேர்ந்த மனிதன், அவன் மனதுக்குச் சேர்ந்த உள்ளானவைகள் சம்பந்தப்பட்ட வரையில், ஒரு வானவனாயிருக்கிறான் ; ஆனால் திருச்சபை சேர்ந்த மனிதன் என்பதால் திருச்சபை தன்னுள் இருக்கப்பட்டவன் என்று அருத்தம் கொள்ளப்படுகிறது.

**விண்ணுலகத்தில், ஆண்டவன் சூரியனாக தோன்றுகிற இடம் கிழக்கு, அதிலிருந்து மிகுந்திருக்கும் திக்குகள் நிச்சயிக்கப்படுகின்றன.**

119. விண்ணுலகத்து சூரியனையும் அதன் தத்துவத்தை பற்றியும், அதன் சூட்டையும் ஒளியைப்பற்றியும், அதனால் ஆண்டவன் சந்நிதியைப்பற்றியும் பேசி இருக்கிறோம் ; இப்பொழுது விண்ணுலகத்து திக்குகளைப்பற்றியும்கூட பேசுவோம். கடவுள், அன்பு, ஞானம், என்பவைகள் விஷயங்களாயிருந்தபடியினால், அந்த சூரியனைப்பற்றியும் அந்த உலகத்தைப்பற்றியும் நாம் பேசியிருக்கிறோம்; அவைகளிட மூலத்திலிருந்தே தவிர வேறு விதமாய் இந்த விஷயங்களைக் குறித்து பேசுதல், அவைகளை காரணத்திலிருந்தல்லாமல், காரியங்களிலிருந்து பேசுவதாகும். அல்லாமலும், காரியங்கள், காரியங்களைத்தவிர வேறொன்றையும் கற்பிக்காது. அவைகள் மாத்திரம் ஆராய்ச்சி செய்யப்பட்டால், எந்த காரணத்தையும் வெளியாக்குகிறதில்லை ; ஆனால் காரணங்கள் காரியங்களை வெளியாக்குகின்றன; காரணத்திலிருந்து காரியங்களைதெரிந்து கொள்ளல், புத்தியுள்ளவனா யிருத்தலாகும் ; ஆனால், காரியத்திலிருந்து காரணங்களை தேடுதல், புத்தியின்மையா யிருக்

கிறது. ஏனென்றால், ஆராய்ச்சி செய்வோன் காரணங்களென்று சொல்லுகிற போலி நியாயங்கள் அப்பொழுது தோன்றி அவ்விதமாக ஞானமானது மதிகேடாகிறது. காரணங்கள் முந்தினவைகள், காரியங்கள் பிந்தினவைகள்; பிந்தின பொருள்களிலிருந்து முந்தின பொருள்களை பார்க்க முடியாது, ஆனால் முந்தினவைகளிலிருந்து பிந்தினவைகளை அறிந்துகொள்ளலாம். இது ஒழுங்கு. எல்லாகாரணங்களும் அங்கே யிருக்கிறபடியினால், விண்ணுலகத்தைப்பற்றி நாம் முதலில் பேசுவதற்கும், தோன்றும் எல்லா பொருள்களும் காரியங்களா யிருக்கிற ஸ்தூல லோகத்தைப்பற்றி பின்னிட்டு பேசுவதற்கும் இதுதான் காரணம்.

120. விண்ணுலகத்து திசைகளைக் குறித்து இப்போது சொல்லப்படவேண்டும். ஸ்தூல லோகத்திலிருப்பதுபோல அங்கே திசைகளிருக்கின்றன; ஆனால் விண்ணுலகத்து திசைகள், அந்த உலகத்தைப்போலவே சூக்குமமானவைகள்; அப்படியிருக்கையில், ஸ்தூலலோகத்து திக்குகள் அந்த உலகத்தை போலவே ஸ்தூலமாயிருக்கின்றன; ஆகையினால், அவைகளுக்குள் ஒன்றும் பொதுவானது இல்லாதபடி அவைகள் அவ்வளவு பேதுப்படுகின்றன. கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, என்று சொல்லப்பட்ட நான்கு திக்குகள் இரண்டு உலகத்திலுமிருக்கின்றன. ஸ்தூல லோகத்திலுள்ள இந்த நான்கு திக்குகளும், உச்சத்திலிருக்கும் சூரியனால் நிச்சயிக்கப்பட்டு, நிலையாயிருக்கின்றன; அதற்கு எதிரில் வடக்கும், ஒரு பக்கத்தில் கிழக்கும், மற்றபக்கத்தில் மேற்கும் இருக்கின்றன; இந்த திக்குகள், ஒவ்வொரு பிரதான இடத்தின் சூரியனிட உச்சத்தால்நிர்மானிக்கப்படுகின்றன; ஏனென்றால், உச்சத்திலிருக்கும் சூரியனிட நிலைமை எவ்விடத்திலும், ஒரே மாதிரியாகவும், ஆகை

யினால் ஸ்திரமாகவும் எப்போதும் இருக்கிறது. விண்ணுலகத்தில் அது வேறுவித மாயிருக்கிறது; அது இருக்கப்பட்ட இடத்தில் இடைவிடாது தோன்றுகிறதும், சூரியனிருக்குமிடத்தில் கிழக்கு திசை உள்ளதுமான அந்த உலகத்து சூரியனால் திக்குகள் அங்கே தீர்மானிக்கப்படுகின்றன. ஆகையினால் அந்த உலகத்தில் திக்குகளை தீர்மானித்தல், ஸ்தூல லோகத்தில்போல, தெற்குலிருந்து இல்லாமல், கிழக்கிலிருந்து செய்யப்படுகிறது; அதற்கு எதிரில் மேற்கும், ஒரு பக்கத்தில் தெற்கும், மற்ற பக்கத்தில் வடக்குமிருக்கின்றன. ஆனால், இந்த திக்குகள் அங்கிருக்கும் சூரியனிடமிருந்தல்லாமல், தேவர்களாகவும் அசரீர ஆன்மாக்களாகவும் மிருக்கிற அந்த உலகத்து குடிகளிலிருந்து ஏற்படுகின்றனவென்று பின்வருவதில் அறிப்படும்.

121. ஆண்டவன் சூரியனாயிருக்கிற அதன் உற்பத்தி ஸ்தானத்தினால்இந்த திக்குகள் சூக்குமமாயிருப்பதினால்,இந்த திக்குகளுக்கு தக்கபடி அவைகள் எல்லாமிருக்கிற தேவர்களிடவும் சூக்கும சரீர ஆன்மாக்களிடவும் இருப்பிடங்கள் கூட சூக்குமமாயிருக்கின்றன; தேவர்களும் ஜீவான்மாக்களும், ஆண்டவனிடமிருந்து அன்பையும் ஞானத்தையும் ஏற்றுக்கொள்ளுகிறதற்குதக்கபடி தங்கள் இருப்பிடங்களை உடைத்தாயிருக்கிறபடியினால், அவைகளும் சூக்குமமாயிருக்கின்றன. அன்பின் உயர்ந்த அளவில் இருப்பவர்கள் கிழக்கிலும், அன்பின் தாழ்ந்த அளவிலிருக்கிறவர்கள் மேற்கிலுமிருக்கிறார்கள்; ஞானத்தில் உயர்ந்த அளவில் இருக்கிறவர்கள் தெற்கிலும், ஞானத்தின் தாழ்ந்த அளவிலிருக்கிறவர்கள் வடக்கிலும் வசிக்கிறார்கள். இதனால்தான் வேதத்தில், கிழக்கு என்பதினால், மேலான கருத்தில், ஆண்டவனென்றும், ஒப்பீ

டாய் அவரிடத்து அன்பென்றும், மேற்கு என்பதினால் அவரி டத்து அன்பு குறைதல் என்றும், தெற்கு என்பதினால், ஒளி யிலுள்ள ஞானமென்றும் வடக்கு என்பதினால் இருட்டில் உள்ள ஞானமென்றும் அல்லது பேசப்பட்டவர்களின் நிலை மைக்கு ஒப்பிடாய் அவ்வித பொருள்கள் என்றும் அருத்தம் கொள்ளப்படுகின்றன.

122. விண்ணுலகத்தில் எல்லா திக்குகளும், கிழக்கி லிருந்து தீர்மானிக்கப்படுவதினாலும், மேலான கருத்தில் கிழக்கு என்பதினால் ஆண்டவனென்றும், பரம இச்சாசத்தி என்றும்கூட அருத்தம் கொள்ளப்படுகிறபடியினாலும், ஆண்டவரும் அவருக்கு காட்டும் அன்பும், எல்லா பொருள் களும் உண்டாகிற உற்பத்தி ஸ்தானங்களா யிருக்கின்றன வென்றும், எவனாகிலும் அந்த அன்பில் எவ்வளவு இல்லாம லிருக்கிறானோ, அவ்வளவு தூரம் ஆண்டவனுக்கு தூரத்தி லிருந்து அன்பை ஏற்றுக்கொள்வதற்கு தக்கபடி தூரத்தில் மேற்கிலாவது தெற்கிலாவது, வடக்கிலாவது இருக்கிறானென் றும் விசதமாகிறது.

123. ஆண்டவன் சூரியனாக கிழக்கில் இடைவிடாம லிருப்பதால், ஆராதனையின் எல்லா பொருள்களும் ஞானப் பொருள்களை சாயல் காட்டின பூர்வீகத்தார், பிரார்த்தனையி லிருக்கும்போது, கிழக்கு திக்கில் தங்கள் முகங்களை திருப்பி னார்கள்; எல்லா ஆராதனையிலும் அம்மாதிரி அவர்கள் செய்ய தங்கள் கோவில்களை அந்த திக்கிலேயே திருப்பினார்கள். அதனால்தான் தற்காலத்தில் கோவில்கள் அம்மாதிரியேகூட கட்டப்படுகின்றன.

தேவலோகத்தில் திக்குகள் சூரியனாகிற ஆண்டவனிட மிருந்தல்லாமல், ஏற்கைக்கு தக்கபடி தேவர்களிடமிருந்து ஏற்படுகின்றன.

124. வானோர் தங்களுக்குள்ளே ஒருவருக்கொருவர் சம்பந்தப்பட்ட வரையில், சிலர் கிழக்கு திக்கிலும், சிலர் மேற்கு திக்கிலும், சிலர் தெற்கிலும், சிலர் வடக்கிலும் பிரத்தியேகமாய் வசிக்கிறார்களென்றும், கிழக்கு திசையிலுள்ளவர்கள் அன்பின் உயர்ந்த அந்தஸ்திலிருக்கிறதாகவும், மேற்கிலிருக்கிறவர்கள் அன்பின் தாழ்ந்த அந்தஸ்தில் இருப்பதாகவும், தெற்கிலிருக்கிறவர்கள் ஞான ஒளியிலிருக்கிறதாகவும், வடக்கிலிருப்பவர்கள் ஞானத்தின் இருட்டில் இருக்கிறதாகவும் சொல்லப்பட்டது. அவர்கள் இருப்பிடங்களின் இந்த வேறுபாடு தேவர்களிடமிருந்து வந்தாலும், அது சூரியனாகிற ஆண்டவனிடமிருந்து வந்ததாக தோன்றுகிறது. ஆண்டவர், எவ்விடத்திலும் ஒரே மாதிரி யிருக்கிறபடியினால், அன்பினிடவும் ஞானத்தினிடவும் அதிகமானதும் குறைந்ததுமான அந்தஸ்தில் இருக்கிறதில்லை, அதாவது அவர் மற்றவனைவிட ஒருவனிடத்தில், சூட்டினிடவும் ஒளியினிடவும் அதிகமான அல்லது குறைந்த அளவில் இருக்கிறதில்லை. ஆனால் அவர், ஒருவன் ஏற்றுக்கொள்வதுபோல, மற்ற ஒருவனால் அதே அளவில் ஏற்றுக்கொள்ளப்படுகிறதில்லை. ஒருவருக்கொருவர் அதிகம் அல்லது குறைந்த தூரத்திலிருப்பதாகவும், இதுவும் திக்குகளுக்குத் தக்கபடி பல விதமாகவும் தோன்றுகிறதிற்கும், இது தான் காரணம். விண்ணுலகத்தில் திக்குகள் அன்பையும் ஞானத்தையும் ஆகையினால் சூரியனாக ஆண்டவனிடமிருந்து சூட்டையும் ஒளியையும் ஏற்றுக்கொள்வதின் பேதங்களை தவிர வேறொன்றுமில்லை என்று இதிலிருந்து ஏற்படுகிறது; இதுதான் விஷயமென்பது, மேல் காட்டியபடி தேவலோகத்தில் தூரங்கள் தோற்றங்களென்கிற உண்மையிலிருந்து (108 முதல் 112-வது வரையில்) விசதமாகிறது.

125. திக்குகளானவைகள் வானோரால் அன்பையும் ஞானத்தையும் ஏற்றுக்கொள்வதின் பேதங்களாயிருக்கிறபடியினால், அந்த தோற்றம் உண்டாகும் பேதத்தைப்பற்றி இப்பொழுது பேசுவோம். ஆண்டவன் தேவனிலும், தேவன் ஆண்டவனிலும் முன் பிரிவில் காண்பித்தபடி இருக்கிறார்கள். ஆனால் சூரியனை ஆண்டவன் அவனுக்கு வெளியே இருப்பதாக தோன்றுகிறபடியினால், ஒரு தர்ப்பணத்தில் ஒரு பிரதிமை தோன்றுவதுபோல், கிட்டதட்ட அதே மாதிரியாய், ஆண்டவன் அந்த சூரியனிலிருந்து அவனைப் பார்க்கிறதாகவும், அவன் ஆண்டவனை அந்த சூரியனில் பார்ப்பதாகவும்கூட தோன்றுகிறது. ஆகையினால் அந்த தோற்றத்துக்கு தக்கபடி நாம் பேச வேண்டுமானால், ஆண்டவன் ஒவ்வொருவரையும் முகம் முகமாய் பார்க்கிறார் என்பதும், ஆனால் தேவர்கள் தங்கள் முறையில் ஆண்டவனை இம்மாதிரி பார்க்கிறதில்லை யென்பதும் ஏற்படுகிறது. ஆண்டவனிடமிருந்து ஆண்டவன் பேரில் அன்பு பாராட்டுகிறவர்கள் அவரை நேராய் பார்க்கிறார்கள், ஆகையினால் அவர்கள் கிழக்கிலும் மேற்கிலுமிருக்கிறார்கள்; ஆனால் ஞானத்தில் அதிகமாய் நிற்பவர்கள் ஆண்டவனை வலது பக்கம் கோணலாய் பார்க்கிறார்கள்; ஞானத்தில் குறைந்தவர்கள் இடது பக்கம் கோணலாய் பார்க்கிறார்கள்; ஆகையினால் முன் சொன்னவர்கள் தெற்கிலும் பின் சொன்னவர்கள் வடக்கிலுமிருக்கிறார்கள். பின் சொன்ன இருவகையாரும் கோணலான பார்வையில் ஏன் இருக்கிறார்களென்பதற்கு காரணம், முன்னிட்டும் சொல்லியபடிகூட, அன்பும் ஞானமும் ஆண்டவனிடமிருந்து ஒன்றாக புறப்பட்டும், வானோர்களால் ஒன்றாக ஏற்றுக்கொள்ளப்படுகிறதில்லை என்பதும், அபரிமிதமான ஞானமானது அன்பிலிருந்து தன்னில் உயிரில்லாத

படியினுல், அன்பிற்கு மீறி திரளாயிருக்கிற ஞானம், உண்மையாகவே, ஞானத்தைப்போல் தோன்றியும் அப்படி இல்லாமலிருக்கிறதென்பதுமாயிருக்கிறது. இந்த ஆலோசனைகளால், தேவலோகத்தில் திக்குகளுக்கு தக்கபடி தேவர்களின் வாசஸ்தானங்கள் இருக்கிறதாக தோன்றுகிற ஏற்றுக்கொள்ளுதலின் பேதம் எதிரிலிருந்து உண்டாகிறதென்பது, வெளியாகிறது.

126. அன்பும் ஞானமும் ஏற்றுக்கொள்வதில் உண்டாகும் பேதம், விண்ணுலகத்தில் திக்குகளாகிறதென்பது, ஓர் வானவன் தன்னில் அன்பு ஏறுதலுக்கும் குறைதலுக்கும் தக்கபடி தன்னிட திசையை மாற்றுகிறுன் என்பதிலிருந்து விசதமாகிறது ; திக்கானது சூரியனுக ஆண்டவனிடமிருந்தல்லாமல், ஆனுல் வானவனிட ஏற்கையின்பேரில் சார்ந்திருக்கிறதென்று, இதிலிருந்து விசதமாகிறது. மனிதனிட ஆன்மாவுக்கும் விஷயம் அம்மாதிரியே யிருக்கிறது. மேலே சொல்லியபடி விண்ணுலகத்து திக்குகளுக்கும் ஸ்தூல உலகத்து திக்குகளுக்கும் பொதுவாக ஒன்றுமில்லாதபடியினுல், அவன் ஆன்மா சம்பந்தப்பட்டவரையில், ஸ்தூல லோகத்தில் எந்த திக்கில் அவன் இருந்தபோதிலும் விண்ணுலகத்தில் ஏதோ ஒரு திக்கிலிருக்கிறுன். மனிதனுனவன் தன் சரீரம் சம்பந்தப்பட்ட வரையில் பின் சொன்னதிலும், ஆனுல் தன் சூன்மா சம்பந்தப்பட்ட வரையில் முன் சொன்னதிலுமிருக்கிறுன்.

127. அன்பும் ஞானமும் வானவனுடனும் மனிதனுடனும் ஒன்றுபடும் பொருட்டு, அவனிட சரீரத்தில் எல்லா பொருள்களிலும் ஜதைகளிருக்கின்றன. கண்களும், காதுகளும், நாசித்துவாரங்களும் ஜதைகளாயிருக்கின்றன ;

ளைகளும், இடுப்புகளும்; பாதங்களும் ஜதைகளாயிருக்கின்றன ; மூளையானது இரண்டு அர்த்த கோளங்களாகவும், இருதயம் இரண்டு அறைகளாகவும், சுவாசாசயங்கள் இரண்டு அம்சங்களாகவும், இம்மாதிரியே மற்ற அங்கங்களும் பிரிக்கப்படுகின்றன. இவ்விதமாக, தேவனிலும், மனிதனிலும் வலது என்றும் இடது என்று மிருக்கிறது; அவர்களிட வலது பாகங்கள் எல்லாம் ஞானம் வரப்பட்ட அன்புக்கு சம்பந்தப்பட்டிருக்கின்றன. இடது பாகங்கள் எல்லாம் அன்பிலிருந்துவரும் ஞானத்துக்கு சம்பந்தப்பட்டிருக்கின்றன; அல்லது அதே பொருளாயிருக்கிற, எல்லா வலது பாகங்களும் உண்மை வரப்பட்ட நன்மைக்கும், எல்லா இடது பாகங்களும் நன்மையிலிருந்து வரப்பட்ட உண்மைக்கும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. அன்பும் ஞானமும், அல்லது நன்மையும் உண்மையும், ஒன்றாக செயல்படவும், அப்படி ஒன்றுபட்டு கடவுள் பக்கம் திரும்பவும், தேவனும் மனிதனும் இந்த ஜதைகளை உடைத்தா யிருக்கிறார்கள். ஆனால் இதைப் பற்றி பின்வருவதில் அதிகம் பேசலாம்.

128. ஆண்டவன் எல்லாருக்கும் வழிவகை ஏற்படுத்தி, எல்லாரும் ஞானிகளாகவும் இரக்ஷிக்கப்படவும் அருள் செய்திருக்கும்போது, அவர் சுவர்க்கத்தை அகாரணமாய், பங்கிட்டு, ஒருவன் மற்றவனைவிட அதிக ஞானமும் அன்பும் உடையவனயிருக்க ஏற்பாடு செய்கிறாரென்று நினைக்கப்பட்டவர்கள் என்ன போலி நியாயத்திலும், அதனால் பொய்யிலும் இருக்கிறார்களென்று இவைகளினால் அறிந்து கொள்ளலாம். ஒவ்வொருவனும் தான் இந்த வழிவகைகளை ஏற்றுக்கொண்டு அதன்படி வாழ்தலுக்கு தக்கபடி ஞானமுள்ளவனாய், இரக்ஷிக்கப்படுகிறான்; ஏனென்றால் ஆண்டவன் ஒருவனிடத்தில்

போல மற்றவனிடத்திலும் ஒரேமாதிரி யிருக்கிறார்; ஆனால் வானோர்களாகவும், மனிதர்களாகவு மிருக்கப்பட்ட பெற்றுக் கொள்பவர்கள் மாத்திரம் பேதமான ஏற்கையினாலும் உயிரி னாலும் பேதமாக யிருக்கிறார்கள். திக்குகளைப் பற்றியும் அவைகளின்படி வானோர்களின் இருப்பிடங்களைப் பற்றியும், இப்போது சொல்லப்பட்டவைகளிலிருந்து இது அப்படி யிருக்கிறதென்று விசதமாகும். அதாவது ஒவ்வொரு பேத மும் ஆண்டவனிடமிருந் தல்லாமல், பெற்றுக்கொள்பவர்க ளிடமிருந்து வருகின்றனவென்று தெரியும்.

வானோர்கள் தங்களுடைய முகங்களை சூரியனாகிய ஆண்டவனிடம் இடைவிடாமல் திருப்பி, இம்மாதிரியாக தெற்கு திசையை வலது பக்கத்திலும், வடக்கை இடது பக் கத்திலும், மேற்கை பின்புறத்திலும், உடைத்தாயிருக்கிறார்கள்.

129. தேவர்களைப்பற்றியும் சூரியனாகிய ஆண்டவனி டம் திரும்புதலைப்பற்றியும் இங்கே சொன்னவைகளெல்லாம் மனிதனுக்கு அவனிட ஆன்மா விஷயத்திலும்கூட ஆரோபிக் கலாம்; ஏனென்றால், மனிதன் தனது மனது விஷயத்தில் ஒரு ஆன்மாவாயிருக்கிறான், அவன் அன்பிலும் ஞானத்திலு மிருந்தால், அவன் ஒரு தேவனாயிருக்கிறான். ஆகையினால் கூட, ஸ்தூலலோகத்திலிருந்து தான் அடைந்த தன்னிட புறம்பானவைகளை இறந்த பிறகு அவன் போட்டுவிடும்போது, அவன் ஒரு ஆவியாக அல்லது வானோனாகிறான். வானோர் கள் இடைவிடாமல் சூரிய உதயத்தை இம்மாதிரியா ஆண்டவ ரை நோக்குகிறபடியால், ஆண்டவனிடமிருந்து அன்பிலும் ஞானத்திலும் இருக்கப்பட்ட மனிதனைப்பற்றியும் கூட, அவன் கடவுளை பார்க்கிறானென்றும், அவரை தியானிக்கிறா னென்றும், அவன் கடவுளை தன் கண்கள் முன்பாக வைத்திருக்-

கிருனென்றும், சொல்லப்படுகிறது. இவைகளினால் அவன் தேவர்கள் வாழ்வை வாழ்கிருனென்று அருத்தம் கொள்ளப் படுகிறது. சுவர்க்கத்தில் அவைகள் நிஜமாய் இருக்கிறபடியினு லும், மனிதனிட ஆன்மாவிலும் நிஜமாய் இருக்கிறபடியினுலும் உலகத்தில் இவ்விதமாய் சொல்லப்படுகின்றன. தன் முகம் எந்த திக்கு திரும்பியிருந்தாலும், ஒருவன் பிரார்த்திக்கும் போது தன் முன்பாக கடவுளுக்காக நோக்காதவன் யார் ?

130. வானோர்கள் ஆண்டவினிலும், ஆண்டவன் அவர் களிலும் இருப்பதாலும், ஆண்டவன் அவர்களிட ஆசைகளை யும் சிந்தனைகளையும் உள்ளுக்குள்ளாய் நடத்தி, அவர்களை தன் னிடமே இடைவிடாமல் திருப்புகிறபடியினுலும், தேவர்கள் தங்களிட முகங்களை சூரியனுகிற ஆண்டவனிடம் இடை விடாமல் திருப்புகிருர்கள் ; ஆகையினுல், ஆண்டவன் சூரிய னைப்போல் தோன்றுகிற கிழக்கு திசையை அவர்கள் நோக்க வேண்டியதாயிருக்கிறது. அதனுல் ஆண்டவன் பக்கம் தேவர்கள் தாங்களே திரும்பாமல், ஆண்டவன் அவர்களை தன்னிடமே திரும்புகிருரென்று விசதமாகிறது. ஏனென் ருல், தேவர்கள் ஆண்டவனை உள்ளுக்குள்ளாக நினைக்கும் போது, அவர் தங்களுக்குள்ளேயே இருப்பதாக நினைக்கிருர் கள். நிஜமான அந்தரங்க சிந்தனை தானே தூரம் என்பதை உண்டாக்காது, ஆனுல் கண்பார்வையோடு சேர்ந்து செயல் படும் புறம்பான சிந்தனை அதை உண்டாக்குகிறது. உள்ளான தல்லாமல், புறம்பான சிந்தனை இடவரைக்குட்பட்டதென் பது காரணமாயிருக்கிறது ; அது தேவலோகத்தில்போல் இடவரைக்குட்படாதபோதும், இடமென்பதின் தோற்றத்தி லிருக்கிறது. ஆனுல் கடவுளைப்பற்றி இடவரைக்குட்படுத்தி நினைக்கிற மனிதனுல், இவ்விஷயங்களை அறிந்துகொள்ளமுடி

பாது. ஏனென்றால், கடவுள் எங்குமிருக்கிறார், என்றாலும் அவர் இடவரைக்குட்பட்டில்லை. இம்மாதிரியாக, ஒரு வானேனுக்குள்ளும் புறமும் அவர் இருக்கிறார், ஆகையினால், ஒருவானேன் கடவுளை அதாவது ஆண்டவனை தனக் குள்ளேயும் வெளியேயும் பார்க்கக்கூடும். அன்பிலிருந்தும் ஞானத்திலிருந்தும் அவன் நினைக்கும்போது தனக்குள்ளேயும், அன்பையும் ஞானத்தையும் பற்றி நினைக்கும்போது வெளியே யும் பார்க்கக்கூடும். ஆயினும் ஆண்டவனிட சர்வவியாபகம், சர்வஞ்ஞத்துவம், சர்வவல்லமை குறித்த நூல்களில், இந்த விஷயங்களைப்பற்றி விரிவாய் பேசுவோம். கடவுளானவர் மனித ருள்ளேதானே பாய்ந்திருக்கிறாரென்றும் இனிமேல் தன்னிலே யே யில்லாமல் அவர்களிலிருக்கிறா ரென்றும் சொல்லப்பட்ட அருவெருப்பான சமயபேதத்தில் விழாதபடி ஒவ்வொரு மனிதனும் ஜாக்கிரதையா யிருக்கவேண்டும்; ஏனென்றால் மேல்கூறியபடி (7 முதல் 10, 69 முதல் 72 பிரிவுகளில்) கடவுள் இடவரைக்குட்படாமல் எல்லா இடங்களி லும் இருப்பதால், அவர் நிஜமாகவே மனிதனுக்கு உள்ளும் புறமும் எவ்விடத்திலுமிருக்கிறார். அவர் மனிதனிடத்திலிருந் தால், அவர் பிரிக்கப்படுவது மட்டுமல்லாமல், இடவரைக் கும்கூட உட்படுவார்; அப்பொழுது மனிதன்தான் கடவு ளென்றும்கூட நினைக்கக்கூடும். இந்த சமய விரோதம் தேவ லோகத்தில் அது அழுகின பிணத்தைப்போல் நாற்றமடிக் கும்படி அவ்வளவு வெறுக்கத் தக்கதாயிருக்கிறது.

131. அவர் சரீரங்கள் ஒவ்வொருதரம் திரும்போதும் சூரியனாகிற ஆண்டவன் பக்கம் எதிரில் பார்க்கும்படியாக, தேவர்கள் ஆண்டவனிடம் திரும்புதல் அமைந்திருக்கிறது. ஒரு வானேன் வட்டம் வட்டமாய் சுற்றி, அதனால் தன்னை அடுத்

திருக்கும் பல பொருள்களை பார்க்கக்கூடும், என்றாலும், சூரிய ளுகிற ஆண்டவன் அவன் முன்பாக இடைவிடாமல் தோன்றுகிறான். இது அதிசயமாயிருக்கும். அப்படியிருந்தாலும் அது உண்மை. சூரியனாகிய ஆண்டவரை இம்மாதிரியாக பார்க்க எனக்குகூட அருள்செய்யப்பட்டது. என் முகத்தின் முன்பாக நான் அவரைப் பார்க்கிறேன்; உலகத்தில் சில வருஷங்களாக எந்த திக்கில் நான் திரும்பினபோதிலும், அம்மாதிரியாக நான் அவரைப்பார்த்திருக்கிறேன்.

132. சூரியனாகிய ஆண்டவர், இம்மாதிரியாக, கிழக்கு திசையானது, விண்ணுலகத்து தேவர்களின் முகங்களுக்கெதிரில் இருக்கிறபடியினால், தெற்கு திசையானது அவர்கள் வலது பக்கமும், வடக்கு இடது பக்கமும், மேற்கு பின்புறமும், அம்மாதிரி அவர்கள் சரீரத்தின் ஒவ்வொரு திரும்புதலிலும் இருப்பதாக ஏற்படுகிறது. ஏனென்றால், முன் கூறியபடி, தேவ லோகத்தில் எல்லா திக்குகளும் கிழக்கிலிருந்து தீர்மானிக்கப்படுகின்றன; ஆகையினால், கிழக்கு திசையை தாங்கள் எதிரில் இருக்கப் பெற்றவர்கள் அதே திக்குகளிலிருக்கிறார்கள். உண்மையாகவே, திக்குகளை அவர்களை நிச்சயிப்பவர்களாயு மிருக்கிறார்கள்; மேலே (124 to 128 பிரிவுகளில்) காண்பித்தபடி, திசைகள் சூரியனாகிற ஆண்டவனிட மிருந்ததல்லாமல், ஏற்கைக்கு தக்கபடி தேவர்களிட மிருந்து உண்டாகின்றன.

133. சுவர்க்கமானது தேவர்களாலாகிற படியினாலும், தேவர்களும் அவ்விதமிருப்பதாலும், முழு சுவர்க்கமும் ஆண்டவரிடம் திரும்புகிறதென்றும், இந்த திரும்புதலினால் சுவர்க்கம் ஆண்டவனால் ஒரு மனிதனாக ஆளப்படுகிறதென்றும் பின்தொடருகிறது; அதுகூட கடவுள் பார்வையில் சுவர்க்க

மாயிருக்கிறது. கடவுள் பார்வையில் சுவர்க்கம் ஒரு மனிதனைப் போலிருக்கிறது என்பதை **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலில் 59 முதல் 87-வது பிரிவுகள் வரையில் பார்க்கலாம். அதிலிருந்து சுவர்க்கத்து திசைகள் தொடங்குகின்றன.

134. திசைகள் வானோன்பேரிலும், சர்வவியாபகமான சுவர்க்கத்தின் பேரிலும் கூட இம்மாதிரியாக எழுதப்பட்டது போலிருப்பதால், ஒருவானோன், உலகத்திலுள்ள மனிதனுக்கு வேறுவிதமாய், தன்னிட வீட்டையும், உறைவிடத்தையும் எங்கே போனாலும் தெரிந்துகொள்ளுகிறான். ஒருமனிதன் இடவரைக்குட்பட்டு இம்மாதிரி, தேவலோகத்து திக்குகளுடன் யாதொன்றையும் பொதுவாய் உடைத்தாயிராத ஸ்தூல லோகத்து திசைகளிலிருந்து நினைக்கிறபடியினால், தன்னிலேயே எந்த திக்கிலிருந்தும் அவனிட வீட்டையும் உறைவிடத்தையும் தெரிந்து கொள்ளுகிறதில்லை. அப்படியிருந்தாலும், பட்சிகளும் மிருகங்களும் அவ்வித அறிவை தங்களுள்ளே வைத்திருக்கின்றன ; ஏனென்றால், மிகுந்த அனுபவத்தில் தெரிகிறபடி, அவைகள் தாங்களே தங்களிட வீட்டையும் உறைவிடத்தையும் தெரிந்துகொள்ளும் சக்தி தங்களிடமே இருக்கிறது. தேவலோகத்தில் விஷயம் அவ்விதமா யிருக்கிறதென்பதற்கு இது ஒரு அடையாளம். ஏனென்றால், ஸ்தூல லோகத்தில் இருக்கும் எல்லா பொருள்களும், காரியங்களா யிருக்கின்றன; தேவலோகத்திலிருக்கும் எல்லாபொருள்களும் அந்த காரியங்களுக்கு காரணங்களா யிருக்கின்றன. சூக்குமமானதிலிருந்து அதன் காரணத்தை அடைந்த ஸ்தூலமானது கிடையாது.

**தேவர்களின் மனது சரீரம் இந்த இரண்டின் உள்ளானவைகள் எல்லாம் சூரியனாகிற ஆண்டவனிடத்தில் திருப்பப்படுகின்றன.**

135. தேவர்களுக்கு புத்தியும் சித்தமும் உண்டு, மேலும் அவர்களுக்கு ஒரு முகமும் ஒரு சரீரமும் உண்டு. புத்தியினிடவும் சித்தத்தினிடவும், அதனுடன்கூட முகத்தினிடவும் சரீரத்தினிடவும் உள்ளுக்குள்ளான பொருள்கள்கூட அவர்களுக்குண்டு. புத்தியினிடவும் சித்தத்தினிடவும் உள்ளுக்குள்ளானவைகள், அவர்களிட உள்ளான பட்சத்துக்கும் சிந்தனைக்கும் சேர்ந்த பொருள்களா யிருக்கின்றன; முகத்தின் உட்பாகங்கள் மூளைகள்; சரீரத்தின் உட்பாகங்கள், இருதயமும் சுவாசாசயங்களும் முதன்மையாயுள்ள ஆந்திரிகங்களா யிருக்கின்றன. சுருங்கச் சொல்லில், பொதுவாகவும் சிறப்பாகவும் பூமியின் பேரில் மனிதர்களுக்கு இருப்பவைகளெல்லாம் தேவர்களுக்குமுண்டு; இவைகளினால்தான் தேவர்கள் மனிதர்களாயிருக்கிறார்கள். அந்த உள்ளான பொருள்கள் நீங்கலாய், புறம்பான உருவம், அவர்களை மனிதர்களாக்குகிறதில்லை, ஆனால், புறம்பான உருவம், இந்த உள்ளானவைகளோடு சேர்ந்து, உண்மையாகவே, அவைகளிலிருந்தே, அவர்களை மனிதர்களாக்குகிறது; அப்படி இல்லாவிட்டால், உள்ளே உயிரின் உருவம் இல்லாதபடியினால், உயிரில்லாத மனிதனிட பிரதிமைகளாகவே மாத்திரம் அவர்களிருப்பார்கள்.

136. புத்தி நினைப்பதை வாய் பேசுகிறபடியாலும், சித்தம் இச்சிக்கிறபடி சரீரம் செய்கிறபடியினாலும், சித்தமும் புத்தியும் சரீரத்தை தங்கள் இஷ்டப்படி ஆளுகின்றதென்று நன்றாய் தெரிந்திருக்கிறது. இந்த ஆலோசனைகளால் சரீரமானது புத்திக்கும் சித்தத்திற்கும் ஒத்துப்போகிற ஒரு உருவமென்று தெளிவாகிறது. புத்திக்கும் சித்தத்துக்கும்கூட உருவம் சொல்லப்படுவதால் சரீரத்தின் வடிவம், சிந்தனையினிடவும் சித்தத்தினிடவும் உருவத்தோடு ஒத்துப்போகிறதென்

பது தெளிவாயிருக்கிறது. அததற்கேற்ற இந்த உருவங்களின் சுபாவத்தைப்பற்றி விவரிக்க இது இடமல்ல. இந்த இரண்டில் ஒவ்வொரு உருவத்திலும், கணக்கற்ற பொருள்கள்கூட இருக்கின்றன; இரண்டில் ஒவ்வொரு பக்கத்திலும் உள்ள கணக்கற்ற பொருள்கள், ஒன்றோடொன்று பரஸ்பரமாய் அன்னுவயப்படுவதால், ஒன்றாக செயல்படுகின்றன. அதனால் தான், சித்தமும் புத்தியும் அடங்கியுள்ள மனதானது, அதன் சரீரத்தை தன் இஷ்டபடி, இம்மாதிரியாக, தன்னையே முழுமையும் ஆளுவதுபோல், அரசாட்சி செய்கிறது. இந்த ஆலோசனைகளால், மனதின் உட்பாகங்கள், சரீரத்தின் உட்பாகங்களோடும், மனதின் புறம்பானவைகள் சரீரத்தின் புறம்பானவைகளோடும் ஒன்றாக செயல்படுகின்றனவென்று ஏற்படுகிறது. உயிரின் அளவுகள் பேசப்பட்ட பிறகு, மனதின் உட்பாகங்களும், அம்மாதிரியேகூட சரீரத்தின் உட்பாகங்களும் கீழே வருவதில் பேசப்படும்.

137. மனதின் உட்பாகங்கள் சரீரத்தின் உட்பாகங்களோடு ஒன்றுபடுகிறபடியினால், மனதின் உட்பாகங்கள் சூரியனாகிற ஆண்டவனிடம் தாங்களே திரும்பும்போது, சரீரத்தின் உட்பாகங்களும் கூட அம்மாதிரியே திரும்புகின்றனவென்று ஏற்படுகிறது; மனதனிடவும், அதனுடன்கூட சரீரத்தினிடவும், இரண்டின் புறம்பானவைகள், அவைகளின் உள்ளானவைகளின் பேரில் சார்ந்திருப்பதால், அவைகளும் கூட அம்மாதிரி செய்கின்றனவென்று ஏற்படுகிறது. பொதுவானது அதை உண்டாக்குகிற சிறப்பானதிலிருந்து தன்னிடமிருப்பதை எல்லாம் அடைகிறபடியினாலே, புறம்பானது செய்வது, உள்ளானவைகளிலிருந்து செய்கிறது. இதனால், ஓர் வானோன் தன்னிட முகத்தையும் சரீரத்தையும், சூரியனாகிற

ஆண்டவனிடத்து திருப்புகிறபடியினால், அவனிட மனதினிடவும் சரீரத்தினிடவும் எல்லா உள்ளானவைகளும் அதே திசைக்கே கூட திருப்பப்படுகின்றனவென்று தெரிகிறது. மனிதனோடும் விஷயம் அம்மாதிரியே யிருக்கிறது; அவன் அன்பிலும் ஞானத்திலும் இருந்தால் விஷயம்இருப்பதுபோல், ஆண்டவரை தன் கண்கள் முன்பாக அவன் இடைவிடாமல் வைத்திருந்தால், அப்போது அவரை தன்னிட கண்களாலும் முகத்தாலும் மாத்திரம் பார்க்காமல், தன்னிட முழுமனதோடும் முழு இருதயத்தோடும்கூட, அதாவது சித்தத்தினிடவும் புத்தியினிடவும் எல்லா பொருள்களோடும், அதே காலத்தில் சரீரத்தின் எல்லா பொருள்களோடும், அவன் பார்க்கிறான்.

138. இப்படி ஆண்டவரிடம் திரும்புதல், நிஜமான திரும்புதலா யிருக்கிறது; அது ஓர்வித உன்னதம். ஏனென்றால், உட்பாகங்கள் திறப்பதின் பயனாக சம்பவிக்கிற சுவர்க்கத்து சூட்டிலும் ஒளியிலும் மனிதன் உயர்த்தப்படுகிறான்; இவைகள் திறக்கப்பட்டபோது அன்பும் ஞானமும் மனதின் உட்பாகங்களிலும், சுவர்க்கத்தின் சூடும் ஒளியும், சரீரத்தின் உட்பாகங்களிலும் பாய்கின்றன. அதனால் உயர்ச்சி உண்டாகிறது; ஒரு மேகத்தினின்று தெளிவான காற்றிலும், அல்லது காற்றிலிருந்து (Ether) எனும் சூக்குும ஆகாசத்திலும் எழுவதுபோல், அது இருக்கிறது. அன்பும் ஞானமும், அவைகளின் சூடுடனும் ஒளியுடனும், மேற்கூறியபடி, மனிதனை தன்னிடமே திருப்புகிற, மனிதனுடனிருக்கும் ஆண்டவனாயிருக்கின்றன. அன்பிலும் ஞானத்திலும் இல்லாதவர்களுடன் விஷயம் எதிர்மறையா யிருக்கிறது. இவைகளுக்கு விரோதமாயிருக்கிறவர்களுடன் இன்னும் அதிகம் எதிரிடையாயிருக்கிறது. அவர்கள் மனதினிடவும், அதனுடன்கூட அவர்கள்

சரீரத்தினிடவும் உள்ளானவைகள் மூடப்பட்டிருக்கின்றன, அவைகள் மூடப்பட் டிருக்கும்போது, புறம்பானவைகள், அவைகளின் இயல்பான சுபாவம், அவ்விதமா யிருப்பதால், ஆண்டவனுக்கு விரோதமாய் எதிர் தாக்குகின்றன. இந்த காரணத்தினுல்தான், அவர்கள் தங்கள் பின்புறத்தை ஆண்டவனிடம் திருப்புகிறுர்கள். இம்மாதிரியாக அவருக்கு புறங்காட்டல் நரகத்துக்கு திரும்புதலாகும்.

139. கடவுளிடத்து இந்த நிஜமான திரும்புதல், அன்பிலிருந்தும், அதே காலத்தில் ஞானத்திலிருந்தும் கூட உண்டாகிறது; அன்பிலிருந்து மாத்திரமல்ல, ஞானத்திலிருந்து மாத்திரமல்ல; ஏனென்ருல், அன்பு ஞானத்திலிருக்கிறபடியினுல், அன்பு மாத்திரம் அதன் தடத்தபொருள் நீங்கலாய், சொரூபப் பொருளைப்போல் இருக்கிறது; ஞானமானது அன்பிலிருந்து உண்டாகிறபடியினுல், அன்பு நீங்கலாய் ஞானமானது, சொரூபப்பொருள் நீங்கலாய், தடத்த பொருளைப்போல் இருக்கிறது. நிஜமாகவே, அன்பானது ஞானமில்லாமல் நிலைக்கக்கூடும்; ஆனுல் அவ்வித அன்பு, ஆண்டவனுடையதல்லாமல், மனிதனுடையதா யிருக்கிறது; அன்பில்லாமல், ஞானம் கூட இருக்கக்கூடும். இந்த கடைசி ஞானம் நிஜமாகவே, ஆண்டவனிடமிருந்து உண்டாகிறது, ஆனுல் அதில் ஆண்டவனில்லை; ஏனென்ருல், நிஜமாகவே சூரியனிடமிருந்து உண்டாகிறதும், அப்படியிருந்தும், சூடாயிருக்கிற சூரியனிட சத்து அதில் இல்லாததுமான மாரிகாலத்து வெளிச்சத்தைப்போல் அது இருக்கிறது.

**தன் குணம் எப்படியிருந்தாலும், ஒவ்வொரு ஆவியும் தன்னிடம் ஆட்சி கோள்ளும் அன்பிற்கு அம்மாதிரி திருப்புகிறுன்.**

140. ஆவிகள் என்பது என்ன, வானேன் என்பது என்ன என்று முதலில் சொல்லப்படவேண்டும். இறந்த பிறகு ஒவ்வொரு மனிதனும், சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத்தியிலுள்ள ஆவிகளிருக்கும் உலகத்துக்கு முதலில் வந்து, அங்கே தன்னிட காலங்களை அல்லது நிலைமைகளை கழித்து, தன்னிட வாழ்க்கைக்குத் தக்கபடி சுவர்க்கத்துக்கு அல்லது நரகத்துக்கு தயார் செய்யப்படுகிறான். அந்த உலகத்தில், அவனிருக்கும் வரையில் அவனுக்கு ஆவி என்று பெயர். அந்த உலகத்திலிருந்து சுவர்க்கத்துக்கு ஏற்றப்பட்டவனுக்கு வானேன் என்று பெயர்; ஆனல் நரகத்தில் தள்ளப்பட்ட வனுக்கு சாத்தான் அல்லது பிசாசு என்று பெயர். இவர்கள் அரூபிகள்நிற்கும் உலகத்திலிருக்கும் வரையில்,சுவர்க்கத்துக்கு தயார் செய்யப்பட்டவன், தேவதா சம்பந்தமான ஜீவன் என்றும், நரகத்துக்கு தயார் செய்யப்பட்டவன், நரகத்துக்குறிய ஜீவன் என்றும் சொல்லப்படுகிறார்கள்; இப்படியிருக்கையில், தேவதா சம்பந்தமான ஜீவன் சுவர்க்கத்தோடும், நரகத்துக்கு அடுத்த ஜீவன் நரகத்தோடும் சேர்க்கப்படுகிறான். ஆவிகளின் உலகத்திலிருக்கும் எல்லா ஆவிகளும் மனிதரோடு சேர்க்கப் படுகிறார்கள்; ஏனென்றால், தங்கள் மனதுகளின் உட்பாகங் கள் சம்பந்தப்பட்ட வரையில், மனிதர்கள், அம்மாதிரியாக, சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் மத்தியிலிருக்கிறார்கள்; இந்த ஆவிகளின் மூலமாய் தங்கள் வாழ்க்கைக்கு அனுசரித்து, சுவர்க்கத்தோடாவது நரகத்தோடாவது சம்பந்தப்பட்டிருக் கிறார்கள். ஆவிகள் உலகமும் சூக்குமலோகமும் ஒன்றல்ல வென்று தெரிந்திருக்க வேண்டும்; கொஞ்சம் முன்னமே சொல்லியது ஆவிகள் உலகமாயிருக்கிறது; ஆனல் சூக்கும லோகமானது அந்த உலகத்தையும், அதனுடன் சுவர்க்கத் தையும் நரகத்தையும் தழுவுகிறது.

141. இப்பொழுது போசிக்கும் விஷயம், தங்களிட அன்புகளிலிருந்து தங்களிட அன்புகளுக்கு தேவர்களும் ஆவி களும் திரும்புதலாயிருத்தலினால், அன்புகளைப்பற்றிகூட சிலது சொல்லப்படவேண்டும். முழு சுவர்க்கமும் அன்பு களின் எல்லா பேதங்களுக்கும் தக்கபடி கூட்டங்களாக விசே ஷித்தறியப்படுகின்றது. அம்மாதிரியே நரகமும், ஆவிகள் உல கமும் பிரிக்கப்படுகின்றன. ஆனால், சுவர்க்கத்துக்கு அடுத்த அன்புகளின் பேதங்களுக்கு தக்கபடி சுவர்க்கமும், நரகத் துக்கு அடுத்த அன்புகளின் பேதங்களுக்குதக்கபடி நரகமும், சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் இரண்டுக்கும் அடுத்த அன்பு களின் பேதங்களுக்கு தக்கபடி ஆவிகள் உலகமும், கூட்டங் களாக பிரிக்கப்பட்டிருக்கின்றன. மற்றவைகளுக்கெல்லாம் முதன்மையானதும், அல்லது மற்ற அன்புகள் எல்லாம் அதற்கு சம்பந்தப்பட்டிருப்பதுமான இரண்டு அன்புகளிருக் கின்றன ; முதன்மையாயிருக்கிறதும், அல்லது அதற்கு, பராபரனுக்கு அடுத்த எல்லா அன்புகளும் சம்பந்தப்பட் டிருப்பதுமான அன்பு, ஆண்டவனிடத்து காட்டும் அன்பா யிருக்கிறது ; முதன்மையானதும், அல்லது அதற்கு நரகத் துக்கு அடுத்த எல்லா அன்புகளும் சம்பந்தப்பட்டிருப்பது மான அன்பானது தன்னையே நேசித்தலிலிருந்து அரசாட்சி செய்யும் அன்பாயிருக்கிறது. இந்த இரண்டு அன்புகளும் ஒன்றுக்கொன்று நேர்விரோதமாய் இருக்கின்றன.

142. இந்த இரண்டு அன்புகளும், அதாவது ஆண்டவ னிடத்து பாராட்டும் அன்பும், தன்னையே நேசித்தலிலிருந்து அரசாளும் அன்பும், ஒன்றுக்கொன்று முழுமையும் எதிர் மறையா யிருப்பதாலும், ஆண்டவரிடத்து பாராட்டும் அன்பி லுள்ளவர்கள் எல்லாம், முன்பிரிவில் காண்பித்தபடி, சூரியனை

கிற ஆண்டவனிடம் தாங்களே திரும்புகிறபடியினாலும், தன்னைத்தானே நேசிப்பதிலிருந்து அரசாட்சி செய்யும் அன்பில் இருக்கப்பட்டவர்கள், தங்கள் முதுகுகளை ஆண்டவனிடம் திருப்புகிறார்களென்பது விசதமாகிறது. ஆண்டவனிடத்து அன்பு பாராட்டுகிறவர்கள், ஆண்டவனால் நடத்தப்படவேண்டு மென்பதைத்தவிர அதிகமாய் யாதொன்றையும் நேசிக்காதபடியினாலும், ஆண்டவன் மாத்திரம் அரசாளவேண்டுமென்று இச்சிக்கிறபடியினாலும், ஆனால், தன்னைத் தானே நேசிப்பதிலிருந்து அரசாளும் அன்பிலிருக்கப்பட்டவர்கள், தங்களாலேயே நடத்தப்படவேண்டு மென்பதைத் தவிர அதிகமாய் யாதொன்றையும் நேசிக்காதபடியினாலும், தாங்களேமட்டும் அரசாளவேண்டுமென்று இச்சிக்கிறபடியினாலும், அவர்கள் இந்த எதிரான திக்கில் திரும்புகிறார்கள். உபயோகமானவைகளை செய்யவேண்டுமென்கிற அன்பிலிருந்து அரசாள வேண்டுமென்கிற ஒரு அன்பு இருப்பதால், தன்னைத் தானே நேசித்தலிலிருந்து அரசாளும் அன்பு என்று இங்கே பகுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. இந்த அன்பானது, அயலானிடத்து காட்டும் அன்புடன் ஒன்றுகிறபடியினால், அது பரமார்த்த அன்பாயிருக்கிறது. ஆனால் இந்த அன்பை அரசாளும் அன்பு என்று சொல்லாமல், உபயோகமானவைகளைச் செய்யும் அன்பென்று சொல்லவேண்டும்.

143. எவ்வித குணமுள்ள ஆவியும், முதல் பாகம் 1, 2, 3-பிரிவுகளில் காண்பித்தபடி, அன்பானது ஒவ்வொருவருக்கும் உயிராயிருக்கிறபடியினால், அவனிட பிரபலமான அன்பிற்கு திரும்புகிறது. உயிரானது, அங்கங்களென்றும், அவயவங்களென்றும், ஆந்திரிகங்களென்றும் சொல்லப்பட்ட அதன் ஆசயங்களை இம்மாதிரியாக முழுமனிதனையும், தன்

னிட அன்புடன் ஒத்த அன்பில் இருக்கிறதும், அப்படியிருப்பதால் அதன் அன்பு இருக்கிறதுமான அந்த கூட்டத்திற்கு திருப்புகிறது.

144. தன்னைத் தானே நேசித்தலினால் உண்டாகும் அரசாளும் ஆசை, ஆண்டவனிடத்து காட்டும் அன்பிற்கு முழுமையுய் எதிரானதாயிருப்பதால், அந்த அரசாளும் அன்பிலிருக்கும் ஆவிகள், ஆண்டவரிடமிருந்து பின்பக்கம் முகத்தை திருப்பி, அதனால் தங்கள் கண்களால் தேவலோகத்துக்கு மேற்கே பார்க்கிறார்கள்; இம்மாதிரியாக, அவர்கள் சரீரங்கள் தப்பிதமாக திரும்பி இருப்பதினால், அவர்களுக்கு பின்னால் கிழக்கும், வலது பக்கத்தில் வடக்கும், இடது பக்கத்தில் தெற்குமிருக்கின்றன. அவர்கள் ஆண்டவனை வெறுக்கிறபடியினால், கிழக்கு அவர்களுக்கு பின்னால் இருக்கிறது; அவர்கள் போலி நியாயங்களையும் அதனால் உண்டாகும் பொய்களையும் நேசிக்கிறபடியினால், அவர்களுக்கு வலது பக்கத்தில் வடக்கு இருக்கிறது; அவர்கள் ஞானஒளியை தள்ளுகிறபடியினால் அவர்களுக்கு இடது பக்கத்தில் தெற்கு இருக்கிறது. அவர்கள் தங்களையே வட்டம் வட்டமாய் சுற்றலாம்; ஆனால் தங்களை சுற்றிலும் அவர்கள் பார்க்கும் எல்லா பொருள்களும், அவர்கள் அன்பைப்போலவே தோன்றுகின்றன. இவைகள் எல்லாம் ஸ்தூலமானதும் இந்திரிய சம்பந்தமானவைகளா யிருக்கின்றன ; தாங்கள் மாத்திரம் உயிரோடிருப்பதாகவும், மற்றவர்கள் பிரதிமைகளென்றும் நம்பும்படியாக, அவ்வித சுபாவத்தில் சிலர் இருக்கிறார்கள்; அவர்கள் பைத்தியக்காரர்களாக இருந்தும், மற்றவர்களைவிட அதிக புத்தியுள்ளவர்களென்று அவர்கள் நம்புகிறார்கள்.

145. விண்ணுலகத்தில் ஸ்தூல லோகத்திலுள்ள பாதைகள்போல, பாதைகள் போட்டிருப்பதாக தோன்றுகின்

றன ; சிலது சுவர்க்கத்துக்கும், சிலது நரகத்துக்கும் போகின்றன ; ஆனால், நரகத்துக்கு போகும் வழிகள், சுவர்க்கத்துக்கு போகப்பட்டவர்களுக்கு தோன்றுகிறதில்லை ; சுவர்க்கத்துக்கு போகும் பாதைகள், நரகத்துக்கு போகிறவர்களுக்கு தோன்றுகிறதுமில்லை. இவ்விதமான கணக்கற்ற பாதைகளிருக்கின்றன ; ஏனென்றால், சுவர்க்கத்து ஒவ்வொரு கூட்டத்துக்கும், நரகத்து ஒவ்வொரு கூட்டத்துக்கும் போகும் வழிகள் இருக்கின்றன. ஒவ்வொரு ஆவியும் அவன் சொந்த அன்பிற்கு சேர்ந்த கூட்டத்துக்குபோகும் வழியில் போகிறான். அவன் மற்ற திக்கில் போகும் வழிகளை பார்க்கிறதில்லை. அதனால் தான் ஒவ்வொரு ஆவியும், தன்னிட பிரபலமான அன்பிற்கு திரும்பும்போது, அதிலேயே கூட போகிறான்.

ஆண்டவனிடமிருந்து சூரியனாக புறப்படுகிறதும், சுவர்க்கத்தில் சூட்டையும் ஒளியையும் உண்டாக்குகிறதுமான பரம இச்சாசத்தியும் பரமஞானசத்தியும் பரிசுத்த ஆவியாயிருக்கிற வெளிப்படும் பிரானாயிருக்கிறது.

146. ஆண்டவரைக் குறித்த புதிய எருசலேம் நகரத்தின் சித்தாந்தம் எனும் நூலில், கடவுளானவர் தனி ரூபத்துவத்திலும் சத்திலும் ஒருவரென்றும், அவரிடத்தில் திரியேகத்துவமிருக்கிறதென்றும், அந்தக் கடவுள் ஆண்டவனென்றும் மேலும், அவரிட திரியேகத்துவம் பிதா, குமாரன், பரிசுத்த ஆவி யென்று பெயரிட்டிருப்பதாகவும், எல்லா பொருள்களுக்கும் மூலமாயிருக்கிற தெய்வம், பிதா வென்றும், தெய்வீகமான மானிடத்தன்மை குமாரன் என்றும், வெளி வரும் பிரான் பரிசுத்த ஆவி யென்றும், பெயரிடப்பட்டிருக்கிறதென்றும், காண்பிக்கப்பட்டிருக்கிறது. பின் கூறியது வெளிவந்த பிரான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. என்றாலும் அது ஏன்

அப்படி சொல்லப்படுகிறது என்று யாருக்கும்தெரியாது. ஆண்டவன் தேவர்கள் முன்பாக சூரியனாக தோன்றுகிறாரென்றும், அந்த சூரியனிடமிருந்து தன் சாரத்தில் பரம இச்சாசத்தியாயிருக்கிற சூடும், அதனுடன் தன் சாரத்தில் பரமஞான சத்தியாயிருக்கிற ஒளியும் புறப்படுகிறதென்றும், இதுவரையில் தெரியாமலிருந்தபடியினால், இதுவும் தெரியாமலிருக்கிறது. இவைகள் தெரியாமல் இருந்தவரையில், வெளிபடும் பிரான் சுயமாய் தெய்வமென்பதைத் தவிர மனிதர்கள் வேறுவிதமாய் நினைக்க முடியாமல் போய்விட்டது. அதனால் கூட அதனேசியஸ் என்பவர் திரியேகத்துவத்தை குறித்துகொண்ட கோட்பாடு, பிதா என்று ஒருவரும், குமாரன் என்ற மற்றவரும், பரிசுத்த ஆவி என்று வேறொருவரு மிருப்பதாக சொல்லுகிறது. ஆனால் ஆண்டவன் சூரியனாக தோன்றுகிறாரென்று தெரிந்திருக்கிற இக்காலத்தில், பரிசுத்த ஆவி என்று சொல்லப்பட்ட வெளிவரும் பிரானைப்பற்றி, அவர் ஆண்டவனோடு ஒன்றுபடுகிறாரென்றும், ஆனால் சூரியனிடமிருந்து சூடும் ஒளியும் புறப்படுவதுபோல், அவரிடமிருந்து புறப்படுவதாகவும், ஒரு நியாயமான அபிப்பிராயம் கொள்ளலாம். அன்பிலும் ஞானத்திலும் அவர்கள் இருக்கிற அளவு சரியாய் தேவர்கள் தெய்வீக சூட்டிலும் ஒளியிலும் ஏன் இருக்கிறார்களென்பதற்கு, இதுவும் கூட காரணமாயிருக்கிறது. ஆண்டவன் விண்ணுலகில் சூரியனாக தோன்றுகிறார் என்பதும், அவரிட தெய்வத்தன்மை இம்மாதிரியாக அவரிடமிருந்து புறப்படுகிறது என்பதுமாகிய இந்த அறிவில்லாவிட்டால், வெளிப்படுதல் என்பது, பிதாவினுடையதும் குமாரனுடையதுமாயிருக்கிறவைகளை தெரியப்படுத்துதல் மாத்திரம் என்று அருத்தம் கொள்ளுகிறதும் அல்லது அறிவை உண்டாக்கலும் கற்பித்தலுமென்று அருத்தம்

கொள்ளுகிறதும் யாரும் எப்பொழுதும் தெரிந்துகொள்ள முடியாது. அப்படியிருந்தும், கடவுள் ஒருவரென்றும் அவர் சர்வ வியாபகமாக யிருக்கிறரென்றும், தெரிந்திருந்தபோது தெளிந்த அறிவுள்ளவர்கள் வெளிபடும் பிராணே சுயமாய் பரமென்று ஒத்துகொண்டு, அதை கடவுள் என்று சொல்லி, பரத்துவத்தை பிரிப்பதற்கு காரணம் ஒன்றுமில்லே.

**147.** கடவுள் இடவரைக் குட்பட்டவர் அல்லவென்றும், அதனல் அவர் சர்வ வியாபகி என்றும், மேலும் தெய்வமானது எங்கும் ஒரேமாதிரி இருக்கிறதென்றும், ஆனல் அவரிட பலவித தோற்றங்கள், தேவர்களிடவும் மனிதர்களிடவும் ஏற்கைகளினல் உண்டாகும் விகற்பத்தின் பயனென்றும் மேலே காண்பிக்கப்பட்டது. ஆண்டவனிடமிருந்து சூரியனுக புறப்படும் தெய்வமானது ஒளியிலும் சூட்டிலும் இருக்கிறபடியினுலும், ஒளியும் சூடும் உலகத்தில் ஆகாயங்கள் என்று சொல்லப்படும் ஏற்றுக்கொள்ளும் பொதுப் பொருள்களில் முதலில் பிரவேசிக்கிறதினுலும், இவைகள் மேகங்களே ஏற்றுக்கொள்ளப்பட்டவைகளானதினுலும், மனிதர்களிடவும் அல்லது தேவர்களிடவும் புத்தியின் உள்ளானவைகள் அவ்வித மேகங்களால் சூழப்பட்டிருப்பதற்கு தக்கபடி, அவைகள் வெளிவரும் பிராணுக்கு கொள்கலங்களாக இருக்கின்றனவென்பது விசதமாகிறது. மேகங்கள் என்பதால், சிந்தனேகளாயிருக்கிற சூக்கும மேகங்கள் என்று அருத்தம் கொள்ளப்படுகின்றது; அவைகள் உண்மைகளிலிருந்து வந்தால், பரமஞான சத்தியோடு இணங்குகிறது. ஆனல் பொய்களிலிருந்து வந்தால் அவைகள் இணங்குகிறதில்லே; ஆகையினல் விண்ணுலகத்தில் உண்மையிலிருந்து வரும் சிந்தனேகளே பார்வைக்கு தெரியக்காட்டப்படும்போது, அவைகள் பிரகாசிக்கும் வெண்மை

யான மேகங்களைப்போன்றும்,பொய்களிலிருந்துவரும் சிந்தனைகள் கடுமையான மேகங்களைப்போலும் தோன்றுகின்றன. இவைகளினால் வெளிவரும் தேய்வம் ஒவ்வொரு மனிதனினும் இருக்கிறதாகவும், ஆனால் ஒவ்வொருவனாலும் பலவிதமாய் திரையிடப்பட்டிருக்கிறதென்றும் விசதமாகிறது.

148. தெய்வமே விண்ணவனிடத்திலும் மனிதனிடத்திலும் சூக்கும சூட்டினாலும் ஒளியினாலும் இருக்கிறபடியினால், பரம ஞானசத்தியின் உண்மையிலும், பரம இச்சாசத்தியின் நன்மையிலும் இருக்கப்பட்டவர்களைப்பற்றி, இவைகளினால் அவர்கள் இயக்கப்பட்டு, அவைகளிலிருந்தும் அவைகளைப்பற்றியும் ஆசையோடு நினைக்கும்போது, அவர்கள் கடவுளாக அனலுகிறார்களென்று சொல்லப்படுகிறது; ஒரு பிரசங்கி வைராக்கியத்துடன் பேசும்போது இதுகூட சில சமயங்களில் விசதமாகிறது. ஆண்டவர், தன்னிட வெளிவரும் பிராணனால், சித்தத்தை சூக்கும சூட்டைக்கொண்டு கொளுத்துகிறது மட்டுமல்லாமல், புத்தியை ஞான ஒளியினால் தெளிவிக்கிறதினாலும் கூட, இந்த ஜனங்களைப் பற்றியே, அவர்கள் ஞானிகளாக்கப்படுகிறார்களென்றும் கூட சொல்லப்படுகிறது.

149. பரிசுத்த ஆவி ஆண்டவரே என்பதும், மனிதன் அதனால் ஞானியாக்கப்படுகிற உண்மையே அது வென்பதும், வேதத்திலுள்ள இந்த வாக்கியங்களால் விசதமாகிறது. இயேசு சொன்னது :—"சத்திய ஆவியாகிய அவர் வரும்போது, சகல சத்தியத்துக்குள்ளும் உங்களை நடத்துவார்; அவர் தாமே சுயமாய் பேசாமல், தாம் கேள்விப்பட்டவைகள் யாவையும் சொல்லுவார்" (யோவா. XVI, 13). "அவர் என்னுடையதில் எடுத்து உங்களுக்கு அறிவிப்பதினால், என்னை மகிமைபடுத்துவார்." (யோவா. XVI. 14, 15). "அவர் சீடரோ

டும் அவர்களிலும் இருப்பார்" என்பது (யோவா. XV. 26). இயேசு சொன்னதாவது : "நான் உங்களுக்குச் சொல்லுகிற வசனங்கள் ஆவியாயும் ஜீவனாயு மிருக்கிறது." (யோவா. VI. 63). இந்த வாக்கியங்களால், ஆண்டவனிடமிருந்து புறப் படும் உண்மையே **பரிசுத்த ஆவி** என்று சொல்லப்படுகிற தென்று விசதமாகிறது ; அது, வெளிச்சத்திலிருப்பதால், அறிவை உண்டாக்குகிறது.

150. **பரிசுத்த** ஆவியின் பேரில் சுமத்தும் ஞானம் ஆண்டவரிடமிருந்து மனிதனில் நிஜமாகவே இருக்கிறது. ஆனால், அப்படியிருந்தும், ஆவிகளினிடமும், தேவர்களிடவும் மத்தியஸ்தத்தினால் உண்டாக்கப்படுகிறது. ஆயினும், அந்த மத்தியஸ்தத்தின் சுபாவம் இன்னும் விவரிக்கப்பட முடியாது; தேவர்களும், ஆவிகளும், மனிதனைப்போல் **ஆண்டவனால்** ஞானமுண்டாக்கப்படுதலால், அவர்கள் தாங்களே சுயமாய் ஒரு மனிதனுக்கு எந்த விதத்திலும் ஞானம் உண்டாக்க முடியாதென்று மாத்திரம் நாம் சொல்லுகிறோம் ; இந்த விதத்தில் அவர்களுக்கு ஞானம் உண்டாகிறபடியினால், எல்லா ஞானோதயமும் ஆண்டவரிடமிருந்து மாத்திரம் வருகிற தென்று ஏற்படுகிறது. ஞானியாக்கப்பட்ட ஒரு மனிதன், ஆண்டவரிடமிருந்து மட்டும் மற்றவர்களைவிட அதிக ஞானத் தை அடைகிற தேவர்கள் மத்தியிலும் அரூபிகள் மத்தியிலும் பிறகு வைக்கப்படுவதால், அது தேவர்கள் மூலமாயும் ஆவி கள் மூலமாயும் சம்பவிக்கிறது.

**ஆண்டவர் பிரபஞ்சத்தையும், அதிலிருக்கும் ஒவ்வொன் றையும், பரமஇச்சா சத்தியினிடவும் பரமஞான சத்தியினிட வும் முதல் வெளிப்படும் சூரியனால் சிருஷ்டித்தார்.**

151. ஆண்டவரைக் குறித்த புதிய எருசலேம் நகரத்தின் சித்தாந்தம் எனும் நூலில் காண்பித்தபடி, ஆண்டவர் அவரோடு ஒன்றுகிறபடியினால், ஆண்டவர் என்கிற வார்த்தைக்கு, பிதா என்றும் சிருஷ்டிகர்த்தாவென்றும் சொல்லப்படும். நித்திய கடவுள் அல்லது ஏகோவா என்று அர்த்தம் கொள்ளப்படுகிறது. ஆகையினால் சிருஷ்டியைப்பற்றி பேசப்படும் பின்வரும் பக்கங்களில் அவரை ஆண்டவர் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

152. முதல் பாகத்தில், முக்கியமாய் 52, 53-வது பிரிவுகளில் பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும், பரம இச்சா சத்தியினாலும் பரம ஞான சத்தியினாலும் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றனவென்று முழுமையும் காண்பிக்கப்பட்டிருக்கிறது. இங்கே இப்பொழுது இது பரம இச்சா சத்தியினிடமும் பரம ஞான சத்தினிடமும் முதல் வெளிப்படும் பொருளாகிய சூரியனால் சம்பவிக்கிறதென்று காண்பிக்கப்படுகிறது. காரணங்களிலிருந்து காரியங்களையும், பிறகு காரணங்களால் காரியங்களையும், அவைகளின் ஒழுங்கிலும் வரிசையிலும் பார்க்கத் தகுந்தவன் எவனும், அதன் பத்ததியில் எல்லா பொருள்களும் அதிலிருந்து ஜீவிக்கிறபடியினால், சூரியன் சிருஷ்டியில் முதன்மையான பொருளென்று நிராகரிக்க முடியாது ; அவைகள் அதிலிருந்து பிழைக்கிறபடியினால், அதிலிருந்துகூட அவைகள் உற்பத்தியாகின்றன.

ஒருவிஷயம் மற்றொன்றைக் கருதி, அதை அறிவிக்கிறது. இம்மாதிரியாக அது அவைகளை உற்பத்தி செய்து நிலைக்க செய்தபடியினால் எல்லா பொருள்களும் அந்த சூரியன் பார்வையில் இருக்கின்றன ; அதன் கண்பார்வையில் வைப்பது என்பது அவைகள் இடைவிடாமல் நிலைக்கும் தன்மை

யில் வைப்பதாகும் ; ஆகையினுல்கூட பிழைத்தலென்பது சதாகாலமிருத்தலென்று சொல்லப்படுகிறது. காற்றுகளின் மூலமாய் எந்தப் பொருளாவது சூரியனிட கிருத்தியத்திலி ருந்து முழுமையும் நீக்கப்பட்டால், அந்தப் பொருள் உடனே கலக்கப்படும் ; ஏனென்ருல் சுத்தம் சுத்தமானதும், சூரியனுல் சலனத்துள் வைக்கப்படுவதுமான காற்றுகள் எல்லா பொருள் களையும் சம்பந்தத்தில் நிறுத்துகின்றன. பிரபஞ்சமும் அதி லிருக்கும் எல்லா பொருள்களும் அந்த சூரியனுல் பிழைக்கிற படியினுல், அது சிருஷ்டியில் முதன்மையானதென்று விசத மாகிறது. சிருஷ்டியானது சூரியனுல் உண்டானதாக சொல் லப்படுகிறது. ஆனுல், சூரியனே ஆண்டவனுல் சிருஷ்டிக்கப் படுகிறபடியினுல், இதற்கு அருத்தம் சூரியன் மூலமாக ஆண்டவனுல் சிருஷ்டிக்கப்பட்டது என்று ஏற்படுகிறது.

153. ஆண்டவரால் எல்லா பொருள்களும் சிருஷ்டிக் கப்பட்ட தேவலோகத்து சூரியனென்றும், ஸ்தூல லோகத்து சூரியன் என்றும் இரண்டு ஆதித்தர்கள் இருக்கிருர்கள். எல்லா பொருள்களும் ஸ்தூல லோகத்து சூரியன் மூலமாயல் லாமல், தேவ லோகத்துச் சூரியன் மூலமாய் ஆண்டவரால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன ; ஏனென்ருல் பின் சொல்லிய சூரியன் முன்சொல்லிய சூரியனைவிட அதிக கீழேயிருக்கிறது; அது நடு தூரத்திலிருக்கிறது ; அதற்கு மேலே தேவலோக மிருக்கிறது; அதற்குக் கீழே ஸ்தூலலோகமிருக்கிறது; ஸ்தூல லோகத்து சூரியன் தாழ்ந்த உதவிசெய்யும்படியாக சிருஷ்டிக் கப்பட்டிருக்கிறது ; இந்த உதவியைப்பற்றி பின்வருவதில் கூறப்படும்.

154. விண்ணுலகத்து சூரியன் பரமஇச்சா சத்தி, பரம ஞான சத்தியிடமிருந்து புறப்படும் முதற்பொரு ளானபடி

யினாலும், மேலே 52 முதல் 82-வது பிரிவுகள் வரையில் காண்பித்தபடி, பரம இச்சாசத்தியிலிருந்தும் பரமஞான சத்தியிலிருந்தும், எல்லா பொருள்களும் உண்டாகிறபடியினாலும், பிரபஞ்சமும் அதற்குச் சேர்ந்த எல்லா பொருள்களும் அந்த சூரியன் மூலமாய் ஆண்டவரால் சிருஷ்டிக்கப்பட்டன. ஒவ்வொரு சிருஷ்டிக்கப்பட்ட மிகப் பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும், முடிவென்றும், காரணமென்றும், காரியமென்றும் மூன்று பொருள்களிருக்கின்றன. இவைகளில்லாத சிருஷ்டிக்கப்பட்ட பொருள் யாதொன்றுமில்லை. இந்த மூன்றும் மிகப்பெரியதில், அதாவது பிரபஞ்சத்தில், பின்வரும் ஒழுங்கில் இருக்கின்றன. எல்லா பொருள்களின் முடிவும், பரம இச்சாசத்தியினிடவும் பரம ஞானசத்தியினிடவும், முதல் வெளிப்படும் பொருளாயிருக்கிற சூரியனில் இருக்கிறது. எல்லா பொருள்களுக்கும் காரணங்கள் விண்ணுலகத்திலிருக்கின்றன. எல்லா பொருள்களின் காரியங்கள் ஸ்தூல லோகத்திலிருக்கின்றன. ஆனால் இந்த மூன்றும் முதன்மையான பொருள்களிலும், இறுதியான பொருள்களிலும், எப்படியிருக்கின்றனவென்று பின்வருவதில் சொல்லப்படும். இந்த மூன்றும் இல்லாத சிருஷ்டிக்கப்பட்ட பொருள் யாதொன்றும் இல்லாதபடியினால், பிரபஞ்சமும், அதைச் சேர்ந்த எல்லா பொருள்களும், எல்லா பொருள்களின் முடிவு இருக்கிற சூரியன் மூலமாய் ஆண்டவரால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றனவென்று பின்தொடருகிறது.

155. சிந்தனையிலிருந்து காலமும் இடமும் நீக்கினாலொழிய, உண்மையான சிருஷ்டியானது மனோபாவனைக்குக் கொண்டுவர முடியாது. ஆனால், இவைகள் நீக்கப்பட்டால், அது கிரகிக்கப்படலாம். உன்னால் கூடுமானால், அல்லது

உன்னால் கூடுமான வரையில் அவைகளை நீக்கி, மனதை கால இடவரைக்குட்படுத்தாத பாவனையில் வைத்தால், மிகப்பெரிய இடமும் மிகச் சிறிய இடமும் எந்த விதத்திலும் வித்தியாசப் படாததை நீ அறிவாய்; அப்பொழுது, பிரபஞ்சத்தின் சிருஷ்டியைப்பற்றியும், அதிலுள்ள அநேக பொருள்களின் சிருட்டியைப்பற்றியும், அம்மாதிரி அபிப்பிராயத்தையே நீ கொள்வாய்; சிருட்டிக்கப்பட்ட பொருள்களின் விகர்ப்பங்கள், தேவனாகிய மனிதனில் முடிவற்றப் பொருள்கள் இருக்கிறதென்கிறதும், அதனால் அவரிடமிருந்து முதற் புறப்படும் பொருளாகிய சூரியனில், எல்லையற்றப் பொருள்கள் இருக்கிறதென்கிறதும் இந்த எல்லையற்ற பொருள்கள் சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தில் ஒரு பிரதிமை போல இருக்கிறதென்கிறதுமாகிய உண்மையிலிருந்து உண்டாகிறதாகக் கூட நீ அறிவாய். அதனால்தான் எந்த இரண்டு பொருளும், எவ்விடத்திலும் ஒரே மாதிரி யிருக்கமுடியாது. கண்கள் முன்பாக, ஸ்தூல லோகத்தில் இடத்துடனும், விண்ணுலகத்தில் இடத்தின் தோற்றத்திலும் இருக்கிற எல்லா பொருள்களின் பேதம் அதனால் உண்டாகிறது; அது பொதுவானதிலும், சிறப்பானதிலும் இருக்கும் பேதமாயிருக்கிறது. முதற்பாகத்தில் காண்பித்தவைகள் இவைகள்:—தேவனாகிய மனிதனில் முடிவற்றப் பொருள்கள் வேறாய் ஒன்றென்றும் (பிரிவுகள் 17—22), பிரபஞ்சத்தில் எல்லா பொருள்களும் பரம இச்சாசத்தியாலும் பரமஞானசத்தியாலும் சிருஷ்டிக்கப்பட்டதென்றும், (பிரிவுகள் 52, 53), சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தில் எல்லா பொருள்களும் தேவனாகிய மனிதனிட இச்சா சத்தியையும் ஞான சத்தியையும் ஏற்றுக்கொள்ளப்பட்டவைகளென்றும், (பிரிவுகள் 54 முதல் 60 வரையில்), தெய்வமா

னது இடவரைக்குட்பட்டதல்லவென்றும் (பிரிவு 7—10), தெய்வமானது இடவரைக்குட்படாமல், எல்லா இடங்களை யும் நிறைந்திருக்கிறதென்றும், (பிரிவுகள் 69 முதல் 72 வரையில்), மிகப் பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும் தெய் வம் ஓரேமாதிரி யிருக்கிறதென்றும் (பிரிவுகள் 77 முதல் 82 வரையில்) அங்கே காண்பிக்கப்பட்டிருக்கின்றன.

156. பிரபஞ்சத்தினிடமும், அதிலுள்ள எல்லா பொருள் களிடமும், சிருட்டியானது, இடத்துக்கு இடமும் அல்லது காலத்துக்குக்காலமும், இவ்விதமாய் படிப்படியாயும் தேற்றமா யும் உண்டாக்கப்படாமல், நித்தியமானதிலிருந்தும் முடிவற்ற திலிருந்தும் உண்டாக்கப்பட்டதாக சொல்லப்படும். அப்படி உண்டாகுதல், அவ்வித பொருளில்லாதபடியினால், காலத்தின் நித்தியத்திலிருந்தல்ல. ஆனால், தெய்வமேயாகிறபடியால் கால் மற்ற நித்தியத்திலிருந்து சம்பவிக்கிறது, மறுபடியும் அவ்வித் பொருள் இல்லாதபடியினால், இடத்தின் முடிவின்மையிலிருந் தல்ல, ஆனால் தெய்வத்தைப்போன்றே இருக்கிற இடமற்ற முடி வின்மையிலிருந்து சம்பவிக்கிறது. ஸ்தூல வெளிச்சத்திலுள்ள சிந்தனைகளின் பாவனைக்கு இந்த பொருள்கள் மேற்படுகிற தென்றும், ஆனால் இது கால இடவரைக்குட்படாதபடியினால், சூட்சும ஒளியிலுள்ள சிந்தனைகளின் பாவனைகளுக்கு அவை கள் மேற்படுகிறதில்லையென்றும், எனக்குத் தெரியும். உண்மை யில் அவைகள் ஸ்தூல ஒளியிலுள்ள பாவனைகளுக்கு முழுமை யும் மேற்படுகிறதில்லை ; ஏனென்றால், இடத்தின் முடிவின்மை என்பது கிடையாதென்று சொன்னால், ஒவ்வொருவனும் அறி விலிருந்து இதை ஆமோதிக்கிறான்; இது காலத்தின் முடி வின்மையாயிருப்பதால், நித்தியத்துடனும் விஷயம் அம்மா திரியே. நித்தியத்துக்கு என்று நீ சொன்னால், இது காலத்தி

னின்று கிரகிக்கப்படுகிறது. ஆனால் காலம் நீக்கப்பட்டால் ஒழிய நித்தியத்திலிருந்து என்பது கிரகிக்கப்படுகிறதில்லை.

ஸ்தூல லோகத்து சூரியன் நிர்மலமான நெருப்பாயிருக்கிறது, ஆகையினால் உயிரற்றதாயிருக்கிறது, பிரகிருதி அந்த சூரியனிடமிருந்து உற்பத்தியானபடியினால், உயிரற்றதாயிருக்கிறது.

157. ஸ்தூல லோகத்து சூரியன் முழுமையும் உயிரற்றதாயும், விண்ணுலகத்து சூரியன் உயிருள்ளதாயு மிருப்பதால், சிருஷ்டியையே ஸ்தூலலோகத்து சூரியன் செய்ததாக அதற்கு எவ்விதத்திலும் ஆரோபிக்க முடியாது. ஆனால் எல்லாம் விண்ணுலகத்து சூரியனுக்கு ஆரோபிக்கலாம். ஏனென்றால், அது பரம இச்சாசத்தியினிடமும், பரம ஞானசத்தியினிடமும் முதல் புறப்படும் பொருளாயிருக்கிறது; உயிரற்றது சுயமாய் யாதொன்றையும் செய்யமுடியாது, ஆனால் அது சேட்டிக்கப்படுகிறது. ஆகையினால் சிருட்டியின் எந்த பொருளையும் அதற்கு ஆரோபித்தல், கம்மாளன் செய்யப்பட்ட வேலையை அவன் கைகளினால் உபயோகப்படுத்தப்படுகிற ஆயுதத்திற்கு ஆரோபித்தல் போலிருக்கிறது. ஸ்தூலலோகத்து சூரியன், எல்லா உயிரும் நீக்கப்பட்ட நிர்மல நெருப்பாயிருக்கிறது; ஆனால் விண்ணுலகத்து சூரியனோ தெய்வ உயிரிருக்கப்பட்ட நெருப்பாயிருக்கிறது. ஸ்தூல லோகத்து சூரியனிட நெருப்பைப்பற்றியும், விண்ணுலகத்து சூரியனிட நெருப்பைப்பற்றியும், தேவதாசம்பந்தமான அபிப்பிராயம் தெய்வஉயிர் விண்ணுலகத்து சூரியனிட நெருப்பில் உள்ளுக்குள்ளாயும், ஆனால், ஸதூல லோகத்து சூரியனிட நெருப்பில் வெளியிலேயும் இருக்கிறதென்பதாகும். இதிலிருந்து ஸ்தூல சூரியன் சக்தி தன்னிடமே இருந்தல்லாமல், விண்ணுலகத்து

சூரியனிடமிருந்து புறப்படும் உயிருள்ள சக்தியிலிருந்து உண்டாகிறதென்று விசதமாகிறது. ஆகையினால் அந்த சூரியனிட உயிருள்ள சக்தி நீக்கப்பட்டால், ஸ்தூல சூரியன் பங்கப்படும். ஆகையால்தான் கடவுளை ஆராதனை செய்யும் எல்லா முறைகளிலும், சூரியனை பூசனை செய்தலானது, அந்த சூரியனைப் போலவே அது உயிரற்றதாயிருப்பதினால், மிகவும் தாழ்ந்ததாயிருக்கிறது ; ஆகையினால் வேதத்தில் அந்த ஆராதனையை அருவருப்பு என்று சொல்லப்படுகிறது.

158. ஸ்தூல லோகத்து சூரியன் நிர்மல நெருப்பாயிருப்பதால், அதனால் உயிரற்றதாயிருப்பதால், அதிலிருந்து வெளிப்படும் சூடும் கூட உயிரற்ற சூடாயிருக்கிறது ; அம்மாதிரியே அதிலிருந்து புறப்படும் ஒளியும் உயிரற்றதாயிருக்கிறது. (Ether) எனும் சூக்குமகாற்றென்றும், காற்றென்றும் சொல்லப்படுவதும், அந்த சூரியனிட சூட்டையும் ஒளியையும் தன்னில் பெற்றுக்கொண்டு, எடுத்துக்கொண்டு போகிறதுமாகிய காற்றுகள் கூட, உயிரற்றவைகளாயிருக்கின்றன. இவைகள் உயிரற்றவைகளாயிருப்பதால் காற்றுகளுக்கு கீழிருக்கிறதும், பூமிகளென்று சொல்லப்படுவதுமாகிய பூமியின் மேல்புறத்துக்கு பொதுவாயும் சிறப்பாயும் சேர்ந்த எல்லா பொருள்களும், உயிரற்றவைகளா யிருக்கின்றன. அப்படி யிருந்தாலும், இந்த பொருள்கள் முழுமையும், விண்ணுலகத்து சூரியனிடமிருந்து புறப்பட்டு பாய்கிற பரமார்த்த பொருள்களால் சூழப்பட்டிருக்கின்றன. அப்படி அவைகள் சூழப்பட்டால் ஒழிய, பூமிகள் சேட்டிக்காது, செடிகளாயிருக்கிற உபயோகங்களின் உருவங்களையாவது அல்லது பிராணிகளாயிருக்கிற உயிருள்ள உருவங்களையாவது உற்பத்தி செய்திருக்க மாட்டாது ; இதுவுமல்லாமல், மனிதன் இருக்கிறதும் ஜீவிக்கிறதுமான பொருள்களைக் கொடுக்கவும் மாட்டாது.

159. பிரகிருதியானது அந்த சூரியனிடமிருந்து ஆரம்பிக்கிறபடியினாலும், அதிலிருந்து நிலைக்கிறதும் பிழைக்கிறதுமான எல்லாம் ஸ்தூலமென்று சொல்லப்படுகிறபடியினாலும், பிரகிருதியானது அதற்கு சேர்ந்த பொதுவானதும் சிறப்பானதுமான எல்லா பொருள்களோடும், உயிரற்றவைகளென்று ஏற்படுகிறது. மனிதனிலும் பிராணிகளிலும் பிரகிருதி நிஜமாகவே உயிருள்ளதாக தோன்றுகிறது, ஆனால் அதனுடன் இருந்து அதை சேட்டிக்கும் உயிரினால் இது சம்பவிக்கிறது.

160. பூமிகளை உருவாக்குகிற பிரகிருதியின் தாழ்ந்த பொருள்களை உயிரற்றவைகளா யிருக்கிறபடியாலும், அன்பினிடமும் சிந்தனைகளிடமும் நிலைமைகளுக்குத் தக்கபடி, விண்ணுலகத்தில்போல மாற்றக்கூடியதாயும், நானாவிதமாயும் இல்லாமல், மாற்றக்கூடாததாகவும் ஸ்திரமானதாயுமிருப்பதாலும், பிரகிருதியில் இடங்களும், இடங்களின் தூரங்களு மிருக்கின்றன. சிருட்டியானது அங்கே நின்றுவிட்டு அசலனத்தில் இருக்கிறபடியினால், இவைகள் எல்லாம் அப்படியிருக்கின்றன. ஆகையினால் இடங்கள் என்பவை பிரகிருதிக்குச் சொந்தமானவையென்று விசதமாகிறது; பிரகிருதியில் இடங்களானது உயிரின் நிலைமைகளுக்குத் தக்கபடி விண்ணுலகத்தில் போல, இடங்கள் தோற்றங்களாக இல்லாதபடியினால், அவைகளும்கூட உயிரற்றவைகளென்று சொல்லலாம்

161. காலங்கள் அம்மாதிரியே திட்டமானதாயும் எப்பொழுது மிருப்பதாயும் இருப்பதால், அவைகள் கூட பிரகிருதிக்கு சொந்தமானவை. இம்மாதிரியாக, ஒருநாளின் நீட்சி, எப்பொழுதும் இருவத்திநான்கு மணிகளாகவும், ஒரு வருஷத்தின் நீட்சி எப்பொழுதும் முன்னூத்தி அறுபத்தி

ஐந்தேகால் நாட்களாகவும் இருக்கின்றன. காலங்களை வேறு படுத்துகிற ஒளியினிடவும், இருட்டினிடவும், சூரியனிடவும், குளிரினிடவும், நிலைமைகளை திரும்பிவருவதில் ஸ்திரமாயும் கூட இருக்கின்றன. தினமும் திரும்பிவருகிற நிலைமைகள், காலையும்,மத்தியானமும்,மாலையும் இரவுமாயிருக்கின்றன. வருஷந்தோறும் திரும்பிவருகிற நிலைமைகள், வசந்த காலமும், கோடை காலமும், இலையுதிர் காலமும், மாரி காலமுமாயிருக்கின்றன. வருஷத்தின் மாறுதல்கள் நாட்களைக்கூட மாறும்படி செய்கின்றன. இவைகள் எல்லாம் விண்ணுலகில் போல் உயிரின் நிலைமைகளாயில்லாதபடியினுல், உயிரற்றவைகளாகவும் கூட இருக்கின்றன; ஏனென்ருல், விண்ணுலகத்தில் தொடர்ச்சியான ஒளியும், தொடர்ச்சியான சூடும் இருக்கின்றன. ஒளியானது, தேவர்களிலிருக்கும் ஞான நிலைமைக்கும், சூடு அவர்களிலிருக்கும் அன்பின் நிலைமைக்கும் ஒத்திருக்கின்றன; அதனுல் அவர்களிட நிலைமைகள் உயிருள்ள நிலைகளாயிருக்கின்றன.

162. ஒவ்வொன்றையும் பிரகிருதிக்கு ஆரோபிக்கிறவர்களின் பேதமையை இவைகளிலிருந்து அறிந்து கொள்ளலாம். பிரகிருதிக்கு அனுகூலமாக ஊர்ஜிதப்பட்டவர்கள், தங்களிட உள்ளங்களை பிரகுருதிக்கு மேலே ஏற்ற இனி விரும்பாதபடி அவ்வித நிலைமையில் தாங்களே வந்திருக்கிருர்கள்; அதனுல் அவர்களிட உள்ளங்கள் மேலே மூடப்பட்டு, கீழே திறக்கப்பட்டிருக்கின்றன. ஒரு மனிதன் இம்மாதிரியாக இந்திரிய சம்பந்தமான ஸ்தூலமானுவனுக அதாவது பரமார்த்தமாய் உயிரற்றவனுகிருன்; பிறகு, சரீரத்தின் இந்திரியங்களிலிருந்து அல்லது உலகத்திலிருந்து இந்திரியங்கள் மூலமாய், தான் அடைந்த பொருள்களிலிருந்து மாத்திரம் அவன் அப்

பொழுது நினைக்கிறபடியினால், அவன், இருதயத்திலே கூட கடவுளை இல்லை என்கிறான். பிறகு, சுவர்க்கத்துடன் சேர்க்கை உடைந்து போவதால் நரகத்துடன் சேர்க்கை உண்டாகிறது; அப்பொழுது நினைக்கும் மனோசக்தியும் இச்சிக்கும் மனோசக்தியும் மாத்திரம் நிற்கிறது; நினைக்கும் மனோசக்தி ஞானவிசிட்டத்திலிருந்தும், இச்சிக்கும் மனோசக்தி சுதந்திரத்திலிருந்தும் வருகிறது; அந்த இரண்டு மனோசக்திகளையும் ஒவ்வொரு மனிதனும் உடைத்தாயிருக்கிறான்; அவைகள் நீக்கப்படுகிறதில்லை. பிசாசுகளுக்கும் கூட இரண்டு சக்திகளும் தேவர்களைப்போல் சமமாய் இருக்கின்றன; பிசாசுகள் உன்மத்தர்களாகவும் தீங்குசெய்யவும் அவைகளை உபயோகப்படுத்துகின்றன. ஆனால் தேவர்கள் அவைகள் ஞான முள்ளவர்களாகவும் நன்மை செய்யவும் உபயோகப்படுத்துகிறார்கள்.

**ஒன்று உயிருள்ளதும், மற்றது உயிரில்லாததுமான இரண்டு ஆதித்தர் இல்லாமல் எந்த சிருட்டியும் உண்டாகாது.**

163. பொதுவாக பிரபஞ்சமானது, விண்ணுலகமென்றும் மண்ணுலகமென்றும் இரண்டு உலகங்களாக விசேஷித்தறியப்படுகின்றன. விண்ணுலகத்தில் தேவர்களும் ஆவிகளுமிருக்கிறார்கள்; மண்ணுலகத்தில் மனிதர்களிருக்கிறார்கள். இந்த இரண்டு உலகங்களும் புறம்பான உருவத்தில் வரையறுக்க முடியாதபடி அவ்வளவு முழுமையும் ஒப்பானதாயிருக்கின்றன; ஆனால் உள்ளான வடிவத்தில் அவைகள் முழுமையும் பேதமாயிருக்கின்றன. மேல் சொல்லியபடி தேவர்களென்றும் ஆவிகளென்றும் சொல்லப்பட்ட விண்ணுலகத்திலிருக்கும் மனிதர்களே அசரீர மானவர்களா யிருக்கிறார்கள். அவர்கள் அசரீரமானவர்களானபடியினால், அவர்கள்

சூட்சுமமாய் நினைத்து, சூட்சுமமாய் பேசுகிறார்கள். ஆனால், ஸ்தூல லோகத்திலுள்ள மனிதர்கள் ஜடமானவர்கள், ஆகையினால் அவர்கள் ஸ்தூலமாய் நினைத்து ஸ்தூலமாய் பேசுகிறார்கள்; சூட்சும சிந்தனைக்கும் பேச்சுக்கும், ஸ்தூல சிந்தனைக்கும் பேச்சுக்கும், பொதுவானது ஒன்றுமில்லை. இதனால், விண்ணுலகமும் மண்ணுலகமுமாகிய இந்த இரண்டு உலகங்களும், எவ்விதத்திலும் சேர்ந்திருக்கக் கூடாதபடி, ஒன்றுக்கொன்று முழுமையும் வேறாயிருக்கின்றனவென்று விசதமாகிறது.

164. இந்த இரண்டு உலகங்களும் இவ்விதமாக வேறாயிருப்பதால், பரமார்த்த பொருள்கள் உற்பத்தியாகிற ஒன்றும், ஸ்தூலமான பொருள்கள் உற்பத்தியாகிற மற்றதுமாகிய இரண்டு ஆதித்தர் இருக்கவேண்டியது அவசியமாயிருக்கிறது. எல்லா பரமார்த்த பொருள்களும் தங்கள் உற்பத்தியில் உயிருள்ளதாயிருக்கிறபடியினாலும், எல்லா ஸ்தூலப் பொருள்களும் அதன் உற்பத்தியினால் உயிரில்லாதவைகளாயிருக்கிறபடியினாலும், ஆதித்தர் உற்பத்திஸ்தானங்களானபடியினாலும், ஒரு ஆதித்தன் உயிருள்ளதென்றும், மற்ற ஆதித்தன் உயிரற்றதென்றும் ஏற்படுகிறது; அதனுடன் உயிரற்ற சூரியனே, உயிருள்ள சூரியன் மூலமாய் ஆண்டவனால் சிருட்டிக்கப்படுகிறதென்றும் ஏற்படுகிறது.

165. இறுதியானவைகளில், எல்லா பொருள்களும் ஸ்திரமாயும், திட்டமாயும், நிரந்தரமாயும் இருக்கும், இந்தக் காரணத்தினால், ஸ்திரமாயும் என்று மிருக்கவும் கூடிய உள்பொருள்கள் தோன்றும்படியாகவும், ஓர் உயிரில்லாத சூரியன் சிருட்டிக்கப்பட்டது. சிருட்டியின் அஸ்திவாரம் இதுதான், வேறொன்றுமில்லை. இவ்விதமான பொருள்கள், அதிலும், அதின்பேரிலும், அதைச் சுற்றிலுமிருக்கிற நீரும் நிலமும்

சேர்ந்துள்ள பூகோளம் ஒரு அஸ்திவாரத்தைப்போலவும், ஆகாய விரிவைப்போலவு மிருக்கிறது ; ஏனென்றால், அதில் எல்லா பொருள்களும் முடிகிறதும், அதின்பேரில் அவைகள் தங்குகிறதுமான அது கடைசி வேலையாயிருக்கிறது. சிருட்டியின் முடிவுகளாகிய காரியங்கள் உண்டாகிற கருப்பாசயம் போலக் கூட அது இருக்கிறதென்று பின் வருவதில் காண்பிக்கப்படும்.

166. எல்லா பொருள்களும் உயிருள்ள சூரியன் மூலமாய் ஆண்டவனால் சிருட்டிக்கப்பட்டதென்பதும், உயிரில்லாத சூரியனால் ஒன்றும் சிருஷ்டிக்கப்படவில்லை என்பதும், உயிருள்ள பொருள் உயிரில்லாத பொருளை தன்னுடன் இணங்க ஒழுங்குபடுத்தி, அதன் முடிவுகளாகிய உபயோகங்களுக்காக உருவாக்குகிற தென்கிறதிலிருந்தும், ஆனால் இதற்கு மாறாய் அப்படி இல்லையென்கிறதிலிருந்தும் விசதமாகிறது. எல்லா பொருள்களும் பிரகிருதியிலிருந்து உண்டாகிறதென்றும், உயிர்கூட அதிலிருந்து வருகிறதென்றும், விவேகமில்லாதவன் மட்டும் நினைக்கக்கூடும் ; இவ்விதம் நினைக்கும் எவனுக்கும் உயிர் என்னவென்று தெரியாது. பிரகிருதியே தன்னில் தானே முழுமையும் அசேதனமானதால், எந்த விதத்திலும் அது உயிரை உருவாக்க மாட்டாது. உயிரில்லாத பொருள் உயிருள்ள பொருள்பேரில் செயப்படுகிறதும், அல்லது உயிரில்லாத சக்தி உயிருள்ள சக்தியின்பேரில் செயல்படுகிறதும், அல்லது அதேவாகிற, ஸ்தூலமானது சூக்குமமானதின்பேரில் செயல்படுகிறதும், ஒழுங்குக்கு முழுமையும் எதிரிடையாயிருக்கிறது. ஆகையினால் அது அப்படி செய்கிறதென்று நினைத்தல், சரியான அறிவின் வெளிச்சத்திற்கு எதிரிடையா யிருக்கிறது. உயிரில்லாத அல்லது ஜடப்பொருள்

புறம்பான காரணங்களால், நிஜமாக பலவிதத்தில் மாற்றப்படலாம். அப்படியிருந்தாலும், அது உயிர்பேரில் செயல்படாது. ஆனால் செய்விக்கப்பட்ட வடிவத்தின் எந்த வேறுபாடுக்கும் தக்கபடி, உயிரானது அதின்பேரில் செயல்படுகிறது. ஆன்மாவின் பரமார்த்த தொழில்களில் புகும் ஜடமான உட்பெருக்குகளுக்கும் விஷயம் அம்மாதிரியே; அது முடியாதபடியினால், இது நடக்கிறதில்லை என்று எல்லாருக்கும் நன்றாய்த் தெரிந்திருக்கிறது.

சிருஷ்டியின் முடிவு இறுதியானவைகளில் நிற்கிறது, இந்த முடிவு, எல்லா பொருள்களும் சிருஷ்டிக்கர்த்தாவிடம் திரும்பவேண்டுமென்பதும், ஐக்கிய முண்டாக வேண்டுமென்பதாயுமிருக்கிறது.

167. முதலில் முடிவுகளைப்பற்றி சிலது சொல்லப்படவேண்டும். முதல் முடிவென்றும் இடை முடிவென்றும் கடை முடிவென்றும் சொல்லப்பட்ட கிரமப்படி வரும் மூன்று பொருள்களிருக்கின்றன; அவைகளை முடிவென்றும், காரணமென்றும், காரியமென்றும்கூட சொல்லப்படுகின்றன. ஒவ்வொருபொருளிலும், அது ஒரு பொருளாயிருக்கும்பொருட்டு, இந்த மூன்றும் இருக்கவேண்டும். ஏனென்றால், ஒருமுதல் முடிவு இடை முடிவு இல்லாமலும், அதே காலத்தில் ஒரு கடை முடிவு இல்லாமலும் இருக்கமுடியாது ; அல்லது அதே அருத்தமாகிறபடி, காரணமும் காரியமுமில்லாமல், முடிவுமாத்திரம் இருக்க முடியாது. மேலும், தான் உற்பத்தியாகும் முடிவில்லாமலும் தான் இருக்கும் காரிய மில்லாமலும், காரணம் மாத்திரம் இருக்கமுடியாது ; காரியமட்டும், அதாவது காரணமும் முடிவும் இல்லாத காரியம் மட்டும் இருக்கமுடியாது. காரிய மில்லாமல், அதாவது ஒருகாரியத்தி

லிருந்து பிரிக்கப்பட்டிருக்கிற ஒரு முடிவு, இருக்கும் பொருளல்ல வென்பதையும், ஆகையினுல் ஒருவார்த்தையாக மாத்திரம் இருக்கிறதென்பதையும் சிந்தித்தால், இது அப்படி இருக்கிறதென்பதை அறிந்துகொள்ளலாம். இம்மாதிரியாக ஒரு முடிவானது, நிஜமாக அது ஒரு முடிவாக இருக்கும் பொருட்டு, முடிவுபெறவேண்டும். அது ஒரு முடிவாயிருப்பதால், முதலில் முடிவு என்று சொல்லப்படுகிற அதன் காரியத்தில் அது முடிவுக்கு வருகிறது. சேட்டிக்கும் பொருள் அல்லது வல்லமையுள்ள பொருள் சுயமாய் இருக்கிறதாகத் தோன்றுகிறது; ஆனுல், அது காரியத்திலிருக்கிறதென்கிற உண்மையிலிருந்து உண்டாகிற இது ஒரு தோற்றமாயிருக்கிறது; ஆனுல் அது காரியத்திலிருந்து பிரிக்கப்பட்டால், ஒரு நொடிநேரத்தில் மறைபடுகிறது. முடிவு, காரணம், காரியம், என்கிற மூன்றும் ஒவ்வொரு பொருளிலும், அது ஒரு பொருளாக வேண்டுமானுல், இருக்கவேண்டும்.

168. மேலும், முடிவு என்பது, காரணத்தில் எல்லாமாயும், அதனுடன் காரியத்தில் எல்லாமாயும் இருக்கிறதென்று தெரிந்திருக்கவேண்டும்; அதனுல் தான் முடிவு என்பதும், காரணமென்பதும், காரியமென்பதும் முதல் முடிவென்றும், இடைமுடி வென்றும், கடைமுடி வென்றும் சொல்லப்படுகின்றன. ஆனுல், முடிவென்பது காரணத்தில் எல்லாமாயிருக்க, அந்த முடிவுநிற்க, அந்த முடிவிலிருந்து ஏதாகிலும் கொஞ்சம் இருக்கவேண்டும். காரியத்தில் அது எல்லாமாயிருக்க, முடிவானது அதில் நிற்க, காரணத்தின்மூலமாய் முடிவிலிருந்து, ஏதாகிலும் கொஞ்சம் இருக்கவேண்டும். ஏனென்ருல் முடிவென்பது சுயமாய் தனியே இருக்கமுடியாது. அதற்கு சேர்ந்த ஒவ்வொன்றும் சம்பந்தப்பட்ட வரையில்

அது அதிலிருந்து, கடைசியில் ஜீவிக்கிறவரையில் சேட்டிக்க, சுயமாய் நிலைக்கிற ஏதோ ஒன்றில் அது இருக்க வேண்டும். அது எதில் ஜீவிக்கிறதோ அது காரியமென்கிற இறுதியான முடிவாயிருக்கிறது.

169. இந்த மூன்று பொருள்களும், அதாவது முடிவு, காரணம், காரியம் என்பவைகள் சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தில், மிக பெரியதிலும் மிக சிறியதிலும், இரண்டிலும் இருக்கின்றன. இந்த மூன்றும், சதாகாலம் ஆண்டவனுயிருக்கிற சிருட்டிகர்த்தாவாகிய கடவுளிடத்தில் இருக்கிறபடியினால், சிருட்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தில் மிகவும் பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும் இந்த மூன்றும் இருக்கின்றன. ஆனால் அவர் முடிவற்றவரா யிருக்கிறபடியினாலும், முடிவற்ற பொருள்கள் முடிவற்றவரிடத்தில், 17 முதல் 22 வது பிரிவு வரையில் மேல் சொல்லியபடி வேருக ஒன்ருயிருக்கிறபடியினாலும், அவரிடத்திலிருக்கும் இந்த மூன்றும், அவரிடமிருக்கும் முடிவற்ற பொருள்களும் வேருக ஒன்ருயிருக்கின்றன. அதனால்தான், அவரிட சொரூபத்திலிருந்து சிருஷ்டிக்கப்பட்டதும், உபயோகங்களை யோசிக்குங்கால் அவரிட பிரதிமையாயிருக்கிறதுமான பிரபஞ்சமானது, பொதுவாகவும் சிறப்பாகவும் அதைச் சேர்ந்த எல்லாபொருள்களிலும், இந்த மூன்றையும் உடைத்தாயிருக்கிறது.

170. சிருஷ்டிகர்த்தாவும், பிரபஞ்சமும், சதாகாலம் ஐக்கியப்பட வேண்டுமென்பது, சிருஷ்டியிலுள்ள எல்லாப் பொருள்களின் முழு சங்கற்பமாயிருக்கிறது. அவரிட தெய்வத்தன்மை தன்னிலேயே யிருப்பதுபோல இருக்கவும், அவ்விதமாக அதில் அது வசிக்கவும் பதார்த்தங்கள் இருந்தாலொழிய இது முடியாது. இந்த பதார்த்தங்கள் அவரிட

இருப்பிடங்களாகவும், மாளிகைகளாகவும் இருக்கவேண்டு மானால், அவரிட அன்பையும் ஞானத்தையும் தாங்களே ஏற்றுக்கொள்பவர்களாயிருக்க வேண்டும்; இம்மாதிரியாக, தாங்களே, சிருஷ்டிகர்த்தாவரையில் உயர்த்திக்கொள்ளக் கூடியவர்களாகவும், தாங்களே அவரோடு ஐக்கியமாகிறவர் களாகவும் அவைகள் இருக்கவேண்டும். இந்த பரஸ்பரம் இல்லாவிட்டால், எந்த ஐக்கியமும் உண்டாகாது. தாமாக தாங்களே உயர்த்திக்கொண்டு, ஐக்கியப்பட சக்தியுள்ள மனிதர்கள் இந்த பதார்த்தங்களா யிருக்கிறார்கள். மனி தர்கள் அவ்வித பொருள்களென்பதும், அவர்கள் தாமாகவே தெய்வத்தை ஏற்றுக்கொள்பவர்களென்பதும் மேலே அநேக தடவைகளில் காண்பிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஐக்கியத் தின் மூலமாய், ஆண்டவர் தானே சிருட்டித்த ஒவ்வொரு பொருளிலும் இருக்கிறார். ஏனென்றால் எல்லாம் முடிவாய் மனிதனுக்காக சிருட்டிக்கப்பட்டது. ஆகையினால், சிருட் டிக்கப்பட்ட எல்லா பொருள்களின் உபயோகங்கள், கடைசி யான பொருள்களிலிருந்து மனிதன் வரையிலும், மனிதன் மூலமாய், தாங்கள் உற்பத்தியாகிற சிருட்டி கர்த்தாவாகிய கடவுள் வரையில் மேலே 65 முதல் 68 வது பிரிவுகள் வரை யில் காண்பித்தபடி படிப்படியாய் உயர்கின்றன.

171. இந்த மூன்றும் சிருஷ்டி கர்த்தாவாகிய ஆண்டவ னில் கொஞ்சம் முன்னே சொல்லியபடி இருக்கிறபடியினாலும், தெய்வமானது, 69 முதல் 72 வது பிரிவுகள் வரையில் கூறிய படி இடவரைக்குட்படாமல் எல்லாவிடத்திலுமிருக்கிறபடியி னாலும், 77 முதல் 82 வது பிரிவுகள் வரையில் கூறியபடி மிகப் பெரியதிலும் மிகச் சிறியதிலும் ஒரேமாதிரி யிருக்கிறபடியினா லும், சிருட்டியானது முடிவு, காரணம், காரியங்களாயிருக்கிற

இந்த மூன்று பொருள்களினுல் இறுதியான முடிவுக்கு இடை விடாமல் செல்லுகிறது. ஆகையினுல், சிருட்டிக்கப்பட்ட பிரபஞ்சம், அதன் இறுதியான முடிவுக்கு சாதாரணமாகப் போவதில், தாரதம்மியத்தினுல் நடுமுடிவாயிருக்கிறதென்று விசதமாகிறது. ஏனென்ருல், பூமியிலிருந்து உபயோகங்களின் வடிவங்கள், சிருட்டிகர்த்தாவாகிய கடவுளால் இடைவிடாமல் அவைகளின் கிரமப்படி, சரீரம் சம்பந்தப்பட்ட வரையில் பூமியிலிருந்து கூட உற்பத்தியான மனிதன் வரையில் உண்டாக்கப்படுகின்றன. ஆண்டவரிடமிருந்து அன்பையும் ஞானத்தையும் ஏற்றுக்கொள்வதால், மனிதன் இன்னும் உயர்த்தப்படுகிருன்; அவன் அன்பையும் ஞானத்தையும் அடைய எல்லாவழி வகைகளும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன; அவன் இஷ்டப்பட்டாலேயே, அவைகளை அவன் பெற்றுக்கொள்ளும்படியாக உருவாக்கப்பட்டிருக்கிருன். முன் சொன்னதிலிருந்து, சிருட்டியின் நோக்கம் இறுதியான பொருள்களிலிருக்கிறதென்று, பொதுவாய் மட்டும் அறிந்துகொள்ளலாம்; எல்லா பொருள்களும் சிருஷ்டிகர்த்தாவிடம் திருப்பிப்போகவும், ஐக்கியம் உண்டாகவும் அந்த சங்கற்பமானது இருக்கிறது.

172. இறுதியான முடிவுகள் என்றுசொல்லப்பட்ட எல்லா காரியசித்தியிலும், சிருஷ்டிகர்த்தாவாகிய ஆண்டவராயிருக்கிற முதன்மையான முடிவிலிருந்து, மனிதன் கடவுளோடு சேர்தலாயிருக்கிற இறுதியான முடிவுவரையில் எல்லாவற்றிலும் தொடர்ச்சியான கோவையில் திரும்பவும் முதல் முடிவுகளாகின்றன என்கிறதிலிருந்து கூட முடிவு, காரணம், காரியம் என்கிற இந்த மூன்றும் சிருஷ்டிக்கப்பட்ட எல்லா பொருள்களிலும் பொதுவாகவும் சிறப்பாகவும் இருக்கின்றன

வென்பது விசதமாகிறது. முழுமையும் சேட்டிக்கும் சக்தி யில்லாதபடி எந்த பொருளும் அவ்வளவு அசலனமாகவும், உயிரற்றதாகவும் இல்லை என்கிறதிலிருந்து எல்லா கடைசி யான முடிவுகளும் திரும்பவும் முதல் முடிவுகளாகின்றன வென்பது தெளிவாயிருக்கிறது. மணலிலிருந்து கூட, பிர கிருதியானது ஏதாகிலும் ஒன்றை உற்பத்திசெய்ய உதவுகிற தும், அம்மாதிரியாக ஏதாகிலும் ஒன்றை காரியப்படுத்து கிறதுமானவைகளை வெளியில் விடுகிறது.

---

# மூன்றும் பாகம்.

## காரண காரிய வேற்றுமைகள்.

விண்ணுலகத்தில் காற்றுகளும், நீர்களும், தரைகளும் ஸ்தூல லோகத்திலிருப்பதுபோல இருக்கின்றன; ஆனால் முன்கூறியவைகள் சூக்கும மானவைகள், பின்கூறியவைகள் ஜடமானவைகள்.

173. விண்ணுலகத்திலுள்ள எல்லா பொருள்களும் சூக்குமமான தென்கிறதும், ஸ்தூல லோகத்தின் எல்லா பொருள்களும் ஸ்தூலமான தென்கிறதுமாகிய இந்த பேதத்துடன் மாத்திரம், விண்ணுலகமும் மண்ணுலகமும் ஒரே மாதிரி இருக்கின்றன வென்பது முன்சென்ற பக்கங்களில் சொல்லப்பட்டு, சுவர்க்கமும் நரகமும் எனும் நூலில் தெளிவாய் கூறப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு உலகங்களும் ஓரேமாதிரி யானதாயிருப்பதால், இரண்டிலும், ஆகாயங்களும் நீர்களும், தரைகளு மிருக்கின்றன; அவைகள், அவைகளாலும் அவைகளிலிருந்தும், எல்லா பொருள்களும், முடிவற்ற பொதுப் பேதங்களோடு உற்பத்தியாகிற பொதுப் பொருள்களாகின்றன.

174. சூக்கும ஆகாயங்களென்றும் காற்றுகளென்றும் சொல்லப்படுகிற காற்றுகளில், விண்ணுலகத்தி லுள்ளவைகள் சூக்குமமான தென்கிறதும், ஸ்தூல லோகத்திலுள்ளவைகள் ஜடமென்கிறதுமாகிய இந்த வித்தியாசத்துடன் விண்ணுலகம் மண்ணுலகமாகிய இரண்டு உலகத்திலும் அவைகள் ஒரே மாதிரி யிருக்கின்றன. ஆண்டவரிட இச்சா சத்தியினிடவும் ஞான சக்தியினிடவும், முதல் புறப்படும் பொரு

ளாகிய சூரியனிடமிருந்து உண்டாகிறபடியினுலும், அவரிட மிருந்து அன்பாயிருக்கிற தெய்வ நெருப்பையும், ஞானமா யிருக்கிற பரஞ்சோதியையும், தாமே ஏற்றுக்கொண்டு, தேவர் கள் இருக்கப்பட்ட சுவர்க்கங்களுக்கு இவைகளைக் கொண்டு போகிறபடியினுலும், அங்கேயிருக்கும் மிகப் பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும் அந்த சூரியன் இருக்கச் செய்வதினுலும், முன் கூறியவைகள் சூக்குமமான வைகளா யிருக்கின்றன. சூக்குமமான ஆகாயங்கள் அந்த சூரியனிடமிருந்து உற் பத்தியாகிற பிரத்தியேகமான பொருள்கள் அல்லது சின்னஞ் சிறிய உருவங்களா யிருக்கின்றன; அவைகள் ஒவ்வொன் றும் தனித்தனியே அந்த சூரியனை ஏற்றுக்கொள்வதால், அவ்வளவு அநேக பொருள்களுக்கும் அல்லது உருவங்களுக் கும் பிரித்துகொடுக்கப்பட்டும், அவைகளால் மூடப்பட்டும், இந்தப் போர்வைகளால் பதப்படுத்தப்பட்டு மிருக்கிற அந்த சூரியன் நெருப்பு, சுவர்க்கத்திலுள்ள தேவர்களிடவும், சுவர்க் கத்தின் கீழுள்ள ஆவிகளிடவும் அன்பிற்குத் தகுதியான சூடாகிறது. சூரியனிட வெளிச்சத்தோடும் விஷயம் அம்மா திரியே இருக்கிறது. ஸ்தூல காற்றுகள்கூட ஸ்தூலலோக சூரி யனிடம் உற்பத்தியாகும் பிரத்தியேகப் பொருள்களாகவும், சின்னஞ்சிறிய உருவங்களாகவும் இருக்கின்றன என்கிற இந்த விஷயத்தில் சூக்குமமான காற்றுகளுடன் ஒரேமாதிரி யிருக் கின்றன; அவைகள் அதனுடன் சூரியனை தனியாய்ப் பெற்று, தம்மிடமே அதன் நெருப்பை சேகரித்து, பதப்படுத்தி, மனி தர்கள் வாசஸ்தானமாகிய பூமிக்கு சூடாககொண்டு போகி றது ; ஒளியுடனும் விஷயம் அம்மாதிரியே யிருக்கிறது.

175. சூக்குமம ஆகாயங்கள் பரஞ்சோதிக்கும், பரஞ் சுடருக்கும், இம்மாதிரியாக அன்பிற்கும் ஞானத்திற்கும் இவை

களை தம்மிடமே அமையப் பெற்றிருப்பதால் ஆசயங்களென் கிறதும், அப்படி யிருக்கையில் ஸ்தூல காற்றுகள் பரஞ்சோ திக்கும் பரஞ்சுடருக்கும் ஆசயங்களாயில்லாமல், மேல்காண் பித்தபடி,சுயமாய் உயிரில்லாத தங்களிட சொந்த சூரியனிட நெருப்புக்கும் ஒளிக்கும் ஆசயங்களாயிருக்கின்றன என்பது மாகிய இதுதான் சூக்கும காற்றுகளுக்கும் ஸ்தூல காற்று களுக்கும் உள்ள வித்தியாசமாயிருக்கிறது ; ஆகையினால், அவைகளில் உள்ளுக்குள்ளாய் தேவலோகத்து சூரியனிடமிரு ந்து யாதொன்றுமில்லை. அப்படி யிருந்தாலும், தேவலோகத்து சூரியனிட மிருந்து வருகிற சூக்கும காற்றுகளால் அவைகள் சூழப்பட்டிருக்கின்றன. சூக்கும காற்றுகளுக்கும் ஸ்தூல காற்றுகளுக்கும் இதுதான் வித்தியாசமென்பது, தேவர்களின் ஞானத்திலிருந்து அறியப்படுகிறது.

176. தேவலோகத்தில், ஸ்தூலலோகத்தில் போல சம மாய் ஆகாயங்கள் இருக்கின்றன வென்பது, தேவர்களும் மனி தர்களும் சுவாசிக்கிறார்களென்பதும், மேலும் ஸ்தூலலோகத்தி லுள்ள மனிதர்களைப்போல் சமமாய் பேசுகிறார்களென்பதும், செவி கொடுக்கிறார்களென்பதும், அம்மாதிரியே, காற்று என்று சொல்லப்படும், இறுதியான வாயுவின் மூலமாய் சுவா சித்தலும், பேச்சும், செவி கொடுத்தலும் சம்பவிக்கின்றன என்பதுமாகிய, இந்த ஆலோசனைகளால் விசதமாகிறது. தேவர்களும் ஆவிகளும் ஸ்தூல லோகத்திலிருக்கும் மனிதர் கள்போல் சமமாய் பார்க்கிறார்க ளென்பதிலிருந்தும், காற்றை விட அதிக சுத்தமான ஒரு வாயுவின் மூலமாய் தவிர திருஷ்டி கிடையாதென்கிற திலிருந்தும் கூட இது விசதமா கிறது. தேவர்களும் ஆவிகளும் ஸ்தூல லோகத்திலிருக்கும் மனிதர்களைப்போல் சமமாய் நினைத்து சேட்டிக்கப் படுகிறார்

களென்பதிலிருந்தும், சிந்தனையும் சேட்டித்தலும் இன்னும் அதிக சுத்தமான ஆகாயங்கள் மூலமாய் தவிர கிடையாதென்பதிலிருந்தும் கூட இது விசதமாகிறது. கடைசியாய், தேவர்களிடவும், ஆவிகளிடவும், சரீரங்களுக்கு சேர்ந்த உள்ளும் புறம்பான எல்லா பொருள்களும், புறம்பான பொருள்கள் காற்றினாலும், உள்ளான பொருள்கள் (Ether) ஈதர் என்னும் சூக்கும ஆகாயத்தினாலும் இணைக்கப்பட்டிருக்கின்றன வென்பதிலிருந்தும் கூட இது விசதமாகிறது. இந்த காற்றுகள் சுற்றிலும் அமுக்காமலும் சேட்டிக்காமலும் போய்விட்டால், சரீரத்தின் உள்ளானதும் புறம்பானதுமான உருவங்கள் இல்லாமல் போய்விடுமென்பது விசதமாகிறது. தேவர்கள் சூக்கும மானவர்களான படியினாலும், அவர்களின் சரீரங்களின் பாகங்கள் முழுமையும் ஆகாயங்களினால், சம்பந்தத்திலும், உருவத்திலும், ஒழுங்கிலும் இணைக்கப்பட்டிருப்பதினாலும், இந்த ஆகாயங்கள் கூட சூக்குமமானதாயிருக்கிறதென்று பின் தொடருகிறது ; ஆண்டவரிட இச்சா சக்தியினிடவும், ஞானசக்தியினிடவும், முதல் வெளிப்படும்பொருளாயிருக்கிற தேவலோக சூரியனிடமிருந்து அவைகள் உண்டாகிறபடியினால்,அவைகள் சூக்குமமானவைகளா யிருக்கின்றன.

177. தேவலோகத்து நீர்களும், பூமிகளும், சூக்குமமானவைகளென்கிற இந்த வித்தியாசத்தோடு, தேவலோகத்தில், ஸ்தூல லோகத்திலிருப்பதுபோல், நீர்களும், அம்மாதிரியே தரைகளும் இருக்கின்றன வென்பது மேலே சொல்லப்பட்டது. மேலும் சுவர்க்கமும் நரகமும் எனும் நூலில் காண்பிக்கப்பட்டிருக்கிறது. இவைகள் சூக்குமமாயிருப்பதினால், ஸ்தூல லோகத்திலுள்ள நீர்களும் தரைகளும் அவைகளிட உலகத்து சூரியனிட சூட்டினாலும் ஒளியினாலும், அதன் ஆகாயங்களால்

சேட்டிக்கப்பட்டு மாற்றப்படுவதுபோல், அதிலிருந்து வரும் ஆகாயங்கள் மூலமாய் ஞான சூரியனிட சூட்டினாலும் ஒளியினாலும் அவைகள் சேட்டிக்கப்பட்டு மாற்றப்படுகின்றன.

178. காற்றுகளும், நீர்களும், தரைகளுமாகிய இந்த மூன்றின் மூலமாயும் அவைகளிலிருந்தும், பொதுவாகவும், சிறப்பாகவும் எல்லா பொருள்களும் முடிவற்ற பேதத்தில் உண்டாகிற பொதுப்பொருள்களானபடியினால், அவைகள் இவ்விடத்தில் சொல்லப்பட்டன. ஆகாயங்கள் சேட்டிக்கும் சக்திகளாகவும், நீர்கள் நடுசக்திகளாகவும், தரைகள், எல்லா காரிய சித்திகளும் உண்டாகிற செயலற்ற சக்திகளாகவுமிருக்கின்றன. இந்த மூன்றும் தங்கள் வரிசைகளில் அவ்வித சக்திகளென்பது, சூரியனாக ஆண்டவரிட மிருந்து வருகிறதும், அவைகளை சேட்டிக்கச்செய்கிறதுமான உயிராலேயே உண்டாகிறது.

**அன்பினிடவும் ஞானத்தினிடவும் தாரதம்மியங்கள் இருக்கின்றன; ஆகையினால் சூட்டினிடவும் ஒளியினிடவும், அதனுடன் ஆகாயங்களின் தாரதம்மியங்களு மிருக்கின்றன.**

179. ஒவ்வொரு சிருட்டிக்கப்பட்ட பொருளிலும், இம்மாதிரியாக ஒவ்வொரு உருவத்திலும் தாரதம்மியங்கள் இருக்கிறபடியினால், தாரதம்மியங்களாய் இருக்கின்றனவென்றும், அதனுடன் அவைகள் என்னவென்றும், அவைகளின் சுபாவம் என்னவென்றும் தெரிந்திருந்தாலொழிய, பின்வரப்பட்டவைகள் கிரகிக்கப்பட முடியாது. ஆகையினால் தேவதா சம்பந்தமான ஞானத்தைக் குறித்த இந்த பாகம் காரிய வேற்றுமைகளை குறித்துப் பேசும். அன்பினிடவும் ஞானத்தினிடவும் வேற்றுமைக ளிருக்கின்றனவென்று மூன்று சுவர்க்கங்களின் தேவர்களிடமிருந்து வெளிப்படையாய்த் தோன்றும். தாங்கள் சேர்ந்து இருக்கக்கூடாதபடி, மூன்

ருவது சுவர்க்கத்து தேவர்கள், இரண்டாவது சுவர்க்கத்து தேவர்களை விடவும், பின் கூறியவைகள் கடைசியான சுவர்க் கத்து தேவர்களை விடவும், அன்பிலும் ஞானத்திலும் அவ்வ ளவு மேற்பட்டு இருக்கிறார்கள்; அன்பினிடவும் ஞானத்தினி டவும் வேற்றுமைகள் அவர்களை விசேஷித்து அறிந்து பிரிக் கின்றன. அதனால்தான், தாழ்ந்த சுவர்க்கத்து தேவர்கள், உயர்ந்த சுவர்க்கங்களின் தேவர்களிடம் மேல்போக சக்தியற்ற வர்களா யிருக்கிறார்கள். அப்படி மேல்போகவிட்டாலும், அவர்கள் அவர்களையும் அல்லது அவர்களைச் சூழ்ந்திருக்கும் எதையும் பார்க்கிறதில்லை. அவர்களிட அன்பும் ஞானமும், புலப்பாட்டிற்கு மேல் இருக்கிற மிகவும் உயர்ந்தபடியிலிருக் கிறதென்பது, அவர்கள் அவைகளை ஏன் பார்க்கிறதில்லை என் பதற்கு காரணமாயிருக்கிறது. ஏனென்றால், ஒவ்வொரு வானேனும் அவனிட சொந்த அன்பாகவும், அவனிட சொந்த ஞானமாகவும் இருக்கிறான். அன்பேயாகவும், ஞானமேயாகவு மிருக்கிற கடவுளானவர் ஒரு மனிதனாயிருப்பதால், அன்பா னது ஞானத்தோடு சேர்ந்து தன்னிட உருவத்தில் மனிதனா யிருக்கிறது. கடைசியான சுவர்க்கத்து தேவர்கள், மூன்று வது சுவர்க்கத்து தேவர்களிடம் எப்படி ஏறி மேல்போனார்க ளென்பதைப்பார்க்க எனக்கு சிலசமயங்களில் அருள்செய்யப் பட்டது. அவர்கள் அங்கே பாடுபட்டுப் போனபோது அவர் கள் யாரையும் பார்க்கிறதில்லை என்றும், என்றாலும், இந்த தேவர்கள் மத்தியில் இருந்ததாகவும் அவர்கள் முறையிடு வதை நான் கேட்டிருக்கிறேன். அவர்களிட அன்பும் ஞான மும் அவர்களுக்கு புலப்படாதபடியினாலும், அன்பும் ஞான மும் ஒரு வானவனை ஒரு மனிதனைப்போல் தோன்றசெய்கிற படியினாலும், அந்த தேவர்கள் அவர்கள் கண்களுக்குத்

தோன்றவில்லையென்று பின்னிட்டு அவர்களுக்கு தெரிவிக்கப் பட்டது.

180. அன்பினிடமும்,ஞானத்தினிடமும் தாரதம்மியங் கள் இருக்கின்றனவென்பது, மனிதர்களிட அன்பையும் ஞானத்தையும் நோக்குமிடத்து, தேவர்களிட அன்பிலிருந் தும் ஞானத்திலிருந்தும், அதிக தெளிவாய் வெளியாகிறது. தேவர்களின் ஞானமானது தாரதம்மியத்தினால் சொல்லமுடி யாதென்று நன்றாய் தெரிந்திருக்கிறது; மனிதர்கள் ஸ்தூல அன்பிலிருக்கும்போது அவர்களால் அது கிரகிக்கமுடியா தென்பது, பின்வருவதில் அறிந்து கொள்ளலாம். அது அதிக உயர்ந்தபடியி லிருக்கிறதென்பது, அது ஏன் சொல்ல முடி யாததாயும் கிரகிக்க முடியாததாயும் தோன்றுகிறதென்பதற் குக் காரணமாயிருக்கிறது.

181. அன்பினிடவும் ஞானத்தினிடவும் தாரதம்மியங் களிருப்பதால், சூட்டினிடவும் வெளிச்சத்தினிடவும் தாரதம் ம்யங்கள் கூட இருக்கின்றன. சூடு என்பதினாலும் ஒளி என்பதினாலும், சுவர்க்கங்களில் தேவர்களுக்கு இருக்கிறது போலவும், மனிதர்களுக்கு தங்களிட மனதுக்கு சேர்ந்த உள் ளான பொருள்களில் இருக்கிறது போலவும், சூட்சும சூடு என்றும், ஒளி என்றும், அர்த்தம் கொள்ளப்படுகின்றன; ஏனென்றால், மனிதர்கள் தேவர்களைப்போல், அன்பின் ஒரு சூடும், ஞானத்தின் ஒரு ஒளியையும் உடைத்தாயிருக் கிறார்கள். சுவர்க்கங்களில், விஷயம் பின்வருமாறு இருக் கிறது. தேவர்களிடம் அன்பின் குணமும் அளவும் இருக்கி றதுபோல, அவர்களிட சூட்டின் குணமும் அளவும் இருக் கின்றன; அம்மாதிரியே, அவர்கள் ஞானமிருப்பதுபோல் அவர்கள் ஒளியும் இருக்கிறது; அவர்களிடம் அன்பு

சூட்டிலும், ஞானம் ஒளியிலும் மேல் சொல்லியபடி இருக்கிறதென்பது காரணமாயிருக்கிறது. வானோர் அந்த சூட்டை உணருகிறார்களென்பதும், அந்த ஒளியை பார்க்கிறார்களென்பதும்,மனிதர்கள் ஸ்தூலமான சூட்டையும் ஒளியையும் அனுபவிக்கிறபடியினாலும், அப்படியிருக்கும்போது, அன்பின் ஒரு இன்பத்தின் மூலமாய் தவிர, அவர்கள் ஞான சூட்டை உணராத படியினாலும்,உண்மையின் ஒரு புலப்பாட்டின் மூலமாய்த் தவிர, அவர்கள் சூட்சும ஒளியை பார்க்காதபடியினாலும், மனிதர்கள் அப்படிச் செய்கிறதில்லை என்பதுமாகிய இவ்வித்தியாசத்தோடு, பூமியின் பேரிலிருக்கும் மனிதர்களோடு விஷயம் அம்மாதிரியே இருக்கிறது. மனிதனுக்கு, ஸ்தூல சூட்டிலும் ஒளியிலும் இருக்கும்போது, அவனுக்குள்ளிருக்கும் சூக்கும சூட்டினிடவும் ஒளியினிடவும் யாதொன்றும் தெரியாதபடியினாலும், சூக்குமலோகத்து அனுபவத்தின் மூலமாய்த்தவிர இது அறிந்துகொள்ள முடியாதபடியினாலும், இங்கே முதலில், தேவர்களும் அவர்களிட சுவர்க்கங்களுமிருக்கிற சூட்டைக் குறித்தும், ஒளியைக்குறித்தும் சொல்லப்பட வேண்டும். இந்த விஷயத்தைப்பற்றிய விவேகமானது, இந்த வழியில் உண்டாகும் ; வேறு வழியில் உண்டாகாது.

182. ஆனால், சூக்குமசூடு பொருந்துகிற அன்பு, சிந்தனையின் பாவனையில் இவ்விதமாய் உட்படாததால், சூக்கும சூட்டின் வேற்றுமைகள் அனுபவத்திலிருந்து விவரிக்க முடியாது ; ஆனால், சிந்தனைக்குச் சேர்ந்த ஒளியானது அந்த பாவனைகளுக்கு உட்படுகிறபடியினால், சூக்கும சுடரின் வேற்றுமைகள் விவரிக்கக் கூடும். ஒளியின் தாரதம்மியங்களிலிருந்து, சூக்கும சூட்டின் தாரதம்மியங்கள் கூட கிரகிக்கக்கூடும் ; ஏனென்றால், அவைகள் ஒரே விதமான அந்த

ஸ்த்தில் இருக்கின்றன. ஆகவே, தேவர்கள் இருக்கும் சூக்கும சுடரைப் பற்றி, அதை என்னிட கண்களால் பார்க்க எனக்கு அருள் செய்யப்பட்டது. அதிகம் உயர்ந்த சுவர்க்கங்களி லிருக்கும் தேவர்களோடு இருக்கும் ஒளியானது, உரைபனி யின் வெண்மையைக் கொண்டு கூட சொல்ல முடியாதபடி அவ்வளவு வெண்மையாகவும், இந்த உலகத்து சூரியனிட கிரணங்களைக் கொண்டு கூட சொல்லக் கூடாதபடி அவ்வளவு சிவப்பாகவும் கூட இருக்கிறது. சுருங்கச் சொல்லில், அந்த வெளிச்சமானது பூமியின் பேரிலிருக்கும் நடுப்பகல் வெளிச் சத்துக்கு ஆயிரமடங்கு அதிகரிக்கின்றது. ஆனால், தாழ்ந்த சுவர்க்கங்களிலிருக்கும் தேவர்களோடு இருக்கும் வெளிச் சத்தை கொஞ்சமட்டும் தாரதம்மியம் பார்த்து விவரிக்கலாம்; என்றாலும் அது நம்ம உலகத்து மிகவும் அதிகமான வெளிச் சத்துக்கு அதிகரிக்கிறது. உயர்ந்த சுவர்க்கங்களிலிருக்கும் தேவர்களின் வெளிச்சம் ஏன் விவரிக்க முடியாதென்பதற்கு காரணம், அவர்களிட வெளிச்சம் அவர்கள் ஞானத்துடன் ஒன்றுபடுகிறது என்பதாயிருக்கிறது. அவர்கள் ஞானமானது, மனிதர்கள் ஞானத்தை நோக்குங்கால், வாக்குக்கு எட்டாத தாயிருக்கிற படியினால், அம்மாதிரியே கூட அவர்களிட ஒளி யானது விவரிக்க முடியாததாயிருக்கிறது. இந்த சில கார ணங்களால், ஒளியின் அந்தஸ்துகளிருக்கின்றன வென்று தோன்றும். ஞானமும் அன்பும் ஒரே படியிலிருப்பதினால், சூட்டின் ஒரே மாதிரியான அந்தஸ்துகளிருக்கின்றன வென்று ஏற்படுகிறது.

183. ஆகாயங்கள் சூட்டையும் ஒளியையும் ஏற்றுக்கொள் பவைகளாகவும், அடக்கிக் கொண்டிருப்பவைகளாகவு மிருப் பதால், சூட்டிற்கும் ஒளிக்கும் எவ்வளவு வேற்றுமைகள் இருக்

கின்றனவோ, அவ்வளவு வேற்றுமைகள் ஆகாயங்களுக்கும் இருக்கின்றனவென்றும், அதனுடன், அன்பிற்கும் ஞானத்துக்கும் எவ்வளவு தாரதம்மியங்கள் இருக்கின்றனவோ, அவ்வளவு இருக்கின்றவென்றும், ஏற்படுகிறது. அநேக ஆகாயங்கள் இருக்கின்றனவென்பதும், இவைகள் அந்தஸ்துகள் வித்தியாசத்தினால் ஒன்றுக்கொன்று வேறு வேறானதென்பதும், தேவ லோகத்தில் அதிக அனுபவத்தால் எனக்கு வெளிப்படுத்தப்பட்டது; தாழ்ந்த சுவர்க்கங்களிலிருக்கும் தேவர்கள் உயர்ந்த தேவர்கள் இருக்குமிடங்களில் சுவாசிக்க சக்தியற்றவர்களாயிருக்கிறார்களென்பதிலிருந்தும் ஜலத்திலிருந்து காற்றுக்கும் அல்லது காற்றிலிருந்து ஈதர் எனும் சூக்கும ஆகாயத்திற்கும் கொண்டுவரப்பட்ட உயிருள்ள பிராணிகள் விஷயத்திலிருப்பதுபோல, அவர்கள் கஷ்டத்துடன் சுவாசிக்கிறார்களென்பதிலிருந்தும், முக்கியமாய் எனக்கு வெளிபடுத்தப்பட்டது. சுவர்க்கங்களுக்கு கீழே இருக்கும் ஆவிகள்கூட, மூடுபனி மேகத்தில் இருப்பது போல தோன்றுகிறார்கள். அநேக ஆகாயங்கள் இருக்கின்றனவென்பதும், அந்தஸ்துகளால் ஒன்றுக்கொன்று வேறு வேறானதாயிருக்கிறதென்பதும் மேலே 170-வது பிரிவில் பார்க்கலாம்.

**காரியப்பாடுகள் உயர்ந்த காரியப்பாடுகளென்றும் அகல காரியப்பாடுகளென்றும் இரண்டு விதங்களிருக்கின்றன.**

184. காரியப்பாடுகளை குறித்த அறிவு, பதார்த்தங்களின் காரணங்களை திறப்பதற்கும், அவைகளில் பிரவேசிப்பதற்கும், ஓர் திறவுகோல் போலிருக்கிறது. இந்த அறிவில்லாவிட்டால், காரணத்தைப்பற்றி ஒன்றும் தெரிந்து கொள்ள முடியாது. ஏனென்றால், அது இல்லாவிடில், இரண்டு உலகங்களின் பொருள்களும், கண்ணால் பார்ப்பது தவிர, அவைகளில் வேறொன்றும் இல்லாதது போல், அவ்வித ஓரே

தன்மையுடையதாய் தோன்றுகின்றன ; என்றாலும், உள்ளே மறைந்து கிடக்கும் பொருள்களை நோக்குமிடத்து, இம்மாதிரி யாக பார்க்கப்பட்டது, ஒன்றை, ஆயிரத்துடனும், பதினாயிரத் துடனும் ஒப்பிட்டது போலிருக்கிறது. பார்க்கப்படாத உள்ளான பொருள்கள், விருத்திகளைக் குறித்த அறிவில்லா மல், எந்த விதத்திலும், வெளிப்படுத்த முடியாது. ஏனென் றால், புறம்பான பொருள்கள் உள்ளான பொருள்களுக்கு செல்லுகின்றன ; இவைகளிலிருந்து வளர்ச்சிகள் மூலமாய் அந்தரங்கமான பொருள்களுக்கு செல்கின்றன ; அப்படி செல்லுதல்,தொடர்ச்சியான வளர்ச்சிகள் மூலமாய் அல்லாமல் பிரத்தியேக வளர்ச்சிகளால் ஆகிறது. தொடர்ச்சி விருத்திகள் தடித்ததிலிருந்து மென்மையானதுக்கும் அல்லது அடர்த்தியா னதிலிருந்து அரிதானதற்கும் செல்லும்போது குறைதல்போல் இருக்கின்றன; அல்லது அதைப் பார்க்கிலும், ஒளியானது இருட்டிற்கும்,சூடு குளிர்ச்சிக்கும் செல்லுதல்போல் மென்மை யானதிலிருந்து தடித்ததற்கும், அல்லது அரிதானதிலிருந்து அடர்த்தியானதற்கும் செல்லும்போது வளர்தல் போலும் இருக்கின்றன. ஆனால், வேறுவேறாகும் விருத்திகள் முழுமை யும் வேறுமாதிரியாயிருக்கின்றன; முந்தினதும் பிந்தினதும், கடைசியானதுமான பொருள்களைப் போலவும்,முடிவு காரணம் காரியம் என்பது போலவும் அவைகள் இருக்கின்றன. முந்தி யதும், பிந்தியதும், இறுதியானதும் ஒவ்வொன்றும் தம்மில் சுயம்புவாயிருப்பதாலும், அப்படியிருந்தும், சேர்த்து பார்த் தால் ஒன்றாகிறபடியினாலும், இந்த காரியப்பாடுகள் வேறான வைகள் என்று சொல்லப்படும். மிகவும் உயர்ந்ததிலிருந்து மிக வும் தாழ்ந்தது வரையிலும், அல்லது சூரியனிடமிருந்து பூமி வரையிலும் இருக்கும் ஆகாயங்கள், ஈதர் எனும் சூக்கும

ஆகாயமும்,காற்றுகளும் அவ்வித அந்தஸ்துகளாக வேருக்கப்ப ட்டிருக்கின்றன; அவைகள் கலப்பற்றவைகள் போலவும், இவை கள் மொத்தம் போலவும், மறுபடியும் சேர்த்துப்பார்த்தால் அநேகபொருள்கள் சேர்ந்தவை என்று சொல்லப்படுகின்ற,பின் சொன்னவைகளின் மொத்தம் போலவும்நிற்கின்றன; அவை கள் பிரத்தியேகமா யிருக்கிறபடியினுல் இவைகளுக்கு வேருன காரியப்பாடுகள் என்று சொல்லப்படுகின்றன. அவைகள் உய ரத்தின் காரியப்பாடுகள் என்பதிஞல் தெரிந்துகொள்ளப்படு கிறது; ஆனுல் முன்கூறிய காரியப்பாடுகள் தொடர்ச்சியாய் வ்ளர்கிறபடியினுல், தொடர்ச்சியானதா யிருக்கின்றன. அவை கள் அகலத்தின் காரியப்பாடுகள் என்பவைகளிஞல் தெரிந்து கொள்ளப்படுகின்றன.

185. தேவலோகத்திலும் ஸ்தூலலோகத்திலும் பொது வாகவும் சிறப்பாகவும் இருக்கும் எல்லா பொருள்களும், வேறுவேருகும் காரியப்பாடுகளாலும், அதேகாலத்தில் தொடர் ச்சியான காரியப்பாடுகளாலும் அல்லது உயரக் காரியபாடு களாலும் அகலக் காரியப்பாடுகளாலும், கூடி நிலைத்திருக்கின் றன. வேருகும் காரியப்பாடுகளாலாகிய அந்த அளவு உய ரம் என்று சொல்லப்படும், தொடர்ச்சியான காரியப்பாடுகளா லாகிய அளவு அகலமென்று சொல்லப்படும்; கண்பார்வையை நோக்குமிடத்து, அவைகளின் நிலை பெயரை மாற்றுகிறதில்லை. இந்த காரியப்பாடுகளைக் குறித்த அறிவு இல்லாமல், மூன்று சுவர்க்கங்களுக்கும் உள்ள பேதத்தைப்பற்றியும், அல்லது அங் கிருக்கும் தேவர்களின் அன்பிற்கும் ஞானத்துக்கும் உள்ள வித்தியாசத்தைப் பற்றியும்,அல்லது அவர்களிருக்கும் சூட்டுக் கும் ஒளிக்கும் உள்ளபேதத்தைப்பற்றியும்,அல்லது பதார்த்தங் கள் சூழப்பட்டிருக்கிறதும், அடங்கி வைக்கப்பட்டிருக்கிறது

மாகிய ஆகாயங்களுக்குள்ளும் உள்ள பேதத்தைப் பற்றியும் யாதொன்றும் தெரிந்துகொள்ள முடியாது. மேலும், இந்த மாற்றங்களைப் பற்றிய அறிவு இல்லாவிட்டால், மனிதரில் மனதின் உள்ளான மனோ சக்திகளுக்குள்ளும் உள்ளபேதத்தைப் பற்றி யாதொன்றும் தெரிந்துகொள்ள முடியாது. ஆகையினால்கூட, சீர்திருத்த விஷயத்திலும், சீர்படுகை விஷயத்திலும் அவர்கள் நிலைமையைக் குறித்தும், அல்லது தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் உள்ள சரீரத்துக்கு சேர்ந்த புறம்பான மனோசக்திகளுக்குள்ளும் உள்ள வித்தியாசத்தைப் பற்றியும் யாதொன்றும் தெரிந்துகொள்ள முடியாது. மேலும், சூக்குமமானதற்கும் ஸ்தூலமானதற்கும் உள்ள பேதத்தைப்பற்றியும், ஆகையினால் காரணகாரிய சம்பந்தத்தைப் பற்றியும் யாதொன்றுமே தெரிந்து கொள்ள முடியாது. உண்மையாகவே, மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் உள்ள உயிரின் எந்த பேதத்தைப் பற்றியும், அல்லது அதிகபூரணமான பிராணிகளுக்கும், குறைந்த பூரணமான பிராணிகளுக்கும் உள்ள பேதத்தைப் பற்றியும், அல்லது விருக்ஷவர்க்கத்தின் உருவங்களிலும், ஸ்தாவர வர்க்கத்தின் பதார்த்தங்களிலும் உள்ள பேதங்களைப் பற்றியும் யாதொன்றும் தெரிந்துகொள்ள முடியாது. இந்த காரியப்பாடுகளைப் பற்றி தெரியாதவர்களுக்கு காரணங்களைக் குறித்து நிர்ணயிக்க முடியாதென்பது இவைகளி லெல்லாமிருந்து விசதமாகிறது; அவர்கள் காரியசித்திகளை மாத்திரம் பார்த்து, அவைகளிலிருந்து காரணங்களை நிர்ணயிக்கிறார்கள்; அது அநேகமாய் காரியங்களோடு தொடர்ச்சியான ஓர்வித அனுமானத்தால் செய்யப்படுகிறது என்றாலும், காரணங்கள், காரியசித்திகளை தொடர்ச்சியினால் அல்லாமல், வேறாகும் தன்மையால் உண்டாக்குகின்றன ; ஏனென்றால்,

காரணம் ஒன்ருயும்,காரியம்வேருென்ருயுமிருக்கிறது. முந்தினதுக்கும் பிந்தினதுக்கும் போலவும், அல்லது உருவாக்குவதற்கும் உருவாக்கப்பட்டதற்கும் போலவும், இந்த இரண்டுக்கும் உள்ளபேத மிருக்கிறது.

186. வேருகும் காரியப்பாடுகள் என்னவென்றும், அவைகளின் சுபாவம் என்னவென்றும, அவைகளுக்கும் தொடர்பு காரியப்பாடுகளுக்கும் பேதம் என்னவென்றும் இன்னும் நன்ருய் கிரகிக்க, உம்பர் உலகங்கள் உதாரணமாகட்டும். மூன்று சுவர்க்கங்கள் இருக்கின்றன, இவைகள் உயர காரியப்பாடுகளால் பேதப்படுகின்றன; ஆகையினுல் ஒரு சுவர்க்கம் மற்றதின் கீழிருக்கின்றது; தலை கீழாயல்லாமல், ஆண்டவனுல், சுவர்க்கங்கள் மூலமாக அவைகளின் ஒழுங்கில் மிகவும் தாழ்ந்த சுவர்க்கத்துக்கு காரியப்படுத்தப்பட்ட உட்பெருக்கினுல் தவிர அவைகள் ஒன்ருேடொன்று சம்பந்தப் படுகிறதில்லை. ஆனுல் ஒவ்வொரு சுவர்க்கமும், சுயமாய், வேருகும் காரியப்பாடுகளால் அல்லாமல், அகலக் காரியப்பாடுகளால் பிரிக்கப்பட்டிருக்கின்றன. மத்தியிலுள்ளவர்கள் ஞான ஒளியிலிருக்கிருர்கள்; ஆனுல் எல்லைகள் வரையில் சுற்றளவிலுள்ளவர்கள், ஞானத்தின் சாயையிலிருக்கிருர்கள். இம்மாதிரியாக, ஞானானது அஞ்ஞானம் வரையில், ஒளியானது சாயையாக குறைவது போல், குறைகிறது. இது தொடர்ச்சியால் சம்பவிக்கிறது. மனிதர்களுடனும் விஷயம் அம்மாதிரியே. அவர்கள் மனங்களுக்குச் சேர்ந்த உள் பாகங்கள், வானோர் உலகங்களைப் போல், அதே எண்ணுள்ள நிலைகளாக விசேஷித்தறியப்படுகின்றன; ஒரு நிலையானது மற்றதற்கு மேலேயிருக்கிறது; ஆகையினுல், மனிதர்களின் மனங்களிட உள் பாகங்கள், வேறு வேருகும் காரியப்பாடுகளால்

அதாவது உயரப்படிகளால், பேதப்படுகின்றன. அதனுல் தான், ஒரு மனிதனுனவன், அவன் ஞானத்தின் அளவுக்கு தக்கபடி, மிகவும் தாழ்ந்த நிலையிலும், அதிக உயர்ந்த நிலையிலும், இல்லா விட்டால், எல்லாவற்றிலும் மிகவும் உயரமான நிலையிலும் இருக்கலாம்; மிகவும் தாழ்ந்த நிலையிலிருக்கும் போது, அதிக உயர்ந்த நிலையானது மூடப்படுகிறது; அவன் ஆண்டவனிடமிருந்து ஞானத்தை அடையும் போது அது திறக்கப்படுகிறது. சுவர்க்கத்தில் போல், மனிதனிலும் கூட, தொடர்பு காரியப்பாடுகள் அல்லது அகல காரியப்பாடுகள் இருக்கின்றன. அவனிட மனதின் உள் பாகங்கள் விஷயத்தில், ஆண்டவரிடமிருந்து வரும் அன்பிலும் ஞானத்திலும் அவன் இருக்கிற அளவு, எல்லாவற்றிலும் சிறிய உருவத்தில் அவன் சுவர்க்கமாயிருக்கிற படியினுல், மனிதனுனவன் சுவர்க்கங்களை போலிருக்கிறுன். மனிதனுனவன், அவன் மனதின் உள் பாகங்கள் விஷயத்தில், எல்லாவற்றிலும் சிறிய உருவத்தில் சுவர்க்கமாய் இருக்கிறுன் என்பது **சுவர்க்கமும் நரகமும்** என்னும் நூலில் 51 முதல் 58-வது பிரிவுகள் வரையில் காணலாம்.

187. இந்த சில ஆலோசனைகளால், வேறு வேருகும் காரியப்பாடுகளைப்பற்றி அல்லது உயரக் காரியப்பாடுகளைப் பற்றி யாதொன்றும் தெரியாதவன், ஆண்டவரிடமிருந்து வரும் அன்பையும் ஞானத்தையும் பெற்றுக் கொள்வதின் மூலமாயும், பிறகு, மனதின் உள்ளுக்குள்ளான நிலைகள் தங்கள் ஒழுங்கில் திறப்பதின் மூலமாயும் காரியப்படுத்தப்படுகிற, அவனிட சீர்திருத்துகை விஷயத்திலும் சீர்படுகை விஷயத்திலும் மனிதனிட நிலைமையைப்பற்றி யாதொன்றும் தெரிந்திருக்கமாட்டானென்று, விசதமாகிறது. அதுவுமல்லாமல்,

ஆண்டவரிடமிருந்து சுவர்க்கங்கள் மூலமாய் வரும் உள்பெருக்குகள் எதையும், அல்லது அவன் சிருட்டிக்கப்பட்டிருக்கும் ஒழுங்கின் எதையும் அவன் தெரிந்து கொள்ள முடியாது. ஏனென்றால், இந்த விஷயங்களைப்பற்றி எவனாவது ஒருவன், வேறு வேறாகும் நிலைகள் அல்லது உயரப்படிகளின்மூலமாய் அல்லாமல், தொடர்பு நிலைகள் அல்லது அகலப்படிகளின் மூலமாய் யோசித்தால், காரிய சித்திகள் மூலமாய் தவிர அவைகளைப்பற்றி, அவன் யாதொன்றையும் பார்க்கமாட்டான்; அவன் காரணங்களிலிருந்து யாதொன்றையும் பார்க்கமாட்டான். காரிய சித்திகளிலிருந்து மாத்திரம் பார்த்தல், மாயமானதாகும்; அதிலிருந்து, ஒன்றன்பின் ஒன்றாய், தப்பிதங்கள் உண்டாகின்றன; கடைசியாக பிரமாண்ட பொய்கள், உண்மைகள் என்று சொல்லும்படி, ஓர்வித அனுமானத்தால், இவைகளை அவ்வளவு விருத்தியாக்கலாம்.

188. இது வரையில், வேறு வேறாகும் காரியப்பாடுகளைப்பற்றியும் அதாவது உயரப்படிகளைப் பற்றியும் அல்லது தொடர்பு காரியப்பாடுகளைப்பற்றியும் அதாவது அகலப்படிகளைப்பற்றியும் மாத்திரம் ஏதாவது இதுவரையில் தெரிந்திருப்பது எனக்கு தெரியாது. இது எப்படியிருந்தாலும், இருவித நிலைகளை அறிந்து கொள்ளாமல், காரணத்தைப் பற்றி யாதொன்றும் நிஜமாய் தெரிந்து கொள்ள முடியாது; ஆகையினால் இந்த பாகம் முழுவதிலும் இந்த நிலைகளைப்பற்றி சொல்லப்படும். ஏனென்றால், காரணங்களிலிருந்து காரியங்கள் தெரிந்து கொள்ளும் பொருட்டும், இவ்விதமாக ஞானமானவைகள் என்று சொல்லப்பட்ட, பொதுவாய் தெய்வீக விஷயங்களைப்பற்றியும், கடவுளைப்பற்றியும், ஆண்டவனைப்பற்றியும், திருச்சபையின் ஜனங்கள் இருக்கும் அஞ்ஞானம் நீக்கப்

படும் பொருட்டும், காரணங்களைப்பற்றி வெளிப்படுத்துதல் இந்த சிறு நூலின் கருத்தாயிருக்கிறது. பூமியின் பேரில் இருக்கும் அஞ்ஞானத்தைப்பற்றி தேவர்கள் விசனப்படுகிறார்களென்கிற இதை நான் வற்புறுத்தி சொல்ல சக்தியுள்ளவனாயிருக்கிறேன். தாங்கள் பூமியின் பேரில் எங்கும் வெளிச்சத்தை பார்க்கிறதில்லையென்றும், மனிதர்கள் போலி நியாயங்களை பிடித்துக்கொண்டு, அவைகளை உறுதிபடுத்துகிறார்களென்றும், அதனால், பொய்களின்பேரில் பொய்களை பெருக்குகிறார்களென்றும், இவைகளை ஸ்திரப்படுத்த, பொய்களிலிருந்தும், பொய்யென்று ரூபித்த மெய்களிலிருந்தும் தர்க்கித்து, காரணங்களைக் குறித்த அஞ்ஞானத்தினாலும், உண்மைகளைக் குறித்த மூடத்தனத்தாலும் நீக்கமுடியாதவைகளை சூழ்ச்சி செய்கிறார்கள் என்றும், அவர்கள் சொல்லுகிறார்கள். தருமத்திலிருந்து பிரிக்கப்பட்ட பக்தியைக்குறித்து உறுதி செய்தலைப்பற்றியும், அந்த பக்தியினால் நீதியென்று ஏற்படுத்துவதைப் பற்றியும், தேவர்கள் எல்லாவற்றிலும் அதிகமாக புலம்புகிறார்கள்; அதனுடன் கடவுளைப்பற்றியும், தேவர்களைப் பற்றியும், ஆவிகளைப்பற்றியும், அன்பைக் குறித்ததும், ஞானத்தைக் குறித்ததுமான அவர்களிட அஞ்ஞானத்தைப்பற்றியும் கூட அவர்கள் புலம்புகிறார்கள்.

உயரத்தைச் சேர்ந்த நிலைகள் ஓரினமானவைகள்; முடிவு காரணம், காரியம் என்பதைப்போல், ஒன்று மற்றோன்றிலிருந்து வரிசைக் கிரமத்தில் உண்டாகிறது.

189. அகலத்தைசேர்ந்த நிலைகள் அல்லது தொடர்பு காரியப்பாடுகள் வெளிச்சத்திலிருந்து இருட்டுக்கும், சூட்டிலிருந்து குளிர்ச்சிக்கும், கடினமானதிலிருந்து மெதுவானதற்கும், அடர்த்தியானதிலிருந்து அரிதானதற்கும், தடித்ததிலிருந்து மெல்லி

யதற்கும், இதைப்போன்ற மற்றவைகளும் செல்லுதல் போலி ருப்பதாலும், இந்த நிலைகள் புலன்களாலும் கண்ணாலும் அறி யப்படுகிறபடியினாலும், ஆனால் உயரத்தை சேர்ந்த நிலைகள் அல்லது வேறு வேறாக மாறும் காரியப்பாடுகள், அப்படியில் லாதபடியினாலும், பின் கூறியவைகள் இந்தபாகத்தில் முக்கியமாய் சொல்லப்படும்; ஏனென்றால், இந்த நிலை களின் ஞானமில்லாவிட்டால் காரணங்கள் அறிந்துகொள்ள முடியாது. முடிவு, காரணம், காரியம் என்பவை, முந்தி யது, பிந்தியது, கடைசியானது என்பதுபோல் கிரமத்தில் வருகிறதென்பதும், மேலும், முடிவு, காரணத்தையும், கார ணத்தின் மூலமாய் முடிவு நிலைக்க காரியத்தையும் உண்டாக்கு கிறதென்பதும், நிஜமாகவே தெரிந்திருக்கிறது. இந்த விஷயங் களைப்பற்றி இன்னும் அநேக இதர சங்கதிகள் தெரிந்திருக்கின் றன. அப்படியிருந்தாலும், இவைகளை தெரிந்துகொண்டு, இப் போதுள்ள விஷயங்களுக்கு, அவைகளை பிரயோகித்து பார்க் காமல் இருத்தலானது, கூறுபாடு செய்ததும் தத்துவ விசார மானதுமான விஷயங்கள் சிந்தனையைக் கவரும் வரையில் மட்டும் மனதில் இருக்கப்பட்ட பெயர்வுகளின் அறிவாக மாத் திரம் ஆகிறது. இதனால்தான், முடிவு, காரணம், காரியம், என் பவைகள், வேறாக மாறும் காரியபாடுகள் மூலமாய்சென்றாலும், இந்த நிலைகளைப்பற்றி உலகத்தில் ஏதாவது தெரிந்திருந்தால், அது மிகவும் கொஞ்சமாக இருக்கிறது. ஏனென்றால் பெயர்வு களைப் பற்றிய அறிவு மாத்திரம் பரந்துபோகும் காற்றைப் போன்ற ஒரு பொருளாயிருக்கிறது; ஆனால் பிரிந்துபோன அபிப்பிராயங்களை உலகத்திலுள்ள பொருள்களுக்கு உபயோ கித்தால், உலகத்தில் கண்களால் பார்க்கப்பட்டதும், ஞாபகத் தில் ஸ்திரமாய் யிருக்கிறதுமான ஒருபொருளைப்போல அவை கள் இருக்கின்றன.

190. மும்மடங்களான அளவு சாட்டக் கூடியதும், பல பதார்த்தங்கள் சேர்ந்தது என்று சொல்லக்கூடியதுமான உலகத்திலுள்ள எல்லா பொருள்களுக்கும், உயரத்தைச் சேர்ந்த நிலைகள் அல்லது வேறுவேருகும் காரியப்பாடுகளுமுண்டு. உதாரணங்கள், இந்த விஷயத்தை திருஷ்டார்ந்தப்படுத்தட்டும். மானிட சரீரத்திலுள்ள ஒவ்வொரு தசைநாரும், மிகவும் சிறிய நார்களால் ஆகிறதென்றும், இவைகளைக் கட்டுகளாகக் கட்டினுல், இயக்கும் நார்கள் என்று சொல்லப்படுகிற பெரிய நார்களாகின்றனவென்றும், இவைகளின் கூட்டங்களினுல், தசைநார் என்று சொல்லப்பட்ட எல்லாம் சேர்ந்த ஒன்று உண்டாகிறதென்றும், பிரத்தியட்ச அனுபவத்தில் தெரிந்திருக்கிறது. நரம்புகளுக்கும் விஷயம் அம்மாதிரியே; அவைகளில், மிகவும் சிறிய நார்களிலிருந்து, இழைகளாகிற பெரிய நார்கள் உருவாக்கப்படுகின்றன. இவைகள் சேர்க்கப்பட்டு நரம்பு உண்டாகிறது. அங்கங்களும் ஆந்திரிகங்களும் உண்டாகிற மற்ற கலப்புகளுக்கும், கட்டுகளுக்கும், கூட்டங்களுக்கும், விஷயம் அம்மாதிரியே; ஏனென்ருல், ஆந்திரிகங்கள் ஒரே விதமான நிலைகள் மூலமாய் பலவிதமாக சேர்க்கப்பட்ட நார்களாலும்குழாய்களாலும் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. விருக்ஷவர்க்கத்திலும் ஸ்தாவரவர்க்கத்திலும் உள்ள ஒவ்வொன்றிலும் பொதுவாகவும் சிறப்பாகவும் விஷயம் அதேமாதிரி கூட இருக்கிறது. மரங்கள் பலவிதங்களில்மும்மடங்கான ஒழுங்கில்இழைகளின் கூட்டம் இருக்கிறது. உலோகங்களிலும் கற்களிலும், மும்மடங்களான கிரமத்தில் பகுதிகளின் கூட்டம் கூட இருக்கிறது. இவைகளிலிருந்து, வேருக மாறும் காரியப்பாடுகள் எப்படியிருக்கிறதென்று, அதாவது, முதலிலிருந்து இரண்டாவதும், மூன்ருவது சேர்வையானதாயிருக்க, இரண்டாவதிலி

ருந்து மூன்ருவதும் உண்டாகிறதென்பதும், ஒவ்வொரு நிலை யும் மற்றதிலிருந்து வேருயிருக்கிறதென்பதும், விசதமாகிறது.

191. அவைகளுக்கும் விஷயம் ஒரே மாதிரியிருப்பதிஞல், இவைகளிலிருந்து, கண்ணுக்கு புலப்படாதவைகள் விஷயத்திலும், ஓர் தீர்மானம் செய்யலாம். உதாரணமாக, மூளையிலுள்ள சிந்தனைகளுக்கும், ஆசைகளுக்கும், ஆசயங்களாகவும் வாசஸ்தானங்களாகவும் இருக்கிற உருப்புள்ள பொருள்களுக்கும், ஆகாயங்களுக்கும், கூட்டுக்கும் ஒளிக்கும், அன்புக்கும், ஞானத்திற்கும் அப்படிச் செய்யலாம். ஏனென்ருல், ஆகாயங்கள் கூட்டினிடவும் ஒளியினிடவும், ஆசயங்களாயிருக்கின்றன; கூடும் ஒளியும் அன்பினிடவும் ஞானத்தினிடவும் ஆசயங்களாயிருக்கின்றன. ஒன்றுக்கு பொருந்தும் நியாயம் மற்றதற்கும் பொருந்துமாகையால், ஆகாயங்களின் நிலைகளிருப்பதுபோல, கூட்டினிடவும் ஒளியினிடவும், அன்பினிடவும் ஞானத்தினிடவும் அதே மாதிரியான வேற்றுமைகள் கூட யிருக்கின்றன.

192. இந்த காரியப்பாடுகள் ஒரே இனமானதென்பது அதாவது ஒரேவிதமும் சுபாவமானதென்பது கொஞ்சம் முன்னே கூறியதிலிருந்து விசதமாகிறது. தசைநார்களின் செய்கை உண்டாக்கும் நார்களில், மிகச் சிறியதும் அதிக பெரியதும், எல்லாவற்றிலும் பெரியதும், ஓரே இனத்தைச் சேர்ந்தவைகள். நரம்புக்குரிய நார்களில், மிகச் சிறியதும், அதிகப் பெரியதும், எல்லாவற்றிலும் பெரியதும், ஓரினமானவைகள். மரங்களின் இழைகள் மிகசிறியதிலிருந்து அவைகளின் தொகுதி வரையில் ஓரே இனமானவைகள். எல்லாவித கற்களினிடவும், உலோகங்களினிடவும் பகுதிகள் அம்மாதிரியே யிருக்கின்றன. சிந்தனைகளுக்கும் ஆசைகளுக்

கும் ஆசயங்களாகவும் வாசஸ்தானங்களாகவும் இருக்கிற உருப்புள்ள பொருள்கள் மிகவும் கலப்பற்றதிலிருந்து மூளை யாயிருக்கிற பொதுத்தொகுதி வரையில், ஒரே இனமானவை கள். ஆகாயங்கள், சுத்தமான, ஈதர் என்னும் சூக்கும ஆகாயம் முதல் காற்று வரையில் ஒரே இனமானவை.வரிசைக் கிரமத்தில் உள்ள சூட்டினிடவும் ஒளியினிடவும் நிலைகள், ஆகாயங்களின் நிலைகளுக்குத் தக்கபடி, ஒரே இனமானவை கள்; அதனால் கூட அன்பினிடவும் ஞானத்தினிடவும் நிலைக ளும் ஒரே இனமானவைகள். ஒரே குணத்தையும் சுபாவத்தை யும் பெருத பொருள்கள், கலப்பானதாயிருக்கின்றன, ஓரி னத்தைச் சேர்ந்தவைகளோடு ஒத்துப்போகிறதில்லை; ஆகை யினல் அவைகளிலிருந்து வேருகமாறும் நிலைகளை அவைகள் உண்டாக்காமல், ஓரினமானதும், ஓர் குணமும் சுபாவமுமா யிருக்கிற தங்களிட சொந்தமானவைகளிலிருந்து மாத்திரம், அப்படி உண்டாக்குகிறது.

193. இவைகள் தங்கள் சிரமத்தில், முடிவுகளைப்போல வும், காரணங்களைப்போலவும், காரியங்களைப்போலவும் இருக்கின்றன வென்பது தெளிவாயிருக்கிறது; ஏனென்றால், மிகவும் சிறியதாயிருக்கிற முதன்மையானது, மத்தியமானது அல்லது இரண்டாவதின் மூலமாய் அதன் காரணத்தையும், இறுதியானது அல்லது மூன்ருவதின் மூலமாய் அதன் காரி யத்தையும் உண்டாக்குகிறது.

194. ஒவ்வொரு நிலையும், மற்றவைகளிலிருந்து அதன் சொந்த போர்வைகளினல் வேருனதா யிருக்கிறதென்பதை யும், எல்லா நிலைகளும் சேர்ந்து ஒரு பொதுப்போர்வையால் வேருயிருக்கிற தென்பதையும் கவனிக்கவேண்டியது. மேலும் பொதுவான போர்வையானது உள்ளானதும், உள்ளுக்குள்ளா

னதுமான பொருள்களோடு அவைகளிட ஒழுங்கில் சம்பந்தப் படுகின்றன என்பதையும் கவனிக்க வேண்டும்; ஆதலால், எல்லாவற்றினிட ஐக்கியமும், ஏக சிந்தையுள்ள செய்கையும் உண்டாகின்றது.

**முதல் நிலையானது பின்வரும் நிலைகளின் எல்லாப் பொருள்களிலும் எல்லாமாயிருக்கிறது.**

195. ஒவ்வொரு பதார்த்தத்தினிடவும் அல்லதுபொருளினிடவும் நிலைகள் ஒரே இனமுள்ளதாயிருக்கின்றனவென்பது காரணமாயிருக்கிறது. முதல் நிலையிலிருந்து உண்டாக்கப் பட்டதால் அவைகள் ஓர் இனத்தை சேர்ந்ததா யிருக்கின்றன. ஏனென்றால், அவைகளின் நிருமாணம் இந்த விதத்தில் உண்டாகிறது. முதலாவது கட்டுகள் அல்லது கூட்டங்கள் உண்டாக்குதலால், சுருங்கச் சொல்லில், பகுதிகளை ஒன்று சேர்ப்பதால் இரண்டாவதை உண்டாக்குகிறது. இதன் மூலமாய் மூன்றாவதை உண்டாக்கி, ஒன்றை மற்றொன்றிலிருந்து ஓர் போர்வையால் சூழ்ந்து கொள்வதால் வேறாக்குகிறது. ஆகையினால் முதல் நிலையானது பின்வரும் நிலைகளை ஆளுகை செய்கிறது என்பதும், ஆகையினால் முதல் நிலையானது பின் வரும் நிலைகளின் எல்லா பொருள்களிலும் எல்லாமாயிருக்கிறது என்பதும் விசதமாகிறது.

196. நிலைகள் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டவரையில் அவ்விதமாயிருக்கிறதென்று சொல்லப்படுகிறது. ஆனால், பொருள்கள் தங்கள் நிலைகளில் அவ்விதமாயிருக்கிறதென்பது அருத்தம். நிலைகள் மூலமாய் பேசுதல், சங்கிரகமாகவும் எல்லாவற்றையும் குறித்து பேசுதலாகவும், இம்மாதிரியாக நிலைகளின் இந்த விதத்தின் கீழ்வரும் ஒவ்வொரு பொருளுக்கும் ஓர் விதத்தில் பொருந்துகிறதாகவு மிருக்கிறது.

197. முன் சொல்லிய பிரிவில் விரித்து சொல்லிய எல்லா பொருள்களுக்கும் அதாவது தசைநார்களுக்கும், நரம்புகளுக்கும்,விருக்ஷவர்க்கத்து ஸ்தாவர வர்க்கத்து இரண்டு வர்க்கத்துப் பொருள்களுக்கும், பகுதிகளுக்கும், மனிதனில் சிந்தனையினிடவும் ஆசையினிடவும் பதார்த்தங்களாயிருக்கிற உருப்புள்ள பொருள்களுக்கும், ஆகாயங்களுக்கும், சூட்டிற்கும் ஒளிக்கும், அன்பிற்கும், ஞானத்திற்கும், இவைகள் பொருந்தும். இவைகளிலெல்லாம், முதல் பொருளானது, தனிமையாகவும் முழுவதும், பின்வரும் பொருள்களை ஆளுகை செய்கிறது ; உண்மையாகவே, அது அவைகளில் ஒரே பொருளாக இருக்கிறது. அது, அவைகளிலிருக்கும் ஒரே பொருளானபடியினால் அவைகளில் எல்லாமாயிருக்கிறது. இது இப்படியிருக்கிறதென்பது, பின்வரும் பிரசித்தமான உண்மைகளால் கூட, அதாவது, முடிவானது, காரணத்தின் எல்லாமாயிருக்கிற தென்பதினாலும், காரணத்தின் மூலமாய், காரியத்தின் எல்லாமாயிருக்கிற தென்பதினாலும்,ஆகையினால், முடிவு, காரணம், காரியம் என்பவை முதல் முடிவென்றும், நடு முடிவென்றும், கடை முடிவென்றும் சொல்லப்படுவதினாலும், விசதமாகிறது. மேலும், காரணத்துக்குக் காரணமானது, உண்டாக்கப்பட்ட பொருளுக்குக் காரணமாயும்கூட இருக்கிற தென்பதினாலும், காரணங்களில் முடிவைத்தவிரவும், சலனத்தில் முயற்சியைத்தவிரவும், பிரதானமானது வேறொன்றுமில்லை யென்பதினாலும், சுயமாய்ப் பதார்த்தமாயிருக்கிற ஒரு தனிமையான பொருள் இருக்கிற தென்பதினாலும் விசதமாகிறது.

198. சுயமாய் அதாவது தனிமையாகவும முழுவதும பதார்த்தமாயிருக்கிற தெய்வமானது, சிருஷ்டிக்கப்பட்ட

எல்லா பொருள்களுக்கும் பொதுவாகவும் சிறப்பாகவும் உற்பத்தி ஸ்தானமாய் இருக்கிறதென்பதும், இம்மாதிரியே, முதல் பாகத்தில் காண்பிக்கப்பட்ட விஷயங்களுக்கு அதாவது, பரம இச்சாசத்தியும் பரம ஞானசத்தியும் பதார்த்தமும் உருவமுமாயிருக்கின்றன என்பதும் (40-முதல் 43-வது பிரிவுகள் வரையில்), பரமஇச்சாசத்தியும், பரமஞானசத்தியும் சுபமாய்பதார்த்தமும் உருவமென்பதும், அதனால் அது ஒரே ஒரு உண்மை என்பதும் (பிரிவு 44முதல் 46-வரையில்), பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும் பரம இச்சாசத்தியினாலும் பரம ஞானசத்தியினாலும் சிருட்டிக்கப்படுகின்றனவென்பதும் (பிரிவுகள் 52-முதல் 60-வரையில்), ஆகையினால் சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சம் அவரிட பிரதிமை என்பதும் (பிரி. 61-65), ஆண்டவர் மாத்திரம் தேவர்கள் இருக்கப்பட்ட சுவர்க்கமென்பதுமாகிய (பிரிவுகள் 113-முதல் 118-வரையில்), இவைகளுக்கு தக்கதாய் பிரபஞ்சத்தின் எல்லா பொருள்களிலும் கடவுள் எல்லாமாயிருக்கிறார் என்பதும், இவைகளிலெல்லா மிருந்து தெளிவாய் அறிந்து கொள்ளலாம்.

எல்லா பக்குவங்களும், நிலைகளுடனும் அவைகளுக்குத் தக்கபடியும் அதிகரித்து ஏறுகின்றன.

199. அகலத்தைச் சேர்ந்த காரியப்பாடுகள் என்றும், உயரத்தைச் சேர்ந்த காரியப்பாடுகளென்றும் இருவித நிலைகள் இருக்கின்றனவென்றும் அகலத்தைச் சேர்ந்த நிலைகள் வெளிச்சத்திலிருந்து நிழலுக்கு அணுகுவதைப் போலும், அல்லது ஞானத்திலிருந்து அஞ்ஞானத்தை அணுகுவதைப் போலும் இருக்கின்றனவென்றும், ஆனால் உயரத்தைச் சேர்ந்த நிலைகள் முடிவுபோலும் காரணம்போலும் காரியம்போலும் அல்லது முந்தியதுபோலும், பிந்தியதுபோலும், இறுதியானது

போதும் இருக்கின்றனவென்றும் மேலே காண்பிக்கப்பட்டது (பிரிவுகள் 184-முதல் 188-வரையில்). பின் சொன்ன நிலைகளைப்பற்றி, அவைகள் உயரத்தைச் சேர்ந்த நிலைகளான படியினால், ஏறுகின்றன அல்லது இறங்குகின்றன வென்று சொல்லப்படுகிறது; ஆனால் முன் சொன்னவைகளைப் பற்றி, அவைகள் அகலத்தைச் சேர்ந்த நிலைகளானபடியினால், அவைகள் அதிகரிக்கிறது அல்லது குறைகிறது என்று சொல்லப்படுகிறது. இந்த இரண்டு நிலைகளும், அவைகளுக்குள் பொதுவானது ஒன்றுமில்லை என்று சொல்லும்படியாக அவ்வளவு பேதப்படுகின்றன. ஆகையினால் அவைகள் தெளிவாய் பிரத்தியேகப்படுத்தப்பட வேண்டும், எந்தவிதத்திலும் அவைகளைப் பற்றி பிரமை கூடாது.

200. எல்லா பக்குவங்களும் இந்த நிலைகளோடும் அவைகளுக்குத் தக்கபடியும் ஏன் அதிகரித்து, ஏறுகின்றன வென்பதற்குக் காரணம், எல்லா குணங்களும் அவைகளின் பதார்த்தங்களுக்குத் தக்கபடி இருக்கின்றனவென்பதாயிருக்கிறது; அவைகளை உயிருக்கும், சக்திகளுக்கும், உருவங்களுக்கும் ஆரோபிக்கிறபடியினால், பக்குவமும் அபக்குவமும் பொதுவான குணங்களாகும். உயிரின் பக்குவம் என்பது அன்பினிடவும் ஞானத்தினிடவும் பக்குவமாயிருக்கிறது; சித்தமும் புத்தியும் அவைகளின் ஆசயங்களாயிருப்பதால், உயிரின் பக்குவம், சித்தத்தினிடவும் புத்தியினிடவும், அதனால் ஆசைகளிடவும் சிந்தனைகளிடவும், பக்குவமாயிருக்கிறது; சூக்கும சூடானது அன்பின் கொள்கலமாயிருப்பதாலும், சூக்கும ஒளி ஞானத்தின் கொள்கலமாயிருப்பதாலும், இவைகளின் பரிபக்குவத்தை உயிரின் பரிபக்குவத்துக்கு ஆரோபிக்கலாம். சக்திகளின் பக்குவ

மென்பது, உயிரினல் ஏவப்பட்டு, அசைக்கப்படுகிறதும், அப்படியிருந்தும் தங்களிடம் உயிரை உடைத்தாயிராதது மான எல்லா பொருள்களின் பக்குவமாயிருக்கிறது. அவ்வித சக்திகள், உண்மையில், ஆகாயங்களா யிருக்கின்றன; மேலும் அவ்வித சக்திகள் மனிதனிலும், அதனுடன் எல்லாவித பிராணிகளிலும் உள்ள, உள்ளானதும் புறம்பானதுமான உறுப்புள்ள பொருள்களாய் கூட இருக்கின்றன. மேலும் அவ்வித சக்திகள், அங்கேயிருக்கும் சூரியனிடமிருந்து நேரா யும் வேறொன்றின் மூலமாயும் முயற்சிகளை அடைகிற ஸ்தூல லோகத்திலுள்ள எல்லா பொருள்களாயும் கூட இருக் கின்றன. உருவங்கள் பதார்த்தங்களென்பதும், ஆனல் சக்தி கள் அவைகளின் முயற்சிகளென்பதுமாகிய இந்த வித்தியாசத் துடன் மாத்திரம், உருவங்கள் பக்குவமும், சக்திகளின் பக்கு வமும், சக்திகளிருக்கிறபடி உருவங்களிருக்கிறபடியினல், ஒன்ருகின்றன; ஆகையினல் இரண்டுக்கும் ஓரேவித பக்குவ நிலைகள் உரித்தாகின்றன. ஓரே காலத்தில் சக்திகளாயில்லாத உருவங்கள் நிலைகளுக்கு தக்கபடி பக்குவமாகவும் கூட இருக் கின்றன.

201. அகலத்தை அல்லது தொடர்ச்சியைச் சேர்ந்த நிலைகள் உலகத்தில் தெரிந்திருப்பதால், அவைகளுக்குத் தக்க படி அதிகரிக்கிறதும் குறைகிறதுமான உயிரினிடவும், சக்தி களிடவும், உருவங்களிடவும் பக்குவங்களைக் குறித்து இங்கே பேசாமல், வேறு வேருக மாறும் நிலைகள் உலகத்தில் தெரியா திருக்கிறபடியினல், அவைகளுக்குத் தக்கபடி, ஏறுகிறதும் இறங்குகிறதுமான உயிரினிடவும், சக்திகளிடவும், உருவங் களிடவும் பக்குவங்களைப்பற்றி பேசுவோம். ஆனல் இந்நிலை களுக்குத் தக்கபடி பக்குவங்கள் எப்படி ஏறுகின்றன, இறங்

குகின்றனவென்பது ஸ்தூல லோகத்தில் காணப்படும் பொருள்களிலிருந்து அறிய முடியாது. ஆனால் சூக்கும லோகத்தில் காணப்படும் பொருள்களிலிருந்து தெளிவாய் அறிந்து கொள்ளலாம். ஸ்தூலலோகத்தில் காணப்படும் பொருள்களிலிருந்து, அவைகள் எவ்வளவு அதிக கருத்தாய் சோதிக்கப்படுகிறதோ, அவ்வளவு அதிசயங்கள் கண்ணுக்குப் புலப்படுகிறதென்று மாத்திரம் அறிந்து கொள்ளலாம். உதாரணமாக, கண்களிலும், காதுகளிலும், நாவிலும் தசைநார்களிலும், இருதயத்திலும், சுவாசாசயங்களிலும், பித்தாசயத்திலும், (Pancreas) எனும் வயிற்றிலுள்ள ஓர் அவயவத்திலும், மூத்திர பிண்டத்திலும், மீதி உள்ளிருக்கும் அவயவங்களிலும், இன்னும், விதைகளிலும், பழங்களிலும், புஷ்பங்களிலும், அதனுடன் உலோகங்களிலும், லோஹாதிகளிலும், கற்களிலும், இவைகளை எல்லாம் அதிக கருத்தாய் சோதித்தால், இவைகளிலெல்லாம் அதிசயங்கள் அதிகரிக்கின்றனவென்று நன்றாய் தெரிந்திருக்கிறது. என்றாலும் இந்த அதிசயங்களினால், விசாரணையிலிருக்கும் பொருள், உயரத்தைச் சேர்ந்த நிலைகள் அல்லது வேறு வேறாகமாறும் நிலைகளுக்குத் தக்கபடி அந்தரங்கமாய் அதிக பக்குவமாயிருக்கின்றனவென்று கொஞ்சம் கூட சந்தேகப்பட்டதில்லை; இந்த நிலைகளை அறியாமை அந்த உண்மையை மறைத்திருக்கிறது. ஆனால், அதே நிலைமைகள் சூக்கும லோகத்தில் தெளிவாய் ஒழியாதிருப்பதால்—(ஏனென்றால், மிகவும் உயரத்திலிருந்து மிகவும் தாழ்ந்ததுவரையில் அந்த உலகம் முழுமையும், இந்த நிலைகளாக பிரத்தியேகமாய் பிரிக்கப்பட்டிருக்கிறது)—இந்த நிலைகளைக் குறித்த அறிவை அந்த உலகத்தில் சேகரம் செய்து கொள்ளலாம்; பின்னிட்டு, அதன் பயனிலிருந்து,

ஸ்தூல லோகத்தில் அதே நிலைகளிருக்கும், சக்திகளிடனும் உருவங்களிடனும் பக்குவத்தைப்பற்றி, நிர்மானங்கள் செய்ய லாம்.

202. உயரத்தைச் சேர்ந்த அந்தஸ்துகளுக்குத் தக்கபடி ஒழுங்காக்கப்பட்ட மூன்று சுவர்க்கங்கள் சூக்குமலோகத்திலி ருக்கின்றன. எல்லாவற்றிலும் உயர்ந்தசுவர்க்கத்தில்தேவர்கள், நடுசுவர்க்கத்திலிருக்கும் தேவர்களைப்பார்க்கிலும் பக்குவத்தில் மேல்பட்டிருக்கிறார்கள். நடு சுவர்க்கத்தில் தேவர்கள், எல்லா வற்றிலும் தாழ்ந்த சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களைப்பார்க்கி லும் பக்குவத்தில் மேல்பட்டிருக்கிறார்கள். எல்லாவற்றிலும் தாழ்ந்த சுவர்க்கத்திலிருக்கும் தேவர்கள், நடுசுவர்க்கத்திலிருக் கும் தேவர்களினிட பக்குவத்தின் முதல்வாயிற் படிவரையில் செல்லக்கூடாத படிக்கும், இவர்களும் கூட எல்லாவற்றிலும் உயர்ந்த சுவர்க்கத்து தேவர்களின் வாயிற்படி வரையில் ஏறக் கூடாதபடிக்கும், பக்குவத்தின் நிலைகள் இருக்கின்றன. இது ஒரு விபரீதமாய் தோன்றும்,ஆயினும், அது உண்மையாயிருக் கிறது. தொடர்பு காரியப்பாடுகளுக்குத் தக்கபடி அல்லா மல், வேறுவேறாக மாறும் காரியப்பாடுகளுக்கு தக்கபடி அவர் கள் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள் என்பது காரணமாயிருக் கிறது. அவர்களுக்குள், பொதுவானது ஒன்றுமில்லாதபடி மிகவும் உயர்ந்ததும் தாழ்ந்ததுமான சுவர்க்கங்களின் தேவர் களிட ஆசைகளுக்கும் சிந்தனைகளுக்கும், அதனால் பேச்சுக் கும், அவ்வித வித்தியாச மிருக்கிறதென்றும், எல்லா சுவர்க் கங்களிலும் ஆண்டவரிட நேரான உட்பிரவேசத்தாலும், எல்லாவற்றிலும் உயந்த சுவர்க்கத்தின் மூலமாய் எல்லாவற்றி லும் தாழ்ந்ததற்கு வேறொன்றின் மூலமாய் உட்பிரவேசத்தா லும் உண்டாகிற காரணகாரிய சம்பந்தங்கள் மூலமாய் மாத்

திரம் போக்கு வரவு சம்பவிக்கிறதென்றும், அனுபவத்தால் எனக்கு தெரியப்படுத்தப்பட்டது. இந்த வித்தியாசங்கள் அவ்வித குணமுடையதா யிருப்பதால், அவைகளை ஸ்தூல பாஷையில் சொல்ல முடியாது; ஆகையினுல் விவரிக்கவும் முடியாது ; ஏனென்றால் தேவர்களின் சிந்தனைகள் சூக்ஷும மானதால் அவைகள் ஸ்தூல அபிப்பிராயங்களில் அடங்கு கிறதில்லை. அவைகள் மானிட பாஷைகளிலில்லாமல் தங்களிட சொந்தபாஷைகளிலும், வார்த்தைகளிலும், நூல்களிலும் மாத் திரம் தேவர்களாலேயே சொல்லப்பட்டு, விவரிக்கப்படக்கூடும். இதனுல் தான் சுவர்க்கங்களில், வாக்குக்கெட்டாதவைகள் கேழ்க்கப்பட்டும் பார்க்கப்பட்டு மிருக்கின்றன வென்று சொல் லப்படுகிறது. எல்லாவற்றிலும் உயர்ந்த அல்லது மூன்றுவது சுவர்க்கத்து தேவர்களின் சிந்தனைகள், முடிவுகளின் சிந்தனை களாயிருக்கின்றன வென்பதும், நடு அல்லது இரண்டாவது சுவர்க்கத்து தேவர்களின் சிந்தனைகள் காரணங்களைக் குறித்த வைகள் என்பதும், எல்லாவற்றிலும் தாழ்ந்த அல்லது முதல் சுவர்க்கத்து தேவர்களின் சிந்தனைகள் காரியங்களைக் குறித்த வைகளென்பதுமாகிய இந்த ஆலோசனையால், இந்த வித்தி யாசங்களை கொஞ்சம் கிரகித்துக்கொள்ளலாம். முடிவுகளி லிருந்து நினைத்தலென்பது ஒன்று, முடிவுகளைப்பற்றி நினைத் தல் என்பது வேறொன்று என்பதையும், மேலும் காரணத் திலிருந்து நினைத்தலென்பது ஒன்று, காரணத்தைப்பற்றி நினைத் தல் வேறொன்று என்பதையும், மறுபடியும், காரியத்தி லிருந்து நினைத்தல் ஒன்று, காரியத்தைப்பற்றி நினைத்தல் வேறொன்று என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டியது. அதிக தாழ்ந்த சுவர்க்கத்து தேவர்கள் காரணங்களைப் பற்றியும் முடிவுகளைப்பற்றியும் நினைக்கிறார்கள். அதிகம் உயர்ந்த சுவர்க்

கத்து தேவர்கள் காரணத்திலிருந்தும் முடிவிலிருந்தும் நினைக்கிறார்கள்; இவைகளிலிருந்து நினைத்தல், உயர்ந்த ஞானத்துக்கு அடையாளம். ஆனால் இவைகளைப்பற்றி நினைத்தல் தாழ்ந்த ஞானத்தின் அடையாளமாயிருக்கிறது. முடிவுகளிலிருந்து நினைத்தல் ஞானத்துக்குச்சேர்ந்தது, காரணத்திலிருந்து நினைத்தல் புத்திக்கு சேர்ந்தது, காரியத்திலிருந்து நினைத்தல் அறிவுக்கு சேர்ந்தது. எல்லா பக்குவமும், நிலைகளோடும், அவைகளுக்கு தக்கபடியும் ஏறுகிறதென்றும் இறங்குகிறதென்றும் இவைகளிலிருந்து விசதமாகிறது.

203. தன்னிட சித்தத்துக்கும் புத்திக்கும் சேர்ந்த மனிதனிட அந்தரங்கமான பொருள்கள், மனிதன் தன்னிட மனதின் அந்தரங்கமானவைகள் விஷயத்தில் மிகவும் சிறிய உருவத்தில் சுவர்க்கமாயிருக்கிறான் என்கிற காரணத்தினால், நிலைகள் விஷயத்தில் சுவர்க்கங்களைப்போல் இருப்பதால், அவர்களின் பக்குவங்களும் கூட ஒரேமாதிரி இருக்கின்றன. ஆனால், இந்த பரிபக்குவங்கள், அவன் உலகத்தில் இருக்கிற வரையில், மிகவும் தாழ்ந்த நிலையிலிருப்பதினால், எந்த மனிதனுக்கும் தோன்றுகிறதில்லை ; அதிகம் உயர்ந்த நிலைகள், மிகவும் தாழ்ந்த நிலைகளிலிருந்து அறிந்து கொள்ள முடியாது ; ஆனால் இறந்த பிறகு, அவைகள் அறிந்து கொள்ளப்படுகின்றன. மனிதன் தேவனாய், தன்னிட ஸ்தூல தன்மைக்கு எட்டாதவைகளை நினைத்து, பேசுகிறபடியினால், அவன் அப்பொழுது அவனிட அன்புக்கும் ஞானத்துக்கும் காரண காரிய சம்பந்தப்படுகிற அந்த நிலைக்குவருகிறான். அவன் மனதுக்குச் சேர்ந்த எல்லா பொருள்களின் உன்னதம், அப்பொழுது தனித்தல்லாமல் மும்மடங்களான பரிமாணத்தில் உண்டாக்குகிறது. உயரத்தைச் சேர்ந்த நிலைகள் மும்மடங்காயிருக்கின்

றன. ஆனால், அகலத்தைச் சேர்ந்த நிலைகள் தனித்தவைகளாயிருக்கின்றன. உலகத்தில் உண்மைகளிலிருந்து, அவைகளை வாழ்க்கைக்கு ஆரோபித்தவர்கள் தவிர வேறு யாரும் அந்த நிலைகளுக்கு ஏறுகிறதுமில்லை, ஏற்றப்படுகிறதுமில்லை.

204. முதன்மையானவைகள் பிந்தினவைகளை விடவும் அல்லது தனித்தவைகள் சேர்வையானவைகளை விடவும் குறைந்த சம்பூரணமானவைகளாகத் தோன்றுகின்றன ; என்றாலும், பிந்தினவைகள் உருவாக்கப்படுகிற முதன்மையான பொருள்கள், அல்லது சேர்வையானவைகள் உருவாக்கப்படுகிற தனித்த பொருள்கள் அதிக பூரணமானவைகளாயிருக்கின்றன. முதன்மையானவைகள் அல்லது தனித்தவைகள் அதிக நிருவாணமாயிருக்கிறதென்பதும், உயிரில்லாத பொருள்களாலும் பதார்த்தங்களாலும் குறைவாய் மூடப்பட்டதாயுமிருக்கின்றன என்பதும் காரணமாயிருக்கிறது; அவைகள் அதிக தெய்வீகமானவைகள் போலிருக்கின்றன ; ஆகையினால், பராபரன் இருக்கும் ஞான சூரியன் அதிக சமீபத்தில் அவைகள் இருக்கின்றன. ஏனென்றால், பரிபக்குவம் என்பதே பராபரனிட மிருக்கிறது. ஆகையினால், அவரிட இச்சாசத்தியினிடவும் ஞானசத்தியினிடவும் முதல் வெளிப்படும் பொருளாயிருக்கிற சூரியனில் அது இருக்கிறது; பிறகு உடனே பின்வரும் பொருள்களிலும், அம்மாதிரியே ஒழுங்காக, தூரத்துக்குத் தக்கபடி அதன் பரிபக்குவம் குறைகிற மிகவும் தாழ்ந்த பொருள்கள் வரையில், அது இருக்கிறது. முதன்மையான பொருளிலும் தனித்த பொருளிலும் அவ்வித சிறந்த பரிபக்குவ மில்லாவிட்டால் எந்த மனிதனாவது எந்த பிராணியாவது விதையிலிருந்து தோன்றி பிழைக்க முடியாது. அதுவுமல்லாமல், மரங்களிட

வும் பூண்டுகளிடவும் விதைகள் வளர்ந்து பலன் தராது, ஒரு பொருளானது அதன் முதன்மைக்கும் அல்லது அதன் தனிமைக்கும் தக்கபடி, அதன் மிகுந்த பரிபக்குவத்தால், அவ்வளவு தீங்குக்கு எட்டாமலிருக்கிறது.

ஒன்றன்பின் ஒன்ருய் தோடரும் ஒழுங்கில், முதல் நிலை எல்லாவற்றிலும் உயர்ந்ததாகவும், மூன்ருவது எல்லாவற்றிலும் தாழ்ந்ததாகவுமாகிறது. ஆனல், ஏககாலத்தில் நடக்கும் ஒழுங்கில் முதல்நிலை, உள்ளுக்குள்ளானதாகவும், மூன்ருவது மிகவும் புறம்மானதாகவுமாகிறது.

205. ஒழுங்கு என்பது தொடர்ந்து வருவதாயும் ஏககாலத்திலுள்ளதாயுமிருக்கிறது. இந்த நிலைமைகளின் தொடர்பானஒழுங்கு, எல்லாவற்றிலும்உயர்ந்ததிலிருந்து எல்லாவற்றிலும் தாழ்ந்ததற்கும், அல்லது உச்சியிலிருந்து அடிக்கும் செல்வதாயிருக்கிறது. வானோர் சுவர்க்கங்கள் இந்த ஒழுங்கிலிருக்கிறது. அங்கிருக்கும் மூன்ருவது சுவர்க்கம் எல்லாவற்றிலும் உயர்ந்தது, இரண்டாவது மத்தியமானது, முதலாவது எல்லாவற்றிலும் தாழ்ந்தது. ஒன்றுக்கொன்று சம்பந்தபட்ட வரையில் அவைகள் இருக்கும் இடம் அவ்விதமாயிருக்கிறது. அங்கிருக்கும் வானவர்களிட அன்பினிடவும் ஞானத்தினிடவும், அதனுடன் சூட்டினிடவும், ஒளியினிடவும் சிதாகாசத்தினிடவும், நிலைமைகள் கூட அதைப்போன்ற ஒழுங்கிலிருக்கிறது. அங்கிருக்கும் உருவங்களிடவும் சக்திகளிடவும் சம்பூரணங்கள் அதைப் போன்ற ஒழுங்கில் இருக்கின்றன. உயரத்தை சேர்ந்த நிலைகள் அல்லது வேறு வேருக மாறும் நிலைகள் ஒன்றன்பின் ஒன்ருய் தொடரும் ஒழுங்கிலிருக்கும் போது, ஏறுவதும் இறங்குவதுமாகிய மூன்று அந்தஸ்துகளாக பிரிக்கப்பட்ட ஒரு தூணுக்கு ஒப்பிடலாம்; அதன்மேல்

பாகத்தில், மிகவும் அதிக சம்பூரணமானதும் அழகுள்ளது மான பொருள்களும், மத்தியத்திலுள்ள பாகத்தில், குறைந்த பக்குவமுள்ளதும் குறைந்த அழகுள்ளதுமான பொருள்களும், ஆனால் மிகவும் அதிகமாய் தாழ்ந்த பாகத்தில், இன்னும் குறைந்த பக்குவமானதும், இன்னும் அதிகம் குறைந்த அழகுள்ளதுமான பொருள்கள் இருக்கின்றன. ஆனால், ஒரே விதமான அந்தஸ்துகளாலாகிய ஏககாலத்தில் நடக்கும் ஒழுங்கு, வேறு தோற்றத்தை உடைத்தாயிருக்கிறது. அதில் மேல் கூறியபடி எல்லாவற்றிலும் பக்குவமானதும், எல்லாவற்றிலும் அழகுள்ளதுமானவைகளாய் இருக்கிற தொடர்பான ஒழுங்கின் மிகவும் உயர்ந்த பொருள்கள், மிகவும் உள்ளுக்குள்ளும், அதிகம் தாழ்ந்தவைகள் மத்தியத்திலும், எல்லாவற்றிலும் தாழ்ந்தவைகள் சுற்றளவிலும் இருக்கின்றன. இந்த மூன்று நிலைகளால் ஆகிய ஒருவன் பொருளிலிருப்பதுபோல், அவைகள் அமர்ந்திருக்கின்றன; அவைகளின் மையத்தில் அதிகநுட்பமான பாகங்களும், இதைச் சுற்றிலும், குறைந்த நுட்பமான பாகங்களும், சுற்றளவாகிற புறம்பான எல்லைகளில், முன் கூறிய பாகங்கள் சேர்ந்ததும், ஆகையினால் ஒப்பீடாய் தடித்ததுமான பாகங்களும், இருக்கின்றன. அது, கொஞ்சம் மேலே கூறிய தூணைது, சமதளத்தில் அமைவதுபோலிருக்கிறது; அந்தத் தூணின் மிகவும் உயர்ந்த பாகம், சமதளத்தின்உள்ளுக்குள்ளானதாயும், மத்தியமானது மத்தியமானதாயும், மிகவும் அதிக தாழ்ந்தது மிகவும் புறம்பானதாயுமாகிறது.

206. தொடர்பான ஒழுங்கின் மிகவும் உயர்ந்தது, ஏககாலத்தில் நடக்கும் ஒழுங்கில் மிகவும் அந்தரங்கமானதாகிறபடியினாலும், மிகவும் தாழ்ந்தது, மிகவும் வெளியேயுள்ளதா

கிறபடியினாலும், உயர்ந்தது என்பது உள்ளானதென்றும், தாழ்ந்தது வெளியேயுள்ளதென்றும் அர்த்தம் கொள்ளுகிறது. மேலே என்பதினாலும் கீழே என்பதினாலும், உயர்ந்ததென் பதினாலும் ஆழமானதென்பதினாலும் அதே அர்த்தம் கொள்ளப்படுகிறது.

207. ஒவ்வொரு இறுதியான பொருளிலும், ஏககாலத்தில் நடக்கும் பத்ததியில் வேறு வேறாக மாறும் மாற்றங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு தசைநாரிலுமிருக்கும் இயக்கும் சக்தியுள்ள நார்களும், ஒவ்வொரு நரம்பிலுள்ள நார்களும், மேலும் ஒவ்வொரு ஆந்திரிகத்திலும் அங்கத்திலுமுள்ள நார்களும் சிறு நாடிகளும் அவ்வித ஒழுங்கில் இருக்கின்றன. அவைகளில் மிகவும் அந்தரங்கமானவைகளில், மிகவும் சம்பூரணமான மிகவும் தனித்த கலப்பற்ற பொருள்கள் இருக்கின்றன; மிகவும் வெளியேயுள்ளவைகள் இவைகளின் கூட்டமாயிருக்கிறது. ஒவ்வொரு விதையிலும், பழத்திலும், அதனுடன் ஒவ்வொரு உலோகத்திலும் கல்லிலும், இந்த நிலைகளின் அதே மாதிரியான பத்ததியு மிருக்கிறது; முழுவதும் உண்டாகிற, இவைகளின் பகுதிகள் தங்களிட ஒழுங்கில் அவ்விதமா யிருக்கின்றன. அவைகளின் முதன்மையான பதார்த்தங்களாகவும் பொருள்களாகவும் இருக்கிற தனித்த கலப்பற்ற பொருள்களிலிருந்து உண்டாகும் கட்டுகளும் கூட்டங்களுமாகிய தொடர்பான கலப்பு பதார்த்தங்களா யிருக்கிறபடியினால், பகுதிகளின் மிகவும் அந்தரங்கமானதும், மத்தியமானதும், மிகவும் வெளியேயுள்ளதுமானவைகள், அந்த நிலைகளில் இருக்கின்றன.

208. சுருங்கச்சொல்லில், ஒவ்வொரு இறுதியானதிலும், இம்மாதிரியாக ஒவ்வொரு காரியம் அல்லது பலனி

லும், அவ்வித நிலைகள் இருக்கின்றன. ஏனென்றால், ஒவ்வொரு இறுதியான பொருளும், முந்திய பொருள்களாலும் இவைகள் அவைகளின் முதன்மை யானவைகளாலும், நிறைந்திருக்கின்றன. ஒவ்வொரு காரியமும் ஒரு காரணத்திலிருந்து வருகிறது. இது ஒரு முடிவிலிருந்து வருகிறது; மேல் கூறிய படி முடிவானது, காரணத்தின் எல்லாமாயிருக்கிறது, காரணமானது காரியத்தின் எல்லாமாயிருக்கிறது; முடிவானது மிகவும் அந்தரங்கமானது, காரணம் மத்தியிலுள்ளது, காரியம் இறுதியானது. அன்பினிடவும் ஞானத்தினிடவும், சூட்டினிடவும் ஒளியினிடவும் நிலைகளுக்கும், அதனுடன் மனிதனிலிருக்கும் ஆசைகளிடவும் சிந்தனைகளினிடவும் உருப்புள்ள உருவங்களுக்கும், விஷயம் அம்மாதிரி இருக்கிறதென்பது பின் வருவதால் அறிந்து கொள்ளலாம். தொடர்பான பத்ததியிலும் ஏககாலம் நடக்கும் பத்ததியிலும், இந்த நிலைகளின் வரிசைகள் பரிசுத்த வேதத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கொள்கை எனும் நூலிலும், வேறு இடங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. வேதத்தின் எல்லா பொருள்களிலும், பொதுவாகவும் சிறப்பாகவும் அதைப்போன்ற நிலைகள் இருக்கின்றனவென்று அங்கே காண்பிக்கப் பட்டிருக்கிறது.

இறுதியான நிலையானது முந்திய நிலைகளை தழுவுகிறதும், உள்ளே அடக்கிக் கொண்டிருப்பதும், அதற்கு அஸ்திவாரமானதுமாயிருக்கிறது.

209. இந்த பாகத்தில் கூறியிருக்கும் நிலைகளின் சித்தாந்தமானது இதுவரையில், இரண்டு உலகத்திலுமுள்ள பல பொருள்களால் அதாவது தேவர்களிருக்கும் சுவர்க்கங்களின்நிலைகளாலும், அவர்களுக்குள்ள சூட்டினிடவும்

ஒளியினிடவும் நிலைகளாலும், ஆகாயங்களின் நிலைகளாலும், மானிட சரீரத்திலும், அதனுடன் பிராணி வர்க்கத்திலும் தாவர வர்க்கத்திலும் உள்ள பல பொருள்களாலும், திருஷ்டாந்தப் படுத்தப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த கோட்பாடு, அதிகமாய் விரித்துச் சொல்லக் கூடியது ; ஜடப்பொருளுக்கு மாத்திரமல்லாமல், தேசாசாரமானதும், சன்மார்க்கமானதும், பரமார்த்தமானதுமான பொருள்களுக்கும் கூட பொதுவாகவும் சிறப்பாகவும், அவைகளின் விரிவுகளுக்கும் அது ஆரோபிக்கக் கூடியது. நிலைகளின் கோட்பாடு, அவ்விதப் பொருள்களுக்குக் கூட ஏன் வியாபிக்கிறதென்பதற்கு, இரண்டு காரணங்களிருக்கின்றன. முதலாவது காரணம் ஏதோ ஒன்றை ஆரோபிக்கக்கூடிய ஒவ்வொரு பொருளிலும், முடிவென்றும், காரணமென்றும், காரியமென்றும் சொல்லப்பட்ட மூன்று பொருள்களிருக்கின்றனவென்பதும், இவைகள் உயர்ந்ததைச் சேர்ந்த நிலைகளுக்கு தக்கபடி சம்பந்தப்பட்டிருக்கிறதென்பதும், இரண்டாவது காரணம், ஒவ்வொரு தேசாசாரமானதும், சன்மார்க்கமானதும், பரமார்த்தமானதும் பதார்த்தத்திலிருந்து பிரிக்கப்பட்ட யாதொன்றுமல்லவென்பதும், ஆனால் இந்த பொருள்கள் எல்லாம் பதார்த்தங்கள் என்பதுமாயிருக்கிறது. ஏனென்றால், அன்பும் ஞானமும் ஒன்றிலிருந்து பிரிக்கப்பட்ட பொருள்களாயல்லாமல், மேலே (40 முதல் 43-வது பிரிவுகள் வரையில்) காண்பித்தபடி ஒரு பதார்த்தமாயிருப்பது போல, தேசாசாரமானதும், சன்மார்க்கமானதும், சூக்குமமான எல்லா பொருள்களும் அம்மாதிரியே யிருக்கின்றன. இவைகளை பதார்த்தங்களிலிருந்து பிரித்து வேறாய் நிஜமாக நினைக்கக்கூடும்; ஆனாலும் அவைகள் சுயமாய் பிரிக்கப்படுகிறதில்லை. ஆசையையும் சிந்தனையை

யும், தருமத்தையும் பக்தியையும், சித்தத்தையும் புத்தியை யும், உதாரணமாக எடுத்துக்கொள்ளலாம். பதார்த்தங்களா யிருக்கிற பொருள்களுக்கு வேறுய் நிலக்காமல், பதார்த்தங் கள் அல்லது பொருள்களின் நிலைமைகளாயிருக்கிற தென் பதில் இவைகள் அன்பையும் ஞானத்தையும் போலிருக்கின் றன. பேதங்கள் ரூபமாக அவைகள், இவைகளின் மாறுதல் கள் என்பது பின் வருவதில் அறியப்படலாம். பதார்த்தத் துக்கு உருவமில்லாமல் இருக்கும் தன்மையில்லாதபடியினுல், பதார்த்தம் என்பதால் உருவம் என்று கூட அருத்தம் கொள் ளுகிறது.

210. ஆனுல், சித்தமும் புத்தியும், ஆசையும் சிந்தனை யும், அதனுடன் தருமமும் பக்தியும், அவைகளின் பொருளா யிருக்கிற பதார்த்தங்களிலிருந்து வேறுய், நினைக்கக்கூடுமா கையாலும், நினைக்கபட்டிருக்கிறபடியினுலும், இந்தப்பொருள் களைப்பற்றி, பதார்த்தங்களின் அல்லது உருவங்களின் நிலை மைகளாக இவைகள் இருப்பதாக கொள்ளும் ஒரு திருத்த மான அபிப்பிராயமானது அழிந்துபோக நேரிட்டது. இந்திரிய ஞானத்தையும் சலனத்தையும் கொண்ட அங்கங்களிலிருந்து வேறுய் பிரிக்கப்பட்ட பொருள்களாய்கூட இராத இந்திரிய ஞானத்துக்கும் சலனத்துக்கும் இருப்பது போல், விஷயம் முழுமையு மிருக்கிறது. இவைகளிலிருந்து பிரிக்கப்பட்டால், அவைகள் மனக் கற்பனையானவைகளாக மாத்திரம் இருக்கின் றன ; கண்ணில்லாத பார்வை போலும், காதில்லாத கேழ்வி போலும், நாவில்லாத சுவைபோலும் இவை முதலியவை போன்றும் அவைகள் இருக்கின்றன.

211. தேசாசாரமானதும், சன்மார்க்கமானதும், பர மார்த்தமானதுமான பொருள்கள் எல்லாம், ஸ்தூல பொருள்

களைப்போல், காரியபாடுகள் மூலமாய் செல்லுகிறபடியினாலும், தொடர்பான நிலைகள் மூலமாய் மட்டுமெல்லாமல், வேறுவேறாக மாறும் நிலைகள்மூலமாய் கூட செல்லுகிறபடியினாலும், வேறாக மாறும் நிலைகளின் போக்குகள், முடிவுகள் காரணங்களுக்கும், காரணங்கள் காரியங்களுக்கும்செல்வதுபோல் இருப்பதாலும், இறுதியான நிலையானது மேல் சொல்லிய பொருள்களால், அதாவது அன்புக்கும் ஞானத்துக்கும், சித்தத்திற்கும் புத்திக்கும், ஆசைக்கும் சிந்தனைக்கும், தருமத்துக்கும் பக்திக்கும் சம்பந்தப்பட்டவைகளால், முந்திய நிலைகளை தழுவுவதும், தன்னுள்வைத்திருப்பதும், அவைகளுக்கு அஸ்திவாரமானதாயும், இருக்கிறதென்கிற இந்த நிகழும் விஷயத்தை நான் திருஷ்டாந்தப்படுத்தி ரூபிக்க இஷ்டப்பட்டேன்.

212. இறுதியான நிலையானது முந்திய நிலைகளை தழுவுகிறதும், தன்னுள்ளேஅடக்கிவைத்திருப்பதும், அவைகளுக்கு அஸ்திவாராமாயிருப்பதும்,முடிவுகளும்,காரணங்களும்,காரியங்களுமாக விருத்தியடைவதால் தெளிவாய்வெளியாகிறது. காரியமென்பது காரணங்களையும் முடிவுகளையும் தழுவி, அவைகளை தன்னுள்ளே வைத்து அவைகளுக்கு அஸ்திவாரமாயிருக்கிறதென்பது தெளிவிக்கப்பட்ட விவேகத்தால் கிரகிக்கப்படும். ஆனால், முடிவும் அதற்கு சேர்ந்தவைகளும், காரணமும் அதற்கு சேர்ந்தவைகளும்,காரியத்தில் நிஜமாய் இருக்கின்றனவென்பதும், காரியமென்பது அவைகளை முழுமையும் தழுவப்பட்டதென்பதும், அவ்வளவு எளிதாய் அறிந்து கொள்ளமுடியாது. இது இப்படி இருக்கிறதென்பது, இந்த பாகத்தில் மேலே, சொல்லியவைகளிலிருந்தும், முக்கியமாய், ஒன்று மற்றொன்றிலிருந்து மும்மடங்கான வரிசையில் உண்டாகிறதென்பதும், காரியம் என்பது, அதின் இறுதியில் முடிவாக இருப்பதைத்

தவிர வேறொன்றுமில்லை என்பதுமாகிய இத்த ஆலோசனைகளால் விசதமாகிறது; தழுவப்பட்டது இறுதியாயிருப்பதால், இறுதியானது தன்னுள்ளே அடக்கிவைப்பதென்றும், அஸ்திவாரமான தென்றும் பின் தொடருகிறது.

213. அன்பும் ஞானமும் சம்பந்தப்பட்ட வரையில் அன்பானது முடிவாயும், ஞானமானது துணைக்காரணமாயும் பலன் காரியமாயும், இருக்கின்றது; பலனானது, ஞானத்தையும் அன்பையும் தழுவுகிறதும், அவைகளை தன்னுள் வைப்பதும், அவைகளுக்கு அஸ்திவாரமானதாயு மிருக்கிறதுமானது; பலனானது, அன்பையும் ஞானத்தையும் சேர்ந்த எல்லா பொருள்களும், அதில் நிஜமாய் இருக்கும்படியாக, தழுவுகிறதும், தன்னுள் வைப்பதுமாயிருக்கிறது; அவைகள் ஏககாலத்திலிருப்பது அதுவாகும். ஒரே இனமானதும், பொருந்தியதுமாயிருக்கிற அன்புக்கும் ஞானத்துக்கும் சேர்ந்த எல்லாபொருள்களும் மேலே (189-முதல் 194-வது பிரிவுவரையில்) காண்பிக்கப்பட்டு, கூறியபடிக்கு பலனிருக்கிறதென்று தகுந்தபடி மனதில் வைக்கவேண்டும்.

214. பட்சம் என்பது அன்புக்கும், சிந்தனை ஞானத்துக்கும், செய்கை பலனுக்கும் சம்பந்தப்பட்டிருப்பதால், பட்சமும், சிந்தனையும், செய்கையும்கூட அதைப்போன்ற காரியப்பாடுகளில் ஒரு வரிசையில் இருக்கின்றன. தருமத்துக்கும், பக்திக்கும், நற்செயல்களுக்கும் விஷயம் அம்மாதிரியேயிருக்கிறது; ஏனென்றால் தருமம் பட்சத்திற்கும், பக்தி சிந்தனைக்கும், நற்செயல்கள் செய்கைகளுக்கும் சார்ந்திருக்கின்றன. சித்தத்துக்கும், புத்திக்கும், சாதனைக்கும் அதே பொருந்துகிறது; அவைகளும் கூட அதைப்போன்ற நிலைகளின் ஒரு வரிசையில் இருக்கின்றன. ஏனென்றால், சித்தம் அன்பிற்கும்,

அதிலிருந்து பட்சத்துக்கும், புத்தியானது ஞானத்துக்கும், அதிலிருந்து பக்திக்கும், சாதகம் பலனுக்கும், அதிலிருந்து வேலைக்கும் சார்ந்திருக்கிறது. ஆகவே, ஞானத்தினிடவும் அன்பினிடவும் எல்லா பொருள்களும் பலனிலிருப்பதுபோல், சிந்தனைக்கும் பட்சத்துக்கும் சேர்ந்த எல்லா பொருள்களும், செய்கையிலும், பக்திக்கும் தருமத்துக்கும் சார்ந்த எல்லா பொருள்களும், நற்செய்கைகளிலும், இதுபோல் மற்றவைகளும் இருக்கின்றன; ஆனால் எல்லாம் ஒரே இனமாயிருக்கவேண்டும். அதாவது இணக்கமானதா யிருக்கவேண்டும்.

215. ஒவ்வொரு வரிசையின் இறுதியானவை, அதாவது பலன், செய்கை, வேலை, சாதனை, ஆகிய இவைகள் முந்திய பொருள்களைத் தழுவுவதும், தன்னுள் அடக்கிவைத்திருப்பது மென்று இன்னும் இதுவரையில் தெரிந்துகொள்ளப் படவில்லை. பலனிலும், செய்கையிலும், வேலையிலும், அப்பியாசத்திலும், சலனத்திலிருக்கும் அதே அம்சங்களைப் பார்க்கிலும், அதிகம் இல்லையென்று தோன்றுகிறது. என்றாலும், முந்திய பொருள்களெல்லாம், அவைகளில் நிஜமாகவும், யாதொன்றும் குறைவில்லாதபடி அவ்வளவு முழுமையும் இருக்கின்றன. ஓர் பீப்பாயிலிருக்கும் மதுபோலும், வீட்டிலிருக்கும் சாமான்போலும், அவைகள் அங்கே அடக்கம் செய்யப்பட்டிருக்கின்றன. அவைகளை புறம்பாய் மட்டும் பார்க்கிறபடியினாலும், அப்படி பார்க்கும்போது அவைகள் முயற்சிகளாகவும் சலனங்களாகவும், மாத்திரம் இருப்பதாலும், அவைகள் தோன்றுகிறதில்லை. அது புயங்களும் கைகளும் அசைதல் போலிருக்கிறது; மனிதனுக்கு ஆயிரம் இயக்கும் சக்தியுள்ள நார்கள் அவைகளின் ஒவ்வொரு சலனத்திலும் ஒத்துவருகின்றன வென்றும், ஆயிரம் இயக்

கும் சக்தியுள்ள நார்களுடன், சிந்தனைக்கும் பட்சத்துக்கும் சேர்ந்த ஆயிரமாயிரமான பொருள்கள், காரணக் காரிய சம்பந்தப்பட்டு, அந்த இயக்கும் சக்தியுள்ள நார்களை ஏவுகின்றனவென்றும் தெரியாது. இவைகள் மிகவும் அந்தரங்கமாய் செயல்படுகிறபடியினால், சரீர இந்திரியங்களுக்கு அவைகள் புலப்படுகிறதில்லை. சித்தத்திலிருந்து சிந்தனை மூலமாய் தவிர, சரீரத்திலாவது சரீரத்தின் மூலமாயாவது யாதொன்றும் செய்யப்படுகிறதில்லையென்று மட்டும் தெரிந்திருக்கிறது; இவைகள் இரண்டும் செயல்படுகிறபடியினால், சித்தத்தினிடவும் சிந்தனையினிடவும் ஒவ்வொன்றும், பொதுவாகவும் சிறப்பாகவும் செய்கையில் அவசியமாய் இருக்கவேண்டியது. அவைகளைப் பிரிக்கமுடியாது. இந்த காரணத்துக்காகத்தான் ஒரு மனிதனிட கருமங்கள் அல்லது பணிவிடைகளிலிருந்து, மற்றவர்கள் அவனிட எண்ணம் என்று சொல்லப்பட்ட அவன் சித்தத்தின் சிந்தனைகளை தீர்மானிக்கிறார்கள். வானோர்கள், ஒரு மனிதனிட கருமங்கள் அல்லது பணிவிடைகளால் மாத்திரம், செய்பவனிட சித்தத்தினிடவும், சிந்தனையினிடவும் முழுவதும் தெரிந்து கொள்ளுகிறார்களென்று எனக்கு தெரியப்படுத்தப்பட்டது. மூன்றாவது சுவர்க்கத்து தேவர்கள், அவனிட சித்தத்திலிருந்து, அவன் செயல்படும் முடிவையும், இரண்டாவது சுவர்க்கத்து தேவர்கள் முடிவு தொழில்படும் காரணத்தையும் அறிந்து கொள்ளுகிறார்கள். இம்மாதிரியாக வேதத்தில் பணிவிடைகளும் கருமங்களும் செய்யப்பட அடிக்கடி உத்திரவு செய்யப்பட்டிருக்கிறது. மேலும் ஒரு மனிதனானவன் தன்னிட கருமங்களால் அறியப்படுகிறானென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

216. சித்தமும் புத்தியும், அல்லது பட்சமும் சிந்தனை யும், அதனுடன் தருமமும் பக்தியும், இயன்றபோது கருமங் கள் அல்லது பணிவிடைகளால் தாங்களே உடுத்துக்கொண் டால் ஒழிய, அவைகள் காணமல் போய்விடுகிற காற்றன பொருள்களைப் பார்க்கிலும் அல்லது அழிந்துபோகிற மாயா ரூபங்களைப் பார்க்கிலும் கொஞ்சம்கூட மேலானதில்லை என் பதும், அவைகள் முதலில் மனிதனிலிருந்து, அவன் அவைக ளைச் செய்யும்போது அவைகள் அவன் உயிரின் ஓர் பாகமா கிறதென்பதும், வானோர் ஞானத்தைச் சேர்ந்த விஷயமாயிருக் கிறது. இறுதியானது, முந்திய பொருள்களை தழுவுவதும் தன்னுள் வைத்திருப்பதும், அவைகளுக்கு அஸ்திவாரமா யிருப்பதும் என்பது, காரணமாயிருக்கிறது. அவ்வித காற்றன சூனியமும், அவ்வித மாயா ரூபமும், நற்செயல்களிலிருந்து பிரிக்கப்பட்ட பக்தியாயிருக்கிறது; பத்தியும் தருமமும் அப்பியாசிக்காவிட்டால், பக்தியையும் தருமத்தையும் ஏற் றுக்கொள்பவர்களுக்கு நற்செயல்கள் என்னவென்று தெரியு மென்கிறதும், அவைகளைச் செய்ய இச்சிக்கலாமென்கிறதும், தருமத்திலிருந்து பிரிக்கப்பட்ட பக்தியுள்ளவர்களுக்கு அப் படி தெரிந்து செய்ய முடியாதென்கிறதுமான இந்த வித்தியா சத்துடன், அம்மாதிரியே கூட இருக்கின்றன.

**உயரத்தைச் சேர்ந்த காரியப்பாடுகள் அவைகளின் இறுதியானவைகளில், நிறைவிலும் வல்லமையிலு மிருக்கின் றன.**

217. முன் பிரிவில் இறுதியான நிலை என்பது, முந்திய நிலைகளை தழுவுவதும் தன்னுள் வைத்திருப்பதும் என்று காண் பிக்கப்பட்டது. ஆகையினால் முந்திய நிலைகள் தங்களிட இறுதியில், நிறைவில் இருக்கின்றனவென்று ஏற்படுகிறது;

ஏனென்றால், அவைகள் அவைகளின் காரியத்திலிருக்கின்றன, ஒவ்வொரு காரியமும் காரணங்களின் நிறைவாயிருக்கிறது.

218. முந்தியதும் பிந்தியதுமென்றும், அம்மாதிரியாக உயரத்தைச் சேர்ந்த நிலைகளென்றும், அகலத்தைச் சேர்ந்த நிலைகளென்றும் சொல்லப்பட்ட, ஏறுவதும் இறங்குவதுமான நிலைகள், அவைகளின் இறுதியான நிலைகளில் தங்களிட வல்லமையிலிருக்கின்றன வென்பது, முன்கூறிய பிரிவுகளில், சைதன்னிய உலகத்திலும் ஜட உலகத்திலுமிருந்து பிரமாணங்களாக எடுத்துக் காட்டப்பட்ட எல்லா பொருள்களாலும், உறுதி படுத்தப்படலாம். ஆயினும், உயிரில்லாத பொருள்களிலும், உயிருள்ள பொருள்களிலும் இருக்கும் முயற்சிகளாலும், சக்திகளாலும், சலனங்களாலும், அவைகளை உறுதிபடுத்த இங்கே நான் விரும்புகிறேன். முயற்சியானது சுயமாய் ஒன்றும் செய்து முடிக்காதென்றும், ஆனால் அது தன்னுடனேயே அன்னுவயப்பட்ட சக்திகளால் சேட்டிக்கிறதென்றும், இவைகளின் மூலமாய் காணக்கூடிய சலனத்தை உண்டாக்குகிறதென்றும், இந்த காரணத்தினால் தான், முயற்சியானது சக்திகளில் எல்லாமாயும், சக்திகள் மூலமாய் சலனத்தில் எல்லாமாயும் இருக்கிறதென்றும், சலனமானது முயற்சியின் முடிவான நிலையாயிருப்பதால், இந்த சலனத்தால் அதன் வல்லமையை பிரயோகிக்கிறதென்றும், நன்றாய் தெரிந்திருக்கிறது. முயற்சியும், சக்தியும், சலனமும், உயரத்தைச் சேர்ந்த நிலைகளுக்குத் தக்கபடி சேர்க்கப்பட்டிருக்கின்றன ; இந்த சேர்க்கையானது, அவைகள் வேறானவைகளானபடியினால் தொடர்பினால் அல்லாமல், அன்னுவயங்களால் உண்டாகிறது. ஏனென்றால், முயற்சி சக்தியல்ல,

அதுவுமல்லாமல் சக்தியும் சலனமல்ல. ஆனால் சக்தியானது ஏவப்பட்ட முயற்சியாயிருக்கிறபடியினாலும், சலனமானது சக்தியினால் உண்டாக்கப்படுகிறபடியினாலும், சக்தியானது முயற்சியினால் உண்டாக்கப்படுகிறது. ஆகையினால் முயற்சியில் மட்டும் அல்லது சக்தியில் மட்டும், யாதொரு வல்லமையில்லாமல், அவைகளில் உற்பத்தியான சலனத்தில் மட்டும், அது இருக்கிறது. பிரகுருதியில் பார்க்கக்கூடிய பொருள்களுக்கு பிரயோகிப்பதால், அது திருஷ்டாந்தப் படுத்தப்படாதபடியினால், இது இன்னும் சந்தேகமாயிருப்பதாகத் தோன்றுகிறது. அப்படியிருந்தும், முயற்சியும் சக்தியும் சலனமும் வல்லமைக்குச் செல்லுதல் அவ்விதமாயிருக்கிறது.

219. ஆனால் உயிருள்ள முயற்சிக்கும், உயிருள்ள சக்திக்கும், உயிருள்ள சலனத்திற்கும், இதை பிரயோகிக்கலாம். உயிருள்ள பொருளாயிருக்கிற மனிதனில் உயிருள்ள முயற்சி என்பது அவனிட புத்திக்கு சேர்ந்த அவன் சித்தமாயிருக்கிறது. மனிதனிலிருக்கும் உயிருள்ள சக்திகள், அந்தரங்கமாய் அவனிட சரீரத்தை உண்டாக்குகிற பொருள்களாயிருக்கின்றன; அவைகளிலெல்லாம், பலவிதங்களில், சேர்த்து நெய்யப்பட்ட சேட்டிக்கும் சக்தியுள்ள நார்கள் இருக்கின்றன. அவனில் உயிருள்ள சலனமானது புத்தியுடன் சேர்க்கப்பட்ட சித்தத்தின் மூலமாய் இந்த சக்திகளிலிருந்து உண்டாகிற சேட்டையாயிருக்கிறது. இவ்விதமாக, சித்தத்தினிடவும் புத்தியினிடவும் அந்தரங்கப் பொருள்கள், முதல் நிலையை ஏற்படுத்துகின்றன. சரீரத்தின் அந்தரங்கப் பொருள்கள் இரண்டாவது நிலையையும், இவைகளைத் தழுவுகிற முழுசரீரமும், மூன்றாவது நிலையையும் ஏற்படுத்துகின்றன. மனதனிட அந்தரங்கப் பொருள்களுக்கு,

சரீரத்திலுள்ள சக்திகள் மூலமாய்த் தவிர, எந்த வல்லமையும் யில்லை யென்பதும், மேலும் சக்திகளுக்குகூட சரீரத்தனிட சேட்டையினால் தவிர, எந்த வல்லமையுமில்லை யென்பதும் ஒப்புக்கொண்ட சங்கதியாயிருக்கிறது. இந்த மூன்றும் தொடர்பினால் அல்லாமல், வேறாகும் தன்மையால் சேட்டிக்கிறது. வேறாகமாறும் தன்மையால் சேட்டித்தல் அன்னுவயங்களால் சேட்டித்தலாகும். மனிதனிட அந்தரங்கங்கள், சரீரத்தின் அந்தரங்கப் பொருள்களுடனும், சரீரத்தின் அந்தரங்கங்கள் சேட்டை சம்பவிக்கும் அவைகளின் புறமானவைகளுடனும் அன்னுவயப்படுகின்றன; ஆகையினால், முந்திய இரண்டு நிலைகளும் சரீரத்தின் புறம்பானவைகள் மூலமாய் வல்லமையை உடைத்தாயிருக்கிறது. மனிதனிலிருக்கும் முயற்சியும் சக்திகளும், நித்திரையிலும், இளைப்பாறும் நிலைகளிலும் போல், சேட்டை ஒன்றுமில்லாவிட்டாலும் ஏதோ ஒரு வல்லமையை உடைத்தாயிருப்பதாகத் தோன்றும்; அப்படி இருந்தாலும், முயற்சிகளிடவும் சக்திகளிடவும் முடிவுகள் அந்த காலங்களில், இருதயமாகவும் சுவாசாசயங்களாகவுமிருக்கிற சரீரத்தின்பொதுவான சேட்டிக்கும் சக்தியுள்ள அங்கங்களில் செலுத்தப்படுகின்றன. ஆனால் இவைகளின் சேட்டை நின்றபோது, சக்திகளும் நின்று சக்திகளோடு முயற்சிகளும் நின்றுவிடுகின்றன.

220. முழுசரீரமும், அதன் வல்லமைகளை இறுதியானவைகளாயிருந்த புயங்களிலும் கைகளிலும் முக்கியமாய் செலுத்துகிறபடியினால், வேதத்தில் புயங்கள், கை கால் என்பவை வல்லமை என்று அர்த்தம் கொடுக்கின்றன; வலதுகை என்பது உயர்ந்த வல்லமை என்று அர்த்தம் கொடுக்கிறது. நிலைகள் வல்லமையாக விரிதலும் தழைத்தலும் இவ்விதமா

யிருத்தலால், கைகளின் சேட்டையால் மாத்திரம், மனிதனுடனும், அவனைச் சேர்ந்த ஒவ்வொன்றின் அன்னுவபத்திலும் இருக்கிற தேவர்களுக்கு, அவனிட புத்தியினிடவும் சித்தத்தினிடவும் லக்ஷணங்களும் அவனிட தருமத்தினிடவும் பக்தியினிடவும் சுபாவத்துக்கும் இவ்விதமாக, அவன் மனதில் அந்தரங்கஉயிரும், சரீரத்தில் அதிலிருந்து வந்தபுறம்பான உயிரும் தெரியும். கைகளின் மூலமாய் தோன்றும் சரீரத்தின் சேட்டையிலிருந்து மட்டும் தேவர்களுக்கு அவ்வளவு தெரிகிறதென்று நான் அடிக்கடி ஆச்சரியப்பட்டேன்; ஆனால் அது அப்படியிருக்கிறதென்று, உயிருள்ள அனுபவத்தால் சில வேலைகளில் காண்பிக்கப்பட்டது. இந்த காரணத்தினால்தான் குருதொழிலுக்குப் பட்டம் கட்டல் கைகளை மேலே வைத்தலால் நடத்தப்படுகிறதென்றும், கையினால் தொடுதல் என்பது அறிவித்தலென்று அர்த்தம் கொடுக்கிறதென்றும், இவ்வித சுபாவமுள்ள அநேக சங்கதிகள் எனக்கு சொல்லப்பட்டது. தருமத்தினிடவும் பக்தியினிடவும் எல்லாம் கிரியைகளிலிருக்கிறதென்றும், கிரியைகளில்லாத தருமமும் பத்தியும், மறைந்துபோய் மேகத்தில் காணமல்போகிற, சூரியனை அடுத்த வானவில்லைப்போல் இருக்கின்றனவென்றும் இதனால் ஏற்படுகிறது. இந்த காரணத்தினால்தான் **வேதத்தில்,** கிரியை களைப்பற்றி அவ்வளவு அடிக்கடி பேசப்பட்டும், அவைகளை நாம் செய்யும்படி சொல்லப்பட்டும், ஒரு மனிதனிட மோட்சம் அவைகள் பேரில் சார்ந்திருக்கின்றதென்றும், இருக்கிறது. மேலும், கிரியையாளி, ஞானியென்றும், அம்மாதிரி செய்யாதவன் அஞ்ஞானியென்றும் சொல்லப்படுகிறது. ஆனால், கிரியைகள் என்பதால், நிஜமாய் செய்யப்படுகிற உபயோகங்கள் என்று இங்கே அருத்தம் கொள்ளப்படுகிறதென்று தெரிந்

திருக்கவேண்டும் ; ஏனென்றால், தருமத்தினிடவும் பக்தியினிடவும் எல்லாம், உபயோகத்திலும், உபயோகத்துக்கு, தக்கபடியும் இருக்கின்றன. அது சூக்குும சம்பந்தமுள்ளதால் உபயோகங்களுடன் இந்த அன்னுவயமிருக்கிறது; ஆனால், விசேடியங்களாயிருக்கிற பதார்த்தங்களாலும் ஜடப்பொருள்களாலும் அது நிலைத்திருக்கிறது.

221. முன் சொல்லியதினால், புத்தியின் எல்லைக்குள்ளே கொண்டுவரப்பட்ட இரண்டு இரகசியங்கள் இங்கே வெளிபடுத்தப்படலாம். வேதமானது, சொற்பொருளில், அதன் நிறைவிலும் வல்லமையிலும் இருக்கிறதென்பது முதல் இரகசியமாயிருக்கிறது. ஏனென்றால் வேதத்தில் மூன்று நிலைகளுக்குப் தக்கபடி, அதிசூக்கும அருத்தம் என்றும், சூக்கும அருத்த மென்றும், ஸ்தூலார்த்தமென்றும் மூன்று அருத்தங்களிருக்கின்றன. இந்த அருத்தங்கள் வேதத்தில் உயரத்தை சேர்ந்த நிலைகளுக்குத் தக்கபடி இருக்கிறபடியினாலும், அவைகளின் ஐக்கியம், அன்னுவயங்களால் சித்தியாக்கப்படுகிறபடியினாலும், ஸ்தூலமாயிருக்கிறதும், சொல்லார்த்தமென்று சொல்லப்படுகிறதுமான இறுதியான அர்த்தம், அதனுடன் பொருந்துகிற அந்தரங்கமான அருத்தங்களை தழுவுகிறதும், தன்னுள் அடக்கி வைத்திருக்கிறதும், அதன் அஸ்திவாரமாயிருக்கிறது மட்டுமல்லாமல், இறுதியான அர்த்தத்தில் அதின் நிரைவிலும் வல்லமையிலும் வேதமாக கூட இருக்கிறது. இது இப்படி இருக்கிறதென்பது பரிசுத்த வேதத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்தின் கோள்கை எனும் நூலில், பிரி. 27 முதல் 35 வரையிலும், 36 முதல் 49 வரையிலும், 50 முதல் 61 வரையிலும், 62 முதல் 69 வரையிலும் மிகுதியாய் காண்பிக்

கப்பட்டு, உறுதி செய்யப்பட்டிருக்கிறது. ஆண்டவர் நரகங்களை அடக்க தான் வல்லமையுள்ளவராயிருக்கவும், சுவர்க்கங்களிலும் பூலோகங்களிலும் இரண்டிலும் எல்லா பொருள்களையும் ஒழுங்குபடுத்தவும், உலகத்துக்கு வந்து, ஒரு மனுஷத்தன்மையை, எடுத்துக்கொண்டார் என்பது இரண்டாவது இரகசிய யிருக்கிறது. இந்தமானிடத்தன்மையை அவரிடமுந்திய மானிடத்தன்மையின் பேரில் சேர்த்தார். உலகத்தில் அவர் தம்மேல் சேர்த்துகொண்ட மனுஷத்தன்மை, உலகத்திலுள்ள ஓர் மனிதனின் மனுஷத்தன்மைபோல் இருந்தது; என்றாலும் இந்த இரண்டு மானிடத் தன்மைகளும் தெய்வீகமானவைகள், ஆகையினால் தேவர்களிடவும் மனிதர்களிடவும் முடிவுள்ளமனுஷத் தன்மைகளுக்கு மட்டின்றி மேம்பட்டிருக்கின்றன. அவர், ஸ்தூலமான மனுஷத்தன்மையை அதன் முடிவுகள்வரையில், முழுமையும் மகிமையுள்ளதாக செய்தபடியினால் எல்லா மனிதர்களுக்கும் பேதப்பட்டு முழு சரீரத்துடன் மறுபடியும் எழுந்தார். இந்த மனுஷத்தன்மையை எடுத்துகொண்டதால், நரகத்தை அடக்குவதற்கும், சுவர்க்கத்தை ஒழுங்கு படுத்துவதற்கும் மட்டுமல்லாமல், நரகத்தை சதாகாலம் அடிமை தனத்தில் வைக்கவும், மனிதர்களை இரக்ஷிக்கவும்கூட, ஆண்டவர் தெய்வீக சர்வவல்லமையை தரித்து கொண்டார். கடவுளின் வல்லமையினிடவும் மகத்துவத்தினிடவும் வலதுகைப்பக்கத்தில் அவர் உட்கார்ந்திருப்பதால், இந்த வல்லமை அர்த்தம் கொள்ளப்படுகிறது. ஆண்டவர், ஸ்தூலமான மனுஷத்தன்மையை எடுத்துக்கொண்டதால், இறுதியானவைகளில் தெய்வீக உண்மையாக தாமே செய்து கொண்டபடியினால், அவர் வார்த்தை என்றும், அந்த வார்த்தையானது மாம்சமாக செய்யப்பட்டதென்றும் சொல்

லப்படுகிறது; இறுதியானவைகளில் தேய்வீக உண்மை சொற் பொருளில் அந்த வார்த்தையாயிருக்கிறது. மோசேவிலும் தீர்க்கதரிசிகளிலும், தன்னைப்பற்றி வேதத்தில் சொல்லிய எல்லாவற்றையும் நிறைவேற்றியதால், அவர் தாமே இதுவானார். ஏனென்றால், ஒவ்வொரு மனிதனும் தன் சொந்த நன்மையாகவும், தன் சொந்த உண்மையாகவும் இருக்கிறான்; வேறு எந்த காரணத்தினாலும், மனிதன் மனிதனாகிறதில்லை. ஆனால், ஆண்டவர், ஒரு ஸ்தூல மான மனுஷத்தன்மையை எடுத்துக் கொண்டதால், தெய் வீக நன்மையாகவும் தெய்வீக உண்மையாகவுமே இருக்கிறார்; அல்லது அதேவாகிற, முதன்மையானதிலும் இறுதியானதி லும் இரண்டிலும் அவர் பரம இச்சாசத்தியும் பரம ஞான சத்தியுமாகவே இருக்கிறார். அதனால் தான், அவர் உலகத்திற்கு வந்த பிறகு, அமரர் உலகங்களில், அவர் வருகை க்கு முன் இருந்ததைப் பார்க்கிலும், அதிக வலிமையுள்ள சோதியையும், பெரிய மகிமையையுமுடைய சூரியனாகத் தோன்றுகிறார். காரியப்பாடுகளின் சித்தாந்தங்களினால், புத் தியின் எல்லைக்குள் கொண்டு வரப்பட்ட ஓர் இரகசியமாக இது இருக்கிறது. உலகத்திற்கு வருவதற்குமுன் அவரிட சர்வ வல்லமையைப்பற்றி பின்வருவதில் பேசப்படும்.

சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற எல்லா பொருள்களினுடைய மிகவும் பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும் இரண்டுவித காரி யப்பாடுகளிருக்கின்றன.

222. எல்லாபொருள்களின் மிகவும் பெரியதும் சின்னஞ் சிறியதுமான பொருள்கள் அபூர்வ பரிணாம, விருத்திபரிணாம காரியப்பாடுகளாகவும் அல்லது உயரத்தைச் சேர்ந்த நிலை களாகவும் அகலத்தைச் சேர்ந்த நிலைகளாகவும் அமைந்திருக்

கின்றனவென்பது, சின்னஞ்சிறிய பொருள்கள் கண்களால் பார்க்கப்படாதபடியினாலும், மிகவும் பெரிய பொருள்கள் நிலைகளாக விசேஷத்தறியப்பட தோன்றாதபடியினாலும், காணப்படும் பொருள்களிலிருந்து உதாரணங்களால் திருஷ்டாந்தப்படுத்த முடியாது. ஆகையினால், இந்த விஷயம் எல்லாவற்றிற்கும் பிரயோகிக்கக் கூடியதால் தவிர, வேறுவிதத்தில் மெய்ப்பிக்க முடியாது. தேவர்கள், சமஸ்த மானதிலிருந்து ஞானத்திலிருப்பதால், அதனால் தனித்தவைகளைப்பற்றிய அறிவில் இருப்பதால், இந்த விஷயங்களைப்பற்றி அவர்கள் சொல்பவைகளை வெளிப்படுத்த உத்திரவு கொடுக்கப்பட்டிருக்கிறது.

223. இந்த விஷயத்தைப்பற்றி அவர்கள் சொல்வது பின்வருமாறு இருக்கிறது: இருவகை நிலைகளையும் தன்னில் உடைத்தாயிராத அவ்வளவு சின்னஞ்சிறியது இல்லை; உதாரணமாக, எந்த பிராணியிலாவது, செடியிலாவது, லோஹாதிகளிலாவது, (Ether) எனும் ஆகாயத்திலாவது, காற்றிலாவது இந்த நிலைகள் இல்லாத எந்த சின்னஞ்சிறிய பொருளும் கிடையாது. (Ether) எனும் ஆகாயமும் காற்றும், சூட்டினிடவும் ஒளியினிடவும் ஆசயங்களாயிருக்கிறபடியினால், இரண்டுவித நிலைகளில்லாத சின்னஞ்சிறிய சூடும் ஒளியும் கிடையாது; சூக்குமசூடும் சூக்குமஒளியும், அன்பினிடவும் ஞானத்தினிடவும் ஆசயங்களாயிருக்கிறபடியினால், இரண்டுவித நிலைகளுமில்லாத இவைகளில் சின்னஞ்சிறியது கிடையாது. பட்சத்தின் சின்னஞ்சிறியதும், சிந்தனையின் சின்னஞ்சிறியதும், இதுவுமல்லாமல் சிந்தனையின் ஒரு அபிப்பிராயத்தின் சின்னஞ்சிறியதும், இருவகை நிலைகளால் அமைந்திருக்கிறதென்பதும், அவைகள் அமைந்திராத சின்னஞ்சிறியது ஓர் சூனியமென்

பதும் தேவர்களின் பிரசித்தங்களிலொன்று; ஏனென்றால், அதற்கு உருவமில்லை; ஆகையினால் குணமுமில்லை. மேலும் மாற்றப்படக்கூடியதும் பேதப்படுத்தப் படக்கூடியதும், இதனால் நிலைத்திருக்கக் கூடியதுமான நிலைமையுமில்லை. சதாகாலம் ஆண்டவராயிருக்கிற, சிருஷ்டி கர்த்தாவாகிய கடவுளிடத்தில் இருக்கும் முடிவற்றவைகள், வேறாக ஒன்றாயிருக்கின்றன என்பதும், அவரிட முடிவற்றவைகளிலும் முடிவற்றவைகள் இருக்கின்றன வென்பதும், மட்டின்றி முடிவற்ற பொருள்களில், அவரில்கூட வேறாக ஒன்றாயிருக்கும், இருவகை நிலைகள் இருக்கின்றன வென்பதுமாகிய இந்த உண்மையால் தேவர்கள் இதை நிரூபிக்கிறார்கள். இந்தப் பொருள்கள் அவரிடமிருப்பதாலும், எல்லா பொருள்களும் அவரால் சிருஷ்டிக்கப்பட்டபடியினாலும், சிருஷ்டிக்கப்பட்ட பொருள்கள், அவரிடமிருப்பவைகளை ஓர் உருவத்தில் ஒத்துவருகிறபடியினாலும், அவ்வித நிலைகளில்லாத சின்னஞ்சிறிய முடிவான பொருள் ஒன்றுமில்லை என்று தொடர்கிறது. தெய்வமானது மிகவும் பெரியதிலும், சின்னஞ்சிறியதிலும், ஓரேமாதிரி யிருப்பதினால், இந்த நிலைகளும் சின்னஞ்சிறியதிலும் மிகப் பெரியதிலும் சமமாய் யிருக்கின்றன. கடவுளாகிய மனிதனில், முடிவற்ற பொருள்கள் வேறாக ஒன்றாயிருக்கின்றன என்பது மேலே (17-முதல் 22-வது பிரிவுகள் வரையில்) பார்க்கலாம்; தெய்வமானது மிக பெரியதிலும் சின்னஞ்சிறியதிலும் ஓரேமாதிரி இருக்கிறதென்பதை (77-முதல் 82-வது பிரிவுகள் வரையில்) பார்க்கலாம்; இவைகள் இன்னும் 155, 169, 171-வது பிரிவுகளில் தெளிவிக்கப்பட்டிருக்கின்றன.

224. மேலே (பிரிவுகள் 40 முதல் 43-வரையில்) காண்பித்தபடி, அன்பும் ஞானமும் பொருளாகவும் வடிவமாகவும்

இருப்பதினால், இருவித காரியப்பாடுகளும் தன்னில் இல்லாத அன்பினிடவும் ஞானத்தினிடவும், பிரியத்தினிடவும், சிந்தனையினிடவும், அல்லது மனோபாவனையினிடவும் கூட சின்னஞ் சிறியபொருள் நிலைத்திருத்தலில்லை; பிரியமும் சிந்தனையும் அம்மாதிரியே. மேலே கூறியபடி, இந்த நிலைகள் இல்லாத எந்த உருவமும் நிலைக்க முடியாதாகையால், இவைகளில் அதைப்போன்ற நிலைகள் இருக்கின்றனவென்று ஏற்படுகிறது. ஏனென்றால் உருவத்திலுள்ள பதார்த்தத்திலிருந்து, அன்பையும் ஞானத்தையும், பிரியத்தையும், சிந்தனையையும் பிரித்தலென்பது அவைகளை அழித்தலாகிறது; ஏனென்றால், மனிதனால் அவைகளின் வேறுபாடுகளில் பார்க்கப்பட்ட பொருள்களின் நிலைமைகளாயிருப்பதாலும், நிலைமைகள் அவைகளின் பொருள்களை வெளிப்படுத்துகிற படியினாலும், அவைகளின் பொருள்களை நீங்கலாய் அவைகள் நிலைத்தல் என்பது முடியாது.

225. தங்கள் முழுபரப்பில் பிரபஞ்சமும் ஸ்தூலலோகமும், சூக்கும லோகமும், மேலும் அவைகளின் மொத்தத்தில் ஒவ்வொரு சக்கிரவர்த்தித்வமும், ஒவ்வொரு இராச்சியமும், அம்மாதிரியாக அவைகளின் தேசாசாரமானதும் சன்மார்க்கமானதும் பரமார்த்தமானதுமாகிய காரியங்களும், தங்கள் முழு விசாலத்தில் பிராணிவர்க்கமும் விருக்ஷவர்க்கமும் தாவரவர்க்கமும், அதனுடன் ஒன்றாய் சேர்த்த இரண்டு உலகத்திலுள்ள ஆகாயங்களும், அதன்சூடுகளும் ஒளிகளும், இருவித நிலைகளுமிருக்கப்பட்ட எல்லாவற்றிலும் பெரிய பொருள்களாயிருக்கின்றன. மனிதனைப்போலவும், ஒவ்வொரு பிராணியும், ஒவ்வொரு மரமும், பூண்டும்போலவும், அதனுடன் அவைகளின் விசாலத்தில் ஒவ்வொரு கல்லும், ஒவ்வொரு உலோகமும் போலவும், குறைந்த வியாபகமுள்ள பொருள்களிலும் விஷ

யம் அம்மாதிரியே யிருக்கிறது. இந்த பொருள்களின் உரு வங்கள் இந்த விஷயத்தில் ஒத்திருக்கின்றன; அவைகள் இரு வித நிலைகளால் அமைந்திருக்கின்றன. அவைகளை சிருஷ் டித்த தெய்வம், மேலே (77 முதல் 82வது பிரிவுகள் வரை யில்) காண்பிக்கப்பட்டபடி மிகப் பெரியதிலும் சின்னஞ் சிறி யதிலும் ஒரேமாதிரி இருக்கிறதென்பது காரணமாயிருக்கி றது. தனித்தவைகளும், இவைகளின் மிகவும் சவிஸ்தாரமான வைகளும், பொதுவானவைகளுடனும் மிகவும் பொதுவான வைகளுடனும், இரண்டுவித நிலைகளின் உருவங்களென்பதில் ஒத்துப்போகின்றன.

226. மிகப்பெரியதும் சின்னஞ்சிறியதுமான பொருள் கள் இரண்டுவித நிலைகளின் உருவங்களா யிருக்கின்றன என் கிற காரணத்தினல், முதன்மையானதிலிருந்து இறுதியான வைகள் வரையில் சேர்க்கை யிருக்கிறது; ஏனென்றால், ஒரே தன்மையென்பது அவைகளைக் கூட்டுகிறது. அப்படியிருந்தா லும் மற்றொன்றோடு சரியாய் ஒரேமாதிரியிருக்கிற எந்த சின் னஞ்சிறிய பொருளும் கிடையாது; இதனல் எல்லா தனித்த பொருள்களிலும், ஒன்றுக்கொன்று பேதமிருக்கிறது. மிகப் பெரிய பொருள்களில் ஒப்பான நிலைகளிருப்பதினலும், மிகவும் பெரியது மிகவும் சிறியதால் உண்டாயிருப்பதாலும், எந்த உருவத்திலும் அல்லது எந்த உருவங்களிலும் உள்ள சின்னஞ்சிறிய பொருள்களில் ஒரே தன்மை இருக்க முடி யாது. மிகவும் பெரிய பொருள்களில் அவ்வித நிலைகளும், அந்த நிலைகளுக்குத் தக்கபடி, உச்சியிலிருந்து அடிவரைக்கும், மத்தியிலிருந்து சுற்றளவு வரைக்கும் சாசுவத பேதங்கள் இருக்கின்றபோது, ஒப்பான நிலைகளிலிருக்கிற அதிக குறைந் ததும் சின்னஞ்சிறியதுமான பாகங்களில் மற்றொன்றோடு

ஓரே தன்மையாயுள்ள எந்த சிறியதும், எந்த சின்னஞ் சிறியதும் இருக்க முடியாதென்பது பின் தொடருகிறது.

227. பிரபஞ்சத்தின் சம்பூரணம், இந்த நிலைகள் விஷயத்தில், பொதுவானவைகளிடவும் சிறப்பானவைகளிடவும், அதாவது மிகப் பெரியதினிடவும் சின்னஞ் சிறியதினிடவும் ஓப்பில் உண்டாகிறதென்பது கூட தேவர்கள் ஞானத்தைச் சேர்ந்த விஷயமாயிருக்கிறது; ஏனென்றால் இதனால், ஒரு பொருளானது எல்லாம் உபயோகத்துக்கும் அதனுடனும் கூட்டப்படவும், எல்லா முடிவையும் காரியத்தில் காண்பிக்கவும், சக்தியுள்ள மற்றொன்றை தன்னைப்போன்றதென்று நினைக்கிறது.

228. ஆனால் பார்க்கக்கூடிய பொருள்களுக்கு பிரயோகித்து,காண்பிக்கப்படாத படியினால், இவைகள் அசத்தியாபாசமாக தோன்றும்; என்றாலும், பிரிக்கப்பட்ட பொருள்கள், சர்வ வியாபகமானதாலும், பிரயோகித்த பொருள்களைவிட வழக்கமாய் நன்றாய் கிரகிக்கப் படுகின்றன; ஏனென்றால் பின் கூறியவைகள் சாசுவத விகற்பங்களுக்கு உள்பட்டவைகளாயிருக்கின்றன; விகற்பம் மறைக்கிறது.

229. அதிகம் குறைந்த உருவங்களிலிருந்து ஒருருவமாக இல்லாதபடி, அவ்வளவு கலப்பற்ற தனித்த ஒரு பொருள் இருக்கிறதென்றும், அந்த பொருளிலிருந்து, பிண்டமாகச் சேர்ந்த கெட்டியானதும் பல பதார்த்தங்கள் சேர்ந்ததுமான பொருள்களும், இறுதியில் ஜடப் பொருள்களும் உண்டாகின்றன வென்றும் சிலரால் சொல்லப்படுகிறது. ஆனால், உண்மையில், அவ்வித சுத்தமாய் தனித்த பொருள்கள் இருத்தல் கிடையாது. உருவமில்லாமல், பொருளென்பது என்ன? அது, தன்னைப்பற்றி ஒன்றும் சொல்ல முடியாத ஏதோ ஒன்றாகும்.

தன்னைப்பற்றி ஒன்றும்சொல்லமுடியாத ஏதோ ஒன்றிலிருந்து எவ்வளவு சேர்த்தாலும் யாதொன்றையும் உண்டாக்காது. எல்லாவற்றிற்கும் முதல் சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களில் அதாவது சின்னஞ் சிறிய பொருள்களிலும் மிகவும் தனித்த பொருள்களிலும் கணக்கற்ற பொருள்கள் இருக்கின்றனவென்பது, உருவங்கள் சொல்லப்பட்ட பின்வருவதில் அறிந்து கொள்ளலாம்.

ஆண்டவரிடத்தில் மூன்று முடிவற்றதும் சிருஷ்டிக்கப் படாததுமான உயரத்தைச் சேர்ந்த காரியப்பாடுகள் இருக்கின்றன, மனிதனிடத்தில் மூன்று முடிவுள்ளதும் சிருஷ்டிக்கப் பட்டதுமான காரியப்பாடுகளிருக்கின்றன.

230. முன் பக்கங்களில் கூறியபடி ஆண்டவர் அன்பேயாகவும், ஞானமேயாகவுமிருப்பதால், அவரில் மூன்று முடிவற்றதும் சிருஷ்டிக்கப்படாததுமான உயரத்தைச் சேர்ந்த மூன்று நிலைகளிருக்கின்றன; மேலும் ஆண்டவர் அன்பேயாகவும் ஞானமேயாகவும் இருக்கிறபடியினால், அவர் பலனுகவே கூட இருக்கிறார்; ஏனென்றால், அன்பானது, ஞானத்தின் மூலமாய் உண்டாக்குகிற பலனை அதன் முடிவாக உடைத்தாயிருக்கிறது. இவ்விதமாக, உபயோகம் நீங்கலாய், அன்புக்கும் ஞானத்துக்கும் எல்லையும் முடிவுமில்லை, அதாவது அவைகளுக்குச் சொந்தமான வீடு இல்லை; ஆகையினால், அவைகளிருக்கப்பட்ட ஒரு பலனிருந்தாலொழிய, அவைகள் இருக்கின்றனவென்றும், ஜிவிக்கின்றன வென்றும் சொல்ல முடியாது. இந்த மூன்றும் உயிருள்ள பொருள்களில், உயரத்தைச் சேர்ந்த மூன்று நிலைகளை உண்டாக்குகின்றன. இந்த மூன்றும், முதல் முடிவென்றும், காரணம் என்று சொல்லப் பட்ட நடுமுடிவென்றும், காரியமென்று சொல்லப்பட்ட

இறுதியான முடிவென்றும், நிற்கின்றன. முடிவும், காரணமும், காரியமும், உயரத்தைச் சேர்ந்த மூன்று நிலைகளை உண்டாக்கு கின்றனவென்பது மேலே காண்பிக்கப்பட்டு, மிருதியாய் நிரூ பிக்கப்பட்டது.

231. இந்த மூன்று நிலைகளும் மனிதனிலிருக்கிற தென்பது, இரண்டாவது மூன்றாவது சுவர்க்கங்களின் தேவர் கள் இருக்கும், அன்பினிடவும் ஞானத்தினிடவும் நிலைகள் வரையில், அவனிட மனதை உயர்த்துவதால் அறிந்து கொள் ளப்படலாம்; ஏனென்றால், எல்லா தேவர்களும் மனிதர்களாக பிறந்தவர்கள், மனிதனும், அவன் மனதினிட அந்தரங்கமான பொருள்கள் விஷயத்தில், சின்னஞ் சிறிய உருவத்தில் ஒரு சுவர்க்கமாயிருக்கிறான்; ஆகையால் சுவர்க்கங்கள் இருப்பது போல், சிருட்டியினால், மனிதனில், உயரத்தைச் சேர்ந்த அவ் வளவு நிலைகளிருக்கின்றன. மனிதன், கடவுளின் பிரதிமை யாகவும் சாயலாகவும் கூட இருக்கிறான்; ஆகையினால், அந்த மூன்று நிலைகளும், கடவுளாகிய மனிதனில், அதாவது ஆண்ட வரிடத்திலிருக்கிறபடியினால், மனிதன்பேரில் எழுதப்பட் டிருக்கின்றன. ஆண்டவரிடத்தில் இந்த நிலைகள் முடிவற்ற தும், சிருஷ்டிக்கப்படாததுமா யிருக்கின்றனவென்பதும், மனிதனிலிருப்பவைகள் முடிவுள்ளதும் சிருஷ்டிக்கப்பட்டது மாயிருக்கின்றனவென்பதும், முதல்பாகத்தில் நிச்சயப்படுத்தப் பட்ட விஷயங்களிலிருந்து விசதமாகிறது; அதனுடன் கூட, ஆண்டவர் சுயமாய் அன்பும் ஞானமுமா யிருக்கிறார் என்பதி லிருந்தும், ஆண்டவரிடமிருந்து மனிதன் அன்பையும் ஞானத் தையும் அடைகிறவனா யிருக்கிறா னென்பதிலிருந்தும், மேலும் ஆண்டவரைப்பற்றி, முடிவற்றது தவிரவும், மனிதனைப்பற்றி

முடிவுள்ளது தவிரவும் வேறு யாதொன்றும் சொல்ல முடியாதென்பதிலிருந்தும் விசதமாகிறது.

232. தேவர்களிலிருக்கும் இந்தமூன்று நிலைகளும், அதிசூக்குமமானதென்றும் சூக்குமமானதென்றும், ஸ்தூலமானதென்றும், பெயரிடப்பட்டிருக்கின்றன ; அவர்களுக்கு அதிசூக்கும நிலை அன்பின் நிலையாகவும், சூக்கும நிலை ஞானநிலையாகவும், ஸ்தூல நிலை உபயோகங்களின் நிலையாகவு மிருக்கின்றன. சுவர்க்கங்கள் இரண்டு இராச்சியங்களாக பிரிக்கப்பட்டிருக்கின்றன வென்பது, இந்த நிலைகள் ஏன் அப்படி பெயரிடப்பட்டிருக்கின்றன வென்பதற்கு காரணமாயிருக்கிறது ; ஒன்றுக்கு அதிசூக்குமமான இராச்சியமென்றும், மற்றதுக்கு சூக்குமமான இராச்சியமென்றும் பெயரிடப்பட்டிருக்கின்றன ; இவைகளுடன்கூட உலகத்திலுள்ள மனிதர்களுக்கு சம்பந்தப்பட்ட மூன்றுவது இராச்சியம் சேர்க்கப்படுகிறது. இதுதான் ஸ்தூல இராச்சியம். அதிசூக்கும இராச்சியமாகிற தேவர்களுக்கு அன்புண்டு, சூக்கும லோகத்தை நிறைந்தவர்களுக்கு ஞானமுண்டு, ஆனல் உலகத்திலுள்ள மனிதர்கள் உபயோகங்களில் இருக்கிருர்கள் ; ஆகையினுல் இந்த இராச்சியங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மனிதர்கள் உபயோகங்களிலிருக்கிருர்களென்பது எப்படித் தெரிந்துகொள்வது என்பது, அடுத்த பாகத்தில் காண்பிக்கப்படும்.

233. எகோவாவாயிருக்கிற ஆண்டவரிடத்தில், உலகத்தில் ஒரு மானிடத் தன்மையை எடுத்துக்கொள்வதற்குமுன், முந்திய இரண்டு நிலைகளும் சதாகாலம் உண்மையாயிருந்தன வென்றும், மூன்றுவது நிலையானது தேவர்களிடத்திலிருப்பது போல், வல்லமையில் இருந்ததாகவும், ஆனல், உலகத்தில் ஒரு மானிடத் தன்மையை ஏற்றுக்கொண்டபின், ஸ்தூலமென்று

சொல்லப்பட்ட மூன்ருவது நிலையைக்கூட அவர் தரித்துக் கொண்டார் என்றும், அப்படி செய்ததிஞல், இந்த நிலையானது முந்திய நிலைகள்போல், அவரில் முடிவற்றதாயும் சிருஷ்டிக்கப்படாததாயும், இருக்கிறதென்பதும், ஆஞல் தேவர்களிலும் மனிதர்களிலும், அந்த நிலைகள் முடிவானதாயும் சிருஷ்டிக்கப்பட்டதாயு மிருக்கிறதென்பதுமாகிய இந்த வித்தியாசத்தோடு, உலகத்திலுள்ள மனிதர்களைப்போல் மனிதஞஞர் என்றும், சுவர்க்கத்திலிருந்து எனக்கு சொல்லப்பட்டது. ஏனென்ருல், இடவரைக்குட்படாமல் எல்லா விடங்களிலும் நிறைவியிருந்த தெய்வமானது (பிரிவுகள் 69 முதல் 72 வரையில்) பிரகுருதியின் கடைசியான பொருள்கள் வரையில் கூட நுழைந்தன. ஆஞல் மானிடத்தன்மையை உலகில் எடுப்பதற்கு முன், ஸ்தூல நிலக்குள் தெய்வப் பெருக்கு, வானோர் சுவர்க்கங்கள் மத்தியஸ்தத்தின் மூலமாயிருந்தது. ஆஞல்,தரித்துக்கொண்ட பிறகு அவரிடமேயிருந்து நேராயிருந்தது. உலகத்திலுள்ள எல்லா சபைகளும் அவர் வருவதற்கு முன் சூக்குமமானதும் அதிசூக்கும மானதுமான பொருள்களுக்கு அறிகுறியாய் ஏன் இருந்ததென்பதற்கும், ஆஞல் அதன் பிறகு ஏன் அவைகள் சூக்கும ஸ்தூலமான தென்பதற்கும், அதிசூக்கும ஸ்தூலமான தென்பதற்கும், ஏன் பிரதிநிதி ஆராதனை நீக்கப்பட்டதென்பதற்கும் இதுதான் காரணம். மேல் கூறியபடி அவரிட இச்சா சத்தியினிடவும் ஞான சத்தியினிடவும் முதல் வெளிப்படும் பிராஞகிய அமரர் உலகத்து சூரியன், மானிட தன்மை தரித்து கொள்வதற்கு முன்னைவிட, அதை தரித்து கொண்டபின் அதிக சோதியுடனும் மகிமையுடனும் ஏன் பிரகாசித்தாரென்பதற்கு இது மறுபடியும் காரணமாயிருக்கிறது. மேலும், ஏசாயாவிலிருக்கும் இந்த வார்த்தை

களால் கூட இது கருதப்படுகிறது: "அந்நாளிலே, சந்திரனிட வெளிச்சம், சூரியனிட வெளிச்சம் போலவும், சூரியனிட வெளிச்சம் ஏழத்தனையாய் ஏழுபகலின் வெளிச்சத்தைப் போலவும் இருக்கும் (XXX. 26). ஆண்டவர் உலகத்துக்கு வந்த பிறகு சுவர்க்கத்தினிடவும் திருச்சபை யிடனிவும், நிலைமையைப்பற்றி இவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. வெளிப்படுத்தலின் விசேஷத்தில்: "மனித குமாரனிட முகம் வல்லமையாய் பிரகாசிக்கின்ற சூரியனைப்போலிருந்தது (1-16). ஏசாயா IX. 20, II சாமு XXIII. 3, 4, மத்தே. XVII. 1, 2 விலும் மற்ற இடங்களிலும் போல் ஆண்டவர் வருவதற்கு முன் நிலைத்திருந்த, வானோர் உலகத்தின் மூலமாய் நேராயில்லாமல் மனிதர்களுக்கு ஞானம் உண்டாக்குதல், சூரியனிட நேரில்லாத வெளிச்சமாயிருக்கிற சந்திரனிட வெளிச்சத்துக்கு ஒப்பிடலாம். அவர் வந்த பிறகு இந்த ஞானம் உண்டாக்குதல் நேரானதாய் செய்யப்பட்டபடியினால்,ஏசாயாவில் "சந்திரனிட வெளிச்சம் சூரியனிட வெளிச்சத்தைப்போல் இருக்குமென்றும்" சங்கீதங்களில்: " அவருடைய நாட்களில் நீதிமான் செழிப்பான், சந்திரனுள்ளவரைக்கும் மிகுந்த சமாதானமிருக்கும்" (LXXII. 7) என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இது கூட ஆண்டவரைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது.

234. மானிட சுபாவத்தைப்போன்ற ஒரு சுபாவத்தின் மூலமாய்த் தவிர, இவ்வாறு அவரிட தெய்வத்தன்மையிலிருந்து கருப்பம் தரித்தலினாலும், ஒரு கன்னிகையிலிருந்து ஜனனமாதலினாலும் தவிர வேறு எந்த விதத்திலும், இந்த நிலையில் பிரவேசிக்க அவருக்கு முடியாதபடியினால், சதாகாலஆண்டவர் அதாவது எகோவா என்பவர் உலகத்தில் ஓர்மானிடத்தன்மையை எடுத்துக் கொண்டதால், இந்த மூன்றாவது நிலை

யைதரித்துகொண்டார். ஏனென்றால், இந்த வழியிலே சுயமாய் உயிரில்லாததாயிருக்கிறதும், என்றாலும், தெய்வத்துக்கு ஆசயமுமாயிருக்கிறதுமான பிரகுருதியைநீக்கி, தெய்வத்தை தரித்து கொள்ள அவர் சக்தியுள்ளவராயிருந்தார். சூனிய அவஸ்தை அல்லது தாழ்ந்த அவஸ்தை என்றும், மகிமையுள்ள அவஸ்தையென்றும் சொல்லப்பட்டதும், ஆண்டவரைக் குறித்த புதிய எருசலேம் நகரத்து கோள்கை எனும் நூலில்சொல்லப்பட்டதுமான உலகத்தில் ஆண்டவருக்கு இருந்த இரண்டு நிலைகளாலும் இது அர்த்தம் கொள்ளப்படுகிறது.

235. உயரத்தைச் சேர்ந்த நிலைகளின் மும்மடங்கான ஏற்றத்தைப்பற்றி இவைகள் சாதாரணமாய் சொல்லப்படுகின்றன. ஆனால் அந்த நிலைகள் மிகவும் பெரியதிலும் சின்னஞ்சிறியதிலும், முன்சென்ற பிரிவில் சொல்லியபடி நிலைத்திருக்கிறபடியினால், அன்பின் ஒவ்வொன்றிலும், ஆசையினால் ஞானத்தின் ஒவ்வொன்றிலும் அவ்வித நிலைகளிருக்கின்றனவென்பதும் இவைகளிலிருந்து, உபயோகத்துக்கு சேர்ந்த ஒவ்வொன்றிலும் அவ்வித நிலைகளிருக்கின்றனவென்பதும் தவிர அவைகளைப்பற்றி இங்கே விசேஷமாய் யாதொன்றும் சொல்லமுடியாது; என்றாலும் ஆண்டவரிடத்தில் இந்த நிலைகள் முடிவற்றதா யிருக்கின்றன; ஆனால் தேவர்களிலும் மனிதர்களிலும் முடிவுள்ளதா யிருக்கின்றன. ஆனால், இந்த நிலைகள் அன்பிலும், ஞானத்திலும் உபயோகங்களிலும் எப்படி யிருக்கின்றனவென்று ஒருவரிசையில் தவிர சுருக்கமாய் விவரிக்கவும் தெளிவாக்கவும் முடியாது.

உயரத்தைச் சேர்ந்த இந்த மூன்று நிலைகளும் ஒவ்வொரு மனிதனிலும் பிறந்தது முதல் இருக்கின்றன; அவைகள் ஒன்றன்பின் ஒன்றாய் திறக்கப்படக் கூடும், அப்படி திறக்கப்படும்

போது, மனிதன் ஆண்டவரிலும் ஆண்டவர் மனிதனிலும் இரு க்கிறார்கள்.

236. ஒவ்வொரு மனிதனிலும் உயரத்தின் மூன்று நிலைகள் இருக்கின்றனவென்று இதுவரையில் தெரியாதிருந்தது. இந்த நிலைகள் கவனிக்கப்படாமலிருந்தது என்பது காரணமாயிருக்கிறது; இந்த நிலைகள் மறைந்துகிடந்த வரையில் தொடர்பான காரியப்பாடுகள் தவிர வேறு யாதொன்றும் தெரிந்துகொள்ள முடியாது; இந்த நிலைகள் மட்டும் தெரியப்பட்டபோது, மனிதனில் அன்பும் ஞானமும் தொடர்ச்சியால் மாத்திரம் அதிகரிக்கின்றன வென்று நினைக்கலாம். ஆனால், ஒவ்வொரு மனிதனிலும் பிறக்கும்போதிருந்து, ஒன்று மற்றொன்றுக்கு மேலும், அல்லது மற்றொன்றுக்கு உள்ளும்,உயரத்தைச் சேர்ந்த நிலைகள் அல்லது வேறாக மாறும் காரியப்பாடுகள் இருக்கின்றனவென்றும், மேலும் உயரத்தைச் சேர்ந்தஅல்லது வேறாகமாறும் காரியப்பாட்டின் ஒவ்வொரு நிலையும் அவைகளை அனுசரித்து தொடர்ச்சியால் அதிகரிக்கிற அகலத்தைச் சேர்ந்த நிலைகளை அல்லது தொடர்பான காரியப்பாடுகள் கூட உடைத்தாயிருக்கின்றன வென்றும் இப்பொழுது தெரிந்திருக்கட்டும். ஏனென்றால், மேலே (222 வது பிரிவுமுதல் 229 வது பிரிவு வரையில்) காண்பித்தபடி மிகவும் பெரியதானாலும் சின்னஞ்சிறியதானாலும் ஒவ்வொன்றிலும் இருவிதநிலைகளிருக்கின்றன;ஏனென்றால் ஒரு வகுப்புநிலை மற்ற வகுப்பின் நிலைகளில்லாமல் நிலைக்கமுடியாது.

237. மேலே கூறியபடி (பிரிவு 232) உயரத்தைச்சேர்ந்த இந்த மூன்று நிலைகளுக்கும் ஸ்தூலமானதென்றும், சூக்குமமானதென்றும் அதிசூக்குமமானதென்றும் பெயரிடப்பட்டிருக்கின்றன. பிறக்கும்போது மனிதன் ஸ்தூலநிலையில் முத

வில் பிறக்கிறான், பகுத்தறிதலென்று சொல்லப்படுகிற, புத்தியின் உயர்ந்த நிலையை அடைகிறவரையில், அறிவுக்கும் அதனால் அடைந்த புத்திக்கும் தக்கபடி, இது தொடர்ச்சியால் அதிகரிக்கிறது. அப்படியிருந்தாலும், ஞானசம்பந்தமாயிருக்கிற இரண்டாவது நிலை இந்த வழிவகையால் திறக்கப்படுகிறதில்லை. புத்திக்குச் சேர்ந்தவைகளிலிருந்து உபயோகங்களை நேசித்தலால், அதாவது அயலானிடத்தில் அன்புபாராட்டுதலாயிருக்கிற உபயோகங்களை ஞானமாய் நேசித்தலால், இது திறக்கப்படுகின்றது. அம்மாதிரியே இந்த நிலையானது, அதன்தொடர்ச்சியின் உச்சிக்கே படிப்படியாய் அதிகரிக்கலாம், மேலும், உண்மையையும் நன்மையையும் தெரிந்துகொள்வதாலும் அதாவது ஆத்மார்த்த உண்மையாலும் இது அதிகரிக்கின்றது. ஆனால் ஆண்டவரிடத்து அன்பு பாராட்டுதலாயிருக்கிற உபயோகத்தினிடத்து பாராட்டும் அதிசூக்கும அன்பினால் இது திறக்கப்படுகிறபடியினால், அதிசூக்குமமானதாகிய மூன்றாவது நிலை, இவ்வித உண்மைகளால்கூட திறக்கப்படுகிறதில்லை; நரகத்துக்கு அடுத்ததும் பேயாட்டமானதுமாய் இருக்கிறபடியினால், தீங்குகளை ஒழிக்கிறதும், சுவர்க்கத்தை அடுத்ததும் தெய்வீகமானதாயிருப்பதால் நல்லவற்றை செய்கிறதும் மொத்தக் கருத்துகொள்ளுகிற வேதத்தின் கட்டளைகளை வாழ்க்கையில் கொண்டு வருதல் தவிர ஆண்டவரிடத்து அன்பு பாராட்டலென்பது வேறொன்றுமில்லை; இந்த மூன்று நிலைகளும் மனிதனில் இந்த விதத்தில் ஒன்றன்பின் ஒன்றாய் திறக்கப்படுகின்றன.

238. மனிதன் உலகிலிருக்கும் காலம் வரையில், தன்னிலே இந்த நிலைகள் திறத்தலைப்பற்றி யாதொன்றும் தெரியாதவனாயிருக்கிறான். இறுதியானதாயிருக்கிற ஸ்தூல நிலை

யில் அவன் அப்பொழுது இருக்கிறானென்பதும், அதிலிருந்து அவன் அப்பொழுது நினைக்கிறானென்பதும், இச்சிக்கிறானென்பதும், பேசுகிறானென்பதும், காரணமாயிருக்கிறது; உள்ளானதாயிருக்கிற ஞானநிலை, ஸ்தூல நிலையோடு தொடர்ச்சியினால் அல்லாமல், அன்னுவயங்களால் சம்பந்தமடைந்திருக்கிறது; அன்னுவயங்களால் சம்பந்தப்படல் உணரப்படுகிறதில்லை. அப்படியிருந்தும், இறக்கும்போது நடக்கிறபடி ஸ்தூல நிலையை ஒரு மனிதன் நீக்கி விட்டபோது, உலகத்தில் அவனில் திறக்கப்பட்டிருந்த அந்த நிலைக்கு அவன் அப்பொழுது வருகிறான்; ஞானநிலை திறக்கப்பட்டவன், ஞானநிலைக்கும், சுவர்க்கத்தைச் சேர்ந்த நிலை திறக்கப்பட்டவன், அவ்வித நிலைக்கும் வருகிறான். ஞானநிலைக்கு இறந்தபின் வரப்பட்டவன், ஸ்தூலமாய் அல்லாமல், ஆத்மார்த்தமாய் நினைக்கிறான், இச்சிக்கிறான், பேசுகிறான், செயலும் படுகிறான்; சுவர்க்கத்துக்கு அடுத்த நிலைக்கு வரப்பட்டவன் அவனிட நிலைக்கு தக்கபடி நினைத்து, இச்சித்து, பேசி, செயல்படுகிறான். மூன்று நிலைகளுக்குள்ளும் போக்கு வரவு அன்னுவயங்களால் மட்டும் நடக்கிறபடியால், இந்த நிலைகளுக்குத் தக்கபடி, அன்பினிடவும், ஞானத்தினிடவும், உபயோகத்தினிடவும் பேதங்கள், தொடர்ச்சியினால், அவைகளுக்குள் பொதுவானது ஒன்றுமில்லாதபடி, அவ்வித சுபாவமுடையதாயிருக்கின்றன. இவைகளினால் மனிதனுக்கு உயரத்தைச் சேர்ந்த மூன்று நிலைகளிருக்கின்றனவென்றும் அவைகள் ஒன்றன்பின் ஒன்றாய் திறக்கப்படக்கூடுமென்றும் தெளிவாயிருக்கிறது.

239. அன்பினிடவும், ஞானத்தினிடவும், அவைகளிருந்து உபயோகத்தினிடவும் மூன்று நிலைகள் மனிதனுக்குகொடு

க்கப்பட்டிருக்கிறபடியினுல், சித்தத்தினிடவும் புத்தியினிடவும், அவைகளிலிருந்து காரியப்படுவதினிடவும், இவ்விதமாக உபயோகத்துக்கு கொண்டுவரும் தீர்மானித்தினிடவும் மூன்று நிலைகளும் அவனுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறதென்று ஏற்படுகிறது. ஏனென்றால், சித்தமானது அன்பின் ஆசயமாகவும், புத்தியானது ஞானத்தின் ஆசயமாகவும் தீர்மானித்த பொருள், இவைகளிலிருந்து வந்த பலனுயிருக்கிறது. ஒவ்வொரு மனிதனிலும், ஸ்தூலமானதும், ஆத்மார்த்த மானதும், பரலோகத்தை அடுத்ததுமான சித்தமும் புத்தியும் பிறந்தது முதல் வல்லமையிலும், அவைகள் திறக்கப்பட்டபோது செய்கையிலுமிருக்கிறதாக இந்த ஆலோசனைகளால் விசதமாகிறது. சுருங்கச்சொல்லில் சிருட்டிமுதல், அதனுல் பிறந்தது முதல், சித்தமும் புத்தியுமான மனிதனிட மனதானது, அவன் ஸ்தூலமானதும், ஆத்மார்த்தமானதும், பரம் அடுத்ததுமானதுமான மனதை உடைத்தாயிருக்க மூன்று நிலைகளாயிருக்கின்றன ; இதனுல் மனிதனுனவன் தேவர்கள் ஞான வரையில் உயர்த்தப்படவும் உலகத்திலிருக்கும் போது அதை அனுபவிக்கவும் சக்தியுள்ளவனுயிருக்கிறுன்; என்றாலும் இறந்தபின் வரையில் அவன் அதற்குள் வருகிறதில்லை; ஆனுல் அவன் தேவனுல் அதில் பிரவேசித்து பிறகு வாக்குக் கெட்டாததும், ஸ்தூல மனிதன் கிரகிக்கக் கூடாதது மானவைகளை பேசுகிறுன். உலகத்தில் கொஞ்சம்படிப்புள்ள மனிதன் எனக்கு தெரியும். அவன் இறந்தபிறகு சுவர்க்கத்தில் அவனைக்கண்டு பேசினேன் அவன் ஒரு தேவனைப்போல் பேசுவதையும், அவன்சொன்னவைகள் ஸ்தூலமனிதன் அறிந்துக்கொள்ளக் கூடாமையையும் நான் தெளிவாய் பார்த்தேன். அவன் உலகத்திலிருக்கும் போது வேதத்தின் கட்டளைகளை தன் வாழ்க்கையில் பிற

யோகித்து, ஆண்டவரை தொழுதான் என்பதும், ஆகையினால்' அன்பினிடவும் ஞானத்தினிடவும், மூன்றாவது நிலைக்கு ஆண்டவரால் உயர்த்தப்பட்டான் என்பதும் காரணமாயிருந்தது. பின்வருவதை அறிந்து கொள்ளல், அதின்பேரில் சார்ந்திருப்பதால், மானிட மனதின் இந்த ஏற்றம் தெரிந்திருக்கவேண்டு மென்பது முக்கியமானது.

240. ஆண்டவனிடமிருந்து மனிதனுக்கு அவன் மிருகங்களிலிருந்து விசேஷித்து அறிந்து கொள்ளப்படுகிற இரண்டு மனோசக்திகள் இருக்கின்றன. உண்மையானது எதுவென்றும், நன்மையானது எதுவென்றும் தெரிந்து கொள்ள அவன் சக்தியுள்ளவனா யிருக்கிறானென்பது ஒரு மனோசக்தி; இந்த மனோசக்திக்கு பகுத்தறிவுடைமை என்று பெயர்; அது அவன் புத்தியின் மனோசக்தியா யிருக்கிறது. உண்மையானதையும், நன்மையானவையும் செய்ய அவன் சக்தியுள்ளவனா யிருக்கிறானென்பது, மற்றொரு மனோசக்தியா யிருக்கிறது; இந்த மனோசக்திக்கு சுதந்தரமென்று பெயர்; அது அவனிட சித்தத்தின் மனோசக்தியாயிருக்கிறது. ஏனென்றால், அவனுடைய பகுத்தறிவுடைமையால் ஒரு மனிதன் கடவுளோடு ஒத்தும் அவருக்கு விரோதமாகவும், அயலானோடு ஒத்தும் அவனுக்கு விரோதமாகவும், அவன் இஷ்டப்படுகிறபடி நினைக்க சக்தியுள்ளவனா யிருக்கிறான்; மேலும், அவன் நினைக்கிறவைகளை இச்சித்து செய்யவும் சக்தியுள்ளவனா யிருக்கிறான்; ஆனால் அவன் தீங்குகளைப் பார்த்து தண்டனைக்கு பயப்பட்டபோது, அவனிட சுதந்தரத்தால் அதைச் செய்வதை விட்டுவிட சக்தியுள்ளவனா யிருக்கிறான். இந்த இரண்டு மனோசக்திகளின் பொருட்டு மனிதன் மனிதனாயிருக்கிறான், மேலும் மிருகங்களிலிருந்து விசேஷித்து

அறியப்படுகிறான். மனிதனுக்கு இந்த இரண்டு சக்திகளும் ஆண்டவரிடமிருந்து வருகிறது, மேலும் அவைகள் அவரிடமிருந்து இடைவிடாமல் வருகின்றன; அதுவுமல்லாமல் அவைகள் நீக்கப்படுகிறதுமில்லை; ஏனென்றால், அவைகள் நீக்கப்பட்டால், அவனிட மானிடத்தன்மை அழிந்துபோகும். இந்த இரண்டு மனோசக்திகளிலும், ஆண்டவர் ஒவ்வொரு மனிதனுடனும், நல்லவர்கள் கெட்டவர்களாகிய இருவகையாருடனுமிருக்கிறார்; அவைகள் மானிடவர்க்கத்தில் ஆண்டவரிட வாசஸ்தலமா யிருக்கின்றன; ஆகையினால் தான் நல்லவர்கள் கெட்டவர்களாகிய இருவகையாரில் ஒவ்வொருவனும் சதாகாலம் உயிரோடிருக்கிறான். ஆனால், இந்த மனோசக்திகள் மூலமாய் மனிதனைவன் அதிகம் உயர்ந்த நிலைகளை திறக்கிறதற்கு தக்கபடி, ஆண்டவரிட வாசஸ்தலம், மனிதனின் சமீபத்திலிருக்கிறது; ஏனென்றால், இவைகள் திறப்பதால் அன்பினிடவும் ஞானத்தினிடவும் அதிக உயர்ந்த நிலைகளுக்கு இவ்விதமாக, ஆண்டவர் சமீபத்தில், அவன் வருகிறான். இந்த நிலைகள் திறக்கப்படுவதைப்போல், மனிதன் ஆண்டவரிலும் ஆண்டவர் மனிதனிலும் இருக்கிறார்களென்பது இவைகளிருந்து விசதமாகிறது.

241. உயரத்தைச் சேர்ந்த மூன்று நிலைகளும், முடிவாகவும், காரணமாகவும், காரியமாகவும் இருக்கின்றனவென்றும், அன்பும், ஞானமும், பலனும் இந்நிலைகளுக்குத் தக்கபடி ஒன்றன்பின் ஒன்றாய் வருகிறதென்றும், மேலே சொல்லப்பட்டது ; ஆகையினால் அன்பை முடிவாகவும், ஞானத்தைக் காரணமாகவும், பயனைக் காரியமாகவும், நாம் சுருக்கமாய்ப் பேசுவோம். தன்னிட அறிவுடன் வெளிச்சத்திலிருக்கும்போது யோசிக்கப்பட்ட ஒவ்வொருவனும், ஒருமனிதனிட அன்

பானது, அவனிட விசாரத்துக்கெல்லாம் முடிவென்று தெரிந்துகொள்ள சத்தியுள்ளவனுயிருக்கிறுன் ; ஏனென்ருல்; அவன் எதை நேசிக்கிருனே, அதை நினைக்கிருன், அதை தீர்மானிக்கிருன், மேலும் அதைச் செய்கிருன் ; அப்படியிருப்பதால், அவன் அதை ஒரு முடிவாக உடைத்தாயிருக்கிருன். மனிதன் அல்லது அவனிட முடிவாயிருக்கிற அன்பு, தன்னுடைய முடிவை முழுமையும் அடையும் பொருட்டு வழிவகைகளை புத்தியில் போய் தேடுகிறபடியினுல், மனிதன் கூட 'தன்னிட அறிவிலிருந்து ஞானம் காரணமென்று அறிந்து கொள்ள சத்தியுள்ளவனுயிருக்கிருன் ; இவ்விதமாக அவனிட ஞானத்தை அவன் யோசிக்கிருன். இந்த வழிவகைகள் அவைகளின் முலமாய் அவன் தொழில்படுகிற காரணத்தை உண்டாக்குகின்றன. பலனுனது காரியமென்று விவரிக்காமலே தெளிவாயிருக்கிறது. ஆனுல் ஒருவனிடத்திலிருக்கும் அன்பு மற்றவனிடத்திலிருக்கும் அன்பைப் போல் ஒரே மாதிரி யில்லை. ஞானத்தோடும் பலனேடும் கூட விஷயம் அம்மாதிரியே யிருக்கிறது. மேலே (189 முதல் 194 வது பிரிவுகள் வரையில்) சொல்லியபடி, இந்த மூன்றும் ஓரியல்புள்ள தாயிருப்பதால், மனிதனில் அன்பு இருக்கிறது போல், அவனில் ஞானமும், பலனும் அவ்விதமே இருக்கின்றன. நாம் ஞானம் என்கிற வார்த்தையை உபயோகப் படுத்துகிறேம், ஆனுல், அதனுல் மனிதனிட புத்திக்குச் சேர்ந்ததை அர்த்தம் கொள்ளுகிறேம்.

ஞான சோதியானது மனிதனில் மூன்று நிலைகளின் மூலமாய் பாய்கின்றது; ஆனுல் தீமைகளை பாவங்களாக நீக்கி மனிதனனவன் ஆண்டவரை எதிர்பார்க்கிறவரையில் தவிர ஞான சூடு அப்படி பாயாது.

242. மேலே காண்பித்ததிலிருந்து, இரண்டாவது பாகத்தில் கூறிய பரம இச்சாசத்தியினிடவும் பரமஞான சத்தியினிடவும், முதல் வெளிப்படும் பிராணுயிருக்கிற சுவர்க்க லோகத்துச் சூரியனிலிருந்து ஒளியும் சூடும், ஒளியானது அதன் ஞானத்திலிருந்தும், சூடானது அதன் அன்பிலிருந்தும், புறப்படுகிறதென்றும், ஒளியானது ஞானத்தின் ஆசயமென்றும், சூடு அன்பின் ஆசயமென்றும், ஒரு மனிதன் எவ்வளவு தூரம் ஞானத்தை அடைகிருனே, அவ்வளவு தூரம் அந்த பரஞ்சோதியில் யிருக்கிருனென்றும், அவன் எவ்வளவு தூரம் அன்பிலிருக்கிருனே, அவ்வளவுதூரம் அந்த பரஞ் சுடரில் இருக்கிருனென்றும் விசதமாகிறது. மேல் காண்பித்ததிலிருந்து, ஒளியின் மூன்று நிலைகளும், சூட்டின் மூன்று நிலைகளும், அல்லது ஞானத்தின் மூன்று நிலைகளும் அன்பின் மூன்று நிலைகளும், இருக்கின்றனவென்றும், இந்த நிலைகள் மனிதனுனவன் பரமஇச்சாசத்தியினிடவும் பரமஞான சத்தியினிடவும், இவ்விதமாக ஆண்டவரிடவும், ஆசயமாயிருக்க, அவனில் உண்டாக்கப்பட்டதென்றும் கூட விசதமாகிறது. இப்பொழுது இங்கே, ஞான சோதி இந்த மூன்று நிலைகள் மூலமாக மனிதனில் பாய்கிறதென்றும், ஆனுல் மனிதனுனவன் தீமைகளை பாவங்களாக நீக்கி, கடவுளை எதிர் பார்க்கிறவரையில் தவிர ஞான சூடானது அப்படி பாய்கிறதில்லையென்றும், அல்லது அதே ஆகிறபடி, ஒரு மனிதனுனவன் மூன்ருவது நிலைவரையில், ஞானத்தைப் பெற்றுக் கொள்ள சத்தியுள்ளவனு யிருக்கின்ருனென்றும், ஆனுல் தீமைகளை பாவங்களாக நீக்கி ஆண்டவரை எதிர்பார்த்தால் ஒழிய, அன்பை அடைய முடியாதென்றும், இன்னும் அதே வாகிறபடி, மனிதனிட புத்தியானது ஞானம் வரையில் ஏற்றக்

கூடுமென்றும், ஆனால் தீமைகளை பாவங்களாக நீக்குகிறவரை யில் தவிர, அவன் சித்தமானது உயர்த்தப்பட முடியாதென் றும் காண்பிக்க வேண்டும்.

243. மனிதனிட புத்தியானது, சுவர்க்கத்து ஒளிவரை யிலும், அல்லது தேவர்களுக்குள்ள ஞானம் வரையிலும் உயர்த் தப்படக்கூடுமென்பதும், ஆனால் அவனிட சித்தமானது சுவர்க் கத்தின் சூட்டிற்கு அல்லது தேவர்களுக்குள்ள அன்பிற்கு, அவன் தீமைகளைப் பாவங்களாக ஒழித்து கடவுளை எதிர்பார்த் தாலொழிய,உயர்த்தப்பட முடியாதென்பதும்,தேவலோகத்தில் அனுபவத்தில் எனக்கு தெளிவாய் தெரியப் படுத்தப்பட்டது. ஒரு கடவுளிருக்கிறாரென்றும், ஆண்டவர் மனிதனாக பிறந்தார் என்றுமட்டும் தெரிந்து, அதற்குமேல் ஒன்றும் தெரியாத சாமா னிய ஆவிகள், தேவர்களுக்குள்ள ஞானத்தின் இரகசியங்களைப் பற்றி தேவர்களுக்குத் தெரிந்திருப்பதுபோல், முழுமையும் அறிந்திருந்தார்களென்றும், இந்த சாமானிய ஆவிகள் மட்டு மல்லாமல், பிசாசுக் கூட்டத்தில் அநேகர் கூட அறிந்திருந்தனர் கள் என்றும், நான் அநேக முறைகளில் பார்த்து உணர்ந்திருக் கிறேன். ஆனால், அவர்கள் செவிகொடுத்து கேட்டபோது, அறிந்து கொண்டார்கள். ஆனால் தாங்களே சுயமாய் நினைத்த போது, அப்படி அறிந்துகொள்ள முடியவில்லை. அவர்கள் செவி கொடுத்து கேட்டபோது, மேலே இருந்து வெளிச்சம் பிர வேசித்தது. ஆனால் அவர்கள் சுயமாய் நினைத்தபோது, அவர் களிட சூடு அல்லது அன்பிற்கு அனுவயப்பட்டதைத் தவிர வேறு எந்த வெளிச்சமும் பிரவேசிக்க முடியவில்லை. ஆகையினால் அவர்கள் இந்த ரகசியங்களைக் கேட்டு அறிந்து கொண்டபிறகு செவிகொடுத்து கேட்காமலும், ஒன்றையும் மனதில்வைக்காமலும் இருந்தார்கள். உண்மையாகவே, பிசாசு

கூட்டத்தைச் சேர்ந்தவர்கள், இவைகளை வெறுப்புடன் தள்ளி விட்டு, அவைகளை முழுமையும் நிராகரித்தார்கள். மாயமான அவர்கள் அன்பின் சூடும், அதன் வெளிச்சமும், இருளைக் கொண்டுவந்தது; அதனால், மேலிருந்துவரும் சவர்க்கத்து ஒளி அவிக்கபட்டது.

244. அதே மாதிரி உலகத்திலும் சம்பவிக்கிறது. முழுமையும் மூடனுயில்லாதவனுயும், தன் சொந்த புத்தியின் அஹம் பாவத்தால் பொய்களில் சுயமாப் உறுதிப்படாதவனுயு மிருக்கிற எவனுவது ஒருவன், யாதொரு ஆழ்ந்த விஷயத்தைப்பற்றி ஜனங்கள் பேசுவதைச் செவிகொடுத்து கேட்கும்போது, அல்லது அவ்வித சங்கதியை அவன் வாசிக்கும்போது, அவனுக்கு அறிவின்பேரில் யாதேனும் ஆசையிருந்தால், இவைகளை எல்லாம் அவன் அறிந்துகொண்டு அவைகளை மனதில் கூட வைத்து, பின்னிட்டு அவைகளை ஊர்ச்சிதப்படுத்த சத்தியுள்ளவனுயிருக்கிறுன். நல்லவனும் கெட்டவனும் அம்மாதிரியே செய்ய சத்தியுள்ளவர்களா யிருக்கிறுர்கள். ஒரு கெட்ட மனிதன், திருச்சபையைச் சேர்ந்த தெய்வீக விஷயங்களை இருதயத்தில் நிராகரித்தாலும், அவன் அவைகளை அறிந்துகொள்ளவும், அதனுடன் அவைகளைப்பற்றிப் பேசி, பிரசங்கம்செய்யவும், எழுத்து மூலமாய் பாண்டித்தியத்துடன் அதை ஊர்ச்சிதப்படுத்தவும் சக்தியுள்ளவனு யிருக்கிறுன்; ஆனுல் அவன் இஷ்டப்படி விடப்பட்டால், அவன் சொந்த நரகசம்பந்தமான அன்பிலிருந்து, அவைகளுக்கு எதிரிடையாய் நினைத்து, அவைகளை நிராகரிக்கிறுன். இதனுல் சித்தமானது ஞானகூட்டி லில்லாதபோதிலும், புத்தியானது ஞான ஒளியிலிருக்கக்கூடுமென்றும் கூட விசதமாகிறது. அதிலிருந்தும் கூட புத்தியானது சித்தத்தை நடத்துகிறதில்லை யென்

றும், அல்லது ஞானமானது அன்பை உண்டாக்குகிறதில்லை யென்றும், ஆனால் அது வழியை மாத்திரம் கற்பித்து, காண் பிக்கிறதென்றும், ஏற்படுகிறது; ஒரு மனிதன் எப்படி வாழ வேண்டுமென்பதைக் கற்பிக்கிறது, மேலும் அவன் போகவேண் டிய வழியையும் காண்பிக்கிறது. சித்தமானது புத்தியை நடத்தி,அதனுடன் ஒன்றாக செயல்பட அதைச் செய்கிறதென் றும், சித்தத்தைச் சேர்ந்த அன்பானது தன்னுடன் ஒத்து போகும் புத்தியில் உள்ளதை ஞானமென்று சொல்லுகிறதென் றும், இன்னும் ஏற்படுகிறது. பின்வருவதில், சித்தமானது, புத்தியை விட்டுவிட்டு, சுயமாய் ஒன்றும் செய்கிறதில்லை என் றும், ஆனால் அது செய்வதெல்லாம், புத்தியுடன் ஐக்கியப் பட்டு செய்கிறதென்றும், அப்படியிருந்தாலும், சித்தமானது புத்தியை தன்னுடன் உட்பெருக்கால் கூடுகிறதென்றும், புத் தியானது சித்தத்தைச் சேர்த்துக்கொள்ளுகிறதில்லை யென்றும் அறிந்து கொள்ளப்படலாம்.

245. மனிதனில் மனதுக்குச் சேர்ந்த உயிரின் மூன்று நிலைகளிலும், வெளிச்சம் உட்புகும் விதத்தைப் பற்றி இப்பொ ழுது சொல்லப்படும். சூட்டினிடவும், வெளிச்சத்தினிடவும், மனிதனில் அன்பினிடவும், ஞானத்தினிடவும் ஆசயங்களா யிருக்கிறதும், முன் சொல்லியபடி மும்மடங்கான ஒழுங் கில், அல்லது மூன்று நிலைகளில் இருக்கிறதுமான உருவங் கள், பிறந்தது முதல் தெளிவாயிருந்து, பளிங்கு கண்ணடி ஸ்தூல வெளிச்சத்தை செல்லவிடுவதுபோல், ஞான ஒளியை செல்லவிடுகிறது. அதனால்தான், ஞானவிஷயத்தில், ஒரு மனிதன் மூன்றாவது நிலைக்கு உயர்த்தப்படக்கூடும். அப் படியிருந்தாலும், ஞான சூடானது ஞான ஒளியுடன் அல் லது அன்பு ஞானத்துடன் சேர்ந்தாலொழிய, இந்த உரு

வங்கள் திறக்கப்படுகிறதில்லை: இந்த சேர்க்கையினால், இந்தத் தெளிவான உருவங்கள் நிலைகளுக்குத் தக்கபடி திறக்கப்படு கின்றன. பூமியின்பேரில் செடிகள் வளர்தல் விஷயத்தில், உல கத்து சூரியனிட ஒளிக்கும் சூட்டிற்கும் நேரிடுகிறதுபோல் இது இருக்கிறது. வேனிற்காலத்து வெளிச்சத்தைப்போல், பிரகாசமாயிருக்கிற மாரிகாலத்து வெளிச்சம், விதையிலா வது மரத்திலாவது எதையும் திறக்கிறதில்லை; ஆனால் வசந்த காலத்து சூடு வெளிச்சத்துடன் சேர்ந்தபோது, பிறகு செடிகள் வளர்கின்றன. ஞான ஒளி ஸ்தூல ஒளியுடன் அன்னுவயப்படு கிறபடியினாலும், ஞான சூடு ஸ்தூல சூட்டுடன் அப்படி இருப் பதாலும், விஷயம் அதைப்போன்றிருக்கிறது.

246. இந்த ஞான சூடானது தீமைகளை பாவங்களாக நீக்குவதாலும், அதே காலத்தில் ஆண்டவரை எதிர்பார்த்தலா லும் தவிர வேறு எந்த விதத்திலும் அடையப்படுகிறதில்லை. ஏனென்றால், ஒரு மனிதன் தீமைகளில் இருக்கிறவரையில், அவைகள் பேரில் மோகம் கொள்ளுகிறபடியினால், அவன் அவைகளின்பேரில் அன்பு கூட பாராட்டுகிறான்; தீமைகளை நேசித்தலும், மோகமும் கூட, ஞான அன்பிற்கும், ஆசைக் கும் எதிரிடையான ஓர் அன்பிலிருக்கின்றன ; கூறிய அன்பு அல்லது மோகம் தீமைகளை பாவங்களாக தள்ளினால் தவிர நீக் கப்பட முடியாது. ஒரு மனிதனைவன், ஆண்டவரிடமிருந்து தவிர சுயமாய் தீமைகளை நீக்க முடியாதாகையால், அவன் அவரைஎதிர்பார்க்கவேண்டும். பிறகு, ஆண்டவரிட உதவியால் அவன் அவைகளை நீக்கும்போது, தீமையினிடத்து அன்பும், அதன் சூடும் நீக்கப்படுகின்றன; நன்மையினிடத்து அன்பும் அதன் சூடும் அதற்கு பதிலாக ஏற்படுத்தப்படுகின்றன ; அதனால் கொஞ்சம் அதிகம் உயர்ந்த நிலை திறக்கப்படுகிறது.

ஏனென்றால், ஆண்டவர் மேலேயிருந்து பாய்ந்து, அந்த நிலையைத் திறந்து, பிற்பாடு அன்பு அல்லது ஞான சூட்டை, ஞானம் அல்லது ஞான ஒளியுடன் சேர்க்கிறார்; அந்த சேர்க்கையினால், மனிதனானவன் வசந்த காலத்து மரத்தைப்போல் ஞானியாய் மலர்கிறான்.

247. மனிதன் மூன்று நிலைகளிலும், ஞான ஒளியானது உட்பாய்வதால், மனிதனானவன் மிருகங்களிலிருந்து விசேஷித்தறியப்படுகிறான். அவன் மிருகங்களுக்கு மேற்படுவதால், கூர் கூராய் நினைக்கவும், ஸ்தூலமானதல்லாமல் ஞானசம்பந்தமான உண்மைகளைக்கூட பார்க்கவும், சத்தியுள்ளவனாயிருக்கிறான் ; அவன் அவைகளை அப்படி பார்க்கும்போது, அவைகளை ஒத்துக்கொண்டு, இவ்விதமாக சீர்திருத்தப்படவும், மறுபடி பிறக்கவும் அதாவது குணப்படவும், அவன் சத்தியுள்ளவனாயிருக்கிறான். ஆண்டவரிடமிருந்து ஒவ்வொரு மனிதனும் உடைத்தாயிருக்கிறதும், அது நீக்கப்பட்டால் அவன் சீர்திருத்தப்பட முடியாதாகையால், அவனிடமிருந்து நீக்கப்படாததாயுமிருக்கிற மேற்கூறிய பகுத்தறிவுடைமை என்பதால், ஞான வெளிச்சத்தை அடையும் மனோ சத்தி என்று அறிந்துகொள்ளப்படுகிறது. இந்தப் பகுத்தறிவுடைமை என்கிற மனோ சத்தியினால்தான், மனிதன் மிருகங்களைப்போலல்லாமல், நினைக்கவும் மட்டுமல்லாமல், சிந்தனையிலிருந்து பேசவும், பிறகு மேலே கூட கூறிய சுதந்திரம் என்று சொல்லப்பட்ட இன்னொரு மனோ சத்தியினால், அவன் புத்தியிலிருந்து நினைக்கிறவைகளைச் செய்யவும் சக்தியுள்ளவனா யிருக்கிறான். பகுத்தறிவு உடைமையும், சுதந்திரமும், ஆகிய இந்த இரண்டு மனோ சக்திகளும் மேலே 240 வது

பிரிவில் சொல்லி யிருப்பதினால், அவைகளைப்பற்றி இன்னும் அதிகம் நாம் சொல்ல வேண்டியதில்லை.

**பரமார்த்தமாகிய உயர்ந்தநிலை அவனில் திறக்கப்படா விட்டால், மனிதன் ஸ்தூலமானவனாகவும் ஐம்புலனுக்கு அடுத்தவனாகவு மாகிறான்.**

248. ஸ்தூலமானதென்றும் சூக்குமமானதென்றும், அதிசூக்குமமானதென்றும் சொல்லப்பட்ட மனிதனிட மனதின் மூன்று நிலைகளிருக்கின்றனவென்றும், இந்த மூன்று நிலைகளும் மனிதனில் ஒன்றன்பின் ஒன்றாய் திறக்கப்படுகின்றனவென்றும், திறக்கப்படக் கூடுமென்றும் மேலே காண்பிக்கப்பட்டது. ஸ்தூல நிலையானது முதலில் திறக்கப்படுகிறதென்றும், பின்னிட்டு, பாவங்களைத் தீமைகளாக அவன் நீக்கி, ஆண்டவரை எதிர்பார்த்தால், ஆத்மார்த்த நிலையும், கடைசியாய் சுவர்க்கத்துக்கு அடுத்தநிலையும் திறக்கப்படுகிறதென்றும்கூட மேலே காண்பிக்கப்பட்டது. இந்த நிலைகளானது மனிதனிட வாழ்க்கைக்குத் தக்கபடி ஒன்றன்பின் ஒன்றாய் திறக்கப்படுகிறபடியினால், அதிகம் உயர்ந்த இரண்டு நிலைகளும் கூட திறக்கப்படாமல் போகுமென்றும், அப்பொழுது மனிதனானவன், கடைசியான ஸ்தூல நிலையில் நிற்பானென்றும் ஏற்படுகிறது. ஒரு ஸ்தூலமான மனிதனும், ஒரு ஆத்மார்த்தமான மனிதனும், அல்லது ஒரு புறம்பான மனிதனும் ஒரு உள்ளான மனிதனும், இருக்கிறானென்று உலகத்தில் தெரிந்து கூட இருக்கிறது ; ஆனால், ஸ்தூல மனிதனில் எந்த உயர்ந்த நிலையாவது திறக்கப்பட்டால், ஞானியாகிறானென்றும், அப்படி திறத்தலானது தெய்வக் கட்டளைகள்படி வாழ்தலாகிய ஞானவாழ்வினால் சம்பவிக்கிறதென்றும், இவைகளுக்குக் தக்க

படி வாழ்க்கை யில்லாவிட்டால், மனிதன் ஸ்தூலமாக நிற்பானென்றும் தெரியாது.

249 ஸ்தூல மனிதர்களில் மூன்று விதங்களிருக்கின்றன; முதல்வகையார் தெய்வீக கட்டளைகளைப் பற்றி ஒன்றும் தெரியாதவர்களால் அமைந்திருக்கிறது; இரண்டாவது வகையார் அவ்வித கட்டளைகளிருக்கின்றனவென்று தெரிந்திருந்தும், ஆனால் அவைகளின்படி வழக்கை ஒன்றையும் நினைக்காதவர்கள்; மூன்றாவது வகையார் அவைகளைத் தகாதென்று தள்ளி நிராகரிக்கிறவர்கள். தெய்வீகக் கட்டளைகளைப்பற்றி ஒன்றும் தெரியாதவர்களால் அமைந்த முதல் வகையார் விஷயத்தில், அவர்கள் தாங்களே கற்பித்துக்கொள்ள முடியாதபடியினால், அவர்கள் ஸ்தூலமாகவே இருக்க வேண்டியது ஆவசியகமானது.நேரான வெளிப்பாட்டாலல்லாமல் கடவுளிட கட்டளைகளைப்பற்றி சமய விஷயங்களென்று அதை தெரிந்து கொண்ட மற்றவர்களால் ஒவ்வொரு மனிதனும் கற்பிக்கப்படுகின்றான்; இந்த விஷயத்தைப்பற்றி, பரிசுத்த வேதத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்தின் கோள்கை எனும் நூலில் 114 முதல் 118 வரையிலுள்ள பிரிவுகளில் பார்க்கவும். தெய்வக்கட்டளைக ளிருக்கிறதென்றும் தெரிந்திருந்தும், அவைகளின்படி வாழ நினைக்காதவர்களாகிய இரண்டாவது வகையார் கூட, ஸ்தூலமாகவே இருக்கிறார்கள்; மேலும் அவர்கள் உலகத்தைப்பற்றியும் சரீரத்தைப்பற்றியும் தவிர வேறு எந்த விசாரத்தைப்பற்றி கவனிக்கிறதில்லை; இவர்கள் இறந்த பிறகு ஞானிகளானவர்களுக்கு தாங்கள் செய்ய சக்தியுள்ள உபயோகங்களுக்குத் தக்கபடி சேவகர்களாகிறார்கள்; ஏனென்றால், ஸ்தூல மனிதன் ஒரு தொழும்பனாகவும், ஒரு ஊழியக்காரனாகவுமிருக்கிறான். ஞானியானவன் எஜமா

னுகவும் பிரபுவாகவு மிருக்கிருன். தெய்வக்கட்டளேகளைத் தள்ளி நிராகரிக்கிறவர்களாகிய மூன்ரும் வகையார், ஸ்தூல மாயிருப்பது மாத்திரமல்லாமல், அவர்களிட இகழ்ச்சிக்கும் மறுப்புக்கும் தக்கபடி ஐம்புலனுக்கு அடுத்தவர்களாக கூட ஆகிருர்கள். ஐம்புலன்களே, அடுத்தவர்கள், சரீரத்தின் ஐம் புலன்களின் தோற்றங்களுக்கும் மாயங்களுக்கும் மேலே நினைக்க சக்தியில்லாத எல்லாவற்றிலும் மிகவும் தாழ்ந்த ஸ்தூலமானவர்கள்: இவர்கள் இறந்து பிறகு நரகத்துக்குப் போகிருர்கள்.

250. பரமார்த்தமானவன் யார் என்றும், ஸ்தூல மானவன் யார் என்றும் உலகத்தில் தெரியாதபடியினுலும், ஸ்தூலமாக மாத்திரம் இருக்கிறவர்களேப் பர்மார்த்தமானவர் களென்றும், பரமார்த்தமானவர்களே ஸ்தூலமானவர்க ளென்றும், அநேகரால் சொல்லப்படுகிற படியினுலும், பின்வரும் விஷயங்களேப்பற்றி பிரத்தியேகமாக பேசப் படும். 1. ஸ்தூல மனிதன் யார் என்பதும், ஞானி யார் என் பதும். 2. ஞான நிலே திறக்கப்பட்டிருக்கும் ஸ்தூல மனிதன் இலட்சணம். (3) ஞான நிலே திறக்கப்படாவிட்டாலும், அது மூடப்படாம லிருக்கிற ஸ்தூல மனிதன் இலட்சணம். 4. ஞானநிலேயானது முழுமையும் மூடப்பட்டிருக்கிற ஸ்தூலமனி தன் இலட்சணம். 5. கடைசியாய், ஸ்தூலமாக மாத்திரம் இருக்கும் மனிதன் உயிருக்கும், ஓர் மிருகத்தின் உயிருக்கும் உள்ள வித்தியாசம் என்ன என்பதும்:

251. I. ஸ்தூல மனிதன், அல்லது அஞ்ஞானி யார், ஞானி யார் என்பது.

மனிதன், முகத்தினுலும் சரீரத்தினுலு மல்லாமல், புத்தியினுலும் சித்தத்தினுலும் மனிதனுகிருன் ; ஆகை

யினல், அஞ்ஞானி என்பதினுலும், ஞானி என்பதினுலும், ஸ்தூலமாக அல்லது ஆத்மார்த்தமாக இருக்கிற ஒவ்வொருவனிட புத்தியும் சித்தமும் என்று அர்த்தம் கொள்ளப்படுகிறது. புத்தியும் சித்தமும் சம்பந்தப்பட்ட வரையில், அஞ்ஞானியானவன் ஸ்தூல உலகத்தைப் போலிருக்கிருன். மேலும் அவன் ஓர் உலகமென்றும் அல்லது ஓர் சிற்றுலகென்றும் கூட சொல்லப்படலாம்; புத்தியும் சித்தமும் சம்பந்தப்பட்டவரையில் ஞானியானவன் ஞானலோகத்தைப் போலிருக்கிருன், மேலும் அவன் ஓர் ஞானலோகம் அல்லது சுவர்க்கமென்றும் கூட சொல்லப்படலாம். ஓர்வித ஒப்பில் ஸ்தூல மனிதன் ஸ்தூல உலகமாயிருப்பதால், ஸ்தூல உலகத்துப் பொருள்களை அவன் நேசிக்கிருனென்றும், ஞானியானவன் ஓர்வித ஒப்பில் ஞானலோகமாயிருப்பதால், அந்த உலகம் அல்லது சுவர்க்கத்துப் பொருள்களை நெசிக்கிருனென்றும், இதனுல் விசதமாகிறது, ஞானியானவன் கூட நிஜமாகவே ஸ்தூல உலகத்தை நேசிக்கிருன். ஆனுல் அப்படி நேசித்தல் ஓர் எஜமானன் அவன் மூலமாய் உபயோகமானவைகளைச் செய்கிற தன்னுடைய சேவகனை நேசித்தல் போல் அல்லாமல், வேறு விதமாக அல்ல. ஞானியிடமிருந்து உபயோகத்தின் இன்பத்தை உணரும்போது, நேரிடுகிறதுபோல் உபயோகங்களுக்குத் தக்கபடி கூட அஞ்ஞானியானவன் ஞானியைப்போலாகிருன். இந்த ஸ்தூலமனிதனை ஸ்தூல ஞானி என்று சொல்லலாம். ஞானியானவன் ஞானமுள்ள உண்மைகளைநேசிக்கிருன்; அவன் அவைகளை தெரிந்து கொண்டு கிரகிக்க மாத்திரம் நேசிக்கிறதல்லாமல், அவைகளை கூட இச்சிக்கிருன்; ஆனுல் ஸ்தூல மனிதன் அந்த உண்மைகளை பேசி அவைகளை செய்யவும் கூட விரும்புகிருன்; உண்மைகளை செய்தலென்பது உபயோகமானவை

களைச் செய்தலாயிருக்கிறது. ஸ்தூலலோகமும் சூக்கும லோக மும் சேர்வதினால் இந்த அடக்கம் உண்டாகிறது ; ஏனென்றால், ஸ்தூல லோகத்தில் எது தோன்றினாலும் செய்யப்பட்டாலும், அதன் காரணத்தை சூக்கும லோகத்திலிருந்து அடைகிறது. இவைகளிலெல்லாமிருந்து, ஞானியானவன் ஸ்தூல மனதிலிருந்து முழுமையும் வேறானவன் என்றும், காரணத்துக்கும் காரியத்துக்குமுள்ள சம்பந்தத்தைப்போல அல்லாமல் வேறு எவ்வித போக்கு வரத்தும் அவைகளுக்குள் இல்லையென்றும், தெரிந்து கொள்ளலாம்.

252. II. ஞானநிலை திறக்கப்பட்ட ஸ்தூல மனிதனிட சுபாவம் மேல் சொன்னதிலிருந்து விசதமாகிறது. அதனுடன், ஞானநிலை திறக்கப்பட்டபோது, ஸ்தூல மனிதன் முழுமையும் மனிதனாகிறானென்பதை சேர்த்தப்படவேண்டியது ; ஏனென்றால், அப்போது அவன் சுவர்க்கத்திலுள்ள தேவர்களோடும், உலகத்திலுள்ள மனிதர்களோடும், சகவாசம் செய்கிறான், மேலும் இரண்டு விஷயத்திலும் ஆண்டவரிட ஆதரவில் உயிரோடிருக்கிறான் ; ஏனென்றால், ஞானியானவன் வேதத்தின் மூலமாக ஆண்டவரிட கட்டளைகளைப் பெற்றுக்கொண்டு, ஸ்தூல மனிதன் மூலமாக அவைகளைச் செய்து முடிக்கிறான். ஞானநிலை திறக்கப்பட்ட ஸ்தூல மனிதனுக்கு தன்னிட ஆத்மார்த்த மனிதனிடமிருந்து நினைத்து செயல்படுகிறது தெரியாது ; அது தன்னிடமிருந்து அல்லாமல் ஆண்டவரிடமிருந்து உண்டானாலும், தானே சுயமாய் இதை அவன் செய்வதுபோல் அவனுக்குத் தோன்றுகிறது. இதுவுமல்லாமல், ஞானநிலை திறக்கப்பட்ட ஸ்தூல மனிதனுக்கு, அவனிட ஆத்மார்த்த மனிதன் சுவர்க்கத்து தேவர்கள் மத்தியில் இருந்தாலும், அவனிட ஆத்மார்த்த மனிதன் மூலமாய் அவன்

சுவர்க்கத்தி லிருப்பதாகத் தெரியாது. அவன் தேவர்களுக்கு முன் சில வேலைகளில் தோன்றுகிறான்; ஆனால், அவன் தானே ஸ்தூல மனிதனை மறுபடியும் திரும்பிக்கொள்ளுகிறபடியி னால், அங்கே கொஞ்சம் இருந்த பிறகு, அப்புறம் பார்க்கப் படுகிறதில்லை. மேலும், ஞானநிலை திறக்கப்பட்ட ஸ்தூல மனிதனுக்கு அவனிட ஆத்மார்த்தமனது ஆண்டவரால் ஞானத்தைச் சேர்ந்த ஆயிரங்கள் கணக்கான மறைந்திருக்கும் இரகசியங்களாலும், அன்பின் ஆயிரங்கள் கணக்கான இன் பங்களாலும் நிரப்பப் பட்டிருக்கிறதென்றும், இறந்த பிறகு. அவன் வானவனைபோது இவைகளில் பிரவேசிக்கிறானென் றும், தெரியாது. ஸ்தூல மனிதனுக்கும் ஆத்மார்த்த மனி தனுக்கும் போக்கு வரவு காரணகாரிய சம்பந்தத்தால் சம்ப விக்கிறதென்பது, ஸ்தூல மனிதனுக்கு ஏன் இவைகள் தெரி யாதென்பதற்குக் காரணமாயிருக்கிறது; அன்னுவயங்களால் போக்கு வரவு சம்பவித்தல், உண்மைகள் வெளிச்சத்தில் பார்க் கப்படுகிறது என்கிறது தவிர வேறுவிதத்தில் புத்தியிலும், உபயோகங்கள் அன்பிலிருந்து செய்யப்படுகிறது என்பது தவிர வேறுவிதத்தில் சித்தத்திலும், அறியப்படுகிறதில்லை.

253 III. **ஞான நிலைதிறக்கப்படாவிடினும் அது மூடப் படாதிருக்கிற ஸ்தூல மனிதன் சுபாவம்** கொஞ்சமட்டும் தரும வாழ்வை வாழ்ந்த போதிலும் சுத்தமான உண்மையைப் பற்றி ஒன்றும் தெரியாவர்களிடத்தில், ஞானநிலை திறக்கப்பட்டா லும், மூடப்படுகிறதில்லை. இந்த நிலையானது அன்பினிடவும் ஞானத்தினிடவும் அல்லது சூட்டினிடவும் வெளிச்சத்தினிட வும் சேர்க்கையால் திறக்கப்படுகிறது என்பது, காரணமாயிருக் கிறது. அன்பு மாத்திரம் அல்லது ஞான சூடு மாத்திரம் அதை திறக்கிறதில்லை, அதுவுமல்லாமல், ஞானம் மாத்திரம்

அல்லது ஞான வெளிச்சம் மாத்திரம் அப்படி செய்கிற தில்லை; ஆனால், இரண்டும் சேர்ந்து அப்படிசெய்கிறது. ஆகை யினால், ஞானம் அல்லது ஒளி வெளிப்படுகிற சுத்தமான உண்மைகள் தெரியாவிட்டால், அன்பானது அந்த நிலையை திறக்க பிரயோஜனப்படுகிறதில்லை, ஆனால் திறக்கப்படக் கூடிய அவ்வித சக்தியில் மாத்திரம் அதை வைக்கிறது; அது மூடப்படாதிருக்கிறது என்பதினால் இது கருதப்படுகிறது. சூடு மாத்திரம் விதைகளையும் மரங்களையும் வளரச் செய்யா மல், வெளிச்சத்தோடு சேர்ந்து மாத்திரம் அப்படிச் செய்கிற படியினால், விருக்ஷவர்க்கத்தில் சம்பவிக்கிறதுபோல இது இருக்கிறது. எல்லா உண்மைகளும் ஞான ஒளிக்கு சேர்ந்த தென்றும், எல்லா நன்மைகளும் ஞான சூட்டிற்கு சேர்ந்த தென்றும், நன்மையானது உண்மைகளால், ஞான நிலையை திறக்கிறதென்றும், ஞாபகத்தில் வைக்கவேண்டும்; ஏனென் றால், நன்மையானது, உண்மைகளால், உபயோகத்தை நடத்து கிறது. உபயோகங்கள் நன்மையும் உண்மையும் சேர்வதிலி ருந்து, தங்களிட சாரத்தை அடைகிற அன்பின் நன்மை களாயிருக்கின்றன. ஞானநிலை தங்களில் திறக்கப்படாவிட் டாலும், அது மூடப்படாதவர்கள், இறந்த பிறகும், அவர் கள் ஆத்மார்த்தமாயல்லாமல் ஸ்தூலமாயிருக்கிறபடியினால், சில வேளைகளில் கஷ்டங்களை அனுபவிக்கிற சுவர்க்கத்தில் மிகவும் தாழ்ந்த பாகங்களில் இருக்கின்றார்கள்; அல்லது, கொஞ்சம் உயர்ந்த ஒரு சுவர்க்கத்தின் எல்லைகளில் அவர்கள் சாயங் கால வெளிச்சத்திலிருப்பதுபோல் இருக்கிறார்கள். ஏனென் றால், மேல்கூறியபடி அங்கே சுவர்க்கத்திலும் அதன் ஒவ் வொரு கூட்டத்திலும், வெளிச்சமானது மத்தியிலிருந்து எல்லைகள் வரையில் குறைகிறது; தெய்வ உண்மைகளில்

மேன்மை யடைந்தவர்கள் மத்தியிலிருக்கிறார்கள்; கொஞ்சம் உண்மை தெரிந்தவர்கள் எல்லைகளி லிருக்கிறார்கள் ஒரு கடவுளிருக்கிறாரென்பதும், ஆண்டவர் தங்களுக்காக துன் பப்பட்டாரென்பதும், தருமமும் பக்தியும் திருச்சபையின் பிரதானமானவைகள் என்பதும் தவிர, சமயத்தைப்பற்றி இன்னும் அதிகம் ஒன்றும் தெரியாதவர்கள் கொஞ்சம் உண் மையிலிருக்கிறார்கள்; ஆனால், பக்தியானது அதன் சாரத்தில் உண்மையாயும், உண்மையானது அநேகமாயும், தருமமானது ஒரு மனிதன் ஆண்டவரிடமிருந்து செய்கிற அவன் தொழி லின் முழு வேலையாயும் இருந்தபோதிலும், பக்தியும் தரும மும் என்னவென்று தெரிந்து கொள்ள அவர்கள் விசாரப்படு கிறதில்லை ; ஒருவன் தீமைகளை பாவங்களாக நீக்கும்போது, ஆண்டவரிடமிருந்து அப்படிச் செய்கிறான். அது மேற்கூறிய படி, முடிவானது காரணத்தின் எல்லாமாயும், காரியமானது காரணத்தின் மூலமாய் முடிவின் எல்லாமாயும், சரியாயிருக் கிறது ; முடிவு, தருமம் அல்லது நன்மையாயிருக்கிறது ; கார ணம், பக்தி அல்லது உண்மையாயிருக்கிறது ; காரியங்கள் நல்ல வேலைகள் அல்லது உபயோகங்களாயிருக்கின்றன. பக்தி யின் உண்மைகளோடு சேர்க்கப்பட்டிருப்பதைத் தவிர செய் கைகளில் இன்னும் அதிகம் தருமம் கொண்டுபோக முடியா தென்று இதினால் தெளிவாயிருக்கிறது. இந்த உண்மை களால், தருமமானது செய்கைகளில் பிரவேசித்து,அவைகளின் சுபாவங்களை தகுதியாக்குகிறது.

254. IV. ஞானநிலை முழுமையும் மூடப்பட்டிருக்கிற ஸ்தூல மனிதன் சுபாவம்.

வாழ்க்கை விஷயத்தில் தீமைகளில் இருக்கப்பட்ட வர்களிலும், அதிகமாய், தீமைகளிலிருந்து பொய்களிலிருப்

பவர்களிலும், ஞான நிலையானது மூடப்பட்டிருக்கிறது. வேறு இயல்புள்ள யாதொன்று கொஞ்சம் தொட்டாலும், ஓர் நரம்பின் சிறிய இழை சுருங்குதல்போலும், ஒரு தசைநாரின் இயக்கும் நார்களும், தசைநாருமே, நிஜமாகவே முழுசரீரமும்,கடினமானது அல்லது குளிரானது எது தொட்டாலும் சுருங்குதல் போலவும் விஷயமிருக்கிறது. அம்மாதிரியே மனிதனில் ஞானநிலையின் பொருள்களும் உருவங்களும் தீமைகளிலிருந்தும், அதன் பொய்களிலிருந்தும் சுருங்குகின்றன. ஏனென்றால், இவைகள் கூட வேறு இயல்புடையவைகளாயிருக்கின்றன. ஞானநிலையானது சுவர்க்கத்தின் உருவத்திலிருந்துகொண்டு, நன்மைகளையும் நன்மையிலிருந்து வரும் உண்மைகளையும் தவிர வேறொன்றையும் ஏற்றுக்கொள்ளுகிறதில்லை ; இவைகள் அதைப்போல் ஓர் இயல்புடையவைகள் ; ஆனால் தீமைகளும், தீமையைச் சேர்ந்த பொய்களும், அதற்கு வேறான இயல்புடையவைகள். இந்த அன்பானது ஆண்டவரிடத்தில் பாராட்டும் அன்புக்கு எதிரிடையாயிருப்பதினால், உலகத்தில் சுயலாபத்தைக்கோறி,அரசாள விருப்பம்கொண்டவர்களிடத்தில், முக்கியமாய் இந்த நிலையானது சுருக்கப்பட்டு, மூடப்படுகிறது. உலகத்தினிடத்து ஆசையால், மற்றவர்களிட பொருள்களை அடைய பைத்தியம் பிடித்த ஆசையுடையவர்களிடத்தில் கூட அது மூடப்பட்டாலும், அவ்வளவாக இல்லை. அவைகள் தீமைகளுக்கு உற்பத்தி ஸ்தானங்களாயிருக்கின்றன வென்பது, இந்த ஆசைகள் ஞானநிலையை ஏன் மூடுகின்றன வென்பதற்குக் காரணமாயிருக்கின்றது. இந்த நிலையை சுருக்குதல் அல்லது மூடுதல், ஒரு சுழி ரேகையை அதன் எதிர்பக்கத்தில் பின் முறுக்குதல் போலிருக்கிறது. இந்த காரணத்தினால், அந்த நிலையானது மூடப்பட்ட

போது, சுவர்க்கத்து வெளிச்சத்தை அது தள்ளுகிறது ; அப்பொழுது, அங்கே, சுவர்க்கத்து வெளிச்சத்துக்குப் பதிலாக இருளிருக்கிறது: ஆதலால், சுவர்க்கத்து ஒளியிலிருக்கிற உண்மையானது அருவருப்பானதாகிறது. இந்த மனிதர்களிடத்தில், இந்த நிலையே மட்டுமல்லாமல், பகுத்தறிவுள்ளதென்று சொல்லப்படுகிற ஸ்தூல நிலையின் அதிகம் உயர்ந்த இடம் கூட மூடப்படுகிறது ; ஐம்புலன்களை அடுத்ததென்று சொல்லப்படுகிற ஸ்தூல நிலையின் மிகவும் தாழ்ந்த இடம் மாத்திரம் திறந்திருக்கிற வரையில் இது நடக்கிறது ; ஏனென்றால், இது மனிதன் பின்னிட்டு நினைத்து, பேசி, தர்க்கிக்கிற புறம்பான புலன்களுக்கும் உலகத்துக்கும் இது வெகுசமீபமாயிருக்கிறது. தீமைகளாலும், அவைகளின் பொய்களாலும் ஐம்புலனை அடுத்தவனுகிற ஸ்தூல மனிதன், ஞானலோகத்தில் சுவர்க்கத்து வெளிச்சத்தில் ஒரு மனிதனாக தோன்றுமல், ஒரு குரூபாங்கியாகவும், மூக்கு பின்னுக்கு திருப்பிக் கொள்ளப்பட்டும் தோன்றுகிறுன்; மூக்கு உண்மையை உணர்தலுக்கு அன்னுவயப்படுகிறபடியினுல் இப்படி மூக்கு உள்ளே இழுக்கப்பட்டிருக்கிறது. மேலும், அவனிடத்தில் சுவர்க்கத்து வெளிச்சத்தின் ஒரு கதிர்கூட இல்லை. கொழுந் தழலிலிருந்தும், எரியும் கரியிலிருந்தும் தோன்றும் வெளிச்சத்தை ஒத்திருக்கும் வெளிச்சத்தைத் தவிர வேறு எந்த வெளிச்சத்தையும் தங்கள் குகைகளில் அவ்வித மனிதர்கள் உடைத்தாயிருக்கிறதில்லை. இவைகள் எல்லாம், ஞானநிலை மூடப்பட்டவர்கள் யார் என்றும், அவர்கள் சுபாவம் என்னவென்றும், தெளிவாய் காண்பிக்கின்றன.

**255. V. கேவலம் ஸ்தூல மனிதனிட உயிருக்கும் மிருகத்தின் உயிருக்குமுள்ள வித்தியாசத்தின் சுபாவம்.**

உயிரைப்பற்றி சொல்லப்படும் பின் வருவதில் இந்த வித்தியாசம் முக்கியமாய் யோசிக்கப்படும். மனிதனுக்கு மனதின் மூன்று நிலைகள் அதாவது புத்தியினிடவும் சித்தத்தினிடவும் மூன்று நிலைகள் உண்டென்பதும், இந்த நிலைகள் ஒன்றன்பின் ஒன்ருய் திறக்கப்படலாமென்பதும், அவைகள் ஒளிவீசுகிறதாயிருப்பதால், புத்தி விஷயத்தில், மனிதனைவன்சுவர்க்கத்து வெளிச்சத்துக்கு உயர்த்தப்பட்டு, தேசாசாரமானதும், சன்மார்க்கமானது மட்டுமல்லாமல், ஆத்மார்த்த உண்மைகளையுங்கூட பார்க்கக்கூடுமென்பதும், அப்படி அறிந்து கொண்ட அநேக உண்மைகளைப்பற்றி ஒழுங்கான தீர்மானங்களுக்கு வரலாமென்பதும், இவ்விதமாக புத்தியை சதாகாலம் பூரணப்படுத்தலாமென்பதும், வித்தியாசமென்று இங்கே இவ்வளவு மட்டும் சொல்லலாம். ஆனல், மிருகங்களுக்கு இரண்டு, அதிகம் உயர்ந்த நிலைகள் இல்லாமல், ஸ்தூல நிலைகள் மாத்திர மிருகின்றன ; அதிகம் உயர்ந்த நிலைகளில்லாமல், இவைகளுக்கு தேசாசாரமானதும், சன்மார்க்கமானதும் அல்லது ஆத்மார்த்தமானதுமான எந்த விஷயத்தைப்பற்றியும் நினைக்க மனோசக்தியில்லை. அவைகளின் ஸ்தூல நிலைகள் திறக்கப்பட்டு அதிகம் உயர்ந்த வெளிச்சத்துக்கு உயர்த்தப்படக்கூடாமையால், அவைகள் ஒன்றன்பின் ஒன்ருன ஒழுங்கில் நினைக்க சக்தியில்லாமல், நினைத்தலென்று சொல்லக்கூடாமல், அவைகளின் ஆசைகளுக்குத் தக்கபடி ஓர் அறிவில் செயல்படுதலாகிற ஏககால ஒழுங்கில் நினைக்க மாத்திரம் அவைகளுக்கு சக்தியுண்டு. அவைகளுக்கு ஒன்றை கூறுகூருய்பிரித்துநினைக்கவும்,உயர்ந்த சிந்தனையிலிருந்து தாழ்ந்த சிந்தனையை அறிந்து கொள்ளவும் சக்தியில்லாமையால், அவைகள் பேசக்கூடாமல், அவைகளின் ஆசைகளின் அறிவுகளுடன் ஒத்துப்போகிற சப்தங்களை மட்

டும் செய்யக்கூடும். அப்படியிருந்தாலும், மிகவும் தாழ்ந்த கருத்தில், ஸ்தூலமாயிருக்கிற புலனை அடுத்த மனிதன் மிருகத்திலிருந்து, தன்னிட ஞாபகத்தை அறிவினால் நிரப்பி, அவைகளிலிருந்து நினைத்து பேசக்கூடுமென்கிறதில் மாத்திரம் வித்தியாசப்படுகிறான். இந்த சக்தியை, தான் இஷ்டப்பட்டால் உண்மையை அறிந்துகொள்ள, சக்தியுள்ளவனாயிருத்தலாகிய ஒவ்வொரு மனிதனுக்கும் சொந்தமான மனோசக்தியிலிருந்து, அடைகிறான். இந்த மனோசக்திதான் வித்தியாசத்தை உண்டாக்குகிறது என்றாலும், அநேகர் அதை துர்விநியோகம் செய்வதால், மிருகங்களுக்கு தாழ்ந்தவர்களாக செய்துக் கொள்ளுகிறார்கள்.

மானிட மனதின் ஸ்தூல நிலையை சுயமாய் யோசித்தால், தொடர்ச்சியானதாயிருக்கிறது. ஆனால் அதிகம் உயர்ந்த இரண்டு நிலைகளோடு அன்னுவயப்படுவதால், அது உயர்த்தப்பட்டபோது வேறானதாக தோன்றுகிறது.

256. இது, வேறாக மாறும் நிலைகளைப்பற்றி அறிவில்லாதவர்களுக்கு கிரகிக்க பிரயாசையாயிருந்தாலும், அது தேவர்களிட ஞானத்தில் முக்கியமான விஷயமாயிருப்பதால் வெளிப்படுத்தப்படவேண்டும்; மேலும் அவ்வித ஞானமானது தேவர்கள் செய்வது போல், ஸ்தூல மனிதன் சிந்தனையால் யோசிக்க முடியாதபோதிலும், தேவர்களிருக்கப்பட்ட வெளிச்சம் அளவு இது உயர்த்தப்பட்டபோது, அது புத்தியினால் கிரகிக்கப்படலாம். ஏனென்றால், புத்தியானது, அவ்வித அளவுக்கு உயர்த்தப்பட்டு, அதன் உயர்ச்சிக்குத் தக்கபடி தெளிவிக்கப்படக்கூடும். ஆனால் ஸ்தூல மனதின் ஞானம் வேறாய் வேறாகமாறும் நிலைகளால் ஏறாமல், தொடர்பானநிலைகளால் அதிகரிக்கிறது; பிறகு, அது அதிகரிக்கிறதற்குத் தக்கப்படி அதிகம்

உயர்ந்த இரண்டு படிகளின் வெளிச்சத்தால் உள்ளேயிருந்து தெளிவிக்கப்படுகிறது. இது எப்படி சம்பவிக்கிறதென்பதை, உயரத்தைச் சேர்ந்த நிலைகளின் சுபாவத்தால் அறிந்து கொள்ளலாம். ஒரு அந்தஸ்து மற்றொன்றுக்கு மேலேயிருக்கிறது, இறுதியானதாகிய ஸ்தூல நிலையானது அதிகம் உயர்ந்த இரண்டு நிலைமைகளுக்கும் சாதாரணமான ஓர்வித போர்வையாயிருக்கிறது; அப்படி நேரிடும் பட்சத்தில், ஸ்தூல நிலையானது உயர்ந்த வெளிச்சத்தின் நிலைக்கு உயர்த்தப்படுவது போல், அம்மாதிரியே, உள்ளிருந்து உயர்ந்தது, புறம்பான ஸ்தூலத்தின்பேரில் செயல்பட்டு, அதை பிரகாசிப்பிக்கிறது. இந்த தெளிவு, உயர்ந்த நிலைகளின் வெளிச்சத்தால் உள்ளிருந்து சம்பவிக்கிறது. ஆனால், இந்த வெளிச்சம், அவைகளை மூடியிருக்கிறதும் சூழ்ந்திருக்கிறதுமான ஸ்தூல நிலையினால், தொடர்பினால், ஏற்றுக்கொள்ளப்படுகிறது. ஆகையினால், ஏற்றத்துக்குத் தக்கபடி அதிக தெளிவாயும் சுத்தியாயும் பெற்றுக்கொள்ளப்படுகிறது; அதாவது, ஸ்தூல நிலையானது அதிகம் உயர்ந்த நிலைகளின் வெளிச்சத்திலிருந்து வேறானதாய், ஆனால் சுயமாய், தொடர்பாய் உள்ளிருந்து தெளிவிக்கப்படுகிறது. ஒரு மனிதன் உலகத்திலும், அதனால் ஸ்தூல நிலையிலும் இருக்கிறவரையில், தேவர்களுக்குள் இருப்பது போல், ஞானத்திற்கே உயர்த்தப்படமுடியாமல், தேவர்களை எட்டும் அதிகம் உயர்ந்த வெளிச்சத்துக்கும், உள்ளிருந்து பிரவேசித்து பிரகாசிப்பிக்கிற அவர்கள் வெளிச்சத்திலிருந்து தெளிவை அடையக்கூடிய சக்திக்குள்ளும் உயர்த்தப்படக் கூடுமென்றும் இதிலிருந்து விசதமாகிறது. ஆனால் இந்த விஷயங்கள் இதற்குள் மிகவும் தெளிவாய் விவரிக்க முடியாது; விஷயமானது காரிய சித்திகளிலிருந்து நன்றாய்த் தெரிந்து

கொள்ளலாம்; ஏனென்றால், காரணங்களைப்பற்றிய அறிவு கொஞ்சம் முதலில் இருக்கும்பட்சத்தில், காரிய சித்திகளே அவைகளை வெளிச்சத்தில் வைத்து, அவைகளை தெளிவிக்கின்றன.

257. பின்வருகின்றவைகள் காரிய சித்திகளாயிருக்கின்றன. 1. ஸ்தூல மனது தேவர்கள் இருக்கப்பட்ட சுவர்க்கத்து வெளிச்சத்துக்கு உயர்த்தப்பட்டு, தேவர்கள் ஆத்மார்த்தமாய் பார்க்கிறதை ஸ்தூலமாய், இவ்விதமாய் அவ்வளவு பூரணமாக அல்லாமல் பார்க்கக்கூடும்; அப்படியிருந்தாலும் மனிதனிட ஸ்தூல மனது தேவதா சம்பந்தமான வெளிச்சத்துக்கே உயர்த்தப்பட முடியாது. 2. தன்னிட ஸ்தூல மனதின் மூலமாய் சுவர்க்கத்து வெளிச்சத்துக்கு உயர்த்தப்பட்ட மனிதன் தேவர்களுடன் நினைக்கவும், அவர்களோடு பேசவும்கூட சத்தியுள்ளவனாயிருக்கிறான்; ஆனால் அப்பொழுது தேவர்களின் சிந்தனையும் பேச்சும், மனிதனிட சிந்தனையிலும் பேச்சிலும் உட்பிரவேசிக்கிறது. ஆனால் தலை கீழாய் அப்படி சம்பவிக்கிறதில்லை. ஆகையினால் தேவர்கள் மனிதனோடு அவனுடைய தாய் பாஷையாயிருக்கிற ஸ்தூல பாஷையில் பேசுகிறார்கள். 3. ஸ்தூல மனிதனுக்குள்ளே ஆத்மார்த்த உட்பெருக்கால் இது உண்டாக்கப்படுகிறதல்லாமல், ஞானிக்குள் எவ்வித ஸ்தூல உட்பெருக்கினாலும் அப்படி சம்பவிக்கிறதில்லை. 4. ஸ்தூல உலகத்தில் மனிதனிருக்கிற வரையில் ஸ்தூலமாயிருக்கிற மானிட ஞானம் தேவர்களுக்கு இருக்கும் ஞானத்துக்கு எவ்விதத்திலும் உயர்த்தப்படமுடியாது, ஆனால் அதைப்போன்ற ஏதோ ஒரு பிரதிமைக்கு மாத்திரம் உயர்த்தலாம்; ஸ்தூல மனதின் உயர்ச்சி, நிழலிருந்து வெளிச்சத்துக்கும், அல்லது தடித்ததிலிருந்து

சுத்தமானதற்கும் போன்று தொடர்ச்சியினால் சம்பவிக்கிற தென்பது காரணமாயிருக்கிறது. அப்படியிருந்தாலும், ஞானநிலை திறக்கப்பட்ட மனிதன் அவன் இறக்கும்போது அந்த ஞானத்திற்கு வருகிறான். மேலும் இந்திரிய ஞான அமைதியால் அவன் அதற்குள் வந்து, பிறகு அதிகம் உயர்ந்த மனதிலிருந்துவரும் உட்பெருக்கினால் அவனிட மனதின் ஆத்மார்த்தமான பொருள்களில் வரக்கூடும். 5. மனிதனிட ஸ்தூலமனது ஆத்மார்த்தப் பொருள்களா லும், அதே காலத்தில் ஸ்தூலப் பொருள்களாலும் அமைந் திருக்கிறது; சிந்தனையானது, ஸ்தூலப்பொருள்களால் அல் லாமல், ஆத்மார்த்தப பொருள்களால் உண்டாக்கப்பட்டிருக் கிறது; முன் சொன்னவைகள் மனிதன் இறக்கும்போது விலகிப்போகின்றன. ஆத்மார்த்த பொருள்கள் அப்படிப் போ கிறதில்லை; ஆகையினால், இறந்த பிறகு, மனிதன் ஆவியாக அல்லது தேவனாக ஆகுங்காலத்தில், அதே மனது அதற்கு உலகத்திலிருந்ததற்கு ஒத்த ஓர் உருவத்தில் நிற்கிறது. 6. மேல் சொல்லியபடி இறந்த பிறகு விலகிப்போகிற அந்த மன தின் ஸ்தூலப்பொருள்கள், ஆவிகளும் தேவர்களும் இருக்கும் சூக்கும சரீரத்தின் தோல் போர்வையாகின்றன. ஸ்தூல உல கத்திலிருந்து அடைந்த அவ்வித போர்வையின் மூலமாய், அவர்களிட சூக்கும சரீரங்கள் நிலைக்கின்றன. ஏனென்றால், ஸ்தூலமானது தன்னுள்கொள்ளும் இறுதியானதாயிருக் கிறது. அதனால்தான், மனிதனாய் பிறக்காத ஒரு ஆவியும் ஒரு தேவனும் கிடையாது. மனிதனில் ஸ்தூல மனதின் சுபா வம் தெரியும்பொருட்டு, தேவர்கள் ஞானத்தைக் குறித்த இந்த இரகசியங்கள் இவ்விடத்தில் எடுத்துக்காட்டப்பட்டது; பின் வருவதில் இந்த விஷயம் இன்னும் சொல்லப்படும்.

258. ஒவ்வொரு மனிதனும், மூன்றாவது சுவர்க்கத்து தேவர்கள் இருக்கப்பட்ட மிகவும் உள்ளுக்குள்ளான படிவரையிலுள்ள உண்மைகளை அறிந்துகொள்ளும் மனோசக்தியில் பிறந்திருக்கிறான்; ஏனென்றால், மானிடபுத்தி இரண்டு உயர்ந்த படிகளைச் சுற்றி தொடர்ச்சியினால் உயர்ந்து, மேல்சொல்லிய படி அந்தப்படிகளின் ஞானத்தின் வெளிச்சத்தை அடைகிறது (பிரிவு. 256). இந்த காரணத்தினால்தான், மனிதனானவன் தன் உயர்ச்சிக்குத் தக்கபடி பகுத்தறிவுள்ளவனாகக்கூடும். அவன் மூன்றாவது படிக்கு உயர்த்தப்பட்டால், அந்த மூன்றாவது படியிலிருந்து பகுத்தறி வுள்ளவனாகிறான்; இரண்டாவது படிக்கு உயர்த்தப்பட்டால், இரண்டாவது படியிலிருந்து பகுத்தறிவுள்ளவனாகிறான்; அப்படி அவன் உயர்த்தப்படாவிட்டால், முதல் படியில் பகுத்தறிவுள்ளவனாயிருக்கிறான். ஸ்தூல நிலையானது அவர்கள் வெளிச்சத்திற்கு சாதாரண கொள்கலமாயிருப்பதால், அந்த நிலைகளிலிருந்து அவன் பகுத்தறிவுள்ள வனாகிறானென்று சொல்லப்பட்டது. சித்தத்தைச் சேர்ந்த அன்பு, புத்தியைச் சேர்ந்த ஞானத்தைப் போல் அம்மாதிரியே உயர்த்தப்பட முடியாதென்பது, மனிதன், தான் ஆகக்கூடிய உன்னத பகுத்தறிவுள்ளவனாக ஏன் ஆகிறதில்லை என்பதற்கு காரணமாயிருக்கிறது. சித்தத்தைச் சேர்ந்த அன்பு, தீமைகளைப் பாவங்களாக நீக்குவதினாலும், பிறகு மனிதன் அதுமுதல் ஆண்டவரிட அருளினால் செய்கிற உபயோகங்களாயிருக்கிற தருமத்தின் நன்மைகளாலும் மாத்திரம் உயர்த்தப்படுகிறது. ஆகையினால், சித்தத்தைச் சேர்ந்த அன்பானது அதேகாலத்தில் உயர்த்தப்படாவிட்டால், புத்தியைச்சேர்ந்த ஞானமானது, எவ்வளவு ஏறியிருந்தாலும், அதன் அன்பில் மறுபடியும் விழுந்துவிடுகிறது. அதனால்

தான் ஒரு மனிதனிட அன்பானது அதேகாலத்தில் சூக்கும நிலைக்கு உயர்த்தப்படாவிட்டால், இறுதியான நிலையில் தவிர, அவன் பகுத்தறிவுள்ளவனாயில்லை. மனிதனிட பகுத்தறியும் அறிவு தோற்றத்தில் மூன்று நிலைகள் அதாவது சுவர்க்கத்துக்கு அடுத்ததிலிருந்து ஓர் பகுத்தறிவும், ஆத்மார்த்தமானதிலிருந்து ஒன்றும், ஸ்தூலமானதிலிருந்து ஒன்றும், உடையது போதும், மேலும் உயர்த்தப்பட்டாலும் இல்லாவிட்டாலும், உயர்த்தப்படக்கூடிய மனோசக்தியாயிருக்கிற பகுத்தறிவுடைமை மனிதனுக்கு உண்டென்றும், இவைகளிலெல்லாமிருந்து அறிந்து கொள்ளலாம்.

259. ஒவ்வொரு மனிதனும் அந்த மனோசக்தியில் அதாவது பகுத்தறிவுடைமையில் பிறக்கிறானென்று சொல்லப்பட்டது. ஆனால், இதனால் கருப்பையிலாவது, பிறந்த பிறகு நோயினாலாவது, தலையின்பேரில் பட்ட காயத்தினாலாவது, அல்லது எந்த உன்மத்தமான ஆசையானது வெடித்து கட்டுப்பாடுகளை உடைப்பதினாலாவது, தற்செயலாய் நேர்ந்த ஓர் விபத்தினால் தன்னிட புறம்பானவைகள் சேதப்படாத ஒவ்வொரு மனிதனுமென்று அர்த்தம் கொள்ளப்படுகிறது. இந்த விதங்களில் யாதொன்றினாலாவது ஊனப்பட்டவர்களுக்கு அவர்கள் பகுத்தறிவு உயர்த்தப்பட முடியாது; ஏனென்றால், சித்தத்திற்கும் புத்திக்கும் சேர்ந்த உயிரானது நிற்கும் எல்லைகள், ஒழுங்குபடி உயிரானது இறுதியானசெயல்களை செய்யக்கூடிய அவ்வித தன்மையில் இல்லை; ஏனென்றால், உயிரானது இறுதியான தீர்மானங்களுக்குத் தக்கபடி செயல்படுகிறது. ஆனால் அவைகளிலிருந்தல்ல. குழந்தைகளுக்கும் சிறு பிள்ளைகளுக்கும் பகுத்தறிவுடைமை கிடையாதென்பதை (266-வது பிரிவின் கடைசியில்) கீழே பார்க்கலாம்.

ஸ்தூல மனது, மானிட மனதின் அதிகம் உயர்ந்த நிலை களை மூடிவைக்கிறதும், தன்னுள் அடக்கிக் கொண்டிருப்பது மானதால், அது எதிர் தாக்கலானது ; அதிகம் உயர்ந்த நிலைகள் திறக்கப்படாவிட்டால், அது அவைகளுக்கு விரோதமாய் செயல்படுகிறது. ஆனால் அப்படி திறக்கப்பட்டால், அவை களுடன் சேர்ந்து செயல்படுகிறது.

260. *முன்பிரிவில், ஸ்தூல மனது, இறுதியானபடியி லிருப்பதால், நிலைகள் விஷயத்தில் மேலானதாயிருக்கிற ஆத் மார்த்த மனதையும் சுவர்க்கத்துக்கு அடுத்தமனதையும் மூடிக் கொண்டு, தன்னுள்ளே வைத்துக்கொண்டு மிருக்கிறதென்று காண்பிக்கப்பட்டது. இப்பொழுது இங்கே, ஸ்தூல மனது மேலானது அல்லது உள்ளிருக்கிற மனதுகளுக்கு விரோத மாக எதிர்தாக்குகிறதென்று நாம் காண்பிக்கவேண்டும். அது அவைகளை மூடி, சூழ்ந்து, அடக்கிவைத்துக்கொண் டிருக்கிறது என்பது, அது ஏன் எதிர் தாக்குகிறதென்பதற்கு காரணமாயிருக்கிறது, மேலும் எதிர் தாக்கம் நீங்கலாய் இது முடியாது ; ஏனென்றால், அது எதிர் தாக்காவிட்டால், உள் ளிருக்கும் அல்லது அடக்கம் செய்து வைத்திருக்கும் பொருள் கள் தளர்ந்து, வெளியே வந்து, துண்டுகளாக விழுந்துவிடும். ஆகையால், மானிட சரீரத்தின் மேலிருக்கும் தோல் எதிர் தாக்கத்திலில்லாவிட்டால், சரீரத்தினுள்ளே யிருப்பவை களான ஆந்திரிகம் வெளிப்பட்டு முன்னுக்கு வந்து வேறு வேறாய்ப் புரளும். அம்மாதிரியே, ஓர் தசை நாரின் இயக்கும் நாரிழைகளை தரிக்கும் சவ்வு, அசைவிலிருக்கிற இந்த நார் களின் வலிமைகளுக்கு விரோதமாய் எதிர்தாக்காவிட்டால், அசைவு நிற்பதுமட்டு மல்லாமல், எல்லா உள்ளிருக்கும் தசை நார்களும் உடைக்கப்படும். உயரத்தைச் சேர்ந்த நிலைகளின்,*

ஒவ்வொரு இறுதியான படிக்கும் விஷயம் அம்மாதிரியே; ஆகலால் அதிகம் உயர்ந்த நிலைகளை நோக்குமிடத்து, ஸ்தூல மனதுக்கும் விஷயம் அப்படியே; ஏனென்றால், மேற்கூறியபடி ஸ்தூலமானதென்றும், ஆத்மார்த்தமானதென்றும், சுவர்க்கத்தை அடுத்ததென்றும், மனதின் மூன்று நிலைகளிருக்கின்றன. ஸ்தூல மனது இறுதியான நிலையிலிருக்கிறது. ஸ்தூல மனது சூக்கும லோகத்து பொருள்களால் மட்டும் அமைந்திருக்காமல், மேற்கூறியபடி (பிரிவு 257) ஸ்தூலலோகத்து பொருள்களாலும்கூட அமைந்திருக்கின்றனவென்பது, ஸ்தூல மனது ஆத்மார்த்தமான மனதுக்கு விரோதமாய் ஏன் எதிர் தாக்குகிறது என்பதற்கு வேறு ஒரு காரணமாயிருக்கிறது. ஸ்தூல லோகத்து பொருள்கள் அதன் சுபாவத்திலேயே, ஆத்மார்த்த உலகத்தின் பொருள்களுக்கு விரோதமாய் எதிர்தாக்குகின்றன. ஏனென்றால்,ஸ்தூலலோகத்துப் பொருள்கள் சுயமாய் இறந்தவைகளாயிருக்கின்றன; மேலும் சூக்கும லோகத்துப் பொருள்களால் வெளியிலிருந்து சேட்டிக்கப்படுகின்றன. இறந்துபோனதும், வெளியிலிருந்து சேட்டிக்கப்படுவதுமான பொருள்கள், தங்கள் சுபாவத்தில் எதிர்த்து, ஆகையால் தங்கள் சுபாவத்தில் எதிர்தாக்குகின்றன. இவைகளிலெல்லாமிருந்து, ஸ்தூலமான மனிதன் ஞானிக்கு விரோதமாய் எதிர்தாக்குகிறானென்றும், சண்டை உண்டாகிறதென்றும் தெரிந்துகொள்ளலாம். ஸ்தூல மனிதன் ஆத்மார்த்த மனிதன் என்று சொன்னாலும் அல்லது ஸ்தூல மனது ஆத்மார்த்த மனது என்று சொன்னாலும் ஒன்றே.

261. ஞானமுள்ள மனது மூடப்பட்டால், ஸ்தூல மனது, ஞான மனதுக்குச் சேர்ந்த பொருள்களுக்கு விரோதமாக தொடர்ச்சியால் செயல்பட்டு, அதன் நிலைமைகளைக்

கெடுக்க அங்கிருந்து ஏதாவது வருமென்று பயப்படுகிறது. ஞானமுள்ள மனது உருவத்தில் சுவர்க்கமாயிருப்பதால், அந்த ஞானமுள்ள மனதின் உள்ளே பாயப்பட்டதெல்லாம், சுவர்க்கத்திலிருந்து வருகின்றன ; ஸ்தூல மனது உருவத்தில் உலகமாயிருப்பதால், அந்த ஸ்தூல மனதில் பாயப்பட்டதெல்லாம் உலகத்திலிருந்து வருகிறது. ஆத்மார்த்த மனது மூடப்பட்டபோது, ஸ்தூலமனது சுவர்க்கத்துக்குச்சேர்ந்த எல்லாபொருள்களுக்கும் விரோதமாய் எதிர்தாக்கி, உலகத்துப் பொருள்களை தனக்காகவே சம்பாதித்து, அவைகளை அனுபவிக்க வழிவகைகளாக இருக்கிறவரையில் தவிர, மற்றபடி அவைகளைதன்னுடன் சேர்க்கிறதில்லையென்று அதிலிருந்து ஏற்படுகிறது. சுவர்க்கத்தைச் சேர்ந்த பொருள்கள்கூட, ஸ்தூல மனதுக்கு அதன் சொந்த முடிவுகளுக்கு வழிவகைகளாக உபயோகப்படுகிறபோது, அப்பொழுது அந்த வழிவகைகள், சுவர்க்கத்தை அடுத்ததாக தோன்றினாலும், ஸ்தூலமாகின்றன ; ஏனென்றால், முடிவு அவைகளை தகுதியாக்குகின்றது ; மேலும் அதற்குள் இயல்பாய் உயிர் கொஞ்சம்கூட இல்லாத ஸ்தூல மனிதனிட அறிவுபோல் ஆகின்றன. ஆனால், சுவர்க்கத்துப்பொருள்கள் ஸ்தூல பொருள்களோடு இரண்டும் ஒன்றாக செயல்படும்படியாக சேர்க்க முடியாதபடியினால், அவைகள் பிரிந்துபோகின்றன ; சுத்தமாய் ஸ்தூலமாக இருக்கிற மனிதர்களிடத்தில் சுவர்க்கத்து பொருள்கள் உள்ளிருக்கும் ஸ்தூல பொருள்களுக்குச் சுற்றிலும் ஒரு சுற்றாக வெளிபுறம் அமர்ந்திருக்கின்றன. அதனால்தான் சுத்தமாய் ஸ்தூல மனிதன் சுவர்க்க விஷயங்களைப்பற்றிச் சொல்லவும், பிரசங்கம் செய்யவும், அந்தரங்கமாய் அவன் அவைகளுக்கு விரோதமாய் நினைத்தாலும், செயல்களினால் அவைகளைபோல பாவனைகாட்டவும்கூடகூடும்;

அவன் தனியாயிருக்கும்போது பின் கூறியதை செய்கிறான், ஆனால், அவன் கூட்டத்திலிருக்கும்போதுமுன்சொன்னதைச் செய்கிறான். ஆனால் இந்த விஷயத்தைப்பற்றி பின்வருவதில் அதிகம் சொல்லப்படும்.

262. தன்னுடன் பிறந்த எதிர்தாக்கத்தினால், ஸ்தூல மனது அல்லது மனிதன், தன்னையும் உலகத்தையும் எல்லா பொருள்களுக்கும் மேலாய் நேசிக்கும்போது, ஆத்மார்த்த மனது அல்லது மனிதனுக்குச் சேர்ந்தவைகளுக்கு விரோத மாய் செயல்படுகிறான். அப்பொழுது கூட, விபசாரங்கள் மோசம்செய்து அபகரித்தல், பழி வாங்கல், தெய்வ நிந்தனைகள் முதலியவை போன்ற எல்லாவித தீமைகளிலும், அவன் சந் தோஷமடைகிறான். அப்பொழுதுகூட, பிரகுருதி, பிரபஞ்ச சிருஷ்டிகர்த்தாவென்று ஒத்துக்கொள்ளுகிறான்: இவைகளை எல்லாம் தன்னிட பகுத்தறியும் மனோசக்தியினால் ஸ்திரப் படுத்துகிறான்; இதன்பிறகு, சுவர்க்கத்தினிடவும் திருச்சபை யினிடவும் நன்மைகளையும், உண்மைகளையும், கெட்டவைக ளாக திருப்பி, அழித்து, அல்லது தள்ளிவிடுகிறான்; கடைசி யில், அவன் அவைகளை தள்ளிவிடுகிறான், அல்லது அவை களிலிருந்து நீங்கிக்கொள்ளுகிறான் அல்லது அவைகளை வெறுக்கிறான். இதைத் தன் ஆவியில் செய்கிறான். மேலும், தன்னிட நல்லபெயர் போகாமலும், கௌரவத்துக்கும் லாபத் துக்கும் வழிவகையாக அப்படி செய்யக்கூடுமானால், இம்மா திரியாகவே அவன் நடக்கிறான். அவ்வித மனிதன் தன்னிட ஆத்மார்த்த மனதை ஒன்றன்பின் ஒன்றாய் கெட்டியாய் மூடு கிறான்; பொய்களால் தீமைகளை உறுதிபடுத்தலானது அதை முக்கியமாய் மூடுகிறது. அதனால்தான் தீமையும் பொய்யும் ஸ்திரப்படுத்தப்பட்டபோது, இறந்த பிறகு வேறோடழிக்க

முடியாது; அவைகள் உலகத்தில் மன நைவினல் மாத்திரம் நீக்கப்படக்கூடும்.

263. ஆனல், ஆத்மார்த்த மனது திறக்கப்பட்டபோது ஸ்தூல மனதின் நிலைமை முழுமையும் வேறானதாயிருக்கிறது. அப்பொழுது ஸ்தூல மனது ஆத்மார்த்த மனதுக்கு கீழ்ப்பட இஷ்டமுள்ளதாயிருக்கிறது, மேலும், அது கீழ் அந்தஸ் தில் வைக்கப்படுகிறது. ஏனென்றால், ஆத்மார்த்த மனது ஸ்தூல மனதின்பேரில் மேலிருந்து அல்லது உள்ளிருந்து செயல்பட்டு, அங்கே எதிர்தாக்கப்பட்டவைகளை நீக்கி, தன்னுடனே ஒத்து சேட்டிக்கிறவைகளை, தன்னுடனே பொருந் தச் செய்கிறது. அதனல் அஹங்காரமுள்ள எதிர் தாக்கம் கொஞ்சம் கொஞ்சமாய் நீக்கப்படுகிறது. உயிருள்ளதும் இல்லாததுமான இருவகைப் பொருள்களில், பிரபஞ்சத்தில் மிகப் பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும், தாக்கலும் எதிர் தாக்கலும் இருக்கின்றதென்று, குறிக்கப்படவேண்டியது; எல்லா பொருள்களின் சமநிறையும் இதைச் சார்ந்திருக்கிறது: தாக்கல் எதிர்தாக்கலை வென்றபோது, அது கெட்டுப்போகி றது. மாற்றிப்பார்த்தாலும் அம்மாதிரியே, ஸ்தூல மனதுட னும் ஆத்மார்த்த மனதுடனும் அம்மாதிரியே யிருக்கிறது. சுயமாய் தீமைகளாகவும் பொய்களாகவுமிருக்கிற அதன் சிந்தனையின் சந்தோஷங்களிலிருந்தும் அதன் அன்பின் சந்தோஷங்களிலிருந்தும் ஸ்தூல மனது சேட்டிக்கும்போது, ஸ்தூல மனதின் எதிர்தாக்கல் ஆத்மார்த்த மனதைச் சேர்ந்தவைகளை நீக்கி, உள்ளே பிரவேசிக்காதபடி அவை களைத் தடுத்து, அதன் எதிர்தாக்கலோடு ஒத்துபோகப் பட்ட பொருள்களிலிருந்து சலனம் உண்டாக நிர்வகிக்கிறது. இம்மாதிரி ஆத்மார்த்த மனதின் தாக்கலுக்கும் எதிர்தாக்க

லுக்கும் எதிரிடையான, ஸ்தூல மனதின் தாக்கலும் எதிர் தாக்கலும் உண்டாகிறது ; அதனால், ஒரு திருகலைப்பின் திருப்புதல்போல், ஆத்மார்த்த மனதின் மூடுதல் சம்பவிக்கிறது. ஆனால், ஆத்மார்த்த மனது திறக்கப்பட்டால், அப்பொழுது ஸ்தூல மனதின் தாக்கலும் எதிர் தாக்கலும் தலை கீழாக்கப்படுகிறது: ஏனென்றால், ஆத்மார்த்த மனது, மேலிருந்தும் அல்லது கீழிருந்தும், அதே காலத்தில், அதற்குக் கீழ்பட இஷ்டப்படுகிற ஸ்தூல மனதிலிருக்கும் பொருள்களால், கீழிருந்தாவது, வெளியிலிருந்தாவது செயல்பட்டு, ஸ்தூல மனதின் தாக்கல் அல்லது எதிர்தாக்கல் இருக்கப்பட்ட திருகலை அது பின்பக்கம் திருப்புகிறது. இந்த மனது பிறப்பினால், ஆதமார்த்த மனதைச் சேர்ந்தவைகளுக்கு நேராக எதிரிடையாயிருக்கிறது ; நன்றாய் தெரிந்திருக்கிறபடி பெற்றோர்களிடமிருந்து பரம்பரையாக, இந்த எதிரிடையை அது அடைகிறது. சீர்திருத்தமென்றும், மறுபிறப்பென்றும் சொல்லப்படுகிற நிலைமையின் வேறுபாடு இவ்விதமாயிருக்கிறது. சீர் திருத்தப்படுவதற்கு முன்னிட்டு ஸ்தூல மனதின் நிலைமையை ஒரு திருகல் கோணலாய் திருப்புதலுக்கு, அல்லது சுற்றி கீழே திருப்புதலுக்கு ஒப்பிடலாம். ஆனால் சீர்திருத்தமான பிறகு ஒரு திருகல் கோணலாய் திருப்புதல் அல்லது மேலே சுற்றி திருப்புதலுக்கு அதை ஒப்பிடலாம். ஆகையினால் சீர் திருத்தப்படுவதற்கு முன் ஒரு மனிதன் கீழே நரகத்தைப் பார்க்கிறான். ஆனால் சீர்திருத்தப்பட்டபின் மேலே சுவர்க்கத்தைப் பார்க்கிறான்.

**தீமையின் உற்பத்தி, மனிதனுக்கு சொந்தமானதும் அறிவுடைமை என்றும் சுதந்தரமென்றும் சொல்லப்படுகிறதுமான மனோசக்திகளை துர்வினியோகம் செய்வதால் உண்டாகிறது.**

264. அறிவுடைமை என்பதால், உண்மைகளேயும், பிறகு பொய்களேயும் நன்மைகளேயும், பிறகு தீமைகளேயும் அறிந்துகொள்ளும் மனேசக்தி என்று கருதப்படுகிறது; சுதந்தரம் என்பதால், இவைகளே தாராளமாய் நினைத்து, இச்சித்து, செய்யும் மனேசக்தி என்று கருதப்படுகிறது. சிருஷ்டியினுல், அதிலிருந்து பிறப்பினுல் ஒவ்வொரு மனிதனுக்கும் இந்த இரண்டு மனேசக்திகளும் உண்டென்றும், அவைகள் ஆண்டவரிடமிருந்து வருகிறதென்றும், அது அவனிடமிருந்து நீக்கப்படுகிறதில்லை என்றும், அவைகளிலிருந்து, மனிதனுனவன் சுயமாய் நினைத்துப்பேசி, இச்சித்து செயல்படுகிறது போன்ற தோற்றம் உண்டாகிறதென்றும், ஆண்டவர் ஒவ்வொரு மனிதனிலும் இந்த மனேசக்திகளில் வசிக்கிருரென்றும், மனிதனுனவன் அந்த ஐக்கியத்தால் சதாகாலம் உயிரோடிருக்கிருனென்றும், இந்த மனேசக்திகள் நீங்கலாய் அல்லாமல், அவைகளின் மூலமாய், மனிதன் சீர்திருத்தப்படவும், மறுபிறப்படையவும் சக்தியுள்ளவனு யிருக்கிருனென்றும், மேலும் மனிதனுனவன் அவைகளின் மூலமாய் மிருகங்களிலிருந்து விசேஷித்து அறியப்படுகிருனென்றும், முன் வந்தவைகளிலிருந்தும், பின் வருபவைகளிலிருந்தும் இன்னும் விசதமாகும்.

265. தீமையின் உற்பத்தி, இந்த மனேசக்திகளேத் துர்வினியோகம் செய்வதால் உண்டாகிறதென்று இந்த ஒழுங்கில் சொல்லப்படும். 1. ஒரு கெட்ட மனிதன் இந்த இரண்டு மனேசக்திகளேயும் நல்ல மனிதனேடு சமமாய் அனுபவிக்கிருன். II ஒரு கெட்ட மனிதன் தீமைகளேயும் பொய்களேயும் ஸ்திரப்படுத்த அவைகளே துர்வினியோகம் செய்கிருன்; ஒரு நல்ல மனிதன் நன்மைகளேயும் உண்மைகளேயும் ஸ்திரப்படுத்த அவைகளே உபயோகப்படுத்துகிருன். III தீமைக

ளும் பொய்களும் ஸ்திரபட்டபோது, மனிதனில் நிலைப்பாடுடையதாய், அவனிட அன்பிற்கும், பின்னிட்டு அவன் உயிருக்கும் சேர்ந்ததாய் விடுகிறது. IV அன்பிற்கும் உயிருக்கும் சேர்ந்தவைகளானவைகள், சந்ததியில் ஜனிப்பிக்கப்படுகின்றன. V உடன்பிறந்ததும், மேல்சேர்ந்ததுமான இருவகை தீங்குகளும் ஸ்தூலமனதில் குடிகொள்ளுகின்றன.

**266. 1. ஒரு கெட்ட மனிதன் நல்லமனிதனோடு இந்த இரண்டு மனோ சக்திகளையும் சமமாய் அனுபவிக்கிறான்.**

ஸ்தூல மனதானது, புத்தி சம்பந்தப்பட்டவரையில் மூன்றாவது சுவர்க்கத்து தேவர்கள் இருக்கும் வெளிச்சத்துக்குக்கூட உயர்த்தப்பட்டு, உண்மைகளைக்கண்டு அவைகளை ஒத்துக்கொண்டு, பின்னிட்டு அவைகளைப் பேசக்கூடுமென்றும் முன்பிரிவில் காண்பிக்கப்பட்டது. இந்த உண்மையிலிருந்து ஒரு கெட்ட மனிதனுக்கு நல்லவனைப்போலவே அதே மாதிரி அறிவுடைமை எனும் மனோசக்தி இருக்கிறதென்று விசதமாகிறது; ஸ்தூல மனது அவ்வளவு தூரம் உயர்த்தப்படக்கூடுமாகையால், அவன் அந்த உண்மைகளை சிந்தித்தும் பேசவும் கூட சக்தியுள்ளவனா யிருக்கிறானென்று ஏற்படுகிறது. ஆனால், விவேகமும் அனுபவமும், அவன் அவைகளை இச்சித்துச் செய்யாவிட்டாலும், அப்படிச் செய்ய சக்தியுள்ளவனா யிருக்கிறானென்று இன்னும் சாட்சியிடுகின்றன. **விவேகம் :** தான் நினைக்கும் பொருள்களை இச்சித்து செய்ய யாருக்கு சக்தியில்லை ? ஒருவன் அவைகளை இச்சித்து செய்ய விரும்பாதபடியினால், அவன் அப்படி இச்சித்து செய்கிறதில்லை. இந்த இச்சித்து செய்யும் சக்தி ஆண்டவரிடமிருந்து ஒவ்வொரு மனிதனும் அடைகிற சுதந்தரமாயிருக்கிறது; ஆனால் அவனுக்கு சக்தியுள்ளபோது, அவன் நன்மைகளை இச்சித்து

செய்யாதது, எதிர்க்கிற தீமையினிடத்தில் பாராட்டும் ஆசையிலிருந்து உண்டாகிறது; என்றாலும், அவன் இந்த ஆசையை எதிர்க்க சக்தியுள்ளவனாயிருக்கிறான், அநேகர் கூட அதை எதிர்க்கிறார்கள். சில சமயங்களில், இது சூக்கும உலகத்தில் அனுபவத்தால் ஸ்திரப்படுத்தப்பட்டிருக்கிறது. அந்தரங்கமாய் பேய்களாயிருந்தவர்களும் உலகத்திலிருக்கும்போது சுவர்க்கத்தினிடவும் திருச்சபையினிடவும் உண்மைகளை தள்ளியவர்களுமாகிய ஆவிகள் பேசுவதை நான் உற்று கேட்டிருக்கிறேன். சிறு பிராயத்திலிருந்து ஒவ்வொரு மனிதனுக்கும் இருக்கும் அறிவினிடத்து கொள்ளும் ஆசையானது, நெருப்பின் காந்தியைபோல் ஒவ்வொரு ஆசையையும் சூழ்ந்திருக்கும் மகிமையால், தூண்டப்பட்டபோது, அந்தரங்கமாய் தேவர்களாயிருக்கிற நல்ல ஆவிகளை போலவே அவர்கள் தேவதா சம்பந்தமான ஞானங்களின் ரகசியங்கள் முழுமையும் உணர்ந்தார்களென்று நான் கவனித்திருக்கிறேன். நிஜமாகவே, அந்த துஷ்ட பேய்கள் அவைகளுக்குத் தக்கபடி தங்களுக்கு இச்சித்துசெய்ய சக்தியுண்டென்றும், ஆனால் அப்படி செய்ய இஷ்டமில்லையென்றும், கூறின. அவர்கள் தீமைகளை பாவங்களாக நீக்கினால் மட்டும் இவைகளை இச்சிக்க விரும்புவார்களென்று சொல்லப்பட்டபோது, இதையும் செய்யக் கூட தங்களுக்கு சக்தியுண்டென்றும், ஆனால் அப்படி செய்ய அவர்களுக்கு இஷ்டமில்லை என்றும் சொன்னார்கள். இதனால், கெட்டவர்கள் நல்லவர்களுடன் சுதந்திரம் என்று சொல்லப்பட்ட மனோசக்தியை சமமாய் உடைத்தாயிருக்கிறார்களென்று தெளிவாயிற்று. எவன் ஒருவன் தன்னில் தானே யோசித்தால், அது அப்படியிருக்கிறதென்று தெரிந்துகொள்வான். அந்த மனோசக்தி வருகிற ஆண்டவர் தொடர்ச்சி

யால் சக்தியை கொடுக்கிறபடியினால், மனுஷனுக்கு இச்சிக்கும் சக்தியுண்டு; ஏனென்றால், மேற்சொல்லியபடி, ஆண்டவர் ஒவ்வொரு மனிதனிலும், இந்த இரண்டு மனோசக்திகளிலும், இவ்விதமாக, இச்சிக்க சக்தியுள்ளவனாயிருக்கும் சக்தி அல்லது மனோசக்தியில் வசிக்கிறார். அறிவுடைமை என்று சொல்லப்பட்ட அறிந்துகொள்ளும் மனோசக்தி விஷயத்தில் அவனிட ஸ்தூல மனது வயதுக்கு வருகிறவரையில், அது மனிதனில் இருக்கிறதில்லை; இடையில் அது வளர்ச்சியை தோற்றுவிக்க பூமியில் திறக்கப்படாத பழுக்காத பழத்தின் விதையைப்போலிருக்கிறது. மேலே சொன்னவர்களிடத்தில் (பிரிவு, 259) இந்த மனோசக்தி யிருக்கிறதில்லை.

267. II ஒரு கெட்ட மனிதன் தீமைகளையும் பொய்களையும் ஸ்திரப்படுத்த, இந்த மனோசக்திகளை துர்வினியோகம் செய்கிறான்; ஒரு நல்ல மனிதன் நன்மைகளையும் உண்மைகளையும் ஸ்திரப்படுத்த அவைகளை உபயோகப்படுத்துகிறான்.

அறிவுடைமை என்று சொல்லப்பட்ட புத்திக்கடுத்த மனோசக்தியிலிருந்தும், சுதந்தரமென்று சொல்லப்பட்ட சித்தத்துக்கு அடுத்த மனோசக்தியிலிருந்தும், தனக்கு இஷ்டமானதை ஸ்திரப்படுத்தும் சக்தியை மனிதன் அடைகிறான்; ஏனென்றால், ஸ்தூல மனிதனானவன், தன்னிட புத்தியை தான் ஆசைபடுமளவு அதிகம் உயர்ந்த வெளிச்சத்துக்கு உயர்த்த சக்தியுள்ளவனாயிருக்கிறான், ஆனால் தீமைகளில், ஆகையினால் பொய்களில் இருக்கப்பட்டவன், அவனிட ஸ்தூல மனதின் மேல்பாகத்தைப் பார்க்கிலும் உயரமாய் அதை உயர்த்துகிறதில்லை; மேலும் ஆத்மார்த்த மனது இருக்கப்பட்ட பாகங்களுக்கு அரிதாய் உயர்த்துகிறான். அவனிட ஸ்தூல மனதின் ஆசையின் இன்பங்களில் அவனிருக்கிறானென்பது

இதற்குக் காரணமாயிருக்கிறது. அவன் அந்த மனதுக்கு மேல் எழுந்தால், அவன் ஆசையின் இன்பம் அழிந்துபோகிறது. புத்தியானது அதிகம் உயரம் உயர்த்தப்பட்டு, அவன் உயிரின் இன்பங்களுக்கு அல்லது அவனிட சொந்த விவேகத்தின் விதிகளுக்கு எதிரிடையான உண்மைகளை உணர்ந்தால், அப்பொழுது அவன் அவைகளை பொய்ப்படுத்துகிறுன் அல்லது அவைகளை தாண்டிப் போகிறுன், மேலும், அவைகளை அலட்சியமாய் தள்ளுகிறுன் அல்லது அவன் உயிரின் ஆசைக்கு, அல்லது அவனிட சொந்த விவேகத்துக்கு சேர்ந்த கர்வத்துக்கு வழிவகையாக உதவ, அவைகளை ஞாபகத்தில் வைக்கிறுன். ஸ்தூல மனிதன் தான் கோருகிறதை ஸ்திரப்படுத்த சக்தியுள்ளவனு யிருக்கிறுனென்பது, அவைகளில் ஒவ்வொன்றும் அதைச் சேர்ந்தவர்களால் ஸ்திரப்படுத்தப்படுகிற, கிறிஸ்தவ உலகத்திலுள்ள சமயபேதங்களின் கும்பிலிருந்து மிகவும் தெளிவாயிருக்கிறது. எல்லாவித தீமைகளும் பொய்களும் ஸ்திரப்படுத்தப்படக் கூடுமென்று நாம் எல்லாம் அறிந்திருக்கிறோம். ஒரு கடவுள் இல்லை என்றும், பிரகுருதியே எல்லாமா யிருக்கிறதென்றும், அது தன்னைத் தானே சிருஷ்டித்துக்கொண்டதென்றும், சமயமென்பது; பேதைகள் கட்டில் வைக்கப்பட்ட ஒரு வழியாக மாத்திரம் இருக்கிறதென்றும் துஷ்டர்களால் சாதிக்கப்படலாம், நிஜமாகவே அப்படி சாதிக்கப்படுகிறது. மேக்கீயாவல் என்பவரும் அவர்பின் செல்லுகிறவர்களும், மானிடபுத்தி எல்லாவற்றையும் செய்கிறதென்றும், தெய்வ பராமரிப்பு, சிருஷ்டிக்கப்பட்ட ஒழுங்கில் பிரபஞ்சத்தை அழியாமல் காப்பது தவிர, வேறொன்றையும் செய்கிறதில்லை என்றும், மேலும் கொலைகளும், விபசாரங்களும், திருடுகளும், மோசங்களும், பழிவாங்குத

லும், ஒத்துக்கொள்ளப்பட்டவைகளென்றும், கற்பிக்கிறார்கள். இவைகளையும் இவைபோன்ற அநேகத்தை ஸ்தூல மனிதன் சாதிக்கவும், அவைகளை ரூபிக்க புஸ்தகங்கள் எழுதவும் சக்தியுள்ளவனா யிருக்கிறான்; அவைகள் ஸ்திரப்படுத்தப் பட்டபோது, இந்த பொய்கள் அவைகளின் மதிகெட்ட தன்மையிலும், உண்மைகள் இரவில் தோன்றும் பேய்களாக தவிர பார்க்கமுடியாத அவ்வித நிழலிலும் தோன்றுகின்றன. சுருங்கச்சொல்லில், மிகவும் பொய்யானதை எடுத்துக்கொண்டு அதை ஒருபிரமேயமாக ஏற்படுத்தி, ஒருசமத்துள்ளமனிதனைப் பார்த்து, இதை "ஸ்திரப்படுத்து" என்றுசொன்னால், உண்மையின் வெளிச்சம் முழுமையும் நிர்மூலமாக அவன் அப்படி செய்வான்; ஆனால் ரூபகாரங்களை விலக்கிவைத்து, உன்னுடைய சொந்த அறிவினால் அந்த பிரமேயத்தையே யோசித்தால், அந்த பொய்யை அதன் குரூபத்தோடு நீ பார்ப்பாய். இவைகளிலெல்லாமிருந்து மனிதனானவன் ஆண்டவரிடமிருந்து தான் அடைகிற இந்த இரண்டு மனோசக்திகளையும் துர்வினியோகம் செய்யவும் எல்லாவிதத் தீமைகளையும் பொய்களையும் ஸ்திரப்படுத்தவும் சக்தியுள்ளவனா யிருக்கிறானென்று விசதமாகும். எந்த மிருகத்துக்கும் இந்த மனோசக்திகள் இல்லாதபடியினால் எந்த மிருகமும் இதைச் செய்ய முடியாது. ஆகையினால், மிருகமானது, அதன் உயிரின் எல்லா ஒழுங்கிலும், அதன் ஸ்தூல ஆசைக்குச் சேர்ந்த எல்லா அறிவிலும் பிறந்திருக்கிறது. மனிதனிடத்தில் விஷயம் அப்படி அல்ல.

268. III. **தீமைகளும் பொய்களும் ஸ்திரப்படுத்தப்பட்டபோது, மனிதனில் நிலைப்பாடுடையதாய், அவனிட ஆசைக்கும் உயிருக்கும் சேர்ந்ததாய் விடுகிறது.**

தீமையும் பொய்யையும் ஸ்திரப்படுத்தல் என்பது நன்மையையும் உண்மையையும் நீக்குதலைப்பார்க்கிலும் வேறொன்றுமில்லை. அவைகள் அதிகரித்தால், தீமை நன்மையையும், பொய் உண்மையையும், நீக்கித் தள்ளுகிறபடியினால் பின் கூறியவைகளை அவைகள் தள்ளுகின்றன. ஆகையினால் தீமையையும் பொய்யையும் ஸ்திரப்படுத்துதல், சுவர்க்கத்தை மூடுகின்றது; ஏனென்றால் எல்லா நன்மையும் உண்மையும் ஆண்டவரிடமிருந்து சுவர்க்கத்தின் மூலமாய்பாய்கிறது; சுவர்க்கம் மூடப்பட்டபோது, மனிதன் நரகத்திலும், தன்னுடையதைப் போன்ற தீமையும் பொய்யும் அரசாளுகிற அங்கே ஒரு கூட்டத்திலும் இருக்கிறான்; இந்த நரகத்திலிருந்து பின்னிட்டு அவனைத் தப்புவிக்க முடியாது. பல தலைமுறைகளாக தங்கள் சமயத்தின் பொய்களில் ஸ்திரப்பட்டவர்களில் சிலரோடு பேச எனக்கு அருள்செய்யப்பட்டது; அப்பொழுது உலகத்தில் இருந்ததுபோல், இவைகளில் அவர்கள் இருந்ததை நான் பார்த்தேன். ஒரு மனிதன் ஸ்திரப்படும் பொருள்கள் எல்லாம் அவனிட ஆசையினிடவும் உயிரினிடவும் ஒரு அபின்னமான பாகமாகிறது என்பது இதன் காரணமாகிறது; அவைகள் அவனிட சித்தமும் புத்தியும் ஆகிறபடியினாலும், சித்தமும் புத்தியும் ஒவ்வொருவனிட உயிராகிறபடியினாலும், அவைகள் அவனிட அன்பாகின்றன; மனிதனிட உயிருக்கு சேர்ந்ததாக அவைகள் ஆகும்போது, அவைகள் அவனிட சரீரத்திலும், முழுமனதிலும் பிரவேசிக்கின்றன. ஆகையினால், தீமைகளிலும் பொய்களிலும் ஸ்திரப்பட்ட ஒரு மனிதன், தலைமுதல் பாதம் வரையில் அவ்விதமா யிருக்கிறானென்றும், அவன் முழுமையும் அப்படியிருக்கும்போது எந்த விதத்திலும் எதிரிடையான நிலைமைக்கு கொண்டுவரப்பட்டு, நரகத்தி

லிருந்து இழுக்கப்பட மாட்டானென்றும் விசதமாகிறது. இவைகளிலிருந்தும் இந்தபிரிவில் முன்சொல்லியவைகளிலிருந்தும், தீமையின் உற்பத்தி எங்கிருக்கிறதென்று அறிந்து கொள்ளலாம்.

269. IV. அன்பாகவும் அதனால் உயிராகவுமான பொருள்கள், சந்ததியாரில் உடன் பிறந்ததாயிருக்கின்றன.

மனிதனானவன் தீமையில் பிறந்திருக்கிறானென்றும், அவன் இதை பெற்றோர்களிடமிருந்து பிதிரார்ச்சிதமாய் அடைகிறானென்றும் தெரிந்திருக்கிறது; சிலர், பெற்றோர்களிடமிருந்தல்லாமல், ஆதாமிடமிருந்து பெற்றோர்கள் மூலமாய் அடைகிறானென்று நம்புகிறார்கள்; ஆனால் இது ஒரு பிழை. தன்னிட ஆன்மாவை யடைகிற தன்னிட தகப்பனாரிடமிருந்து அதை அவன் அடைகிறான்; மேலும் அது தாயினிடத்தில், சரீரத்தினால் உடுத்தப்படுகிறது. தகப்பனாரிட மிருந்து வரும் வித்து, உயிரின் முதன்மையான ஆசயமாயிருக்கிறது; ஆனால் அது அவன் அன்பின் உருவத்திலிருப்பதால், தகப்பனிடத்தில் இருந்ததுபோல ஒரு ஆசயமாயிருக்கிறது. ஒவ்வொருவனிட அன்பும், மிக பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும், ஓரேமாதிரி யிருக்கிறது. மேலும் அதில் படிப்படியாய் ஆகிற மானிட உருவத்தை அடைய ஓர் பிரயத்தன மிருக்கிறது. அதனால் பரம்பரையானது என்று சொல்லப்பட்ட தீமைகள் தகப்பனாரிடத்திலிருந்தும், பாட்டன்மார்களிடத்திலிருந்தும், முப்பாட்டன்மார்களிடத்திலிருந்தும் தொடர்பாய் அவர்களிட சந்ததிகளுக்கு கொண்டுபோகப்படுகிறதென்று ஏற்படுகிறது. ஆசைகள் விஷயத்தில், வமிசங்களில் அவர்கள் முதல் முன்னோர்களுக்குள் ஒரு ஒப்பனையும், குடும்பங்களில் அதிக பெரிய ஒப்பனை

யும், வீடுகளில் இன்னும் அதிக பெரிய ஒப்பனையும் இருக்கிற படியினால், அனுபவமும் இதை கற்பிக்கிறது. தலைமுறைகள் குணங்களால் மாத்திரமல்லாமல், முகங்களால் கூட விசேஷித் தரியப் படும்படியாய் இந்த ஒப்பனையானது அவ்வளவு தெளி வாயிருக்கிறது. ஆனால் பெற்றோர்கள் சந்ததியார் தீமைகளை நேசிக்கச் செய்தலைப்பற்றி, மனது அதாவது சித்தமும் புத்தி யும், சரீரத்துடனும், அதன் அவயவங்களுடனும், அங்கங்க ளுடனும் அன்னுவயப் படுவதைப்பற்றி பேசும்போது அதி கம் சொல்லப்படும். இங்கே, தீமைகள் பெற்றோர்களிட மிருந்து தொடர்பாய் வருகின்றன வென்றும், மனிதன் பிறப்பிலேயே தீமையைத் தவிர வேறொன்றுமில்லாத வரையில் ஒன்றின்பின் ஒன்றாய் சேர்ப்பதால், அவைகள் அதிகரிக்கின்றனவென்றும், தெரியும்படிக்கு இந்த சில சங்கதிகளை இவ்விடத்தில் எடுத் துக் காட்டப்பட்டன. மேலும் தீமையின் கொடுமை, ஆத் மார்த்த மனது மூடப்படுகிற அளவு அதிகரிக்கிறது; ஏனென் றால், இவ்விதமாக ஸ்தூல மனதுகூட மேலே மூடப்படுகிறது. சந்ததியாரிடத்தில், ஆண்டவரிட மிருந்துவரும் சக்தியால் தீமைகளை பாவங்களாக நீக்குவதால் மாத்திரம் இது சீராக்கப் படக்கூடும். இதில் தவிர வேறு எந்த வழியிலும் ஆத் மார்த்தமனது திறக்கப்படுகிறதில்லை; இந்த வழியால் ஸ்தூல மனது அதற்கு ஒத்த உருவத்திற்கு திருப்பப்படுகிறது.

270. **V. பரம்பரையானதும் பின் சம்பாதித்ததுமாகிய இரண்டுவித தீமைகளும் அவைகளின் பொய்களும், ஸ்தூல மனதில் வசிக்கின்றன.**

ஸ்தூல மனது உருவத்திலும் பிரதிமையிலும் ஒரு உல கமாயிருப்பதால், தீமைகளும் அவைகளின் பொய்களும் அதில் வசிக்கின்றன; ஆனால் ஆத்மார்த்தமனது உருவத்தி

லும் பிரதிமையிலும் சுவர்க்கமாயிருக்கிறது; சுவர்க்கத்தில் தீமை வசிக்க முடியாது. ஆகையினால், ஆத்மார்த்தமனது பிறக்கும்போது திறக்கப்படுகிறதில்லை. ஆனால் திறக்கப்படக் கூடியதாய் மாத்திரம் இருக்கிறது. ஸ்தூல மனது அதன் ரூபத்தின் ஓர் பாகத்தை ஸ்தூல உலகத்துப் பொருள்களி லிருந்து அடைகிறது; ஆனால் ஆத்மார்த்த மனது ஆத்மார்த்த உலகத்துப் பொருள்களிலிருந்து மாத்திரம் அடைந்து, மனி தன் ஒரு மனிதனாக சக்தியுள்ளவனாக யிருக்க, அதன் நேர் மையில் ஆண்டவரால் பாதுகாக்கப்படுகிறது; ஏனென்றால், அவன் ஒரு பிராணியாக பிறந்திருக்கிறான், ஆனால் ஒரு மனித னாகிறான். ஸ்தூல மனதானது அதைச் சேர்ந்தவைகள் எல் லாவற்றோடும் வலது பக்கத்திலிருந்து இடது பக்கத்துக்கு சுழற்சியாக வளைந்திருக்கிறது. ஆனால் ஆத்மார்த்தமனது இடதுபக்கத்திலிருந்து வலதுபக்கத்துக்கு சுழர்ச்சியாக வளைந்திருக்கிறது. இவ்விதமாக இந்த மனதுகள் பரஸ்பர மாய் எதிரிடையான சுழற்சியிலிருக்கின்றன; தீமையானது ஸ்தூல மனதில் வசிக்கின்றது என்பதற்கும், மேலும் அது தானே ஆத்மார்த்த மனதுக்கு விரோதமாய் செயல்படுகின் றது என்பதற்கும், இது ஓர் அடையாளமா யிருக்கிறது. வலதுபக்கமிருந்து இடதுபக்கம் இருக்கும் சுழற்சி கீழே, இம்மாதிரியாக நரகத்துப்பக்கம் திருப்பப்பட்டிருக்கிறது, ஆனால் இடதுபக்கத்திலிருந்து வலது பக்கம் இருக்கும் சுழற்சி, மேலே, இம்மாதிரியாக சுவர்க்கம் பக்கம்செல்லுகிறது. ஒரு துஷ்ட ஆவி தன்னுடைய சரீரத்தை இடதுபக்கத்தி லிருந்து வலதுபக்கத்துக்கு சுழற்றமுடியாமல், வலது பக்கத்தி லிருந்து இடதுபக்கத்துக்கு சுழற்றமுடியும் என்பதிலிருந்தும், அப்படியிருக்க, ஒரு நல்ல ஆவி தன்னுடைய சரீரத்தை வலது

பக்கத்திலிருந்து இடது பக்கத்துக்கு கஷ்டத்துடனும், இடது பக்கத்திலிருந்து வலது பக்கத்துக்கு இலகுவாய் சுழற்றக்கூடு மென்பதிலிருந்தும், விஷயம் இப்படியிருக்கிறதென்று எனக்கு தெரிவிக்கப்பட்டது. சுழற்சியானது, மனதுக்கு சேர்ந்தவைகளாயிருக்கிற உள்ளானவைகளின் பெருக்குகளைத் தொடர்கிறது.

271. தீமைகளும் பொய்களும் பேய்த்தனமுள்ளதும் நரகத்துக்கு அடுத்ததுமாயிருப்பதாலும், நன்மைகளும் உண்மைகளும் தெய்வீகமாகவும் சுவர்க்கத்துக்கு அடுத்ததாகவுமிருப்பதாலும், தீமைகளும் பொய்களும் நன்மைகளுக்கும் உண்மைகளுக்கும் முழு எதிரிடையிலிருக்கின்றன.

தீமையும் நன்மையும், அதனுடன் தீமையின் பொய்யும் நன்மையின் உண்மையும் எதிரிடையானவைகளென்று, அதைக் கேட்கும்போது ஒவ்வொருவனும் ஒத்துக்கொள்ளுகிறான்; தீமையானது அவர்களுடைய ஐம்புலன்களை, முக்கியமாய் பார்வையையும் செவியையும், இவ்விதமாக சிந்தனைகளையும், அவர்கள் உணர்ச்சிகளையும், சந்தோஷப்படுத்துகிறபடியினால், தீமையிலுள்ளவர்கள், தீமையானது நல்லதென்பதைத் தவிர வேறுவிதமாய் உணராதபடியினாலும், அதனால் அறியாதபடியினாலும், தீமையும் நன்மையும் நிஜமாகவே எதிரிடையானவைகளென்று அவர்கள் ஒத்துக்கொள்ளுகிறார்கள்; ஆனால் அவர்கள் தீமையிலிருக்கும்போது, அதன் சந்தோஷத்தால் சலனப்பட்டு, தீமையானது நல்லதென்றும், நன்மையானது தீமையென்றும் சொல்லுகிறார்கள். ஓர் உதாரணம் கூறலாம். தனக்கு நினைக்கவும் தீமை செய்யவும் இருக்கும் சுதந்தரத்தை துர்வினியோகம் செய்யப்பட்டவன், இதை சுதந்தரம் என்று சொல்லுகிறான். அதற்கு எதிரிடை

யானதை அதாவது சுயமாய் நன்மையாயிருப்பதை நன்மை என்று நினைத்தலை அடிமைத்தனம் என்று சொல்லுகிறான்; அப்படியிருந்தாலும் பின்கூறியது உண்மையில் சுதந்தரமாகவும், ஆனால் முன் கூறியது அடிமைத்தனமாகவும் இருக்கிறது. விபசாரத்தை விரும்பப்பட்டவன் விபசாரம் செய்தல் சுதந்தரம் என்றும், அதைச்செய்ய விடாதது அடிமைத்தனம் என்றும் சொல்லுகிறான்; ஏனென்றால், அவனுக்கு விரகதாபம் இதமானதாயிருக்கிறது. கற்புடைமை அகிதமாயிருக்கிறது. தன்னைத்தானே நேசித்தலிலிருந்து அரசாளும் ஆசையிலிருக்கப்பட்டவன், அந்த ஆசையில் எல்லாவித இதர இன்பங்களுக்கும் மேற்பட்ட வாழ்வின் இன்பத்தை உணருகிறான்; ஆகையினால் அந்த ஆசைக்கு சேர்ந்தவைகளை எல்லாம் நல்லதென்றும், அதற்கு விரோதமானதை தீமை என்றும் சொல்லுகிறான். அப்படியிருந்தாலும், எதிரிடையானது தான் உண்மையானது. ஒவ்வொரு இதர தீமையுடனும் விஷயம் அம்மாதிரியே யிருக்கிறது, ஆகையினால், தீமையும் நன்மையும் எதிரிடையானவைகளென்று ஒவ்வொருவனும் ஒத்துக்கொண்டாலும், தீமைகளிலே இருக்கப்பட்டவர்கள் இந்த எதிரிடையைப்பற்றி தப்பிதமான அபிப்பிராயத்தை வளர்க்கிறார்கள்; நன்மையிலிருக்கப்பட்டவர்கள் மாத்திரம் உண்மையான அபிப்பிராயத்தை கொள்ளுகிறார்கள். தீமையிலிருக்கும்போது எவனும் நன்மையைப் பார்க்க முடியாது. ஆனால் நன்மையில் இருக்கப்பட்டவன் தீமையைப் பார்க்க சக்தியுள்ளவனா யிருக்கிறான். தீமை என்பது கீழே குகையிலிருப்பது போலும், நன்மை என்பது மேலே மலையின்மேல் இருப்பதுபோலு மிருக்கிறது.

272. தீமையின் சுபாவம் என்னவென்றும், அது நன்மைக்கு முழுமையும் எதிரிடையாயிருக்கிறதென்றும், அநேகருக்கு தெரியாதபடியினலும், அது தெரிந்திருக்க வேண்டியது ஆவசியகமானபடியினலும், அந்த விஷயமானது பின்வரும் ஒழுங்கில் சொல்லப்படும். 1. தீமைகளிலும், அதிலிருந்து பொய்களிலும் இருக்கும் ஸ்தூல மனது நரகத்தின் ஓர் உருவமாகவும் பிரதிமையாகவு மிருக்கிறது. 2. நரகத்தின் ஒரு உருவமாகவும் பிரதிமையாகவு மிருக்கும் ஸ்தூல மனது மூன்று படிகளால் இறங்குகிறது. 3. நரகததின் ஓர் உருவமாகவும் பிரதிமையாகவும் இருக்கிற ஸ்தூல மனதின் மூன்று படிகள், சுவர்க்கத்தின் உருவமாகவும் பிரதிமையாகவும் யிருக்கிற ஆத்மார்த்த மனதின் மூன்று படிகளுக்கும் எதிரிடையாமிருக்கின்றன. 4. நரகமாயிருக்கிற ஸ்தூல மனது சுவர்க்கமாயிருக்கிற ஆத்மார்த்த மனதுக்கு முழு விரோதத்திலிருக்கிறது.

273. I. தீமைகளிலும் அதிலிருந்து பொய்களிலும் இருக்கப்பட்ட ஸ்தூல மனது, நரகத்தின் ஓர் உருவமாகவும் பிரதிமையாகவு மிருக்கிறது.

மனிதனிடத்தில் ஸ்தூல மனது அதின் திடமான உருவத்தில் என்னவென்றும், அந்த மனது அதன் மூலகாரணத்தில் இருக்கப்பட்ட மூளைகளில் இரு உலகத்து பொருள்களிலிருந்து இழைக்கப்பட்ட அதன் சொந்த உருவத்தில் அதன் சுபாவம் என்னவென்றும் இங்கே விவரிக்க முடியாது. மனதினிடவும் சரீரத்தினிடவும் அன்னுவயத்தைப்பற்றி பேசுங்கால், அந்த உருவத்தைப் பற்றிய சாமானிய அபிப்பிராயம் பின்வருவதில் சொல்லப்படும். உணர்ச்சிகளும், சிந்தனைகளும், எண்ணங்களும், சங்கல்பங்களும், அவைகளுக்குச் சேர்ந்தவை

களும் வெளிப்படுத்தப்படுகிற நிலைகளும், அதன் மாறுதல்களும் சம்பந்தப்பட்டவரையில் அதன் உருவம் விஷயத்தில் சிலது மட்டும் இங்கே நாம் சொல்லுவோம்; ஏனென்றால், தீமைகளிலும், அதிலிருந்து பொய்களிலும் இருக்கப்பட்ட ஸ்தூல மனது, இந்த நிலைகளுக்கும் மாறுதல்களுக்கும் சம்பந்தப்பட்டவரையில் நரகத்தின் உருவமாகவும் பிரதிமையாகவு மிருக்கிறது. இந்த உருவமானது ஒரு கெட்டியான உருவத்தை விசேடியமாகக் கருதுகிறது. ஏனென்றால் கண்ணில்லாமல் பார்வையும், காது இல்லாமல் கேள்வியும் கிடையாததுபோல், தன் பதார்த்தமாயிருக்கிற ஒரு கெட்டியான உருவ மில்லாமல் நிலைமையின் மாறுதல்கள் கிடையாது. ஸ்தூல மனது நரகத்தை ஒத்திருக்கச் செய்கிற உருவம் அல்லது பிரதிமை விஷயத்தை விவகரிக்குங்கால், இந்த மனதின் சாமானிய நிலைமையிலிருக்கிற அரசாளும் அன்பும் அதன் மோகங்களும், பேயானது நரகத்திலிருப்பது போலும், அந்தஅரசாளும் ஆசையிலிருந்து உண்டாகிற பொய்யான சிந்தனைகள் அந்த பேயின் கூட்டம் போலும் இருக்கும்படியாக, அந்த உருவமும் பிரதிமையுமிருக்கிறது; பேய் என்பதினாலும் அதன் கூட்டமென்பதினாலும் வேதத்தில் வேறொன்றும் அர்த்தம் கொள்ளப்படுகிறதில்லை. விஷயங்கள் ஒரே மாதிரியிருக்கின்றன. ஏனென்றால், நரகத்தில், தன்னையே நேசிப்பதிலிருந்து அரசாள வேண்டுமென்கிற ஆசையானது ஆட்சிசெய்யும் அன்பாயிருக்கிறது; இதை அங்கே பேய் என்று சொல்லுகிறார்கள்; பொய்யைச்சேர்ந்த ஆசைகளும், அந்த அன்பில் உண்டாகும் சிந்தனைகளும் அதன் கூட்டங்களாயிருக்கின்றன. ஒரு வகுப்பின் குறிப்பான பேதங்களுக்கு சமமான வித்தியாசங்களோடு, நரகத்தின் ஒவ்வொரு

கூட்டத்திலும் அதேமாதிரி யிருக்கிறது. தீமைகளிலும் இவ்விதமாக பொய்களிலும், இருக்கிற ஸ்தூல மனது, அதைப் போன்ற உருவத்தில் இருக்கிறது. அதனால் இவ்வித நடத்தையுள்ள ஸ்தூல மனிதன் இறந்த பிறகு, தன்னைப்போன்ற நரகத்து கூட்டத்திற்கு வந்து சேர்ந்து, பிறகு எல்லாவிஷயத்திலும் அதனுடன் ஒன்றுபட்டு செயல்படுகிறான்; ஏனென்றால் அவன் தன் சொந்த உருவத்திற்கு, அதாவது அவன் சொந்த மனதின் நிலைமைகளுக்கு வருகிறான். பேய் என்று சொல்லப்பட்ட முன்கூறிய ஆசைக்குத் தாழ்ந்த சாத்தான் என்றுசொல்லப்பட்ட இன்னொரு ஆசைகூட இருக்கிறது; இது பிறரிட சொத்தை எல்லாவித தீமையான வழியிலும் அடையவேண்டுமென்கிற ஆசை. சூதான துரோகங்களும் சூழ்ச்சிகளும் அதன் கூட்டமாயிருக்கின்றன. இந்த நரகத்திலிருக்கப்பட்டவர்கள் சாதாரணமாய் சாத்தான்கள் என்று சொல்லப்படுகிறார்கள், முன்கூறிய நரகத்திலிருக்கப்பட்டவர்கள் சாதாரணமாய் பேய்கள் என்று சொல்லப்படுகிறார்கள். அங்கே கள்ளத்தனமாய் நடக்காதவர்கள் தங்களிட பெயரை மறுக்கிறதில்லை. இதனால் தான் நரகங்களை ஒருமிக்க எடுத்துக்கொண்டு பேசுங்கால், அவைகளைப் பேய் என்றும் சாத்தான் என்றும் சொல்லப்படுகின்றது. எல்லா சுவர்க்கங்களும், சுவர்க்கத்துக்கு அடுத்ததென்றும் ஆத்மார்த்தமானதென்றும், இரண்டு இராச்சியங்களாக இரண்டு ஆசைகளுக்குத் தக்கபடி வரையறுக்கப்பட்டிருக்கின்றன வென்பதும், பேய் சம்பந்தமான நரகம் எதிரானதாக சுவர்க்க இராச்சியத்துக்கு ஒத்துப் போகிறதென்பதும், சாத்தானைச் சேர்ந்த நரகம் எதிரானதாக ஆத்மார்த்த இராச்சியத்துக்கு ஒத்துப்போகிறதென்பதும், இந்த இரண்டு ஆசைகளுக்கும் தக்கபடி அந்த

இரண்டு நரகங்களும் சாதாரணமாய் ஏன் வேறுவேருனதா யிருக்கிறது என்பதற்குக் காரணமாயிருக்கிறது. சுவர்க்கங்கள் சுவர்க்கத்துக்கு அடுத்ததும், ஆத்மார்த்தமானதுமான இரண்டு இராச்சியங்களாக விசேஷித்தறியப்படுகின்றன என்பது **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலில் (26 முதல் 28 பிரிவுகள் வரையில்) காணலாம். ஸ்தூல மனது மேற்கூறிய படி உருவத்தில் ஏன் நரகமாயிருக்கிறது என்பதற்கு காரணம், எல்லாருக்கும உருவமும் மிகப் பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும் ஒரே தன்மையானதா யிருக்கிறதென்பதாயிருக்கிறது. அதனுல்தான், **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலில் (51வது பிரிவுமுதல் 58வது பிரிவு வரையில்) காண்பிக்கப்பட்டபடி, ஒவ்வொரு வானேனும் குறைந்த உருவத்தில் சுவர்க்கமாயிருக்கிருன். இதிலிருந்து, பேயாக அல்லது சாத்தானுக இருக்கிற ஒவ்வொரு மனிதனும் அல்லது ஆவியும் குறைந்த உருவத்தில் நரகமாயிருக்கிரு னென்பதுகூட ஏற்படுகிறது.

274. II. **நரகத்தின் உருவம் அல்லது பிரதிமையாயிருக்கிற ஸ்தூல மனது, மூன்றுபடிகள் மூலமாய் இறங்குகின்றது.**

எல்லா பொருள்களிலும், மிகப் பெரியதிலும், சின்னஞ் சிறியதிலும், உயரத்தைச்சேர்ந்த படிகளென்றும் அல்லது அகலத்தைச்சேர்ந்த படிகளென்றும் இருவகைப் படிகள் இருக்கின்றன வென்பதை மேலே (222 முதல் 229 வரையிலுள்ள பிரிவுகளில்) பார்க்கலாம். அதன் மிக பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும், ஸ்தூல மனதுக்கும் விஷயம் அம்மாதிரி யிருக்கிறது. உயரத்தைச்சேர்ந்த நிலேகள் இங்கே கருதப்படுகின்றன. அறிவுடைமை சுதந்திரமாகிய அதன் இரண்டு மனே சக்திகளிலிருந்தும் ஸ்தூல மனது மூன்றுபடிகள் மூலமாய்

ஏறவும், மூன்றுபடிகள் மூலமாய் இறங்கவும் கூடும். அது நன்மைகள் மூலமாயும் உண்மைகள் மூலமாயும் ஏறுகிறது. தீமைகள் மூலமாயும் பொய்கள் மூலமாயும் இறங்குகிறது; அது ஏறும்போது, நரகத்துக்கு சாயும் அதிகம் தாழ்ந்த படிகள் மூடப்படுகின்றன, அது இறங்கும்போது சுவர்க்கத்துக்கு சாயும் அதிகம் உயர்ந்த படிகள் மூடப்படுகின்றன. அவைகள் எதிர்தாக்கும் நிலைமையிலிருப்பதால், இது நேரிடுகிறது. அதிகம் உயர்ந்ததும் அதிகம் தாழ்ந்ததுமான இந்த மூன்று படிகளும் மனிதனில் இளம்பிராயம் ஆரம்பத்தில் திறக்கப்படுகிறதுமில்லை, மூடப்படுகிறதுமில்லை; ஏனென்றால், அவனுக்கு அப்பொழுது நன்மையும், உண்மையும், மேலும் தீமையும் பொய்யும் தெரியாது. ஆனால், அவன் ஏதாவது ஒன்றை ஏற்றுக்கொள்வதற்கு தக்கபடி, எதோ ஒரு பாகத்தில் படிகள் திறக்கப்படுகிறது அல்லது மூடப்படுகிறது. நரகம் பக்கம் அவைகள் திறக்கப்பட்டபோது, சித்தத்தைச் சேர்ந்த அரசாளும் ஆசை, மிகவும் உயர்ந்த அல்லது மிகவும் உள்ளுக்குள்ளான இடத்தை அடைகிறது; அந்த அன்பிலிருந்து வரும், புத்திக்குச் சேர்ந்த பொய்யை குறித்த சிந்தனை இரண்டாவது அல்லது நடு இடத்தை அடைகிறது; சிந்தனையின் மூலமாய் அன்பினிடவும், புத்தியின் மூலமாய சித்தத்தினிடவும், தீர்மானம் மிகவும் தாழ்ந்த இடத்தை அடைகிறது. நிஜமாகவே, அவைகள் முடிவு, காரணம், காரியமாக அல்லது முதல், நடு அல்லது இறுதி முடிவாக ஒழுங்காக நிற்பதால், மேலே உயரத்தைச் சேர்ந்த நிலைகளைப்பற்றி கூறியதைப்போல இவ்விடத்திலும் விஷயம் அம்மாதிரியே யிருக்கிறது. இந்த படிகள் சரீரம் பக்கம் இறங்குகின்றன; ஆகையினால், அவைகள் இறங்கும்போது தடித்ததாய், ஜடமானதும் சரீரமுள்ளதாயு மாகின்

றன. வேதத்திலிருக்கும் இரண்டாவது படியிலுள்ள உண்மைகள் அதை உருவாக்க உபயோகப்படுத்தப்படும் பட்சத்தில், இந்த உண்மைகள் தீமையைச் செய்ய விரும்புகிற முதல் படியிலிருந்து பொய்ப்பிக்கப்பட்டு, வேலைக்காரர்களாகவும் அடிமைகளாகவு மாகின்றன. தீமையைச் செய்ய விரும்புகிறவர்கள், அதாவது தங்கள் ஸ்தூல மனது உருவத்தில் நரகமாயிருக்கிறவர்கள் விஷயத்தில், வேதத்திலிருக்கும் திருச்சபையின் உண்மைகள் என்னவாகின்றன என்பது இதிலிருந்து அறிந்து கொள்ளலாம்; நரகமாயிருக்கிற ஸ்தூல மனதில் அரசாளும் தீமையைக்கோரும் அன்பு, மேற்கூறியபடி பேயாகயிருக்கிறதின் பொருட்டு, அவைகள் பேய்க்கு கருவிகளாக உபயோகப்படுகிறபடியினால், அசுத்தப்படுத்தபடுகின்றன.

**275. III. நரகத்தினிட உருவமாகவும் பிரதிமையாகவுமிருக்கிற ஸ்தூல மனதின் மூன்றுபடிகள், சுவர்க்கத்தின் உருவமாகவும் பிரதிமையாகவுமிருக்கிற ஆத்மார்த்த மனதின் மூன்று படிகளுக்கு எதிரிடையாயிருக்கின்றன.**

ஸ்தூல மானதென்றும் சூக்குமமானதென்றும், அதிசூக்குமமானதென்றும் சொல்லப்பட்ட மனதின் மூன்று நிலைகள் இருக்கின்றனவென்றும், இந்த நிலைகளால் அமைந்திருந்த மானிட மனது சுவர்க்கத்தை எதிர் பார்க்கிறதென்றும், அவ்விடம் திரும்புகிற தென்றும், மேலே காண்பிக்கப்பட்டது. ஆகையினால் ஸ்தூல மனது கீழே பார்த்து நரகத்துக்குத் திரும்பும்போது, அம்மாதிரியே மூன்றுபடிகளால் உண்டாக்கப்பட்டிருக்கிறதென்றும், அதன் ஒவ்வொருபடியும், சுவர்க்கமாயிருக்கிற மனதின் ஒருபடிக்கு எதிரிடையா யிருக்கிறதென்றும் அறிந்து கொள்ளலாம். மூன்று சுவர்க்கங்கள் இருக்கின்றனவென்பதும், இவைகள் உயரத்தைச்சேர்ந்த மூன்றுபடி

களுக்குத் தக்கபடி வேறுவேருனதாயிருக்கின்றன வென்பதும், மூன்று நரகங்கள் இருக்கின்றன வென்பதும், இவைகளும் கூட உயரத்தை அல்லது ஆழத்தைச்சேர்ந்த மூன்றுபடிகளுக்குத் தக்கபடி வேருனதாயிருக்கின்றன வென்பதும், நரகங்கள் ஒவ்வொரு விஷயத்திலும் சுவர்க்கங்களுக்கு எதிரிடையாயிருக்கின்றன வென்பதும், மேலும் மிகவும் தாழ்ந்த நரகமானது மிகவும் உயர்ந்த சுவர்க்கத்துக்கு எதிரிடையா யிருக்கின் றதென்பதும், மத்திய நரகமானது மத்திய சுவர்க்கத்துக்கு எதிரிடையாயிருக்கின்றதென்பதும், மிகவும் உயர்ந்த நரகமானது இறுதியான சுவர்க்கத்துக்கு எதிரிடையாயிருக்கின்றதென்பதுமாகிய சூக்கும உலகத்தில் பார்க்கப்பட்ட பொருள்களிலிருந்து அது அப்படியிருக்கிறதென்று எனக்கு விசதமானது. நரகத்தின் உருவமாயிருக்கிற ஸ்தூல மனதுக்கு விஷயம் அம்மாதிரியே யிருக்கிறது; ஏனென்ருல், சூக்கும ரூபங்கள் மிகப் பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும் ஒரே தன்மையா யிருக்கின்றன. அவைகளின் அன்புகள் இம்மாதிரியாக எதிரிடையாயிருக்கின்றபடியினுல் சுவர்க்கமும் நரகமும்அவ்வித எதிரிடையாயிருக்கின்றன; ஆண்டவரிடத்து அன்பு பாராட்டலும் அதிலிருந்து அயலானை நேசித்தலும், சுவர்க்கங்களின் உள்ளுக்குள்ளான நிலையாகின்றன. ஆனுல் தன்னையும் உலகத்தையும் நேசித்தல், நரகங்களில் உள்ளுக்குள்ளான நிலையாகின்றன. தங்களிட சொந்த அன்புகளிலிருந்து ஞானமும் புத்தியும் சுவர்க்கங்களில் மத்திய படியை உண்டாக்குகின்றன, ஆனுல் தங்களிட ஆசைகளினுலே ஞானத்தைப்போன்றும் புத்தியைப்போன்றும் தோன்றுகிற மூடத்தனமும் பைத்தியமும் நரகங்களில் மத்திய நிலையாகின்றன. ஞாபகத்தில் அறிவாக வைக்கப்பட்டு அல்லது சரீரத்தில் செயல்களாக தீர்மானிக்

கப்படும் அவைகளின் இரண்டு நிலைகளிலிருந்தும் உண்டாகும் தீர்மானங்கள், சுவர்க்கங்களில் கடைசியான அல்லது இறுதியான நிலையாகின்றன. அறிவாக அல்லது செயல்களாக ஆகிற அவைகளின் இரண்டு நிலைகளிலிருந்தும் உண்டாகும் தீர்மானங்கள் நரகங்களில் மிகவும் புறம்பான நிலையாகின்றன.

சுவர்க்கத்தைச் சேர்ந்த நன்மைகளும் உண்மைகளும், தீமைகளாகவும் பொய்களாகவும், இம்மாதிரியாக நரகங்களில் அவைகளின் எதிரிடைகளாக எப்படி திருப்பப்படுகின்றனவென்பது இந்த அனுபவத்தால் விசதமாகிறது. சுவர்க்கத்திலிருந்து நரகத்துக்கு ஒரு தெய்வீக உண்மையானது சென்றதாகவும், அது இறங்கும்போது படிப்படியாய் பொய்யாகவும், மிகவும் தாழ்ந்த நரகத்தில் உண்மையின் எதிரிடையானதாக திருத்தமாய் மாற்றப்பட்டதென்றும், நான் கேள்விப்பட்டிருக்கிறேன். நிலைகளுக்குத் தக்கபடி நரகங்கள், எல்லா நன்மைகள் விஷயத்திலும் உண்மைகள் விஷயத்திலும், சுவர்க்கங்களுக்கு எதிரிடையில் இருக்கின்றனவென்றும், இவைகள் தலைகீழா யிருக்கப்பட்ட உருவங்களில் பாய்வதினால் தீமைகளாகவும் பொய்களாகவும் திருப்பப்படுகின்றனவென்றும், இதிலிருந்து தெளிவானது. உள்ளே பாய்வதெல்லாம், ஏற்றுக்கொள்ளும் உருவங்களுக்கும், அவைகளின் நிலைமைகளுக்கும் தக்கபடி அறிந்துகொள்ளப்பட்டு, உணரப்படுகிறதென்று நன்றாய் தெரிந்திருக்கிறது. எதிரிடையானதாக இப்படி மாறுதல், இந்த அனுபவத்திலிருந்து கூட எனக்கு விசதமானது. சுவர்க்கங்களுக்கு ஒப்பீடாய், நரகங்கள் இருக்கப்பட்ட இடத்தை நான் பார்க்க அருள் செய்யப்பட்டது. அங்கே யிருந்தவர்கள் தங்கள் தலைகள் கீழாகவும், பாதங்கள்

மேலாகவும் புறட்டப்பட்டிருப்பதாகத் தோன்றினார்கள் ; ஆனால், அப்படியிருந்தும் பூகோளத்துக்கு எதிர்பக்கத்திலிருப்பவர்கள் விஷயத்தில்போல், அவர்களுக்கு தாங்கள் நேர்மையாயிருப்பதாகத் தோன்றுகிறதென்று சொல்லப்பட்டது. இந்த சோதனை செய்த ரூபகாரங்களிலிருந்து, உருவத்திலும் பிரதிமையிலும் நரகமாயிருக்கிற ஸ்தூல மனதின் மூன்று அந்தஸ்துகள், உருவத்திலும் பிரதிமையிலும் சுவர்க்கமாயிருக்கிற ஆத்மார்த்த மனதின் மூன்று அந்தஸ்துகளுக்கும் எதிரிடையாயிருக்கின்றனவென்று அறிந்து கொள்ளலாம்.

**276. IV. நரகமாயிருக்கிற ஸ்தூல மனது, சுவர்க்கமாயிருக்கிற ஆத்மார்த்த மனதுக்கு முழுதும் எதிரிடையானதாயிருக்கிறது.**

அன்புகள் எதிரிடையாயிருக்கும்போது, உணர்ச்சிக்கு சேர்ந்தவைகளெல்லாம், எதிரிடை யானவைகளாகின்றன. ஏனென்றால் மனிதனிட உயிரேயாகிய அன்பிலிருந்து, மற்ற எல்லா பொருள்களும், அவைகளின் உற்பத்தி ஸ்தானத்திலிருந்து சிற்றாறுகள் போல் பாய்கின்றன ; அவ்வித உற்பத்தி ஸ்தானத்திலிருந்து வராத பொருள்கள்,ஸ்தூலமனதில்,அதிலிருந்து வரப்பட்டவைகளிலிருந்து பிரிந்து போகின்றன. அதன் அரசாளும் அன்பிலிருந்து வரப்பட்டவைகள், மத்தியிலிருக்கின்றன, மற்றவைகள் ஓரங்களிலிருக்கின்றன. இவைகள் வேதத்திலிருக்கும் திருச்சபையின் உண்மைகளாயிருந்தால், மத்தியிலிருந்து தூரமாய் ஓரங்களுக்கு தள்ளப்பட்டு, கடைசியில் நிர்மூலமாக்கப்படுகின்றன; அப்பொழுது, மனிதன், அதாவது ஸ்தூல மனது, தீமையை நன்மையாக அறிந்து கொண்டு பொய்யை உண்மையாக காண்கிறது ; தலைகீழாயும் விஷயம் அப்படியே யிருக்கிறது. இந்த காரணத்தினால் துஷ்டத்தனம்

ஞானமாகவும், பைத்தியம் விவேகமாகவும், தந்திரம் புத்தியாகவும், தீமையான வித்தைகள் மேதாவிகளின் கற்பனைகளென்றும் அவன் நம்புகிறான்; அப்பொழுது கூட, திருச்சபையைச் சேர்ந்ததும், அர்ச்சனையைச் சேர்ந்ததுமான தெய்வீகமானதும், சுவர்க்கத்துக்கு அடுத்த பொருள்களை ஒன்றுக்கும் உதவாததென்று மதித்து, சரீரத்தை அடுத்ததும் உலக சம்பந்தமான பொருள்களை மிகவும் விலை உயர்ந்ததாக நினைக்கிறான். இம்மாதிரியாக, தன்னிட உயிரின் நிலைமையை அவன் தலைகீழாய் திருப்புகிறான்; தலைக்குச் சேர்ந்ததை அவன் உள்ளங்காலாக செய்து, அதின் பேரில் மிதித்து போடுகிறான்; உள்ளங்காலுக்கு சேர்ந்ததை, தலைக்கு உயர்த்துகிறான். ஆகையினால், மனிதன் உயிரோடிருப்பதை விட்டு, இறந்தவனாகிறான். எவனிட மனது சுவர்க்கமாயிருக்கிறதோ, அவன் உயிரோடிருக்கிறானென்றும், எவனிடமனது நரகமாயிருக்கிறதோ, அவன் இறந்தவனென்றும் சொல்லப்படுகிறான்.

**ஸ்தூல மனதின் மூன்று நிலைகளுக்கு சேர்ந்த எல்லா பொருள்களும், சரீரத்தால் செய்யப்பட்ட வேலைகளில் சேர்த்து கொள்ளப்பட்டிருக்கின்றன.**

277. இந்த பாகத்தில் சொல்லப்பட்ட அந்தஸ்துகளைக் குறித்த அறிவு, மனதின் அதாவது ஒரு மனிதனிட சித்தத்தினிடவும் புத்தியினிடவும் எல்லா பொருள்களும், அவனிட இயக்கங்களிலும் அல்லது வேலைகளிலும், பார்க்கக் கூடியதும் பார்க்கச்கூடாததுமான பொருள்கள், ஒரு விதையிலும், கனியிலும் அல்லது முட்டையிலும் அமைந்திருப்பது போல, அமைந்திருக்கிறதென்கிற இந்த இரகசியத்தை வெளிப்படுத்துகிறது. இயக்கங்கள் அல்லது வேலைகள் இவைகளைப் போல புறத்தோற்றத்தில் தோன்றுகின்றன. அப்படியிருந்தும்

உள்ளே கணக்கற்ற பொருள்களிருக்கின்றன; ஒற்றுமை யாய் செயல்படும், முழுசரீரத்தின் இயக்கும் நார்களின் வல்ல மைகளும், இந்த வல்லமைகளை தூண்டிவிட்டு, நிர்ணயம் செய்யும் மனதைச் சேர்ந்த எல்லா பொருள்களு மிருக்கின் றன; இவைகள் மேல் காண்பித்தபடி மூன்று அந்தஸ்துகளா யிருக்கின்றன. மனதைச் சேர்ந்த எல்லா பொருள்களு மிருக் கிறபடியினால், சித்தத்தைச் சேர்ந்த எல்லா பொருள்களும் அதாவது மனிதனிட ஆசையின் எல்லா பிரியங்களு மிருக் கின்றன; இவைகள் முதல்படியாகின்றன. புத்தியைச் சேர்ந்த எல்லா பொருள்களும் அதாவது உணர்ச்சியைச் சேர்ந்த எல்லா சிந்தனைகளும் இருக்கின்றன; இவைகள் இரண்டாவது படியாகின்றன. ஞாபகத்தைச் சேர்ந்த எல்லா பொருள்களும், அதாவது ஞாபகத்திலிருந்து எடுத்த பேச் சுக்குச் சமீபமாயிருக்கும் எல்லா அபிப்பிராயங்களும் இருக் கின்றன; இவைகள் மூன்றாவது படியாகின்றன. செய்கைக்குக் கொண்டுவரப்பட்ட இந்த பொருள்களிலிருந்து வேலைகள் நிலைக்கின்றன; புறம்பான உருவத்தில் பார்க்கும்கால், அந்த வேலைகளில், முந்தின பொருள்கள் நிஜமாயிருந்தபோதிலும், அவைகள் தோன்றுகிறதில்லை. இறுதியானது, முந்தின பொ ருள்களைத் தழுவுகிறதும் அடக்கி வைத்திருக்கிறதும், அவை களுக்கு அஸ்திவாரமாயிருக்கிறது என்பதை(209-வது பிரிவு முதல் 216 பிரிவு வரையில்) மேலே பார்க்கலாம்; உயரத்தைச் சேர்ந்த படிகள் அவைகளின் இறுதியானவைகளில் நிறைவில் இருக்கின்றன வென்பதை (217-வது பிரிவுமுதல் 221 பிரிவு வரையில்) மேலே பார்க்கலாம்.

278. விதைகளும், பழங்களும், முட்டைகளும், புறத் தோற்றத்திலும், அல்லது கொட்டைகளும் வாதாங் கொட்

டைகளும் தங்கள் ஓடுகளிலும் தோன்றுவதுபோல், கண்ணுல் பார்க்கப்படும் சரீரத்தின் செயல்கள், ஏன் சாமான்யமாகவும் ஒரே தன்மையானதாகவும் தோன்றி, அப்படியிருந்தும் அவைகள் உண்டாகிற எல்லா முந்திய பொருள்களையும், தங்களுக்குள்ளே அடக்கிவைத்திருக்கின்றன என்பதற்குக்காரணமானது, ஒவ்வொரு இறுதியான பொருளும் சுற்றிலும் மூடப்பட்டு, இவ்விதமாக, முந்திய பொருள்களிலிருந்து பிரிக்கப்படுகின்றன என்பதாயிருக்கிறது; ஏனென்முல், ஒவ்வொரு படியும் ஒரு திரையினுல் சுற்றிக் கட்டப்பட்டு, அதனுல் மற்றபடியிலிருந்து வகையறுக்கப்படுகிறது; ஆகையினுல் முதல் படிக்கு சேர்ந்த பொருள்கள் இரண்டாவது படியிலிருந்து தெரிந்து கொள்ளப்படுகிறதில்லை. அதுவுமல்லாமல் இரண்டாவது படியைச் சேர்ந்தவைகள் மூன்முவது படியிலிருந்து தெரிந்துக் கொள்ளப்படுகிறதில்லை. உதாரணமாக, மனதின் முதல் படியாயிருக்கிற சித்தத்தின் அன்பு, இரண்டாவது பாடியாயிருக்கிற புத்தியின் ஞானத்தில், ஒன்றை நினைக்குங்கால் உண்டாகும் ஓர்வித இன்பத்தினுல் தவிர, தெரிந்துகொள்ளப்படுகிறதில்லை. சித்தத்தின் அன்பாயிருக்கிற முதல் படியானது, மூன்முவது படியாயிருக்கிற ஞாபகத்தைச் சேர்ந்த பிரதான வஸ்துக்களில், தெரிந்துகொள்வதிலும் பேசுவதிலும் உண்டாகும் ஓர்வித சந்தோஷத்திலிருந்து தவிர, தெரிந்துகொள்ளப்படுகிறதில்லை. இந்த ஆலோசனைகளிலெல்லாமிருந்து, சரீரத்தின் செய்கையாயிருக்கிற ஒரு வேலையானது, புறத்தோற்றத்தில் அது ஒரு பொருளைப்போல் சாதாரணமாகத்தோன்றினுலும், இந்தப் பொருள்களை எல்லாம் உட்படுத்துகிறதென்பது ஏற்படுகிறது.

279. இது பின்வருவதால் ஸ்திரப்படுத்தப்படுகிறது. ஒரு மனிதனுடன் இருக்கும் தேவர்கள், செயலில் மனதிலி ருந்து வருகிற பொருள்களை ஒவ்வொன்ருகவும், ஆத்மார்த்த தேவர்கள் புத்தியிலிருந்து வரும் அங்கிருக்கும் பொருள்களை யும், சுவர்க்கத்துக்கு அடுத்த தேவர்கள் சித்தத்திலிருந்துவரும் அங்கிருக்கும் பொருள்களையும் பார்க்கிருர்கள். இது விபரீத வாக்கியமாய்த் தோன்றும், ஆயினும் அது உண்மையானது. ஆனல், ஒரு உத்தேசிக்கிற அல்லது நிகழ்கிற விஷயத்தைச் சேர்ந்த மனதின் பொருள்கள் மத்தியிலிருக்கிறதென்றும், மற்றவைகள் உடன்பாட்டை அனுசரித்து சுற்றிலுமிருக் கின்றனவென்றும், அறிந்து கொள்ளப்படவேண்டும்: ஒரு மனிதனிட நடத்தை ஒவ்வொரு தனித்த வேலையிலிருந்து அறியப்படுகிறதென்றும், ஆனல் அவன் அன்பின் சாயலில், ஆசைகளாகவும், அதனல் சிந்தனைகளாகவும், அதன் தீர் மானங்களுக்குத் தக்கபடி வேறுவேரு யிருக்கின்றனவென்றும் தேவர்கள் சொல்லுகிருர்கள். சுருங்கச் சொல்லில், தேவர் களுக்கு ஆத்மார்த்த மனிதனிட ஒவ்வொரு செய்கையும், வேலையும், ருசிபார்த்து சாப்பிட்டபோது, அதன் வாசனை யினுலும், உபயோகத்தினுலும், இன்பத்தினுலும் சந்தோஷ முள்ளதாயிருக்கிற ருசியான பழத்தைப்போல் உபயோக மாகவும் அழகாகவும் இருக்கிறது. தேவர்கள், மனிதர்களிட செய்கையையும் வேலைகளையும் குறித்து அவ்வித உணர்ச்சி யுள்ளவர்களா யிருக்கிருர்களென்பதை, மேலே (220 வதுபிரி வில்) கூட பார்க்கலாம்.

280. ஒரு மனிதனிட பேச்சுக்கும் விஷயம் அம்மா திரியே யிருக்கிறது. தேவர்களுக்கு, ஒரு மனிதனிட பிரீதி, அவன் பேச்சின் சத்தத்திலிருந்தும், அவன்

ஞானம், சத்தத்தின் உச்சாரணத்திலிருந்தும், அவன் அறிவு வார்த்தைகளின் தாற்பரியத்திலிருந்தும், தெரியும். மேலும் ஒரு வார்த்தையானது தன்னில் சத்தத்தையும் உச்சாரணத்தையும், தாற்பரியத்தையும் உடைத்தாயிருப்பதின் நிமித்தம், அது முடிவு செய்யப்பட்ட ஒரு பொருளாயிருப்பதால், இந்த மூன்றும் ஒவ்வொருவார்த்தையிலும் இருக்கின்றனவென்று அவர்கள் சொல்லுகிறார்கள். ஒரு மனிதன் சேர்க்கையாக பேசும் ஒவ்வொரு வார்த்தையிலிருந்து, அவன் குணத்தின் சாமான்ய நிலைமையையும், அதனுடன் சில பிரத்தியேகமான நிலைமைகளையும் தாங்கள் உணருகிறதாக, மூன்றுவது சுவர்க்கத்து தேவர்களால் எனக்கு சொல்லப்பட்டது. வேதத்தில் ஒவ்வொரு தனித்த வார்த்தையிலும், பரமஞான சத்தியைச் சேர்ந்த ஆத்மார்த்தமான ஒன்றும், பரம இச்சாசத்தியைச் சேர்ந்த சுவர்க்கத்துக்கு அடுத்ததொன்றும் இருக்கின்றனவென்பதும், வேதமானது பரிசுத்தமான மனநிலையில் மனிதனால் படிக்கப்பட்டபோது, இவைகள் தேவர்களால் உணரப்படுகின்றன வென்பதும், **பரிசுத்த வேதத்தைக் குறித்த புதிய எருசலேம் நகரத்தின் கொள்கை என்னும்** நூலில்அநேக விஷயங்களால் தெரியப்படுத்தப்பட்டிருக்கிறது.

281. ஸ்தூல மனது மூன்றுபடிகள் மூலமாய் நரகத்தில் இறங்குகிற ஒரு மனிதனிட வேலைகளில், அவனிட தீமைகளும், தீமையின் பொய்களும் எல்லாம் இருக்கின்றன வென்பதும், தன்னிட ஸ்தூல மனது சுவர்க்கத்துக்கு ஏறுகிற ஒருமனிதனிட வேலைகளில், அவனிட எல்லா நன்மைகளும் உண்மைகளு மிருக்கின்றன வென்பதும், முன்சொல்லியதும் பின் சொல்லியதுமாகிய இரண்டும் மனிதனிட பேச்சிலிருந்தும் செய்கையிலிருந்து மாத்திரம் தேவர்களால் அறிந்து

கொள்ளப்படுகின்றனவென்பதும் முடிவாயிருக்கிறது. அத ஞல் தான் வேதத்தில் ஒரு மனிதன் தன்னிட செயல்களை அனுசரித்து தீர்மானிக்கப்படுவானென்றும், அவன் பேசும் வார்த்தைகளைக்குறித்து, அவன் கணக்கு ஒப்புவிக்க வேண்டு மென்றும் சொல்லப் படுகிறது.

---

# பாகம் IV.

---

## சிருட்டி.

**நித்தியமான ஆண்டவர் அதாவது ஏகோவா என்பவர் பிரபஞ்சத்தையும் அங்குள்ள எல்லாபொருள்களேயும், சூனியத்திலிருந்தல்லாமல், தன்னிட மிருந்தே சிருட்டித்தார்.**

282. பிரபஞ்ச சிருஷ்டி கர்த்தாவாயிருக்கிற ஒரு கடவுள் இருக்கிருரென்று உலகம் முழுமையும் அறியப்பட்டு, உள்ளுணர்ச்சியின் நிமித்தம் ஒவ்வொரு ஞானமுள்ளவனுலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. அவர் மட்டும் இருப்பதால், பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தாவாகிய கடவுள், சத்தாயிருப்பதின் நிமித்தம் **ஏகோவா** என்று சொல்லப்படுகிருரென்று வேதத்திலிருந்து அறியப்படுகிறது. நித்தியமான ஆண்டவர் அந்த ஏகோவாவென்பது ஆண்டவரைக் குறித்த புதிய எருசலேம் நகரத்தின் கோள்கை எனும் நூலில் வேதத்திலிருந்து எடுத்துக் காட்டப்பட்ட அநேக விஷயங்களால் நிச்சயப்படுத்தப்பட்டிருக்கிறது. ஏகோவா என்பவர் மனிதர்களே நரகத்திலிருந்து கடைதேற்ற ஒரு மானிட சரீரத்தை எடுத்துகொண்டபடியிஞல், அவரை நித்தியமான ஆண்டவர் என்று சொல்லப்படுகிறது. அவர் தன்னிட சீடர்களே நோக்கித்தன்னே ஆண்டவரென்று சொல்லும்படி கட்டளே கூட யிட்டார்; ஆகையிஞல், பின் வருவதில் விசதமாகிறபடி புதிய ஏற்பாட்டில் ஏகோவாவை ஆண்டவரென்று சொல்லப்படுகிறது ; "உன் தேவனுகிய ஏகோவாவை முழு இருதயத்தோடும் முழு ஆத்மாவோடும் அன்பு கூறுவாயாக (உபாகமம். VI. 5.); புதிய ஏற்பாட்டில், உன்னுடைய

தேவனாகிய ஆண்டவரை உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்மாவோடும் அன்பு கூறுவாயாக (மத்தே XXII. 35). பழைய ஏற்பாட்டிலிருந்து எடுக்கப்பட்ட, கிறிஸ்துவின் சரித்திரமும் மதமும் எழுதினவர்களின் புஸ்தகங்களில் காணப்படும் இதர வாக்கியங்களுக்கும் விஷயம் அம்மாதிரியே.

283. சூனியத்திலிருந்து யாதொன்றும் உண்டாக்க முடியாதென்று தனக்குத் தெரிகிறபடியினால், தெளிவான அறிவோடு நினைக்கும் ஒவ்வொருவனும் பிரபஞ்சமானது சூனியத்திலிருந்து சிருஷ்டிக்கப்படவில்லை என்று அறிந்து கொள்ளுகிறான்; ஏனென்றால், சூனியம் சூனியமே, சூனியத்திலிருந்து எதையும் உண்டாக்குதலென்பது ஒவ்வாமையாயிருக்கிறது, அப்படி எதிரிடையாயிருப்பது, பரம ஞான சத்தியிலிருந்து தோன்றும் உண்மையின் வெளிச்சத்துக்கு விரோதமாயிருக்கிறது; பரமஞான சத்தியிலிருந்து வராதது எதுவும் தெய்வசர்வ வல்லமையிலிருந்துகூட வருகிறதில்லை. தெளிவான புத்தியோடு நினைக்கப்பட்ட ஒவ்வொருவனும், சுயமாய் பொருளாயிருக்கிற ஒரு பொருளிலிருந்து எல்லா பொருள்களும் சிருஷ்டிக்கப்பட்டதென்று கூட அறிந்து கொள்ளுகிறான்; ஏனென்றால், இது, இருக்கப்பட்ட பொருள்கள் எல்லாம் அதிலிருந்து வரக்கூடிய சரியான சத்தாயிருக்கிறது: கடவுள் மாத்திரம் சுயமாய், பொருளாய், அதினால், சரியான சத்தாயிருப்பதால், பொருள்கள் இருக்கும் தன்மை வேறு மூலத்தில் இல்லையென்பது விசதமாகிறது. விவேகமானது அதை பார்க்கப்படும்படி செய்கிறபடியினால், அநேகர் இதை அறிந்திருக்கிறார்கள். ஆனால் கடவுளிடமிருந்து வருகிறபடியினால் பிரபஞ்சம் கடவுள் என்றும் அல்லது பிரகுருதி தானே சுயமாய் உண்டானதென்றும், இவ்விதமாக கடவுள் என்று சொல்லப்

பட்டது பிரகுருதியின் உள்ளுக்குள்ளான பொருளென்றும் நினைக்கும்படி ஒருவேளை நேரிடுமென்கிற பயத்தினால், அவர்கள் அதை ஸ்திரப்படுத்த துணியவில்லை. எல்லா பொருள்களும், கடவுளிடமிருந்தும், சத்தாக அவரிடமிருந்தும் உண்டானதே தவிர வேறு மூலமில்லையென்று அநேகர் அறிந்திருந்தும், பின்னிட்டு விடுதலை செய்யமுடியாமல் போகக்கூடிய ஓர் பெரும் சிக்கில் தங்களிட புத்தியை அகப்படுத்துவோம் என்கிற பயத்தினால், இந்த விஷயத்தைப்பற்றி தாங்கள் முதலில்கொண்ட கருத்துக்கு மேல் செல்ல ஏன் அவர்கள் துணியவில்லை என்பதற்கு இதுதான் காரணம். இவ்விதமாக கடவுளைப்பற்றியும், கடவுளால் செய்யப்படும் பிரபஞ்சத்தின் சிருஷ்டியைப்பற்றியும், பிரகுருதிக்கு சொந்தமான கால இட வரைகளுக்கு உட்படுத்தி அவர்கள் நினைத்தார்கள். பிரகுருதியிலிருந்து கடவுளையும் பிரபஞ்ச சிருஷ்டியைப்பற்றியும் அறிந்துகொள்ள யாராலும் முடியாது ; ஆனால் தன்னிட புத்தியை கொஞ்சம் உள்ளான வெளிச்சத்தில் வைத்திருக்கிற ஒவ்வொருவனும், கடவுள் கால இடவரைகளுக்கு உட்படாதவரானபடியினால், பிரகுருதியும் அதன் சிருஷ்டியும் கடவுளிடமிருந்து உண்டானதாக அறிந்துகொள்ள சக்தியுள்ளவனாயிருக்கிறான். தெய்வமானது இடவரைக்குட்பட்டதல்ல என்பதை மேலே (7 முதல் 10-வது பிரிவுவரையில்) காணலாம் ; தெய்வமானது இடவரைக்குட்படாமல், பிரபஞ்சத்தின் எல்லா இடங்களிலும் நிறைந்திருக்கிறாரென்பதை (69 முதல் 72-வது பிரிவு வரையிலும்), தெய்வமானது காலவரைக்குட்படாமல் எல்லா காலத்திலு மிருக்கிறாரென்பதை (72 முதல் 76-வது பிரிவு வரையிலும்,) மேலே காணலாம். கடவுளானவர் பிரபஞ்சத்தையும் அதிலிருக்கும் எல்லாவற்

றையும் தன்னிடமிருந்தே உண்டாக்கினாலும், பிரபஞ்சத்தில் எந்தப் பொருளிலும் கடவுளைச் சார்ந்தது யாதொன்று மில்லை என்றும், இன்னமும் இந்த விஷயத்தைச் சரியாய் தெரிந்து கொள்ளச் செய்யும் இதர விஷயங்களையும், பின்வருவதில் அறிந்து கொள்ளலாம்

284. இந்நூலின் முதற்பாகம், கடவுளானவர் இச்சா சத்தியாகவும் ஞானசத்தியாகவு மிருக்கிறாரென்றும், அவர் உயிர் என்றும், மேலும், தானேயாகவும், ஒரே சத்தாகவும், இருக்கிற பொருளாகவும், உருவமாகவும் அவர் இருக்கிறாரென்றும், பிரஸ்தாபித்தது. இரண்டாவது பாகம் சிவசூரியனையும், அதன் உலகத்தையும் ஸ்தூல சூரியனையும் அதன் உலகத்தையும் பிரஸ்தாபித்து, பிரபஞ்சமானது அதிலிருக்கும் எல்லா பொருள்களோடு இரண்டு சூரியன் மூலமாய் சிருட்டிக்கப்பட்டதென்று காண்பித்தது. மூன்றாவது பாகம், எல்லா சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களுமிருக்கும் அந்தஸ்துகளைப்பற்றிச் சொல்லியது. இந்த நாலாவது, பாகத்தில் கடவுளால் பிரபஞ்சம் சிருஷ்டிக்கப்பட்டதைப்பற்றி சொல்லப்படும். தேவர்கள் ஆண்டவர் முன்பாக, தாங்கள் உலகத்தைப் பார்த்தபோது, அந்தகாரத்தைத் தவிர வேறொன்றையும் பார்க்கவில்லை என்றும், மனிதர்களுக்குள் கடவுளைப்பற்றியும், சுவர்க்கத்தைப்பற்றியும், பிரகுருதியின் சிருஷ்டியைப்பற்றியும், தங்களிட தேவதா ஞானத்தை நிறுத்த யாதொரு அறிவும் கிடையாதென்றும், புலம்பினார்கள் என்பது இவைகளும் முன் கூறியவைகளும் ஏன் சொல்லப்பட்டது என்பதற்கு காரணமாயிருக்கிறது.

285. நித்தியமாயிருக்கும் ஆண்டவர் அதாவது ஏகோவா மனிதனாக இருந்தாலொழிய பிரபஞ்சத்தையும் அங்கிருக்கும் எல்லா பொருள்களையும் சிருஷ்டித்திருக்க மாட்டார்.

கடவுளைப்பற்றி ஒரு மனிதனைக ஸ்தூல சம்பந்தமான அபிப்பிராயத்தை யுடையவர்கள், மனிதனைக கடவுள் பிரபஞ் சத்தையும் அதிலுள்ள எல்லா பொருள்களையும் எப்படி சிருஷ் டிக்கக்கூடுமென்பதை கிரகிக்க முழுமையும் சக்தியற்றவர்களா யிருக்கிறார்கள்; ஏனென்றால், கடவுள் ஒரு மனிதனைக முழு பிரபஞ்சத்தில் இடத்துக்கு இடம் எப்படி திரிந்து சிருஷ்டிக் கக்கூடுமென்று அவர்கள் தாங்களே நினைத்துக்கொள்ளுகிறார் கள்? அல்லது, அவர் இருக்கப்பட்ட இடத்திலேயே யிருந்து கொண்டு, ஏதோ ஒருவார்த்தையைசொன்னமாத்திரையிலேயே, அதன் பயனைக எப்படி சிருட்டிகள் உண்டாகுமென்று கேட் கிறார்கள்? கடவுள் மனிதன் என்று சொன்னபோது, அவ்வித மனிதர்கள், கடவுளை இந்த உலகத்து மனிதனைப்போல் இருப் பதாக நினைக்கிறார்கள். மேலும் அவரைப்பற்றி, காலமும் இட முமாயிருக்கிற பிரகுருதியையும், அதன் குணங்களையும் அனு சரித்து நினைக்கிறார்கள். ஆனால், கடவுளாகிய மனிதரைப்பற்றி உலகத்திலுள்ள மனிதனைப்போலல்லாமலும், பிரகுருதிக்கும், அதன் கால இடவரைகளுக்கும் சம்பந்தப்படுத்தாமலும் நினைக் கிறவர்கள், கடவுள் மனிதனை யிருந்தாலொழிய பிரபஞ்சம் சிருஷ்டிக்கப்பட்டிருக்க முடியாதென்று தெளிவாய் அறிந்து கொள்ளுகிறார்கள். கடவுளை மனிதனைக தேவதாசம்பந்தமான அபிப்பிராயத்துக்குத் தக்கபடி நினைத்து, கூடியமட்டும் இட மென்கிற அபிப்பிராயத்தை நீக்கினால், சிந்தனையில் உண்மைக்கு சமீபத்தில் நீ வருவாய். படித்தவர்களில் சிலருக்குகூட, இடவ ரைக்குட்படாமல், ஆத்மார்த்தமானது எது என்று தெரிந்திருக் கிறபடியினால், அவர்களில் கூடசிலர் ஆவிகளும் தேவர்களும் இடவரைக் குட்படாதவரென்று உணருகிறார்கள். அது சிந்த னையைப்போலிருக்கிறது. இது ஒரு மனிதனில் இருந்தாலும்,

அதன் மூலமாய், மனிதன் வேறு இடங்களில், எவ்வளவு தூரத்திலிருந்தாலும், ஓர்விதமாய் இருக்க சக்தியுள்ளவனு யிருக்கிறுன். தங்கள் சரீரங்கள் சம்பந்தப்பட்டவரையில் கூட மனிதர்களாயிருக்கிற ஆவிகளிடவும் தேவர்களிடவும் நிலைமை இவ்விதமாயிருக்கிறது. இடங்களும் தூரங்களும் சூக்கும உலகத்தில் தோற்றங்களா யிருப்பதாலும், அவைகளின் நேசத்திலிருந்து, சிந்தனையோடு ஒன்றுக செயல்படுகிறபடியி னுலும், தங்கள் சிந்தனையிருக்கப்பட்ட இடத்தில் அவர்கள் தோன்றுகிருர்கள். சூக்கும உலகத்துக்கு அதிகம் மேலே சூரியனுக தோன்றுகிறவரும், இடத்தோற்ற மில்லாதவரு மான கடவுளை இடவரைக்குட்படுத்தி நினைக்கக்கூடாதென்று, இவைகளிலெல்லாமிருந்து விசதமாகிறது. பிற்பாடு அவர் பிரபஞ்சத்தை சூனியத்திலிருந்து அல்லாமல், தன்னிடமிருந் தே, சிருஷ்டித்தார் என்பது கிரகிக்கப்படக்கூடும். மேலும், இடவரையைக் கருதிகிறபடியினுல் அவரிட மானிட சரீரம், பெரியதென்றும், அல்லது சிறியதென்றும், எவ்வித சரீர பரி மாண முள்ளதென்றும் நினைக்கப்பட முடியாதென்பதும், அதனுல் முதற்பொருள்களிலும், இறுதியான பொருள்களி லும், மிகப்பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும், அவர் ஒரே மாதிரி யிருக்கிருரென்பதும், அவரிட மானிடத்தன்மை ஒவ் வொரு சிருஷ்டிக்கப்பட்ட பொருளிலும் மிகவும் உள் ளானதென்பதும், ஆனுல் இடவரைக்குட்படாததென்பதும் கூட கிரகிக்கப்படக்கூடும். தெய்வமானது மிகப் பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும் ஒரேமாதிரி இருக்கிறதென்பதை, 77 முதல் 82 வதுபிரிவுகள் வரையில் பார்க்கலாம். தெய்வமானது எல்லா இடங்களையும் இடவரைக்குட்படாமல் நிறைந்திருக் கிறதென்பதை, 69 முதல் 72வது பிரிவுகள் வரையில் பார்க்க

லாம். தெய்வமானது இடைவரைக்குட்படாதபடியினால், பிரகுருதியின் மிகவும் உள்ளானதைப்போல் அது தொடர்ச்சியாயில்லை.

286. கடவுளானவர் மனிதனை யிருந்தாலொழிய, பிரபஞ்சத்தையும் அங்கிருக்கும் எல்லா பொருள்களையும் சிருட்டிக்க முடியாதென்பது, கடவுளிடத்தில், அன்பும் ஞானமும், இரக்கமும் கருணையும் இருக்கிறதென்றும், தனித்த நன்மையும் உண்மையும் அவரிடமிருந்து வருகிறபடியினால், அவைகள் அவரிட மிருக்கிறதென்றும், தானே மறுக்கமுடியாதென்கிற இந்த காரணத்தினால், ஒரு புத்தியுள்ள மனிதனால் மிகவும் தெளிவாய் கிரகிக்கப்படக்கூடும். இவைகளை யெல்லாம் அவன் மறுக்க முடியாதபடியினால், கடவுள் மனிதன் என்பதையும் அவன் மறுக்க முடியாது; ஏனென்றால், மனிதனைவிட்டு நீங்கி, இவைகளில் ஒன்றும் நிலைக்க முடியாது; மனிதன் அவைகளிருக்கப்பட்ட பதார்த்தமாயிருக்கிறான். அவைகளை, அவைகளிருக்கும் பதார்த்தத்திலிருந்து பிரித்தலென்பது, அவைகளுக்கு இருக்கும் தன்மையில்லை அல்லது சூனியம் என்பதாகும். மனிதனுக்கு வெளியிலிருப்பதாக ஞானத்தை நினைத்துப் பார். அது ஏதாகிலும் ஒன்றாகிறதா? அது ஆகாயத்துக்கு அடுத்த அல்லது எரிகிற எதோ ஒன்றென்று நீ நினைக்கக்கூடுமா? அவைகள், இவைகளிலிருப்பதாக நீ ஒருவேளை நினைத்தால் ஒழிய, அது முடியாது; அது அவைகளிலிருந்தால், மனிதனுக்கு சேர்ந்ததுபோல, ஓர் உருவமுள்ள ஞானமாயிருக்கவேண்டும்; அது அவனிட முழு உருவத்திலிருக்கவேண்டும். எந்த பாகமும் ஞானமில்லாமல் இருக்க முடியாது. சுருங்கச் சொல்லில், ஞானத்தின் உருவம் மனிதன்; மனிதன் ஞானத்தின் உருவமானபடியினால்,

அன்பினிடவும், இரக்கத்தினிடவும், கருணையினிடவும், நன்மையினிடவும், உண்மையினிடவும் உருவமாகவும் கூட இருக்கிறான். ஏனென்றால், இவைகள் எல்லாம் ஞானத்துடன் ஒன்றாகின்றன. அன்பும் ஞானமும், ஒரு உருவத்திலல்லாமல் இருக்கமுடியா தென்பதை, மேலே (40 முதல் 43 வது பிரிவுகள் வரையில்) பார்க்கவும்.

287. அன்பும் ஞானமும் மனிதனாயிருக்கின்றன வென்பது, சுவர்க்கத்து தேவர்களால் கூட விசதமாகிறது; ஏனென்றால், ஆண்டவரிடமிருந்து அன்பையும் ஞானத்தையும் அடைகிறதற்குத் தக்கபடி, அவர்கள் அழகில் மனிதர்களாகுகிறார்கள். வேதத்தில் ஆதாம் என்பவரைப்பற்றி, அன்பினிடவும் ஞானத்னிதிடவும் ரூபமாக சிருஷ்டிக்கப்பட்டபடியினால்,தேவனிட சாயலாகவும் ரூபமாகவும் அவர் சிருஷ்டிக்கப்பட்டார் என்று சொல்லப்படுகிறதிலிருந்து, அதே கூட விசதமாகிறது (ஆதியாக I. 26). பூமியின்பேரிலுள்ள ஒவ்வொரு மனிதனும், தன் சரீரம் சம்பந்தப்பட்ட வரையில் மானிட ரூபத்தில் பிறந்திருக்கிறான். அவனிட ஆன்மா என்று கூட சொல்லப்படுகிற அவனிட ஆவி, மனிதனாயிருக்கிற தென்பது இதற்குக் காரணமாயிருக்கிறது; அது ஆண்டவரிடமிருந்து அன்பையும் ஞானத்தையும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாயிருப்பதால், இது அப்படி யிருக்கிறது. மனிதனிட ஆன்மா அல்லது ஆவி, இவைகளை எவ்வளவு பெற்றுக்கொள்ளுமோ, அவ்வளவு அவன் உடுத்தப்பட்டிருக்கும் ஸ்தூல சரீரம் இறந்தபின், மனிதனாகிறான்: அவன் அவைகளை ஏற்றுக்கொள்ளாத அளவு, ஏற்றுக்கொள்ளும் சக்தியிலிருந்து மனிதனுக்கு சேர்ந்ததில் சிலவற்றை அடைந்திருக்கிற குரூபாங்கியாகிறான்.

288. கடவுள் மனிதனாயிருப்பதால், தேவர்களிருக்கும் முழு சுவர்க்கலோகமும், மொத்தத்தில் ஒரு மனிதனைப்போ லிருக்கிறது; மனிதனிட அவயவங்களுக்கும், ஆந்திரிகங்க ளுக்கும், அங்கங்களுக்கும் தக்கபடி, அது தேசங்களாகவும் தேச பாகங்களாகவும் வகையறுக்கப்பட்டிருக்கிறது. இவ்வித மாக மூளைக்கும், முகத்தின் அங்கங்களுக்கும், சரீரத்தின் ஆந்திரிகத்துக்கும் சேர்ந்த எல்லா பொருள்களின் தேசபாக மாகிற சுவர்க்கத்து கூட்டங்களிருக்கின்றன. அந்த அங்கங் கள் மனிதனில் பிரத்தியேகமா யிருப்பதுபோல, இந்த தேச பாகங்கள் ஒன்றுக்கொன்று வேறானதாயிருக்கிறது; மேலும் தேவர்களுக்கு, அவைகள் மனிதனிட எந்த தேசபாகத்தில் இருக்கின்றன வென்பது தெரியும். கடவுள் மனிதனானபடி யினால், முழுசுவர்க்கமும் இந்த உருவத்தை உடைத்தாயிருக் கிறது; சுவர்க்கத்தை நிலைப்படுத்துகிற தேவர்கள், ஆண்டவரிட மிருந்து அன்பையும் ஞானத்தையும் பெற்றுக்கொள்பவர்க ளானபடியினாலும், அப்படி ஏற்றுக்கொள்பவர்கள் பிரதிமை களானபடியினாலும், கடவுள் சுவர்க்கமாயிருக்கிறார். சுவர்க்க மானது மனிதனில் எல்லாபொருள்களின் ரூபத்தில் இருக்கிற தென்பது, தேய்வலோக இரகசியமெனும் நூலில் பல அத்தி யாயங்களின் முடிவில் காண்பிக்கப்பட்டிருக்கிறது.

289. கடவுளைப்பற்றி ஒரு மனிதனாகவும், கடவுளுக்குச் சேர்ந்த தெய்வீக குணங்களை ஒரு மனிதனாகவும், நினைக்காத வர்களின் அபிப்பிராயங்களின் நியாய விரோதங்களை இவை களிலிருந்து நாம் அறிந்து கொள்ளலாம்; ஏனென்றால், மனி தனிலிருந்து நீங்கினால், அவைகள் மனதின் கற்பிதங்களாகின் றன. கடவுளானவர் சரியான மனிதனென்பதும், தான் அன் பையும் ஞானத்தையும் ஏற்றுக்கொள்வதற்கு தக்கபடி, ஒவ்

வொரு மனிதனும் அவரிடமிருந்து மனிதனாகிறான் என்பதும், மேலே (பிரிவுகள் 11, 12, 13) பார்க்கலாம். கடவுள் மனிதனா யிருப்பதால், பிரபஞ்சமானது அவரால் சிருட்டிக்கப்பட்ட தென்று அறிந்து கொள்ளப்படும் பொருட்டு பின் வருவதின் நிமித்தம், இந்த விஷயத்தை இங்கே ஸ்தாபித்தோம்.

**நித்தியமாயிருக்கும் ஆண்டவர், அதாவது ஏகோவா என்பவர், தன்னிடமே இருந்து பரலோகத்து சூரியனை உற்பத்தி செய்து, அதிலிருந்து பிரபஞ்சத்தையும் அதிலுள்ள எல்லா பொருள்களையும் சிருட்டித்தார்.**

290. ஞான லோகத்து சூரியனை பற்றி இந்த நூலின் இரண்டாவது பாகத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டது; அங்கே அடியில்கண்ட விஷயங்கள காண்பிக்கப்பட்டிருக்கின்றன. பரமஇச்சா சத்தியும் பரமஞான சத்தியும் பரலோகத்தில் சூரியனாகத்தோன்றுகிறது (83 முதல் 88 பிரிவுகள் வரையில்). ஞான சூடும், ஞான வெளிச்சமும், அந்த சூரியனிடமிருந்து புறப்படுகிறது (பிரிவுகள் 89 முதல் 92 வரையில்). அந்த சூரியன் கடவுள் அல்லாமல், தேவ மனிதனிட பரமஇச்சா சத்தியிலிருந்தும் பரமஞான சத்தியிலிருந்தும் வெளிவரும் பொருள்; அந்த சூரியனிட சூடும் வெளிச்சமும் கூட அம் மாதிரிதான் (பிரிவுகள் 93 முதல் 98 வரையில்). பரலோகத்து சூரியன் நடு உச்சத்திலிருந்துகொண்டு, ஸ்தூல லோகத்து சூரியன் மனிதர்களுக்கு தூரத்திலிருப்பதுபோல் தோன்றுகிறது போல், தேவர்களுக்கு தூரத்திலிருப்பதாகத் தோன்றுகிறது (பிரிவுகள் 103 முதல் 107 வரையில்). பரலோகத்தில் ஆண்டவர் சூரியனாகத் தோன்றுகிற இடம் கிழக்கேயிருக்கிறது, மற்ற திக்குகள், அதைக் கொண்டு நிச்சயிக்கப்

படுகின்றன (பிரிவுகள் 119 முதல் 123 வரையிலும், 124 முதல் 128 வரையிலும்).தேவர்கள், சூரியனைப்பார்ப்பதுபோல ஆண்டவரை இடைவிடாமல் பார்க்கிறார்கள் (பிரிவுகள் 129 முதல் 134 வரையிலும், 135 முதல் 139 வரையிலும்). ஆண்டவர், பிரபஞ்சத்தையும், அதிலிருக்கும் எல்லா பொருள்களையும், பரம இச்சாசத்தியிடமிருந்தும் பரமஞான சத்தியிடமிருந்தும், முதல் வெளிவரும் அந்த சூரியன் மூலமாய் சிருஷ்டித்தார் (பிரிவுகள் 151 முதல் 156 வரையில்). ஸ்தூல உலகத்து சூரியன் சுத்த நெருப்பாயிருக்கிறார். ஆனபடியினால் அந்த சூரியனிடமிருந்து உற்பத்தியாகிற பிரகுருதி, உயிரற்றதாயிருக்கிறது; ஸ்தூல உலகத்து சூரியன், சிருஷ்டிக்கும் தொழில் ஒரு முடிவுக்குக் கொண்டுவரப்பட்டு, நிறைவேற்றப்பட, சிருஷ்டிக்கப்பட்டது (பிரிவுகள் 157 முதல் 162 வரையில்). ஒன்று உயிருள்ளதும், மற்றது உயிரில்லாததுமான இரண்டு சூரியனார் இல்லாவிட்டால், சிருட்டி உண்டாகமாட்டாது (பிரிவுகள் 163 முதல் 166 வரையில்).

291. ஞான சூரியன் ஆண்டவரல்லாமல், அவரிட இச்சாசத்தியிலிருந்தும் ஞான சத்தியிலிருந்தும் வெளி வந்த பொருள் என்பது, இரண்டாவது பாகத்தில் சொல்லிய வைகளில் இது கூட ஒன்று. தாங்களே பொருளாகவும் ரூபமாகவுமிருக்கிற பரம இச்சாசத்திலியிருந்தும் பரம ஞானசத்தியிலிருந்தும், அந்த சூரியன் நிர்மாணிக்கப்பட்ட படியினாலும், அந்த தெய்வமானது இந்த ஏதுவினால் வெளிவருகிறபடியினாலும், அது வெளிவரும் **பிரான்** என்று சொல்லப்படும். ஆனால், ஒரு பொருளின் காரணத்தை தெரிந்து கொண்டாலொழிய அதாவது ஒருபொருள் எப்படி இருக்கக்கூடுமென்று அது தெரிந்து கொள்ள முடிந்தால் ஒழிய, ஒத்துக்கொள்ளாதிருத்தல்

மானிட விவேகத்தின் சுபாவமானபடியினாலும், ஆண்டவரா யல்லாமல், அவரிடமிருந்து வெளிபடும் பொருளாயிருக்கிற பர லோகத்து சூரியன் எப்படி நிர்மாணிக்கப்படுகிறதென்று, இப் பொழுது தெரியவேண்டுமாகையாலும், இதைப்பற்றிக் கூட சிலதுசொல்லப்படவேண்டும். இந்த விஷயத்தைப்பற்றி தேவர்க ளோடு நான் அதிகம் பேசியிருக்கிறேன்; தாங்கள், தங்கள் ஞான வெளிச்சத்தில் அதை தெளிவாய் பார்க்கிறதாகவும், ஆனால், இரண்டுவித வெளிச்சத்திற்கும், அவர்களிட இருவித சிந்தனைகளுக்கும் இருக்கும் பண்பை விளக்குகிற வித்தியாசத் தினால், அதை ஸ்தூல ஒளியிலிருக்கும் மனிதனுக்கு அறி விக்க அவர்களுக்கு கஷ்டமாயிருப்பதாக அவர்கள் சொன் னார்கள். ஆயினும் தன்னிட சமுகம் சமீபத்திலிருப்பவர் களுக்கும் தூரத்திலிருப்பவர்களுக்கும் உண்மை படுத்தப்படு கிற ஒவ்வொரு தேவனையும் சூழ்ந்திருக்கும் நேசங்களின், ஆகையினால் சிந்தனைகளின் மண்டலத்தைப் போன்று, ஞான சூரியன் விஷயம் இருப்பதாக அவர்கள் சொன்னார்கள்; இந்த சூழ்ந்திருக்கும் மண்டலம், வானவனாகவே யல்லாமல், பொருள்கள் இடைவிடாமல் பிரவாகமாக வெளிப்படுகிறதும், அப்படி வெளிப்படும் பொருள்கள் அவனை நெருங்கி சூழ்ந்தி ருக்கிறதுமான அவன் சரீரத்தின் எல்லா பொருள்களினு மிருந் தும் வருகிறதென்றும் அவர்கள் சேர்த்துச் சொன்னார்கள். இதுவன்றியும், அவனிட சரீரத்துக்கு அடுத்திருக்கிற எல்லா பொருள்களும், இருதயம் சுவாசாசயங்களாகிய அவன் உயிரி னிட சலனத்தின் இரண்டு உற்பத்தி ஸ்தானங்களால், ஏவப் பட்டு, இடைவிடாமல் ஆகாயங்களை தங்களிட சொந்த முயற்சி களில், எழுப்பி, இந்தவழிவகையால், தான் மற்றவர்களோடு இருப்பது போன்ற ஓர் உணர்ச்சியைஉண்டாக்குகிற தென்றும்

சொன்னார்கள். ஆகையால் நேசங்கள் தன்னிடமிருக்கும் மன தினிட ரூபங்களின் நிலைமைகளால் மாத்திரமிருப்பதால், தன்னிடமிருந்து வெளிப்பட்டு தொடர்ச்சியாயிருக்கிற நேசங்களின், ஆகையினால், அப்படிச் சொல்லப்பட்டாலும் சிந்தனைகளின், பிரத்தியேகமான மண்டலமாக இல்லை. மேலும், அது ஆண்டவரைச் சுற்றியிருப்பதால், ஒவ்வொரு வானவனையும் சுற்றி அவ்வித மண்டல மிருப்பதாகவும், ஆண்டவரைச் சுற்றியிருக்கும் மண்டலம் அவ்விதமாக அவரிடமிருந்து வருகிறதாகவும், அந்த மண்டலமே அவர்கள் சூரியன் அல்லது பரமார்த்த உலகத்தின் சூரியனென்று அவர்கள் சொன்னார்கள்.

292. ஒவ்வொரு தேவனையும் ஆவியையும் சுற்றி அவ்வித மண்டல மிருப்பதாகவும், அதனுடன் ஒரு கூட்டத்தில் பலரைச்சுற்றி ஒரு பொதுவான மண்டல மிருப்பதாகவும், அறிந்துகொள்ள எனக்கு அடிக்கடி அருள் செய்யப்பட்டது. நானாவிதமான தோற்றங்களில், அதைப் பார்க்கவும்கூட எனக்கு அருள்செய்யப்பட்டது. சுவர்க்கத்தில் சில வேளைகளில் மெல்லிய சுடராகவும், நரகத்தில் பருத்த நெருப்பாகவும், மேலும் சுவர்க்கத்தில் சில வேளைகளில் மெல்லியதும், பிரகாசமுள்ளதுமான வெள்ளை நிறமுள்ள மேகத்தின் தோற்றமாகவும், நரகத்தில் தடித்ததும், கருப்பு நிறமுள்ள இடியும் மின்னலும் சேர்ந்த மேகத்தின் தோற்றமாகவும் நான் பார்த்திருக்கிறேன். இந்த மண்டலங்களை நானாவிதமான நாற்றங்களாகக்கூட நான் பார்த்திருக்கிறேன். அவர்களின் சரீரங்களிலிருந்து பிரிக்கப்பட்டு சுயர்ச்சியாய் விடப்பட்ட பொருள்களால் நிறைந்த ஒரு மண்டலமானது சுவர்க்கத்திலும் நரகத்திலும் ஒவ்வொருவனையும் சூழ்ந்திருக்கிறதென்பதை, இந்த அனுபவங்களால் நான் நம்பும்படி செய்யப்பட்டேன்.

293. தேவர்களிடமிருந்தும் ஆவிகளிடமிருந்தும் மாத்திரமல்லாமல், அந்த உலகத்தில் தோன்றும் ஒவ்வொரு பொருளிலிருந்தும், உதாரணமாக மரங்களிலிருந்தும், அவைகளின் கனிகளிலிருந்தும், செடிகளிலிருந்தும் அவைகளின் புஷ்பங்களிலிருந்தும், பூண்டுகளிலிருந்தும் புற்களிலிருந்தும், உண்மையில், பூமியிலிருந்தும், அவைகளின் அணுக்களிலிருந்தும் கூட ஒரு மண்டலமானது ததும்புகிறதென்றுகூட அறிந்துகொள்ளப்பட்டிருக்கிறது. உயிருள்ளதும், உயிர் இல்லாததுமான இருவகைப் பொருள்கள் விஷயத்தில், ஒவ்வொன்றும் அதற்குள் இருப்பதைப் போன்றதால் சூழப்பட்டிருக்கிறதென்பதும்,இது அதினால் இடைவிடாமல் வெளிவிடப்படுகிறதென்பதும்,எங்கும் உண்மையானதென்று இதிலிருந்து விசதமாகிறது. ஸ்தூல உலகத்திலும் விஷயம் அம்மாதிரியே இருக்கிறதென்று கல்விமான்களில் அநேகரிட அனுபவத்தில் தெரிந்திருக்கிறது; உதாரணமாக, மனிதனிலிருந்தும், ஒவ்வொரு பிராணியிடமிருந்தும், ஒவ்வொரு மரத்திலிருந்தும், கனியிலிருந்தும், செடியிலிருந்தும், புஷ்பத்திலிருந்தும், உலோகங்களிலிருந்தும், கற்களிலிருந்தும் பரமாணுக்கள் இடைவிடாமல் பாய்கிறதென்பது தெரிந்திருக்கிறது. ஸ்தூல உலகம் பரலோகத்திலிருந்தும், பரலோகம் தெய்வமிடமிருந்தும் இதை அடைகிறது.

294. வானோனிடமிருந்தும் மனிதனிடமிருந்தும் வெளிவந்து, அவர்களைச் சுற்றி மண்டலங்களை உண்டாக்குகிற பொருள்கள் வானவனுமல்லாமல் மனிதனுமல்லாமல், அவைகளிலிருந்து தோன்றி, அவைகளின் உயிர் நீக்கப்பட்டதாயிருப்பதுபோல், பரமார்த்த உலகத்தின் சூரியனாகிற பொருள்கள், ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினாலும், அப்படியிருந்

தும் அவைகள் ஆண்டவராகாதபடியினாலும், அவைகள் சுய மாய் உயிராக இல்லை ; ஆனால், சுயமாய் உயிரில்லாததாயிருக் கிறது. அவர்களில், அவர்கள் உயிரின் ரூபங்களாயிருந்த, அவர்கள் சரீரங்களின் ரூபங்களிலிருந்து, அவைகள் எடுக்கப் பட்டபடியினால், அவைகள் ஒத்திருக்கின்றன என்பதற்கு மேல், வானவனோடு அல்லது மனிதனோடு ஒன்றுபடுகிறதில்லை. தேவர்கள் தங்களிட பரமார்த்த அபிப்பிராயங்களால் சிந்தனை யில் பார்க்கவும், அதனுடன் பேச்சில் அறிவிக்கவும், சக்தி யுள்ளவர்களாயிருக்கிற ஒரு இரகசியமாக இது இருக்கிறது. ஆனால், மனிதர்கள் தங்களிட ஸ்தூல அபிப்பிராயங்களோடு இதை செய்ய முடியாது; ஏனென்றால், ஓராயிரம் பரமார்த்த அபிப்பிராயங்கள் ஒரு ஸ்தூல அபிப்பிராயமாகிறது. ஒரு ஸ்தூல அபிப்பிராயம் ஒரு பரமார்த்த அபிப்பிராயமாக கூட மனிதனால் செய்ய முடியாது. ஆகையினால் ஆயிரமாக பிரிக்க இன்னும் கொஞ்சமும் முடியாது. இந்த அபிப்பிராயங்கள் மூன்றாவது பாகத்தில் சொல்லியபடி உயரத்தைச் சேர்ந்த நிலைகளுக்குத் தக்கபடி பேதப்படுகின்றனவென்பது, இதற்கு காரணமாயிருக்கிறது.

295. தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் சிந்தனைகளில் உள்ள வித்தியாசம் இவ்விதமா யிருக்கிறதென்பது, இந்த அனு பவத்தால் எனக்கு தெரியப்படுத்தப்பட்டது. தேவர்களுக்கு, ஏதோ ஒரு விஷயத்தைப்பற்றி ஞான வொளியில் நினைத்து, அவர்கள் நினைத்ததை எனக்கு சொல்லும்படி சொல்லப்பட் டது. அப்படி செய்யப்பட்டு, அவர்கள் என்னோடு பேச விரும்பியபோது, அவர்களால் முடியவில்லை; இவைகளை எல் லாம் உச்சரிக்க, தங்களால் முடியாதென்று அவர்கள் சொன் னார்கள். அவர்கள் சூக்கும பேச்சுடனும், சூக்கும எழுத்துடனும்

விஷயம் அம்மாதிரியே யிருந்தது. ஸ்தூல பேச்சின் வார்த்தைக்கு ஒத்த சூக்கும பேச்சின் யாதொரு வார்த்தையும் கூட இல்லாமலிருந்தது; அதுவுமல்லாமல், அவைகளில் ஒவ்வொன்றும் முழு அர்த்தம் கொண்ட எழுத்துக்களைத் தவிர, ஸ்தூல லிபியைப்போன்ற பரமார்த்த லிபி யாதொன்றுமில்லை. ஆனால், அதிசயமுண்டாக்குகிற தென்னவென்றால், இரண்டு நிலைமைகளிலும் ஒப்பனை ஒன்றுமில்லாவிட்டாலும்,ஸ்தூலநிலைமையிலுள்ள ஒரு மனிதனைப்போல், பரமார்த்த நிலைமையில், நினைக்கவும், பேசவும், எழுதவும் தங்களுக்கே தோன்றியதாக அவர்கள் சொன்னார்கள். ஸ்தூலமானதும் பரமார்த்தமானதும் உயரத்தைச்சேர்ந்த நிலைகளுக்குத் தக்கபடி பேதப்படுகின்றன வென்றும், அன்னுவயங்களால் மாத்திரம், அவைகள் ஒன்றோடொன்று சம்பந்தம் அடைகின்றனவென்றும் இதிலிருந்து விசதமாகிறது.

இச்சா சததியாகிய தெய்வமென்றும், ஞானசத்தியாகிய தெய்வமென்றும், காரியசித்தியாகிய தெய்வமென்றும் ஆண்டவரா யிருக்கிற மூன்று பொருள்கள், பராபரனிடத்தில் இருக்கின்றன; இச்சாசத்தியாயிருக்கிற தெய்வம் சூடாகவும், ஞானசக்தியாயிருக்கிற தெய்வம் ஒளியாகவும், காரியசித்தியாயிருக்கிற தெய்வம், கோள்களமாயிருக்கிற ஆகாயமாகவும், இந்த மூன்றும் பரலோகத்து சூரியனுக்கு வெளியே தோன்றுகின்றன.

296. சூடும் ஒளியும் பரலோகத்து சூரியனிலிருந்து புறப்படுகிறதென்பதும், சூடானது ஆண்டவரின் பரம இச்சா சத்திலிருந்து புறப்படுகிறதென்பதும், ஒளி அவரிட பரம ஞான சத்திலிருந்து புறப்படுகிறதென்பதும், மேலே பார்க்கலாம் (பிரிவுகள் 89 முதல் 92, வரையில் 99 முதல் 102 வரையில்; 146 முதல் 150 வரையில்). அங்கிருக்கும் சூரியனிட மிருந்து

புறப்படும் மூன்றாவது பொருள், சூட்டிற்கும் ஒளிக்கும் கொள்கலமாயிருக்கிற விசும்பென்றும், காரியம் அல்லது பலன் என்று சொல்லப்படும் ஆண்டவரின் தெய்வசக்தியிலிருந்து, இது புறப்படுகிறதென்றும், இங்கே இப்பொழுது சொல்லப் படும்.

297. அன்பானது உபயோகத்தை ஒரு முடிவாக வைத்திருக்கிறதாகவும், அது உபயோகத்தைக் கருதுகிறதாகவும், ஞானத்தின் மூலமாய் உபயோகத்தை உண்டாக்குகிறதாகவும், எவ்வித ஞானத்துடன் நிலைக்கப்பட்டவனும் அறிந்துகொள்ள ளக்கூடும் ; ஏனென்றால், அன்பானது சுயமாய் யாதொரு உபயோகத்தையும் உண்டாக்காமல், ஞானத்தின் மூலமாய் அப்படி செய்கிறது. அன்பு பாராட்டப்பட எதோ ஒன்று இருந்தாலொழிய, அன்பு என்பது உண்மையில் என்னமாயிருக்கிறது? இது உபயோகமாயிருக்கிறது ; உபயோகம், அன்பு பாராட்டப்படுகிறதாயும், ஞானத்தின் மூலமாய் உண்டாக்கப்படுவதாகவும் இருப்பதால், உபயோகமானது ஞானத்துக்கும் அன்புக்கும் கொள்கலமாயிருக்கிறதென்று ஏற்படுகிறது. அன்பும் ஞானமும் பயனும் உயரத்தைச் சேர்ந்த நிலைகளுக்குத் தக்கபடி ஒழுங்காய் தொடர்கிறதென்பதும், கடைசி நிலையானது, முந்திய நிலைகளை சூழ்ந்திருப்பதும், அவைகளுக்கு கொள்கலமாயும் அஸ்திவாரமாயும் இருக்கிறதென்பதும், 209-வது பிரிவு முதல் 216 வது பிரிவு வரையிலும், வேறு இடங்களிலும் காண்பிக்கப்பட்டது. இவைகளிலெல்லாம்ருந்து, இச்சா சத்தியாகிய தெய்வமும், ஞான சத்தியாகிய தெய்வமும், காரியசித்தியாகிய தெய்வமும், இந்த மூன்றும் ஆண்டவரிலிருப்பதாகவும், சாரத்தில் அவைகள் ஆண்டவரென்றும் விசதமாகும்.

298. மனிதனைப்பற்றி அவனிட புறம்பானவைகள் விஷயத்திலும், அந்தரங்கமானவைகள் விஷயத்திலும், யோசித்தால், அவன் எல்லா உபயோகங்களின் ரூபமாக இருக்கிறானென்பதும், சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்திலிருக்கும் எல்லா உபயோகங்களும், அவனிடமிருக்கும் அந்த உபயோகங்களோடு ஒத்துப்போகிற தென்பதும், பின்வருவதில் முழுமையும் நிச்சயப்படுத்தப்படும். சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்திலுள்ள எல்லா உபயோகங்களும் உற்பத்தியாகிற, எல்லா உபயோகங்களின் ரூபமாகத்தானே மனிதராக கடவுள் யிருக்கிறாரென்றும், இவ்விதமாக சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சம், உபயோகம் என்பதைக் கொண்டு ஆலோசித்தால், அவரிட பிரதிமையா யிருக்கிறதென்றும், தெரிந்திருக்கும்படி மட்டும் இங்கே சொல்லப்பட்டிருக்கிறது. தேவமனிதனாகிய அதாவது ஆண்டவரிடமிருந்து சிருஷ்டியினால் ஒழுங்கில் உண்டாகும் பொருள்கள் உபயோகங்கள் என்று சொல்லப்படும்; ஆனால் மனிதனுக்கு சொந்தமானதிலிருந்து உண்டாகும் பொருள்கள் உபயோகங்களென்று சொல்லப்படுகிறதில்லை; ஏனென்றால், இப்படி அவனுக்கு சொந்தமானவைகள் நரகமாயிருக்கின்றன; மேலும் அவைகள் ஒழுங்கிற்கு விரோதமாயிருக்கின்றன.

299. இதுநிற்க அன்பு, ஞானம், பயனாகிய இந்த மூன்றும் ஆண்டவரிலிருப்பதனாலும், ஆண்டவராயிருப்பதாலும், அவர் எங்கும் நிறைந்தவரானபடியினால், அவர் எவ்விடத்திலும் இருப்பதாலும், அவர் சுயமாயும், தன் சொந்த சூரியனில் இருக்கும் நிலையில் எந்த தேவனுக்கும் மனிதனுக்கும் தோன்றாதபடியினாலும், பெற்றுக்கொள்ளக் கூடிய பொருள்களால் தானே தோன்றுகிறார். அன்பு விஷயத்தில் சூட்டின்

மூலமாகவும், ஞானம் விஷயத்தில் ஒளியின் மூலமாகவும், உபயோகம் விஷயத்தில் ஆகாசத்தின் மூலமாகவும், தன் சந்நிதானத்தை வெளிப்படுத்துகிறார். உபயோகமானது அன்பிற்கும் ஞானத்துக்கும் கொள்கலமா யிருப்பதுபோல், ஆகாசமானது சூட்டிற்கும் ஒளிக்கும் கொள்களமா யிருப்பதினால், ஆண்டவர் உபயோகம் விஷயத்தில் ஆகாசத் தின் மூலமாய் தானே பிரத்தியட்சமாகிறார். ஏனென்றால், தெய்வீக சூரியனிடமிருந்து புறப்படும் ஒளியும் சூடும், சூனி யத்திலிருந்து, இவ்விதமாக வெறுமையிலிருந்து புறப்படா மல், ஒரு பொருளாயிருக்கிற ஒரு கொள்கலத்திலிருந்து புறப் படுகின்றன; இந்த கொள்கலத்தை நாம் ஆகாசமென்கிறோம். அது சூரியனைச் சூழ்ந்து தன்னிட ஆந்திரியத்தில் ஏற்றுக் கொண்டு, தேவர்களிருக்கும் சுவர்க்கத்துக்கும் பிறகு மனிதர் களிருக்கும் உலகத்துக்கும் கொண்டுபோய், இவ்விதமாக ஆண் டவர் எங்குமிருக்கும்படி செய்கிறது.

300. சூக்கும லோகத்தில் ஸ்தூல லோகத்திலிருப்பது போல சமமாய், விசும்புகளிருக்கின்றன வென்பது மேலே காண்பிக்கப்பட்டது (பிரிவுகள் 173 முதல் 178 வரையிலும், 179 முதல் 183 வரையிலும்); சூக்கும லோகத்து ஆகாசங்கள் சூக்குமமானதென்றும், ஸ்தூல லோகத்து ஆகாசங்கள் ஸ்தூல மானதென்றும் அங்கே சொல்லப்பட்டது. பரலோக சூரி யனைச்சுற்றி அருகிலிருக்கும் சிதாகாசத்தின் உற்பத்தியிலி ருந்து, அதைச் சேர்ந்த ஒவ்வொன்றும், தன் சாரத்தில், சூரி யன் தன் சாரத்திலிருப்பதுபோல, அவ்வித சுபாவமுடைய தாக இருக்கிறதென்பது, விசதமாகிறது. இது இப்படி இருக் கிறதென்பதை தேவர்கள் இடவரைக்குட்படாத பரமார்த்த அபிப்பிராயங்கள் மூலமாய் இவ்விதமாய் ரூபிக்கிறார்கள்.

எல்லா பொருள்களும் உற்பத்தியாகிற ஒரு தனித்த பொருள் இருக்கிறதென்றும், பரலோகத்து சூரியன் அந்த பொருளென்றும் அவர்கள் சொல்லுகிறார்கள்; தெய்வமானது இடவரைக்குட் படாதபடியினாலும், மிகப் பெரியதிலும் சின்னஞ்சிறியதிலும் அது ஒரே மாதிரி இருப்பதினாலும், தேவ மனிதனிடமிருந்து முதன்மையாய் வெளிவரும் பொருளாயிருக்கிற அந்த சூரியனோடும் விஷயம் அம்மாதிரியே யிருக்கிறது. மேலும், தொடர்ச்சியான நிலைகள் அல்லது அகலத்தைச் சேர்ந்த நிலைகளுக்கு தக்கபடியும், அதே காலத்தில் வேறு வேறாகும் நிலைகள் அல்லது உயரத்தைச் சேர்ந்த நிலைகளுக்கு தக்கபடியும், ஆகாசங்கள் மூலமாய் வெளிவரும் சூரியனாயிருக்கிற அந்த ஒரு தனித்த பொருள், பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களின் வேற்றுமைகளையும் உண்டாக்குகிறது. மனக்காட்சிகளை இடவரைக்கு உட்படுத்தாவிட்டாலொழிய, இவைகள் எவ்விதத்திலும் கிரகிக்கப்பட முடியாதென்றும், அவைகள் அப்படி நீக்கப்படாவிட்டால், தோற்றங்கள் ஆபாசங்களுக்குத் ஆவசியகமாய் இடங்கொடுக்குமென்றும், தேவர்கள் சொன்னார்கள். என்றாலும், கடவுள் எல்லா பொருள்களும் தன்னிலிருந்து வெளிவரும் சத்தாகத்தானே இருக்கிறாரென்று சிந்தனையானது நிற்கிற வரையில், இந்த ஆபாசங்கள் உற்பத்தியாகாது.

301. மேலும், இடவரைக்குட்படாத தேவதா சம்பந்தமான கருத்துகளிலிருந்து, சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தில், தேவ மனிதன் அதாவது ஆண்டவர் தவிர வேறொன்றும் உயிரோடிருக்கிறதில்லை என்றும், அவரிடமிருந்து வரும் உயிரினால் தவிர எந்தப் பொருளும் அசைகிறதில்லை என்றும், அவரிடமிருந்து வரும் சூரியன் மூலமாய் தவிர எந்த பொரு

ளும் ஜீவிக்கிறதில்லை என்றும், மிகவும் தெளிவாயிருக்கிறது. ஆகையினால், நாம் கடவுளிலே பிழைத்து, சலனமடைந்து, இருக்கிறோமென்பது உண்மையாயிருக்கிறது.

பரலோகத்திலும் ஸ்தூலலோகத்திலும் இரண்டிலும் மூன் றாயிருக்கிற ஆகாசங்கள், இறுதியான பொருள்களாகும் காலத் தில், உலகத்திலிருக்கும் பொருள்கள் போல பதார்த்தங்களாக வும் ஜடப்பொருள்களாகவும் முடிகின்றன.

302. உயரத்தைச் சேர்ந்த நிலைகளுக்கு தக்கபடி ஒன்றுக் கொன்று வேறாயிருக்கிறதும், அகலத்தைச் சேர்ந்த நிலைகளுக் குத் தக்கபடி இறக்கத்தில் குறைகிறதுமான, மூன்று ஆகா சங்கள் பரலோகத்திலும் ஸ்தூல லோகத்திலும் இரண்டி லும் இருக்கின்றனவென்பது, மூன்றாவது பாகத்தில் காண்பிக் கப்பட்டது (பிரிவுகள் 173—176 வரையில்). ஆகாசங்கள் கீழிறங்கும்போது குறைகியபடியினால், அவைகள் தொடர்ச் சியாய் அதிகமாய் அமுக்கப்பட்டும், ஜடமாகவுமாகிறதென் றும், கடைசியில் இனிமேல் ஆகாசங்களாயில்லாமல் இறு திப் பொருள்களில், அமைந்துள்ளப் பொருள்களாக, அவை கள் அவ்வளவு அமுக்கப்பட்டும் ஜடமாகின்றனவென்றும், ஸ்தூல லோகத்தில் ஜடமென்று சொல்லப்படுகின்ற பிண் டமான பொருள்களாகின்றனவென்றும் ஏற்படுகிறது. பதார்த்தங்களிடவும் ஜடப்பொருள்களிடவும், இவ்வித உற் பத்தியினால், முதலாவது இந்தப் பதார்த்தங்களும் ஜடப் பொருள்களும் கூட மூன்று நிலைகளை உடையவை என்றும், இரண்டாவது, அவைகள் சூழ்ந்திருக்கும் ஆகாயங்களினால் பரஸ்பர சம்பந்தத்தில் நிலைகொள்கின்றனவென்றும், மூன்றா வது, தங்கள் ரூபங்களில் எல்லா உபயோகங்களையும் உண்

டாக்க அவைகள் இசைவாக்கப்பட்டிருக்கின்றன வென்றும் தொடர்கிறது.

303. மண்ணுலகத்திலிருக்கப் பட்டவைகள் போன்ற பதார்த்தங்களும் ஜடப்பொருள்களும் சூரியனால் அதன் ஆகாயங்களின் மூலமாய் உண்டாக்கப்பட்டன வென்பதை, பிரதம பொருளிலிருந்து இறுதிப்பொருள்கள் வரையில், இடைவிடாத நடுப்பொருள்களிருக்கின்றன வென்றும், முந்திய ஒன்றிலிருந்து, கடைசியில் ஓர் முதற்பொருளி லிருந்து தவிர ஒன்றும் உண்டாகாதென்றும், ஆலோசிப்பவர்கள் யார்தான் உறுதியாய் சொல்ல மாட்டார்கள்? அந்த முதற்பொருள் பரலோகத்து சூரியன், அந்த சூரியனுக்கு முதற்பொருள் தேவமனிதன் அல்லது ஆண்டவர். ஆகாசங்கள், தங்கள் மூலமாய் அந்த சூரியன் இறுதிப்பொருள்களிலிருக்கிற முதற்பொருள்களாயிருக்கிற படியினாலும் அந்த முந்திய பொருள்கள், இறுதிப் பொருள்களாகிற வரையில், முயற்சியிலும் விரிவிலும் இடைவிடாமல் குறைகிறபடியினாலும், அவைகளின் முயற்சியும் விரிவும் இறுதிப் பொருள்களான காலத்தில் நின்றபோது, இவைகள் உலகத்திலுள்ளவை போல அவ்வித பதார்த்தங்களாகவும் பிண்டப் பொருள்களாகவும் ஆகின்றனவென்று பின் தொடருகிறது; இவைகள் தாங்கள் உற்பத்தியான ஆகாசங்களிலிருந்து, காரிய சித்திகளை உண்டாக்க, ஓர் பிரயத்தனத்தையும் முயற்சியையும் தங்களுக்குள்ளே வைத்திருக்கின்றன. பிரபஞ்சமும் அங்கிருக்கும் எல்லா பொருள்களும் முதற் பொருளிலிருந்து தொடர்ச்சியான நடுப்பொருள்களால் சிருஷ்டிக்கப்பட்டனவென்று அறியாதவர்கள், அவைகளின் காரணங்களிலிருந்து பிரிக்கப்பட்ட புத்திக்குச் சரிப்படாத உத்தேசங்களை ஏற்படுத்தும்படி நேரிடும்; பொருள்களை தெளிவாயும் ஆழ்ந்தும் பார்க்கப்பட்ட

ஓர் மனதினல் அந்த உத்தேசங்கள் பார்க்கப்பட்டபோது, வீடுகளைப்போல் அல்லாமல், குப்பை குவியல்கள் போல் தோன்றுகின்றன.

304. பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களின் இந்த பொது உற்பத்தியின் பயனுக, அங்கிருக்கும் தனித்த பொருள்கள் அதைப்போன்ற நிலைமையை ஏற்றுக் கொண்டு, அவைகள் முடிவுக்கு வந்து ஜீவிக்கும் பொருட்டு, தாரதம்மி யத்தினல் அமைதியான நிலையிலுள்ள, இறுதியான பொருள் களுக்கு, அவைகளில் முதற் பொருளிலிருந்து செல்கின்றன. இவ்விதமாக, மானிட சரீரத்தில் நார் தசைகள் தங்களிட முதல் ரூபங்களிலிருந்து(Tendon)என்கிற ஓர்வித நரம்புகளா கிற வரையில் செல்லுகின்றன ; மேலும் இரத்த நாடிகளுடன் கூடப் போகும் நார்கள் தங்கள் பிரதம ரூபங்களிலிருந்து, அவைகள் பேரில் நிற்கவும்,நிலக்கவும்வேண்டிய குறுத்தெலும் புகளாகவும் எலும்புகளாகவும் ஆகிற வரையில், விர்த்தியாகிக் கொண்டு வருகின்றன. பிரதமையானவைகளிலிருந்து இறுதி யானவைகள் வரையில் மனிதனில் நார்களிடவும் நாடிகளிட வும் அவ்வித வளர்ச்சி யிருப்பதினல், அவைகளின் நிலைமை களிலும் அம்மாதிரியான வளர்ச்சி யிருக்கிறது. அவைகளின் நிலைமைகள் இந்திரிய ஞானங்களாகவும், சிந்தனைகளாகவும், ஆசைகளாகவுமிருக்கின்றன. இவைகளும் கூட அவைகள் ஒளியிலுள்ள முதன்மையிலிருந்து, நிழலிலுள்ள இறுதியான வைகளுக்கும், அல்லது அவைகள் சூட்டில் உள்ள முதன்மை யானவைகளிலிருந்து சூட்டிலில்லாத இறுதியானவைகளுக்கும் செல்லுகின்றன. அவைகளில் அவ்வித வளர்ச்சியிருப்பதினல், அன்பினிடவும் அதன் பரிவாரங்களிடவும், ஞானத்தினிடவும் அதன் பரிவாரங்களிடவும் அவ்வித வளர்ச்சி கூடயிருக்கிறது.

சுருங்கச் சொல்லில், சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தில், எல்லாப் பொருள்களின் அவ்வித வளர்ச்சி யிருக்கிறது. மேல் காண்பித்ததுடன்(பிரிவுகள் 222 முதல் 229 வரையில்) அதாவதுசிருஷ்டிக்கப்பட்ட எல்லா பொருள்களிலும் மிகப்பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும் இருவித நிலைகளிருக்கின்றன வென்பது, இத்துடன் ஒரே தன்மையுள்ளதா யிருக்கிறது. தேவர்களின் பரமார்த்த கருத்துகளுக்குத் தக்கபடி, பரமார்த்த சூரியன், எல்லா பொருள்களும் உற்பத்தியாகிற தனித்த பொருளென்பது, எல்லா பொருள்களிலும் சின்னஞ் சிறியதிலும் திட இருவகை நிலைகள் ஏன் இருக்கின்றன என்பதற்கு காரணமாயிருக்கிறது (பிரிவு 300).

**மண்ணுலகங்கள் உண்டாகிற பொருள்களிலும் பதார்த்தங்களிலும் ஜடப்பொருள்களிலும், தெய்வம் என்பதே யாதொன்றுமில்லை, அப்படியிருந்தும் தெய்வத்தினிட மிருந்தே அவைகள் உண்டாயின.**

305. முன்பிரிவில் கூறப்பட்டிருக்கும் மண்ணுலகங்களின் உற்பத்தியிலிருந்து, அவைகளின் பதார்த்தங்களிலும் ஜடப்பொருள்களிலும் தெய்வமென்பதே ஒன்றும் இல்லாமல், தெய்வமாகவேயிருக்கும் எல்லாம் அவைகளிலிருந்து நீக்கப்பட்டிருக்கிறதென்று அறிந்து கொள்ளலாம். ஏனென்றால், மேல் சொல்லியபடி, அவைகளிட சூடு குளிர்ச்சியிலும், ஒளி இருளிலும், முயற்சி அசைவின்மையிலும், முடிவுபெற்ற ஆகாசங்களின் முடிவுகளாகவும் எல்லைகளாகவும் அவைகளிருக்கின்றன. அப்படியிருந்தாலும், மேல் கூறியபடி (பிரிவுகள் 291 முதல் 298 வரையில்) தேவமனிதன் அல்லது ஆண்டவரை சூழ்ந்திருக்கும் மண்டலமாகிய தெய்வத்திலிருந்து வெளிப்பட்டு, அங்கிருந்ததை பரமார்த்த சூரியனிட பதார்த்தத்திலிருந்து

தொடர்ச்சியினால் அவைகள் கொண்டுவந்திருக்கின்றன. இந்த மண்டலத்திலிருந்து ஆகாசங்கள் மூலமாய் சூரியனிடமிருந்து தொடர்ச்சினால் மண்ணுலகங்கள் உண்டாகிற பதார்த்தங்களும் ஜடப்பொருள்களும் உற்பத்தியாயின.

306. ஆகாசங்கள் மூலமாய் பரமார்த்த சூரியனிடமிருந்து மண்ணுலங்கள் உற்பத்தியானதை, ஸ்தூல அபிப்பிராயங்களிலிருந்து வரும் வார்த்தைகளினால் வேறு விதமாய் விவரிக்க முடியாது. ஆனால் பரமார்த்த அபிப்பிராயங்கள் இடவரைக் குட்படாதபடியினால், அவ்வித அபிப்பிராயங்களிலிருந்துவரும் வார்த்தைகளால் வேறுவிதமாய் விவரிக்கப்படக் கூடும்; அந்த பரமார்த்த அபிப்பிராயங்கள் இடவரைக்குட்படாதபடியினால், ஸ்தூல பாஷையின் எந்த வார்த்தைகளிலும் அவைகள் உட்படுகிறதில்லை. தங்களுக்குள் பொதுவானது ஒன்று மில்லாதபடி, பரமார்த்த சிந்தனைகளும், சம்பாஷணைகளும், எழுதப்பட்ட நூல்களும், ஸ்தூல சிந்தனைகளிலிருந்தும், சம்பாஷணைகளிலிருந்தும், நூல்களிலிருந்தும் முழுமையும் பேதப்படுகின்றன வென்பதையும், அனுபவங்களால் மட்டும் அவைகள் சம்பந்த மடைந்திருக்கின்றன வென்பதையும், மேலே பார்க்கலாம் (பிரிவு 295). அப்படியானால், மண்ணுலகங்களின் உற்பத்தி கொஞ்சமட்டும் ஸ்தூலமாய் பார்க்கப்பட்டால், அது போதுமானது.

சிருஷ்டியின் முடிவுகளாயிருக்கிற எல்லா உபயோகங்களும், உருவங்களிலிருக்கின்றன; மேலும் அவைகள் மண்ணுலகங்களிலிருப்பது போன்ற பதார்த்தங்களிலிருந்தும் பூதப்பொருள்களிலிருந்தும் உருவங்களை அடைகின்றன.

307. சூரியனுக்கும், ஆகாயங்களுக்கும் பூமிகளுக்கும் சேர்ந்தவைகள் போன்ற இது வரையில் பேசப்பட்ட எல்லா

பொருள்களும் முடிவுகளுக்கு சாதனங்களாயிருக்கின்றன. சிருட்டியின் முடிவுகள், மண்ணுலகங்களிலிருந்து, ஆகாசங்கள் மூலமாய் சூரியனுக ஆண்டவரால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களாயிருக்கின்றன. இந்த முடிவுகளே உபயோகங்கள் என்று சொல்லப்படுகின்றன. அவைகளின் விசாலத்தில், விருக்ஷவர்க்கத்தின் எல்லா பொருள்களேயும், பிராணி வர்க்கத்தின் எல்லாபொருள்களேயும், கடைசியில், மானிட வர்க்கத்தையும், அதிலிருந்து தேவதாசம்பந்தமான சுவர்க்கத்தையும் அவைகள் தழுவுகின்றன. பசமஇச்சா சத்தியையும் பரமஞான சத்தியையும் பெற்றுக்கொள்பவைகளா யிருப்பதாலும், மேலும் அவைகள், உற்பத்தியான சிருஷ்டி கர்த்தாவாகிய கடவுளே எதிர் பார்த்து, அதனுல் அவர் செய்த அநேக பொருள்களோடு அவரைச் சேர்த்து, அந்த சேர்க்கையினுல், அவரிடமிருந்து அவைகள் வந்தது போல், அவரால் அவைகள் நிலக்கும்படியாக செய்கிற படியினுலும், இவைகளுக்கு உபயோகங்கள் என்று சொல்லப்படுகின்றன. அவைகள், உற்பத்தியான சிருஷ்டி கர்த்தாவாகிய கடவுளே அவைகள் எதிர்பார்த்து, அவர் செய்த பெரும் கிரியைகளோடு சேர்க்கிறதாக சொல்லப்பட்டது. ஆனுல் இது தோற்றத்தை அனுசரித்து சொல்லப்பட்டது. சிருஷ்டி கர்த்தாவாகிய கடவுள், அவைகள் தாமே பார்த்து சேருகிறது போல் செய்கிருரென்பது அர்த்தம்; ஆனுல் அவைகள் எப்படிப் பார்த்து, அதனுல் சேருகின்றனவென்பது பின்வருவதில் சொல்லப்படும். இந்த விஷயங்களேப்பற்றி அவைகளுக்குரிய இடங்களில் சிலது முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது; உதாரணமாக, பரம இச்சாசத்தியும் பரமஞான சத்தியும் தன்னிடமே இருந்து சிருஷ்டிக்கப்பட்ட மற்றவைகளில் இருந்து நிலக்க வேண்டு

மென்பது (பிரிவுகள் 47 முதல் 51 வரையிலும்), சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும் பரமஇச்சா சத்தியையும் பரமஞான சத்தியையும் பெற்றுக்கொள்பவைகளாயிருக்கின்றனவென்பது (பிரிவுகள் 54 முதல் 60 வரையிலும்), சிருஷ்டிக்கப்பட்ட எல்லா பொருள்களின் உபயோகங்களும், படிப்படியாய் மனிதன் வரையிலும், மனிதன் மூலமாய், தாங்கள் உற்பத்தியான சிருஷ்டி கர்த்தாவாகிய கடவுள் வரையிலும் ஏறுகின்றன வென்பது பிரிவுகள் 65 முதல் 68 வரையிலும் சொல்லப் பட்டிருக்கிறது.

308. எவனொருவன் சிருஷ்டிகர்த்தாவாகிய கடவுளிட மிருந்து உபயோகத்தைத் தவிர வேறு யாதொன்றும் உற்பத்தியாக முடியாதென்றும், ஆகையினால் வேறொன்றும் சிருஷ்டிக் கப்படமுடியாதென்றும் யோசித்தால், உபயோகங்கள் சிருட்டியின் முடிவுகளென்று யார் தெளிவாய் அறிந்துகொள்ள மாட்டான்? உபயோகமாயிருக்கவேண்டுமானால், அது மற்றவர்களுக்காக செய்யப்படவேண்டும். தனக்காக செய்யப்படும் உபயோகம் மற்றவர்களுக்காகவும் கூட இருக்கிறது; ஏனென்றால், தனக்காக ஒரு உபயோகமிருந்தால், மற்றவர்களுக்கு உபயோகமாகும்படியான ஓர் தகுந்த நிலையிலிருக்கிறது. இதை யோசிப்பவன், உபயோகமாயிருக்கிற உபயோகம் மனிதனிடமிருந்து உண்டாகாதென்றும், அவரிடமிருந்து உண்டாக்கப்பட்டவைகளெல்லாம் உபயோகமாயிருக்கிற ஆண்டவரிடமிருந்து, மனிதனில் அது இருக்கக்கூடுமென்றுகூட அறிந்து கொள்வான்.

309. ஆனால் உபயோகங்களின் உருவங்கள் இங்கே பிரஸ்தாபிக்கப்பட்டிருப்பதால், விஷயமானது பின்வரும்

ஒழுங்கில் சொல்லப்படும். I. மண்ணுலகங்களில், ரூபங்களில், உபயோகங்களேயும் அல்லது உபயோகங்களின் ரூபங்களே உண்டாக்க ஓர் முயற்சி இருக்கிறது. II. உபயோகங்களின் எல்லாரூபங்களிலும் பிரபஞ்சத்தின் சிருஷ்டியினிட கொஞ்சம் பிரதிமையிருக்கிறது. III. உபயோகங்களின் எல்லா ரூபங்களிலும் மனிதனிட ஓர் பிரதிமையிருக்கிறது. IV. உபயோகங்களின் எல்லா ரூபங்களிலும் முடிவற்றதும், நித்தியமான பொருள்களின் கொஞ்சம் பிரதிமை இருக்கிறது.

310. I. **மண்ணுலகங்களில், ரூபங்களில் உபயோகங்களே அல்லது உபயோகங்களின் ரூபங்களே உண்டாக்க, ஓர் முயற்சியிருக்கிறது.**

பூமிகளில் இந்த முயற்சி யிருக்கிறதென்பது, அவைகளின் உற்பத்தியிலிருந்து விசதமாகிறது. ஏனென்முல் மண்ணுலகங்கள் உண்டாக்கப்பட்ட பதார்த்தங்களும் பூதப்பொருள்களும், மேலே அறிந்துகொள்ளக்கூடியபடி (பிரிவுகள் 305, 306) பரமார்த்த சூரியனிடமிருந்து உபயோகங்களாக புறப்படுகிற ஆகாசங்களின் முடிவுகளாகவும் எல்லேகளாகவும் இருக்கின்றன. பூமிகள் உண்டாக்கப்பட்ட பதார்த்தங்களுக்கும் ஜடப் பொருள்களுக்கும் அவ்வித உற்பத்தி இருப்பதாலும், அவைகளின் கூட்டங்கள், ஆகாசங்கள் சுற்றி நெருக்குவதினல் சேர்க்கையில் நிலேநிருத்தப்பட்டிருப்பதாலும், அவைகளிலிருந்து உபயோகங்களின் ரூபங்களே உண்டாக்க அவைகள் ஓர் இடைவிடாத முயற்சியை அடைகின்றனவென்று ஏற்படுகிறது. அவைகள் தங்களிட உற்பத்திஸ்தானத்திலிருந்து, உற்பத்திசெய்ப சக்தியுள்ளவைகளாயிருக்கும் குணத்தையே அடைகின்றன. அதாவது அவைகள் இணங்கு

கிற ஆகாசங்களின் இறுதிப் பொருள்களாயிருக்கின்றன. இந்த முயற்சியும் இந்த குணமும் பூமிகளிலிருப்பதாகச் சொல்லப் படுகிறது. ஆனல், அவைகள் பூமிகளிலிருந்தாலும், பூமிகளி லிருந்து ஆகாசங்களில் வெளிபட்டாலும், இந்தப்பொருள் கள் பூமிகள் உற்பத்தியாகிற அந்த பதார்த்தங்களோடும், பூதப் பொருள்களோடும் இருக்கின்றன வென்பது அர்த்தம். ஆகா சங்கள் அவ்வித பொருள்களால் நிறைந்திருக்கின்றன வென் பது நன்றாய் தெரிந்திருக்கிறது. எல்லாவித விதைகளும், அவை களின் அந்தரங்க பாகங்கள் வரையில் சூட்டினல்திறக்கப் பட்டபோது மிகவும் நுண்ணிய பொருள்களால் நிரப்பப்படு கிறதென்கிறதிலிருந்து, மண்ணுலகங்களின் பதார்த்தங்களும் பூதப்பொருள்களும் அவ்வித முயற்சியையும் குணத்தையும் பெற்றிருக்கின்றன வென்பது தெளிவாகிறது. இது பரமாத்த உற்பத்தி ஸ்தானத்திலிருந்துதான் முடியும்; ஆகையினல், உபயோகத்துடன் தாங்களே சேர்ந்துகொள்ள, அவைகளுக்கு சக்தியுண்டு, அதிலிருந்து அவைகள் விஸ்தாரமாய் பலிக் கின்றன. பிறகு ஸ்தூல தொடர்கத்தையுடைய பூதப்பொரு ளோடு கூடி, அவைகள் உபயோகங்களின் ரூபங்களே உண் டாக்கி, கடைசியில் வெளிச்சத்துக்கு வந்து, இவ்விதமாக முளைத்து வளர, கருப்பப்பையிலிருந்து தள்ளுவதுபோல் வெளியே விடுகின்றன. இந்த முயற்சியானது, பிற்பாடு, மண்ணுலகங்களிலிருந்து வேறின் மூலமாய் இறுதியானவை களுக்கும், இறுதி பொருள்களிலிருந்து உபயோகமே உற் பத்தியாகிற முதன்மை பொருள்களுக்கும், தொடர்ச்சியா யிருக்கிறது. இவ்விதமாக உபயோகங்கள் ரூபங்களாக மாறு கின்றன. ஆன்மாவைப்போலிருக்கிற உபயோகத்திலிருந்து, ரூபங்கள், முதற்பொருள்களிலிருந்து இறுதிப்பொருள்கள்

வரையிலும், இறுதிப்பொருள்களிலிருந்து மூதற்பொருள்கள் வரையிலும் செல்லும்போது, அதன் ஒவ்வொன்றும் கொஞ்சம் உபயோகமாகவே இருக்க நேரிடுகிறது. உபயோகத்தின் உருவம் ஒரு சரீரத்தைப் போலிருப்பதால், உபயோகம் ஆன்மாவைப்போலிருக்கிறதென்று சொல்லப்படுகிறது. இன்னும் உள்ளான ஒரு முயற்சி, அதாவது பிராணிவர்க்கத்திற்கு செடிகள் மூலமாய் உபயோகங்களை உற்பத்திசெய்ய செய்யும் ஓர்முயற்சி இருக்கிறதென்று கூட ஏற்படுகிறது; ஏனென்ருல், இவைகளிஞல், எல்லாவித பிராணிகளும் போஷிக்கப்படுகின்றன. மானிடவர்க்கத்துக்கு உபயோகத்தைத் தரும் முயற்சியாகிய ஓர் அந்தரங்கமுயற்சிகூட இந்த பொருள்களில் இருக்கின்றனவென்பது கூட ஏற்படுகிறது. அடியில் கண்ட காரணங்களால், இவைகளெல்லாம் ஏற்படுகின்றன. 1. இந்தப் பொருள்களெல்லாம் இறுதிப்பொருள்களாயிருக்கின்றன ; இறுதிப்பொருள்களில் எல்லா முந்திய பொருள்களும், பல இடங்களில் மேலே காண்பிக்கப்பட்டபடி, அவைகளின் ஒழுங்கில் ஏககாலத்திலிருக்கின்றன. மேல் காண்பித்த படி (பிரிவுகள் 222 முதல் 229 வரையில்) எல்லா பொருள்களிலும் மிகப்பெரியதிலும் சின்னஞ் சிறியதிலும் இருவித நிலைகளிலிருக்கின்றன ; மேற்குறித்த முயற்சியிலும், அம்மாதிரியே யிருக்கிறது 3. இறுதிப் பொருள்களிலிருந்து ஆண்டவரால் எல்லா உபயோகங்களும் உற்பத்திசெய்யப்படுகின்றன; ஆகையிஞல் இறுதிப் பொருள்களில் உபயோகங்களைச் செய்ய முயற்சியிருக்கவேண்டும்.

311. அப்படியிருந்தும், உயிரின் இறுதியான சக்திகளின் முயற்சிகளாயிருக்கிறபடியிஞல், இந்த முயற்சிகளெல்லாம் உயிருள்ளவைகளல்ல. இந்த சக்திகளில், அவைகள் உற்பத்தியாகும் உயிரின் பொருட்டு, கொடுக்க வரும் ஏதுக்களால்

அவைகளின் உற்பத்தி ஸ்தானத்திற்கு திரும்ப முடிவாய் ஒரு முயற்சியிருக்கிறது. இறுதியுள்ள ஆகாசங்கள், மண்ணுலகங்களிலிருக்கிற பதார்த்தங்களின் பூதப்பொருள்களும், உள்ளேயும் புறத்திலும் ரூபங்களாக ஏவப்பட்டு, ரூபங்களில் வைக்கப்படுகிற அவ்வித சக்திகளாகின்றன. இந்த விஷயம் விசாலமாயிருப்பதால், இவைகளை எல்லாம் காலமானது இன்னும் நிறைய நிரூபிக்க முடியாமல் போய்விடுகிறது.

312. இந்த மண்ணுலகங்கள் இன்னும் புதியதாகவும் சுத்தத்திலும் இருந்தபோது, அவைகளிலிருந்து முதலில் உண்டானது விதைகளாயிருந்தது; அவைகளில் முதல் முயற்சி வேறொன்றுமிருக்க முடியாது.

313. II உபயோகங்களின் எல்லாரூபங்களிலும், சிருஷ்டியின் ஓர்வித ஒப்பு இருக்கிறது: உபயோகங்களின் ரூபங்கள், தாவரவர்க்க ரூபங்களென்றும், விருவர்க்க ரூபங்களென்றும், பிராணிவர்க்க ரூபங்களென்றும், மூன்றுவிதங்களாயிருக்கின்றன. தாவரவர்க்கத்தின் உபயோகங்களின் ரூபங்கள், கண்ணுக்குபுலப்படாமையால் விவரிக்கமுடியாது. முதல்ரூபங்கள், மண்ணுலகங்கள் உண்டாகிய எல்லாவற்றிலும் சிறிய பதார்த்தங்களும் பூதப்பொருள்களுமாயிருக்கின்றன; இரண்டாவது ரூபங்கள், இவைகளின் கூட்டங்கள்; அவைகள் முடிவற்ற பேதங்களை உடையவைகளாயிருக்கின்றன; மூன்றாவது ரூபங்கள், தூசிகளாக விழுந்த செடிகளிலிருந்தும், பிராணிகளின் பிணங்களிலிருந்தும், அதனுடன் பூமிகளோடு கலந்து அவைகளின் தரையை உருவாக்குகிற இவைகளிலிருந்து வரும் ஆவிகளிலிருந்தும் உண்டாகின்றன. தாவரவர்க்கத்தின் மூன்று நிலைகளின் இந்த ரூபங்கள் சிருஷ்டியை, ஆகாசங்கள் மூலமாயும், அவைகளின் சூட்டின் மூலமாயும், ஒளியின்

மூலமாயும், சூரியனால் ஏற்பட்டு, சிருஷ்டியின் முடிவுகளா யிருந்த உபயோகங்களை ரூபங்களாக உண்டாக்குகின்றன வென்பதில் ஒத்துப்போகின்றன. சிருஷ்டியை இவ்விதம் ஒத்துப்போகுதல், அவைகளின் முயற்சிகளில் மறைந்து கிடக்கிறது; அதைக்குறித்து 310-வது பிரிவைப்பார்க்கவும்.

314. விருக்ஷவர்க்கத்தின் உபயோகங்களின் ரூபங்களில், சிருஷ்டியின் ஒப்பு, அவைகளின் பிரதமப்பொருள்களிலிருந்து அவைகளின் இறுதிப்பொருள்களுக்கும், அவைகளின் இறுதிப்பொருள்களிலிருந்து அவைகளின் பிரதமப்பொருள்களுக்கும், அவைகள் செல்லுகின்றன என்பதில் தெரியவருகிறது. அவைகளின் பிரதமப் பொருள்கள் விதைகளாகவும், இறுதிப்பொருள்கள் பட்டையினால் உடுத்தப்பட்ட தண்டுகளாகவு மிருக்கின்றன; தண்டுகளின் இறுதிப்பொருளாயிருக்கிற பட்டையின் மூலமாய், முன் சொல்லியபடி, அவைகளின் பிரதமைப் பொருளாயிருக்கிற விதைகளுக்கு செல்லுகின்றன. பட்டை அடுக்குகளினால் உடுத்தப்பட்ட தண்டுகள், எல்லா உபயோகங்களின் சிருஷ்டியும் நிருமாணமும் உண்டாகிற பூமிகளினால் உடுத்தப்பட்ட பூகோளத்தை சாயல் காட்டுகிறது. பழத்தின் தொடக்கங்களுக்குள் தண்டுகளையும் கிளைகளையும் சுற்றிலும் இடைவிடாது கொண்டுபோகப்பட்ட வேர்களின் உறைகள் மூலமாய் செல்லுகிற உள்ளானதும் புறம்பானது மான பட்டைகளாலும் போர்வைகளாலும் வளர்ச்சி சம்பவிக்கிறதென்பதும், அம்மாதிரியே பழங்கள் விருக்ஷம் மூலமாய் விதைகளுக்கும் சம்பவிக்கிறதென்பதும், அநேகருக்கு தெரிந்திருக்கிறது. உபயோகங்களின் ரூபங்களில் சிருட்டியின் ஒரு ஒப்பனையானது, முதன்மையான பொருள்களிலிருந்து, இறுதிப் பொருள்கள் வரையிலும், இறுதிப்

பொருள்களிலிருந்து முதன்மைப்பொருள் வரையிலும், இந்தப் பொருள்களின் நிருமாணத்தின் அபிவிர்த்தியிலும் அதனுடன், எல்லா அபிவிருத்தியிலும் உபயோகங்களாயிருக்கிற பழங்களேயும் விதைகளேயும் உண்டாக்கும் முடிவு இருக்கிறதென்பதிலும் விசதமாகிறது. மேல் கூறியவைகளிலிருந்து, பிரபஞ்சத்தின் சிருஷ்டியின் அபிவிர்த்தியானது, சூரியனுல் சூழப்பட்ட ஆண்டவராகிய அதன் முதற்பொருளிலிருந்து, மண்ணுலகங்களாயிருக்கிற இறுதிப்பொருள்கள் வரையிலும், இவைகளிலிருந்து உபயோகங்கள் மூலமாய், அதன் முதற்பொருள் அல்லது ஆண்டவர் வரையிலும் செல்லுகிறதென்றும், மேலும் உபயோகங்கள் முழு சிருஷ்டியின் முடிவுகளாக இருக்கின்றனவென்றும் விசதமாகிறது.

315. ஸ்தூல உலகத்தின் சூடும் ஒளியும் ஆகாசங்களும் சிருஷ்டியின் இந்த ஒப்பனேக்கு எவ்விதத்திலும் ஏதுவாகயில்லாமல், பரலோகத்து சூரியனிட சூடும் ஒளியும் ஆகாசங்களும் மாத்திரம் அப்படி ஏதுவாயிருக்கின்றன வென்று தெரிந்திருக்கட்டும். இவைகள் அந்த ஒப்பனேயை தங்களோடு எடுத்துக்கொண்டு வந்து, விருக்ஷ வர்க்கத்தின் உபயோகங்களின் ரூபங்களில் உடுத்துகின்றன. ஸ்தூல லோகத்தின் சூடும் ஒளியும் ஆகாசங்களும் விதைகளே மாத்திரம் திறந்து, அதன் தளிர்களே விரிவில் வைத்து, அவைகளே ஸ்திரப்படுத்துகிற பொருள்களால் உடுக்கின்றன. ஆனுல் தாங்களே சக்திகளாயிராத தங்கள் சொந்த சூரியனிடமிருந்து வரும் எந்த சக்திகளின் பயனுயல்லாமல், இவைகளே நிறைவேற்ற அவைகள் இடைவிடாமல் ஏவப்படுகிற பரலோகத்து சூரியனிடமிருந்து வரும் சக்திகளால் இது நடக்கிறது. ஆனுல் ஸ்தூல சக்திகள், சிருஷ்டியின் ஓர் ஒப்பனே அவைகளுக்கு

உண்டாக்க எந்த விதத்திலும் உபயோகப்படுகிறதில்லை; ஏனென்றால் சிருஷ்டியின் ஒப்பனை பரமார்த்தமானது; ஆனால், அது ஸ்தூல லோகத்தில் தோன்றி உபயோகத்தைக் கொடுத்து, ஸ்திரமாய் நின்று, நீடித்திருக்கும் பொருட்டு, அது ஜடமாக்கப்படவேண்டும், அதாவது அந்த உலகத்தின் ஜடப்பொருள்களால் முழுமையும் நிரப்பப்படவேண்டும்.

316. ஒரு சரீரமானது ஒரு கருப்பைக்குள் அல்லது முட்டைக்குள் செலுத்தப்பட்ட விதையிலிருந்து உருவாக்கப் படுவதினால்,பிராணி வர்க்கத்தில் உபயோகங்களின்ரூபங்களில், சிருஷ்டியின் அம்மாதிரியான ஒப்பனை யிருக்கிறது; இந்த சரீரம் விதையின் இறுதிப் பொருளாய், பக்குவமான போது, தானே புது விதைகளை உண்டாக்குகிறது. இந்த அபிவிர்த்தி விருக்ஷவர்க்கத்தின் உபயோகங்களின் ரூபங் களிட அபிவிர்த்தியைப் போன்றதாயிருக்கிறது; விதை கள் தொடக்கங்களா யிருக்கின்றன, கருப்பை அல்லது முட்டை பூமியைப்போன்றதா யிருக்கிறது; பிறப்பதற்கு முன்னிருக்கும் நிலைமை வேர்பிடிக்கும்போது பூமிக்குள்ளி ருக்கும் விதையைப்போலிருக்கிறது; பிறந்த பிறகு பிள்ளை கள் பெருங்காலம்வரையில் இருக்கும் நிலைமை, ஒருமரமானது கனிகொடுக்கும் காலம் வரையில் வளர்தல்போலிருக்கிறது. செடிகளின் ரூபங்களில் சிருஷ்டியின் ஓர் ஒப்பனை இருக் கிறது போல், பிராணிகளின் ரூபங்களிலும் கூட முதற் பொருள்களிலிருந்து இறுதிப்பொருள்கள் வரையிலும், இறுதிப்பொருள்களிலிருந்து பிரதமப் பொருள்கள் வரையி லும், ஓர் அபிவிருத்தியிருப்பதினால், ஓர் ஒப்பனை இருக் கிறதென்பது இந்தஉபமானத்திலிருந்து தெளிவாகிறது. மனி தனில் ஒவ்வொரு தனித்த பொருளிலும், சிருஷ்டியின்

அதைப்போன்ற ஓர் ஒப்பனை யிருக்கிறது; ஏனென்றால், ஞானத்தின் மூலமாய் உபயோகங்கள் வரையில் அன்பின் அபிவிருத்தி அம்மாதிரியிருக்கிறது; ஆகையினால் புத்தியின் மூலமாய் செய்கைகள் வரையில், சித்தத்தின் அபிவிருத்திக்கும், பக்தியின் மூலமாய் பணிவிடைகள் வரையில் தருமத்தின் அபிவிருத்திக்கும், விஷயம் அம்மாதிரியேயிருக்கிறது. சித்தமும் புத்தியும், அதனுடன் தருமமும் பக்தியும் உற்பத்தியைஉண்டாக்கும் முதற்பொருள்கள்; சலனங்களும்பணிவிடைகளும் இறுதிப் பொருள்களாயிருக்கின்றன. இவைகளிலிருந்து உபயோகங்களின் சந்தோஷங்கள் மூலமாய்முன்சொல்லியபடி, சித்தமும் புத்தியுமாய் அல்லது தருமமும் பக்தியுமாயிருக்கிற, அவைகளின் முதற்பொருள்கள் வரையில், ஓர் திரும்பவருதல் சம்பவிக்கிறது. அப்படி திரும்பவருதல் உபயோகங்களின் சந்தோஷங்கள் மூலமாய் உண்டாகிறதென்பது, ஏதோ ஒருவித அன்பிலிருந்து உண்டாகிற சலனங்களிலும் பணிவிடைகளிலும் அனுபவிக்கப்படுகிற சந்தோஷத்திலிருந்து மிகவும் தெளிவாகிறது; ஏனென்றால் அவைகள் தங்களிட பிரதம உற்பத்தி ஸ்தானமாகிய அன்பிற்கு ஓடுகின்றன, இவ்விதத்தினால் சேர்க்கை சம்பவிக்கிறது: சலனங்களிடவும் பணிவிடைகளிடவும் சந்தோஷங்கள் உபயோகங்களின் சந்தோஷங்களென்றும் சொல்லப்பட்டவைகளாயிருக்கின்றன. பிரதம பொருள்களிலிருந்து இறுதிப்பொருள்கள் வரையினும், இறுதிப் பொருள்களிலிருந்து பிரதமப்பொருள்கள் வரையினும், அதைப்போன்ற ஓர் அபிவிருத்தியானது, மனிதனிலிருக்கும் ஆசைகளிடவும் சிந்தனைகளிடவும் மிகவும் சுத்தமாய் அங்க சம்பந்தமான ரூபங்களில் காண்பிக்கப்படுகிறது. மூளைகளில், மூளை மயமான சாம்பல் நிறமுள்ள பொருள்களென்று சொல்

லப்பட்ட நட்சத்திரம் போன்ற, ரூபங்களிருக்கின்றன; இவைகளிலிருந்து, நார்கள் மச்சைமயமான பொருள் மூலமாய் கழுத்துக்கு கீழே சரீரத்தில் போகின்றன. இந்தநார்கள் அங்கிருக்கும் இறுதிப் பொருள்களுக்குச் சென்று, இறுதிப் பொருள்களிலிருந்து அவைகளில் பிரதமப் பொருள்களுக்கு திரும்புகின்றன; நார்கள் அவைகளில் பிரதமப்பொருள்களுக்கு இரத்த நாடிகள் மூலமாய் திரும்புகின்றன. எல்லா அன்புகளும் சிந்தனைகளும் அந்த ரூபங்களிடவும் பொருள்களிடவும் நிலைமையில் உண்டாகும் மாறுதல்களாகவும் பேதங்களாகவு மிருக்கிறபடியினால், அவைகளுக்கும் அதைப்போன்ற ஓர் அபிவிருத்தியுண்டு. அந்தரூபங்கள் அல்லது பொருள்களிருந்து புறப்படும் நார்களை சூட்டுக்கும் ஒளிக்கும்கொள்கலாமா யிருக்கிறபரமார்த்த சூரியனிடமிருந்துவரும் ஆகாசங்களுக்கு ஒப்பிடலாம். சரீரத்தின் இந்த செயல்கள், பூமிகளிலிருந்து ஆகாசங்கள் மூலமாய் உண்டாக்கப்படுகிற பொருள்களைப்போலிருக்கின்றன; அவைகளிட உபயோகங்களின் சந்தோஷங்கள் தாங்கள் உற்பத்தியான மூல ஸ்தானத்திற்கு திரும்புகின்றன. ஆனால் ஆயிரங்கள் பதினாயிரங்கள் கணக்கான சக்திகள் செய்கையில் காரியப்படும்போது, ஒன்றாகத் தோன்றுகிறபடியினாலும், உபயோகங்களின் சந்தோஷங்கள் சிந்தனையில் அபிப்பிராயங்களுக்கு இடங்கொடுக்காமல், பிரத்தியேகமான புறப்பாடு இல்லாமல் ஒரு பலனை உண்டாக்குகிறதினாலும், இந்தப் பொருள்களின் அவ்வித அபிவிர்த்தி இருக்கிறதென்பதும், இந்த அபிவிருத்தியில் சிருஷ்டியின் ஓர் ஒப்பனையிருக்கிற தென்பதும், புத்தியினால் சரியாய் கிரகிப்பது அறிது. இந்த விஷயங்களைப் பற்றி, மேலே சொன்னதையும் காண்பித்ததையும் பார்க்கவும்.

சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களின் உபயோகங்கள் உயரத்தைச் சேர்ந்த நிலைகள் மூலமாய் மனிதன் வரையிலும், மனிதன் மூலமாய் அவைகள் உற்பத்தியாகிறசிருஷ்டிகர்த்தாவாகிய கடவுள் வரையிலும் உயர்கின்றன வென்பதை, 65 வது பிரிவு முதல் 68 வது பிரிவு வரையிலும், சிருஷ்டியின் முடிவு இறுதிப் பொருள்களிலிருக்கின்றது என்பதையும், அந்த முடிவு எல்லா பொருள்களும் சிருஷ்டி கர்த்தாவிடம் திரும்ப வேண்டு மென்பதையும், சேர்க்கை இருக்கவேண்டு மென்பதையும், 167 வது பிரிவு முதல் 172 பிரிவு வரையிலும் பார்க்கவும். ஆனால் இவைகளெல்லாம், இருதயத்தோடும் சுவாசாசயத்தோடுமிருக்கும் சித்தத்தினிடவும் புத்தியினிடவும் அன்னுவபத்தைப்பற்றி பேசப்போகும் பின்வரும் பாகத்தில் இன்னும் தெளிவாய்த் தோன்றும்.

**317. III. உபயோகங்களின் எல்லா ரூபங்களிலும் மேலே பிரிவுகள் 61 முதல் 64 வரையில் கூறியபடி, மனிதனிட ஓர் ஒப்பனை இருக்கிறது.**

பிரதமப் பொருள்களிலிருந்து இறுதிப் பொருள்கள் வரையிலும், இறுதிப்பொருள்கலிருந்து பிரதமப் பொருள்கள் வரையிலும் இருக்கும் எல்லா உபயோகங்களும், மனிதனிட எல்லா பொருள்களோடும் சம்பந்தமும், அவைகளோடு இசைவும் உடைத்தாயிருக்கின்றனவென்பதும், ஆகையினால், மனிதனானவன் ஓர்வித ஒப்பனையில் பிரபஞ்சமாக இருக்கிறானென்பதும், அதற்கு எதிரிடையாய், பிரபஞ்சத்தை உபயோகங்கள் விஷயம் யோசித்தால், ஓர் ஒப்பனையில் மனிதனையிருக்கிறதென்பதும் பின்வரும் பிரிவில் அறிந்து கொள்ளலாம்.

318. IV. உபயோகங்களின் எல்லா ரூபங்களிலும், முடிவற்றதும் நித்தியமுமான பொருள்களின், ஓர் ஒப்பனை இருக்கிறது

இந்த ரூபங்களில் முடிவற்றப் பொருளின் ஒப்பனையானது, முழு உலகத்தையும், அநேக உலகங்களையும் முடிவன்றி நிரப்ப, அவைகள் செய்யும்முயற்சியிலிருந்தும், அப்படி நிரப்பும் சக்தியிலுமிருந்தும் விசதமாகிறது. ஏனென்றால், ஒரு விதையானது, அதன் இடத்தை நிரப்புகிற ஓர் மரத்தையும், பூண்டையும், அல்லது செடியையும் உண்டாக்குகிறது; ஒவ்வொரு மரமும், பூண்டும் அல்லது செடியும், விதைகளை உற்பத்திசெய்கின்றது. சில சமயங்களில், விதைக்கப்பட்டு வளர்க்கப்பட்டபோது, அவைகளின் இடங்களை நிரப்புகிற ஆயிரங்கள் கணக்கான விதைகளை உற்பத்தி செய்கின்றன. அவைகளின் விதைகளின் ஒவ்வொன்றிலிருந்தும் புது விளைச்சல் உண்டாக்கப்பட்டு, பல முறையும் அவ்விதம் உண்டானால், சில காலங்களுக்குள் உலகம் முழுமையும் நிரப்பப்படும்; அந்த விளைச்சல் இன்னும் நீடிக்கப்பட்டால், அநேக உலகங்கள் நிரப்பப்படும்; இதுவும் சதாகாலம் நடக்கும். ஒரு விதையிலிருந்து உற்பத்தியானது ஆயிரமென்று கணக்கிடு, ஆயிரங்களால் ஆயிரங்களை பதின்மடங்கும், இருவதுமடங்கும், நூறுமடங்கும், பெருக்கு, அதன்பேரில் அது விசதமாகும். இந்த ரூபங்களில் நித்தியப் பொருளின் ஒப்பனை அம்மாதிரியேயிருக்கிறது. ஏனென்றால், விதைகள் வருஷத்துக்கு வருஷம் விருத்தியாக்கப்படுகிறது, அந்த பரப்புகை எப்பொழுதும் நிற்கிறதில்லை; உலகம் சிருஷ்டிக்கப்பட்டது முதல் நாளதுவரையில் அது நிற்கவில்லை, மேலும் சதாகாலம் வரையில் அது நிற்காது. இந்த இரண்டு பொருள்களும், பிரபஞ்

த்திலுள்ள எல்லா பொருள்களும், ஓர் முடிவற்றதும், சதாகால முள்ளதுமான கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட தென்பதற்கு தெளிவானரூபகாரங்களாகவும் சாட்சியமாகவும் இருக்கின் றன. இவைகளைத்தவிர, பிரபஞ்சத்தில் நிறைந்திருக்கிறபொரு ள்களில் சதாகாலம் வரையில் ஒரே தன்மையில்லாதபடி, ஆகா சங்களிலாவது, பூமிகளிலாவது, இவைகளிலிருந்து உண்டா கும் ரூபங்களிலாவது, எந்த பொருளும், நிலைமையும் அல்லது பதார்த்தமும் பிரபஞ்சத்தில் மற்ற எந்தப்பொருளோடும்ஒரே தன்மையாய் அல்லது வித்தியாசமில்லாமல் இருக்கமுடியா தென்கிற உண்மையினுல், பொருள்களின் விகற்பத்தில் முடி வற்றதும் நித்தியமுமான பொருளின் வேறொரு ஒப்பனை யிருக்கிறது. மனிதர்களின் முகங்களில் பார்க்கப்படும் விகர்ப் பத்தில் இது தெளிவாய் விசதமாகிறது ; முழு உலகத்திலும் மற்றதோடு ஒரே தன்மையுள்ள ஒரு முகமும் கிடையாது, அதுவுமல்லாமல் ஒன்றுகூட சதாகாலம் வரையில் மற்றொன் றைப்போல் ஓரேமாதிரி யிருக்கமாட்டாது ; ஆகையினுல், முகமானது மனதின் அச்சாக யிருப்பதினுல், ஒரு மனது மற்றொன்றைப்போல் ஓரே தன்மையுடையதாய் எந்த காலத்தி லும் இருக்கமுடியாது.

பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களையும், உபயோ கத்தை அனுசரித்துப் பார்த்தால், ஒப்பனையில் மனிதனை யொத் திருக்கிறது ; இது கடவுள் ஒரு மனிதன் என்பதற்கு சாட்சிய மாயிருக்கிறது.

319. மனிதனுனவன், பெரிய உலகத்தை அதாவது பிர பஞ்சத்தை அதன் பூரணத்தில், ஒத்திருக்கிறுனென்கிற கார ணத்தினுல், அவன் பூர்வீகர்களால் சிற்றண்டமென்று கூறப் பட்டான். ஆனுல், தற்காலத்தில், ஏன் மனிதன் பூர்வீகர்

களால் அம்மாதிரி சொல்லப்பட்டான் என்று யாருக்கும் தெரியாது ; ஏனென்றால், தன் சரீரம் சம்பந்தப்பட்ட வரையில், பிராணி வர்க்கத்திலிருந்தும் விருக்ஷவர்க்கத்திருந்தும் போஷிக்கப்பட்டு ஜீவிக்கிறானென்பதையும், அதன் சூட்டினால் உயிருள்ளவனாய், வைக்கப்பட்டு, அதன் ஒளியினால் பார்த்து, அதன் ஆகாசங்களால் கேட்டு, சுவாசமெடுக்கிறானென்பதையும் தவிர, பிரபஞ்சத்தின் அல்லது பெரிய உலகத்தின் ஏதுவும் அவனில் காணப்படுகிறதில்லை. என்றாலும், பிரபஞ்சமும் அதிலிருக்கும் எல்லா பொருள்களும் பெரிய உலகமாயிருப்பது போல், அதேமாதிரி இவைகளெல்லாம் மனிதனை ஒரு சிற்றண்டமாக செய்கிறதில்லை. ஆனால் பூர்வீகர்கள் மனிதனை சிற்றண்டம் அல்லது சிறிய பிரபஞ்சமென்று ஏன் சொன்னார்களென்பதற்குக் காரணம், அதிக பூர்வீக ஜனங்கள் அடைந்திருந்த அன்னுவயங்களின் அறிவிலிருந்தும், அதனுடன் சுவர்க்கலோகத்து தேவர்களோடு அவர்கள்வைத்திருந்த சம்பந்தத்திலிருந்தும் உண்டானது;ஏனென்றால், சுவர்க்கலோகத்து தேவர்களுக்கு தங்களைச்சுற்றி காணப்படும் உலகத்திலிருந்து பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும் உபயோகங்களை நோக்குங்கால், ஒப்பனையில் மனிதனை ஒத்திருக்கிறதென்று தெரியும்

320. ஆனால், சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சமானது, உபயோகங்கள் விஷயமாய் யோசிக்குங்கால், ஓர் ஒப்பனையில் மனிதனாயிருப்பதால், மனிதனானவன் ஓர் சிற்றண்டம் அல்லது சிறிய பிரபஞ்சமென்பது, பரலோகத்தில் பிரபஞ்சத்தைப்பற்றி கொள்ளப்படும் அபிப்பிராயத்திலிருந்து தவிர, எவனிட சிந்தனையிலும் பிரவேசித்து அறியப்படமாட்டாது. பரலோகத்திலிருக்கும் ஓர் தேவனாலும் அல்லது அந்த உல

கத்திலிருக்கவும், அங்கிருக்கும் பொருள்களைப் பார்க்கவும், அருள் செய்யப்பட்ட எவனே ஒருவனாலும் தவிர, இது உறுதிப்படுத்தப்படமுடியாது. இது எனக்கு அருள் செய்யப் பட்ட படியினால் நான் அங்கே பார்த்ததிலிருந்து, இந்த இரகசியத்தை வெளிப்படுத்த சக்தியுள்ளவனாயிருக்கிறேன்.

321. பரலோகமானது புறத்தோற்றத்தில் ஸ்தூல லோகத்துக்கு முழுமையும் ஒப்பானதாயிருக்கிறது. அங்கே தரைகளும், மலைகளும், குன்றுகளும், கணவாய்களும், மைதானங்களும், வயல்களும், ஏரிகளும், நதிகளும், நீர் ஊற்றுகளும் இவ்விதமாக தாவர வர்க்கத்துக்குச் சேர்ந்த எல்லாபொருள்களும் ஸ்தூல லோகத்தில் போல் பார்க்கப்படுகின்றன. பழத் தோட்டங்களும், தோப்புகளும், சோலைகளும், அவைகளில் பழங்களும் விதைகளும் தரும் எல்லாவித மரங்களும் பூண்டுகளும், அங்கே பார்க்கப்படுகின்றன; அதனுடன் செடிகளும் புஷ்பங்களும், கீரைகளும், புற்களும் இவ்விதமாக விருக்ஷ வர்க்கத்துக்கு சேர்ந்த எல்லா பொருள்களும் பார்க்கப்படுகின்றன. எல்லா பிரரணிகளும், பட்சிகளும், மீண்களும் இவ்விதமாக பிராணிவர்க்கத்துக்குச் சேர்ந்த எல்லா பொருள்களும் பார்க்கப்படுகின்றன. மனிதனானவன் அங்கே ஒரு வானவனாகவும் ஆவியாகவும் இருக்கிறான். அங்கே பொருள்கள் எல்லாம் ஸ்தூல உலகத்தில் இருப்பவைகள் போல் ஸ்திரமாயும் நிலையாயும் இல்லை என்கிற வித்தியாசத்தோடு, பரலோகத்து பிரபஞ்சத்தில் ஒன்றும் ஸ்தூலமாயில்லாமல், எல்லாம் பரமார்த்தமாயிருப்பதால், அது ஸ்தூல லோகத்து பிரபஞ்சத்துக்கு முழுமையும் ஒப்பானதா யிருக்கிறதென்று தெரிந்திருக்க, இது முன்னிட்டு சொல்லப்பட்டது.

322. அந்த உலகத்து பிரபஞ்சமானது, ஓர் ஒப்பனையில் மனிதனைப்போலிருக்கிறதென்பது, இப்பொழுதே சொன்ன (321 பிரிவு) பொருள்களெல்லாம், அவைகளால் உண்டாக்கப் பட்டது அல்லது சிருட்டிக்கப்பட்டதுபோல, உயிரோடிருப் பதாக பார்க்கப்பட்டு, ஒரு வானவனைச் சுற்றிலும் தேவர்கள் கூட்டத்தைச்சுற்றிலும் நிலைக்கின்றனவென்பதிலிருந்து தெளி வாய் விசதமாகிறது. அவைகள் அவர்களைச் சுற்றிலும் நிற்கின் றன; அவர்கள் முன்னால் இருக்காமல் போகிறதில்லை. அவை கள் அவர்களால் உண்டாக்கப்பட்ட அல்லது சிருஷ்டிக்கப் பட்ட பொருள்களைப்போல் இருக்கின்றனவென்பது, ஒருவா னவன் போய்விடுகிறபோது, அல்லது ஒருகூட்டமானது வேறு இடத்துக்கு போகிறபோது, அதே பொருள்கள் அப்புறம் பார்க்கப்படுகிறதில்லை என்பதிலிருந்து விசதமாகிறது. மற்ற விண்ணவர்கள் முன்கூறியவர்களுக்கு பதிலாக வருகிறபோது, அவர்களைச் சுற்றிய பொருள்களின் தோற்றமானது மாற்றப் படுகிறது;- பழத்தோட்டங்களும், அவைகளின் மரங்களும் பழங்களும், புஷ்பத்தோட்டங்களும் அவைகளின் அலர் களும் விதைகளும் மாற்றப்படுகின்றன; வயல்களும்கூட, அவை களின் பூண்டுகளோடும் புற்களோடும், மிருகங்கள் இனங் களும், பட்சிகள் இனங்களும் கூட மாற்றப்படுகின்றன. அவ் விதப்பொருள்கள் ஏன் தோன்றுகின்றன, அவைகள் ஏன் அப்படி மாறுகின்றன என்பதற்கு காரணமானது, தேவர் களின் ஆசைகளுக்கும் உற்பன்ன சிந்தனைகளுக்கும் தக்கபடி அவைகள் எல்லாம் வெளிவருகின்றனவென்பதாயிருக்கிறது; ஏனென்றால் அவைகள் அன்னுவயங்களாயிருக்கின்றன; அன்னுவயப்படுகிற பொருள்கள் அவைகள் அன்னுவயப்படும் பொருளோடு ஒன்றுகிறபடியினால், அவைகள் அதற்கு அறி

குறியான ஓர் பிரதிமையாயிருக்கின்றன. இவைகளை எல்லாம் அவைகளின் ரூபத்தில் யோசித்தால், உண்மையான ஒப்பனை தோன்ருது; ஆனால் உபயோகங்களை நோக்குமிடத்து, அது தோன்றும். தேவர்களிட கண்கள் ஆண்டவரால் திறக்கபபட்டு, உபயோகங்களின் அன்னுவயத்தால் இந்த பொருள்களை அவர்கள் பார்த்தபோது தேவர்கள் தங்களையே அவைகளில் ஒத்துக்கொண்டு பார்த்ததாக நான் அறிந்து கொள்ள எனக்கு அருள் செய்யப்பட்டது.

323. தேவர்களிட ஆசைகளுக்கும் சிந்தனைகளுக்கும் தக்கபடி அவர்களைசுற்றியிருக்கும் அந்த பொருள்கள், அங்கே தரைகளும், செடிகளும், பிராணிகளும் இருக்கின்றனவென்பதிலும், இவைகள் வானேனுக்கு அறிகுறியான ஓர் ஒப்பனையாகின்றன வென்பதிலும், ஓர்வித பிரபஞ்சத்தை குறிக்கிறபடியினால், பூர்வீகர்கள் மனிதனை ஓர் சிற்றண்ட மென்று ஏன் சொன்னார்கள் என்பது தெளிவாகிறது.

324. விஷயம் அப்படியிருக்கிற தென்பது, தேய்வ லோக இரகசிய மெனும் நூலிலும், சுவர்க்கமும் நரகமும் எனும் நூலிலும் முன்சென்ற பக்கங்களில் அன்னுவயத்தைப்பற்றி கூறப்பட்ட எல்லா விடங்களிலும் திரளாய் ரூபகாரம் செய்யப்பட்டிருக்கிறது. மேலும் மனிதனிட ஆசைகளோடும், அவன் மனித சிந்தனைகளோடும், மட்டுமல்லாமல், அவனிட சரீரத்தின் அங்கங்களோடும் ஆந்திரிகங்களோடும் கூட, (பொருள்களாயல்லாமல் உபயோகங்களாக) மனிதனிலிருக்கும் ஏதோ ஒன்ருேடு அன்னுவயப்படாதது, பிரபஞ்சத்தில் ஒன்று மில்லை என்று காண்பிக்கப்பட்டிருக்கிறது. இந்த காரணத்துக்காக, திருச்சபையையும், திருச்சபையைச் சேர்ந்தவனையும் பற்றியும் வேதத்தில் சொல்லப்படும்போது, மரங்கள்,

உதாரணமாக,ஒலிவைமரங்களும், திராட்சைசெடிகளும், தேவதாரிமரங்களும், அதனுடன் தோட்டங்களும், தோப்புகளும் சோலைகளும், இன்னும் பூமியிலுள்ள மிருகங்களும், காற்றிலுள்ள பட்சிகளும், கடலிலுள்ளமீன்களும் அவ்வளவு. அடிக்கடி சொல்லப்படுகின்றன. அவைகள் அன்னுவயப்பட்டு, மேல்கூறியபடி அன்னுவயத்தால் ஒன்றுகிறபடியினால், அவைகள் அம்மாதிரி சொல்லப்படுகின்றன. ஆதலால் மனிதர்கள் வேதத்தில் இவ்வித விஷயங்களைப் படிக்கும் போது தேவர்கள் அவைகளை அறிந்துகொள்ளுகிறதில்லை; ஆனால் அவைகளுக்கு பதிலாக திருச்சபையையும் திருசபையைச் சேர்ந்தமனிதரையும் அவர்கள் நிலைமைகள்விஷயத்தில் அறிந்து கொள்ளுகிறார்கள்.

325. பிரசஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும், மனிதனை ஓர் பிரதிமையில் சாயல் காட்டுகிறபடியினால், ஆதாம் என்பவர் ஞானமும் விவேகமும் சம்பந்தப்பட்ட வரையில், தன்னில் எல்லாவித மரங்களையும், அதனுடன் நதிகளையும், விலையுயர்ந்த கற்களையும், பொன்னையும் அதனுடன் கூட தான் பெயரிட்ட மிருகங்களையும் உடைத்தாயிருந்த ஏதேன் தோட்டத்தினால் விவரிக்கப்படுகிறது. இவைகள் எல்லாவற்றாலும், அவனிலிருந்ததும், மனிதன் என்று சொல்லப்பட்டதை உண்டாக்கியதுமான பொருள்களும், அறிந்துகொள்ளப்படுகின்றன. **எசேக்கியேல்**, அதிகாரம் XXXI, 3 முதல் 9வரையில் ஆசிரியனைப்பற்றி ஏறக்குறைய அதேவிஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவனால்திருச்சபை விவேகம் சம்பந்தப்பட்டவரையில் அர்த்தம் கொள்ளப்படுகிறது. எசேக்கியேல். XXVIII. 12,23ல் **தீரை** என்பதினால், திருச்சபை நன்மையும் உண்மையும் குறித்த அறிவுசம்பந்தப்பட்ட வரையில், அர்த்தம் கொள்ளப்படுகிறது.

326. இவைகளிலிருந்து, பிரபஞ்சத்திலுள்ள எல்லா பொருள்களும் உபயோகங்களை நோக்குமிடத்து, மனிதனை ஓர் ஒப்பனையில் சாயல் காட்டுகிறதென்றும், இது கடவுள் ஒரு மனிதன் என்று நிரூபிக்கிறதென்றும், இப்பொழுது விசதமாகிறது. ஏனென்றால், மேல் கூறியது போன்ற பொருள்கள், ஒரு வானவனிடமிருந்து ஓர் மானிடதேவனைச் சுற்றி வெளிவராமல், ஆண்டவரிடமிருந்து வானவன் மூலமாய் உண்டாகிறது. பெற்றுக்கொள்பவனாயிருக்கிற தேவனுக்குள் செல்லும் ஆண்டவரின் இச்சா சத்தியினிடவும் ஞானசத்தியினிடவும் உட்பிரவேசத்திலிருந்து அவைகள் உண்டாகின்றன. ஓர் பிரபஞ்சத்தை சிருஷ்டித்தல் அவன் கண்கள் முன்பாக நடக்கிறது. இதிலிருந்து அங்கே கடவுள் மனிதனென்றும், சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சம் உபயோகங்கள் சம்பந்தப்பட்டவரையில் யோசிக்குங்கால், அவரிடபிரதிமை என்றும் அவர்களுக்கு தெரியும்.

ஆண்டவரால் சிருஷ்டிக்கப்பட்ட எல்லா பொருள்களும் உபயோகங்களாயிருக்கின்றன ; மனிதனுக்கும் மனிதன் மூலமாய் அவைகள் உற்பத்தியாகும் ஆண்டவருக்கும் சம்பந்தப்பட்ட அந்த ஒழுங்கிலும், நிலையிலும், விஷயத்திலும், அவைகள் உபயோகங்களாயிருக்கின்றன.

327. இந்த விஷயங்களைப் பற்றி பின்வருமாறு மேலே சொல்லப்பட்டது. சிருஷ்டி கர்த்தாவாகிய கடவுளிடமிருந்து உபயோகத்தைதவிர வேறுயாதொன்றும் வெளிப்பட முடியாது (பிரிவு 308.). சிருஷ்டிக்கப்பட்ட எல்லாபொருள்களின் உபயோகங்களும், நிலைகள் மூலமாய் இறுதிப் பொருள்களிலிருந்து மனிதன் வரையிலும், மனிதன் மூலமாய் அவைகள் உற்பத்தியாகும் சிருஷ்டி கர்த்தாவாகிய கடவுள் வரையிலும்

ஏறுகின்றன (பிரிவுகள் 65 முதல் 68 வரையில்). எல்லா பொருள்களும் சிருஷ்டி கர்த்தாவாகிய கடவுளிடம் திரும்ப வேண்டுமென்கிறதும், அவரில் ஐக்கியப்படவேண்டுமென் கிறதுமாகிய சிருஷ்டியின் முடிவு இறுதிப் பொருள்களிலிருக் கின்றன (பிரிவுகள் 167 முதல் 172 வரையில்). பொருள்கள், சிருஷ்டி கர்த்தாவை எதிர்பார்க்கிற அளவு உபயோகங்களா யிருக்கின்றன (பிரிவு 307). தெய்வமானது தாமே சிருஷ்டித்த மற்றப்பொருள்களில் தவிர வேறு விதமாய் இருக்கவும் நிலைக் கவும்முடியாது (பிரிவுகள் 47 முதல் 51 வரையில்). பிரபஞ்சத் தின் எல்லாபொருள்களும் உபயோகங்களுக்கு தககபடியும், இதுவும் நிலைகளுக்கு தக்கபடியும் ஏற்பவைகளாயிருக்கின்றன (பிரிவு 58). உபயோகங்களிலிருந்து பார்க்கப்பட்ட பிரபஞ்சம் கடவுளின் பிரதிமையாயிருக்கிறது (பிரிவு 59). இதைத்தவிர இதர விஷயங்களும், இவைகளிருந்து ஆண்டவரால் சிருஷ்டிக் கப்பட்டஎல்லா பொருள்களும் உபயோகங்களாயிருக்கின்றன வென்பதும், மனிதனுக்கும், மனிதன் மூலமாய் அவைகள் உற் பத்தியான ஆண்டவருக்கும் சம்பந்தப்பட்ட அந்த ஒழுங்கி லும் நிலையிலும் விஷயத்திலும் அவைகள் உபயோகங்களா யிருக்கின்றன வென்பதுமாகிய இந்த உண்மை விசதமாகிறது. உபயோகங்களைப்பற்றி இப்பொழுது குறிப்பாய் சிலதுசொல்ல வேண்டியது, நிற்கிறது.

328. உபயோகங்கள் சம்பந்த மடைந்திருக்கிற மனி தன் என்பதால், ஒருமனிதன் மட்டுமல்லாமல், ஒரு குடியரசு நாடு, இராஜ்ஜியம் சக்ரவர்த்திதவம்போன்ற மனிதர் சமூகமும், சிறிய அல்லது பெரிய கூட்டமும் கூட, மேலும் முழு உலக மாகிய எல்லாவற்றிலும் பெரிய கூட்டமும் அர்த்தம் செய்து கொள்ளப்படுகிறது; ஏனென்றால், இவைகள்எல்லாம் மனிதனு

யிருக்கின்றன. சுவர்க்கத்திலும் அம்மாதிரியே தான்; ஆண்டவர் முன்பாக முழு தேவர்களிருக்கும் விண்ணுலகமும் ஒரு மனிதனைப் போலிருக்கிறது; சுவர்க்கத்து ஒவ்வொரு கூட்டமும் அம்மாதிரியிருக்கிறது. அதனால் தான் ஒவ்வொரு வானவனும் ஒரு மனிதனாயிருக்கிறான். இது அப்படியிருக்கிறதென்பது, **சுவர்க்கமும் நரகமும்** என்னும் நூலில் பிரிவுகள் 68 முதல் 103 வரையில் காணலாம். பின்வரும் பக்கங்களில் மனிதன் என்பதால் என்ன அர்த்தம் கொள்ளப்படுகிறதென்பதை இவைகள் தெளிவாக்குகின்றன.

329. உபயோகம் என்பது என்ன வென்று பிரபஞ்சத்தை சிருஷ்டித்த நோக்கம் விசதமாக்குகிறது. பிரபஞ்சத்தை சிருஷ்டித்த நோக்கம், முடிவில் தேவதாசம்பந்தமான சுவர்க்கம் நிறகவேண்டு மென்பதாயிருக்கிறது; அமரர் உலகம், நோக்க மானபடியினால், இந்த மானிடவர்கத்திலிருந்து சுவர்க்கம் ஏற்படுவதின் நிமித்தம் மனிதன் அல்லது மானிட வர்க்கமும் நோக்கமாயிருக்கிறது. ஆதலால், சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களெல்லாம், நடுவான முடிவுகளென்றும், மனிதனுக்கு, மனிதன் மூலமாய் கடவுளுக்கும் சம்பந்தப்பட்ட அந்த ஒழுங்கிலும், நிலையிலும், விஷயத்திலும் இவைகள் உபயோகங்களாயிருக்கின்றன வென்றும் ஏற்படுகிறது.

330. சிருட்டி உண்டானதின் கருத்து, மானிடவர்க்கத்திலிருந்து, வானோர் உலகத்தையும், இவ்விதமாக மானிடவர்கத்தையுமே ஏற்படுத்த வேண்டுமென்பதா யிருப்பதினால், சிருஷ்டிக்கப்பட்ட இதர பொருள்க ளெல்லாம் மனிதனுக்கு சம்பந்தப்பட்டிருப்பதனால், அவனிட சரீரமும், அறிவும், ஆண்டவரோடு ஐக்கியப்படும் பொருட்டு அவனுக்கு இருக்கும் பரமார்த்தமானதும் ஆகிய இந்த மூன்றையும்

ஆதரிக்கிற நடுவான முடிவுகளா யிருக்கின்றன. ஏனென்றால், மனிதன் பரமார்த்தமானவனுயில்லாவிட்டால், ஆண்டவருடன் ஐக்கியப்பட முடியாது; அவனுக்கு பகுத்தறிவு இல்லாவிட்டால் பரமார்த்தமாயிருக்கமுடியாது; அவனிட சரீரம் சரியான நிலைமையில் இல்லாவிட்டால் அறிவுள்ளவனுயிருக்கமுடியாது. இவைகளெல்லாம் ஒரு வீட்டைப்போலிருக்கின்றன; சரீரமானது கடைக்கால்போலிருக்கிறது, அறிவு அதின்பேரில் கட்டப்பட்ட வீட்டைப்போ லிருக்கிறது; பரமார்த்தமானது அவ்வீட்டி லிருக்கும் பொருள்களைப் போலிருக்கிறது, ஆண்டவருடன் ஐக்கியப்படுதல் அவ்வீட்டில் குடியிருத்தல் போலிருக்கிறது. சிருஷ்டியின் நடுவான முடிவுகளாயிருக்கிற உபயோகங்கள், மனிதனுக்கு சம்பந்தப்படுகிற ஒழுங்கும், நிலையும், சம்பந்தமும் விசதமாகிறது. ஆகையினுல், அவைகள் அவனிட சரீரத்தை காப்பாற்றவும், அவனிட விவேகத்தை சம்பூர்ணம் செய்யவும், ஆண்டவரிடமிருந்து பரமார்த்தமானதை அடையவும் சம்பந்தப்பட்டிருக்கின்றன.

331. சரீரத்தை பராமரிக்கும் உபயோகங்கள், அதன் போஜனமும், உடுப்பும், வசதியும், விளையாட்டும், சுகானுபவமும், தன்னிலைமை காப்பாற்றிக்கொள்ளுதலும், இரக்ஷித்தலுமாயிருக்கின்றன. சரீரத்தை போஷிக்க சிருஷ்டிக்கப்பட்ட உபயோகங்கள், சாப்பிடவும் குடிக்கவும் நல்லவைகளாயிருக்கிற பழங்கள், சிறு பழங்கள், விதைகள், காய்த்தானியங்கள், கீரைகள் முதலிய விருக்ஷவர்க்கத்து பொருள்களும், ஆகாரமாயிருக்கக்கூடிய, எருதுகள், பசுக்கள், கன்றுகுட்டிகள், மான், ஆடு, வெள்ளாட்டுகுட்டிகள், வெள்ளாடுகள், செம்மறியாட்டுகுட்டிகள், முதலிய பிராணிவர்க்கத்து பொருள்களும்,

அதனுடன், பாலும், பலவிதமான கோழிகளும் மீன்களுமா யிருக்கின்றன. இந்த இரண்டு வர்க்கங்களிலுமிருந்து சரீர த்தை உடுத்தவும், அதனுடன், குடியிருக்கவும், விளையாட வும், சுகத்தை அனுபவிக்கவும், தன்னிலைமையை காபாற்றிக் கொள்ளவும், இரக்ஷிக்கவும் சிருஷ்டிக்கப்பட்ட உபயோகங் கள் பலவிதமானதாயிருக்கின்றன. அவைகள் நன்றாய் தெரிந் திருக்கிறபடியினாலும், அவைகளை சொல்லுதல் இடம்கொள் ளுமாதலாலும், அவைகள் விரித்து சொல்லப்படவில்லை. மனிதனுக்கு, நிஜமாகவே ஒரு உபயோகமும் தராத அநேக பொருள்கள் இருக்கின்றன; ஆனால் அமிதம் உபயோகத்தை கெடுக்காமல், அவைகளை பிடிவாத முள்ளவைகளாய் செய் கின்றன. உபயோகங்களை துர்வினியோகங்கள் செய்தலு முண்டு; ஆனால் புரட்டர்களோடு தவிர, உண்மையை பொய்ப் பித்தல், அந்த உண்மையை பலயீனப்படுத்தாதுபோல், துர் வினியோகம் உபயோகத்தை அழிக்கிறதில்லை.

332. விவேகத்தை சம்பூர்ணம் செய்யும் உபயோகங் கள், இப்பொழுதுதான் கூறிய விஷயங்களை கற்பிக்கும் இயற் கைக்கு சம்பந்தப்பட்டதும், கிரக கிருத்திய சாஸ்திரத்துக்கு சம்பந்தமானதும், தேசாசாரமானதும், சன்மார்க்கமானது மாகிய சாஸ்திரங்களும் படிப்புகளுமாயிருக்கின்றன. இவை கள் எல்லாம் பெற்றோர்களிடமிருந்தும், ஆசிரியர்களிடமிருந் தும் அல்லது புஸ்தகங்களிடமிருந்தும், மற்றவர்களோடு சம் பாஷணை செய்வதிலிருந்தும், அந்த விஷயங்களைக் குறித்து யோசிப்பதிலிருந்தும் தெரிந்து கொள்ளப்படுகின்றன. இவை களெல்லாம், உயந்த நிலையின் உபயோகங்களாயிருக்கிற அளவு அறிவை பூரணமாக்குகின்றன; வாழ்க்கையில் அவைகள் உபயோகப்படுத்தப்படுகிற வரையில் ஸ்திரமாயிருக்கின்றன.

இந்த உபயோகங்கள் அதிகமாயிருப்பதாலும், பொது நன்மையுடன் அவைகளுக்கு இருக்கும் பலவித சம்பந்தத்தாலும், இவைகளை விரித்து சொல்ல சமயம் சரிபடவில்லை.

333. **ஆண்டவரிடமிருந்து பரமார்த்தமானதை அடைவதற்கு ஏற்ற உபயோகங்கள்,** மதத்திற்கும் பூஜைக்கும் சம்பந்தப்பட்ட எல்லா பொருள்களாயிருக்கின்றன. அவைகள் கடவுளை ஒத்துகொண்டு அவரை அறிந்து கொள்ளும் பொருட்டும், நன்மையையும் உண்மையையும், இவ்விதமாக சதாகால வாழ்க்கையையும், அறிந்து கொண்டு அவைகளை ஒத்துக்கொள்ளும் பொருட்டும் கற்பிக்கும் எல்லா பொருள்களுமாயிருக்கின்றன. இவைகள் கல்வியின் பல பாகங்களைப் போல், பெற்றோர்களிடமிருந்தும், ஆசிரியர்களிடமிருந்தும், சம்பாஷணைகளிலிருந்தும், புஸ்தகங்களிலிருந்தும், முக்கியமாய் அவ்வித அறிவுக்கு தக்கபடி வாழ்க்கையை நடத்துவதிலிருந்தும், கற்றுக் கொள்ளப்படுகின்றன; கிருஸ்துவ உலகத்தில், வேதத்திலிருந்து ஏற்படும் கோட்பாடுகள் மூலமாயும் சம்பாஷணைகள் மூலமாயும், ஆண்டவரிடமிருந்து வந்த வேதத்தின் மூலமாயும் இவைகள் தெரிந்துகொள்ளப்படுகின்றன. அவைகளின் முழுபரப்பில் இந்த உபயோகங்களை, ஆன்மாவிற்கு பிரயோகித்தால், சரீரத்தின் உபயோகங்களுக்கு வழங்கப்படும் வார்த்தைகளாகிய, போஷிப்பு, உடுப்பு, வாசம், பொழுதுபோக்கு, கொண்டாட்டம், நிலைமையின் பாதுகாப்பு, பரிபாலனம்போன்ற வார்த்தைகளால் விவரிக்கலாம். ஆன்மாவிற்கு மாத்திரம் இவைகள் வழங்கப்படவேண்டும். இவ்விதமாக அன்பின் நன்மைகளுக்கு போஷிப்பு என்பதையும், ஞானத்தின் உண்மைகளுக்கு உடுப்பையும், சுவர்க்கத்துக்கு வசதியையும், வாழ்க்கையின் சுகத்துக்கும் சுவர்க்

லத்துக்கு அடுத்த ஆனந்தத்திற்கும் பொழுது போக்குதலை யும், கொண்டாட்டத்தையும், உபாதிசெய்யும் தீமைகளுக்கு விரோதமாய் பாதுகாத்தலுக்கு பாதுகாப்பையும், சதாகால வாழ்விற்கு நிலைமையின் பரிபாலனத்தையும் உபயோகப்படுத்த லாம். சரீரத்துக்குசேர்ந்த எல்லா பொருள்களும்கூட ஆண்ட வரிடமிருந்து வருகிறதென்றும், மனிதனானவன் தன்னிட ஆண்டவரிட சாமான்களை பார்த்துகொள்ள ஏற்படுத்தப் பட்ட ஓர் வேலைக்காரனைப்போலவும், வேலைக்காரர்களுக்கு மேல் அதிகாரிபோலவும் மாத்திரம் இருக்கிறானென்றும், ஒத்துக்கொள்ளுதலுக்கு தக்கபடி, இவைகளெல்லாம் ஆண்ட வரால் கொடுக்கப்படுகின்றன.

334. இவ்விதப்பொருள்கள், மனிதனுக்கு அவன் அனுப விக்கக் கொடுக்கப்படுகிறதென்பதும், அவைகளெல்லாம் கைம்மாறு வேண்டாது கொடுக்கப்பட்ட கொடைகளென்ப தும், பூமியிலிருக்கும் மனிதர்களைப்போல் சரீரத்தையும், பகுத் தறிவுடைமையையும், பரமார்த்தமானதையும் உடைத்தா யிருக்கிற சுவர்க்கங்களிலிருக்கும் தேவர்களின் நிலைமையிலிரு ந்து மிகவும் வெளிப்படையாகிறது. ஆகாரம் அவர்களுக்கு பிரதிதினம் கொடுக்கப்படுகிறபடியினால், அவர்கள் இலவச மாய் போஷிக்கப்படுகிறார்கள்; ஆடைகள் அவர்களுக்கு கொடுக்கப்படுகிறபடியினால், அவர்கள் இலவசமாய் உடுத்தப் படுகிறார்கள்; வீடுகள் அவர்களுக்கு கொடுக்கப்படுகிறபடியி னால், இலவசமாய் அவர்கள் குடியிருக்கிறார்கள்; இதுவுமல் லாமல், அவர்களுக்கு இவைகளெல்லாம் வேண்டுமென்கிற கவலையே கிடையாது; அவர்கள் அறிவுடன் பரமார்த்தமாய் எவ்வளவு இருக்கிறார்களோ அவ்வளவு, களிப்பும் பாதுகாப்பும் நிலைமையின் பரிபாலனமும் அவர்களுடையதாயிருக்கின்றன.

முன்பிரிவு 322 ல் காண்பிக்கப்பட்டபடி தேவர்கள் தங்களிட அன்பினிடவும் ஞானத்தினிடவும் நிலைமையை அனுசரித்து சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற படியினால், அவர்கள் இவைகளெல்லாம் ஆண்டவரிடமிருந்து உண்டாகிறதென்று தெரிந்துகொள்ளுகிறார்களென்பதிலும், மனிதர்களுக்குவேண்டியவைகள் வருஷந்தோறும் வருகிறபடியினாலும், அவர்களிட அன்பினிடவும் ஞானத்தினிடவும் நிலைமைகளுக்கு தக்கபடி வராமல், அவர்கள் அவைகளைப்பற்றி கவலைப் படுவதற்கு தக்கபடி வருகிறபடியினாலும், மனிதர்கள் இதை தெரிந்துகொள்ளுகிறதில்லை என்பதிலும், மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் வித்தியாசம் ஏற்படுகிறது.

335. மனிதன் மூலமாய் ஆண்டவருடன் அவைகளுக்கு சம்பந்தமிருப்பதினால், இந்தப்பொருள்களெல்லாம் உபயோகங்களென்று சொல்லப்பட்ட போதிலும், மனிதன்பொருட்டு ஆண்டவரிட மிருந்து வரப்பட்டவை யல்லாமல், ஆண்டவர் பொருட்டு மனிதனிடமிருந்துவரும் உபயோகங்களென்று சொல்ல முடியாது; ஏனென்றால் எல்லா உபயோகங்களும் ஆண்டவரிடத்தில் முடிவில்லாமல் ஒன்றாயிருக்கின்றன; மேலும் ஆண்டவரிடமிருந்து வருவதல்லாமல் மனிதனிடம் எந்த உபயோகங்களுமில்லை; ஏனென்றால் ஆண்டவரிடமிருந்தல்லாமல், மனிதன் தன்னிடமிருந்தே நன்மை செய்ய முடியாது. உபயோகமென்று சொல்வது தான், நன்மை என்று சொல்லுவது. தன் சுயலாபத்துக் கல்லாமல், மற்றவர்களுக்கு நன்மை செய்தல் பரமார்த்த அன்பின் சாரமாயிருக்கிறது. இதுமுடிவின்றி அதிகமாய் பரம இச்சா சக்தியின் சாரமாயிருக்கிறது. பெற்றோர்களுக்கு குழந்தைகள் பேரிலிருக்கும் அன்பைப்போன்று இது இருக்கிறது; பெற்

ஞோர்கள், தங்களுக்காக அல்லாமல், குழந்தைகளின் பொருட்டு அவர்களுக்கு அன்பினால் நன்மை செய்கிறார்கள்; ஒரு தாயானவள் தன்னிட சிறுகுழந்தைகளுக்குக் காட்டும் அன்பிலிருந்து, இது விசதமாகிறது. ஆண்டவர் தொழப்பட்டு, அர்ச்சிக்கப்பட்டு, மகிமைபடுத்தப்பட வேண்டியவராயிருப்பதினால், அவர் பூஜையையும், அர்ச்சனையையும் மகிமையையும் தன்பொருட்டே விரும்புகிறாரென்று நம்பப்படுகிறது; ஆனால் மனிதன் பொருட்டு, அவைகளை அவர் நேசிக்கிறார்; ஏனெனில், அதனால் தெய்வமானது உள்ளே பிரவேசித்து அறிந்து கொள்ளப்படக்கூடிய ஓர் நிலைமைக்கு மனிதன் வருகிறான். இந்த செய்கையினால் உட்பிரவேசத்தையும் ஏற்றுக் கொள்ளுதலையும் தடுக்கிற தன்னிட, சொந்த சுபாவமானதை மனிதன் நீக்குகிறான். ஆணவம், தன் சுயலாபத்தை நாடுதலாகும், இது இருதயத்தை கடினப்படுத்தி, மூடுகிறது. மனிதனானவன் தன்னிடமிருந்து தீமையைத் தவிர வேறொன்றும் செய்கிறதில்லையென்றும், ஆண்டவரிடமிருந்து நன்மையைத் தவிர வேறொன்றும் வருகிறதில்லையென்றும், ஒத்துக்கொள்ளுவதால் இந்த தடை நீக்கப்படுகிறது; இவ்வாறு ஒத்துக்கொள்ளுதலினால், பூஜையும் ஆராதனையும் தாராளமாய் உண்டாகிற இருதயம் மிருதுவாக்கப்படுதலும், மனத்தாழ்வும் உண்டாகின்றன, ஆண்டவர் மனிதன் மூலமாய் தனக்கே செய்கிற உபயோகங்கள், அன்பினால் அவர் ஆசிர்வதிக்க சக்தியுள்ளவராயிருக்கிறார் என்பதில் அடங்கியிருக்கிற தென்பது பின் தொடருகிறது; இது அவரிட அன்பானபடியினால், ஏற்றுக்கொள்ளுதல்அவர் அன்பின் ஆனந்தமாயிருக்கிறது. ஆகையினால், தன்னை அர்ச்சிக்கிறவர்களுடன்மட்டும் ஆண்டவரிருக்கிறாரென்று யாரும் நம்பவேண்டியதில்லை. உபயோகங்களாயிருக்கிற அவரிட கட்

டளைகள்படி செய்கிறவர்களுடன் அவரிருக்கிறார்; பின் சொன்னவர்களிடத்தில் தன்னிட வாசஸ்தானத்தை அவர் உடைத்தாயிருக்கிறார். முன் சொன்னவர்களோடு அல்ல. இந்த விஷயத்தைப்பற்றி மேலே 47, 48, 49-வது பிரிவுகளில் சொன்னதைப்பற்றி கூட பார்க்கவும்.

**கெட்ட உபயோகங்கள் ஆண்டவரால் சிருஷ்டிக்கப்படவில்லை; ஆனால் அவைகள் நரகத்தோடுகூட உற்பத்தியாயின.**

**336.** ஒரு செய்கையில் நன்மையாயிருக்கப்பட்டவைகளெல்லாம் உபயோகங்கள் என்று சொல்லப்படுகின்றன; ஒரு செய்கையில் கெட்டவைகளெல்லாம் கூட உபயோகங்கள். என்று சொல்லப்படுகின்றன; ஆனால் பின் கூறியவைகள் கெட்ட உபயோகங்கள், முன்கூறியவைகள் நல்ல உபயோகங்கள். நன்மையாயிருக்கப்பட்டவைகளெல்லாம் ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினாலும், கெட்ட பொருள்கலெல்லாம் நரகத்திலிருந்து வருகிறபடியினாலும், நல்ல உபயோகங்கள் தவிர வேறொன்றும் ஆண்டவரால் சிருஷ்டிக்கப்படவில்லை யென்றும், கெட்ட உபயோகங்கள் நரகத்திலிருந்து உற்பத்தியான தென்றும் ஏற்படுகிறது. இந்த பிரிவில், விசேஷமாய் சொல்லப்படும் உபயோகங்கள் என்பதால் எல்லாவித பிராணிகளிலும் எல்லாவித விருக்ஷாதிகளிலும் போன்ற பூமியின்பேரில் தோன்றும் எல்லாபொருள்களும் அறிந்து கொள்ளப்படுகின்றன. இவைகளில், மனிதனுக்குஉபயோகமானவைகள், ஆண்டவரிடமிருந்து வருகின்றன; மனிதனுக்கு கெடுதியானவைகள் நரகத்திலிருந்து வருகின்றன. அம்மாதிரியே, ஆண்டவரிடமிருந்து வரும் உபயோகங்கள் என்பதால்,மனிதனிட பகுத்தறியுடைமையை பூரணமாக்குகிறதும், ஆண்டவரிட மிருந்து ஒரு பரமார்த்தமானதைப் பெற்

றுக்கொள்ள செய்கிறதுமான எல்லா பொருள்களும் அருத்தம் கொள்ளப்படுகின்றன ; ஆனல் கெட்ட உபயோகங்கள் என்பதால், பகுத்தறிவுடைமையை அழித்து, மனிதன் பரமார்த்த மாகாதபடி செய்கிற எல்லா பொருள்களும் அர்த்தம் கொள்ளப்படுகின்றன. மனிதனுக்கு கெடுதி செய்யப்பட்ட பொருள்கள் ஏன் உபயோகங்கள் என்று சொல்லப்படுகின்றன என்பதற்கு காரணம், துஷ்டர்களுக்கு தீமை செய்ய அவைகள் உபயோகப்படுகின்றன வென்பதும், கெடுதியானவைகளை நீக்கவும், இவ்விதமாக பரிஹாரங்களுக்கும் கூட உதவுகின்றன வென்பதுமா யிருக்கிறது. அன்பைப்போல, உபயோகம் என்கிற வார்த்தையும், இரண்டு அர்த்தத்திலும் பிரயோகிக்கப்படுகின்றன; ஏனென்றல் நாம் நல்ல அன்பென்றும் கெட்ட அன்பென்றும் பேசுகிறோம் ; அன்பானது தான் செய்வதை எல்லால் உபயோக மென்கிற பெயரால் கூப்பிடுகிறது.

337. நல்ல உபயோகங்கள் ஆண்டவரிடமிருந்து வருகிறதென்பதும், கெட்ட உபயோகங்கள் நரகத்திலிருந்து வருகின்றன வென்பதும், இந்த ஒழுங்கில் நிச்சயப்படுத்தப்படும். I. பூமியின் பேரில் கெட்ட உபயோகங்கள் என்பதால் என்ன அர்த்தம் கொள்ளப்படுகிறது. II. கெட்ட உபயோகங்களாயிருக்கும் எல்லா பொருள்களும் நரகத்திலிருக்கின்றன; நல்ல உபயோகங்களாயிருக்கும் எல்லா பொருள்களும் சுவர்க்கத்திலிருக்கின்றன. III பரமார்த்த உலகத்திலிருந்து ஸ்தூல உலகத்துக்குள் இடைவிடாத உட்பெருக்கம் இருக்கிறது. IV. நரகத்திலிருந்து வரும் உட்பெருக்கம் கெட்ட உபயோகங்களாயிருக்கும் பொருள்களை, அனுவயப்படும் பொருள்கள் இருக்கும் இடங்களில் காரியப்படுத்துகின்றன.

V. இறுதியான பரமார்த்தப் பொருள் அதன், அதற்கு உயர்ந்த நிலைகளிலிருந்து பிரிக்கப்பட்டபோது, இந்த பலனை உற்பத்தி செய்கிறது. VI. உட்பெருக்கால் செய்கை உண்டாகுகிற செடி ரூபமென்றும் பிராணி ரூபமென்றும் இரண்டு ரூபங்கள் இருக்கின்றன. VII. இந்த இரண்டு ரூபங்களும், தங்கள் இனங்களை விருத்திசெய்யும் சக்தியையும், விருத்தி செய்ய வழிவகைகளையும் அடைகின்றன.

**338. I. பூமியின்பேரில் கெட்ட உபயோகங்கள் என்பதால் என்ன அர்த்தம் கொள்ளப்படுகிறது.**

கெட்ட உபயோகங்கள் என்பதால் பிராணி வர்க்கத்திலும் விருக்ஷவர்க்கத்திலும் இரண்டிலுமுள்ள தீங்கான பொருள்களும், ஸ்தாவரவர்க்கத்திலுள்ள தீங்கான பொருள்களும் கூட அறிந்து கொள்ளப்படுகின்றன. இந்த வர்க்கங்களிலுள்ள தீங்கான பொருள்களை வரிசைக்கிரமமாகச் சொல்லுதல் அவசியமாயிருக்கிறது; ஏனென்றால் இது பெயர்களை அதிகரிக்க மாத்திரம் உதவும்; ஒவ்வொரு விதத்தின் தீங்கான பலனை குறித்து சொல்லாவிடுதல், இந்த நூல் கருதும்உபயோகத்தை அதிகப்படுத்தாது.அறிவின்பொருட்டு சில உதாரணங்களைச் சொல்லுதல் இங்கே போதுமானதாயிருக்கிறது. உதாரணமாக, பிராணிவர்க்கத்தில், விஷமுள்ள சர்ப்பங்களும், தேள்களும், முதலைகளும், பறவை நாகங்களும், கொம்புள்ள ஆந்தைகளும், கத்தும் ஆந்தைகளும், சுண்டெலிகளும்,வெட்டுக்கிளிகளும், தவளைகளும், சிலந்திப் பூச்சிகளும், அதனுடன்ஈக்களும் தேனீக்களும்,பூச்சிகளும்பேன்களும்இன்னும் இதர மற்றவைகளினால் ஜீவனம் செய்பவைகளும்; சுருங்கச்சொல்லில் புற்களையும்இலைகளையும், கனிகளையும்,விதைகளையும், இரைச்சிகளையும்,பானங்களையும் உண்ணும்பிராணிகளும்,

மிருகங்களுக்கும் மனிதர்களுக்கும் தீங்கு செய்யும் பிராணிகளும் இருக்கின்றன. விருக்ஷவர்க்கத்தில், கொடியதும், உக்கிரமானதும், விஷமுள்ளதுமான பூண்டுகளும், அவ்வித குணங்களுள்ள கோதுள்ள செடிகளும் பூண்டுகளுமிருக்கின்றன. தாவரவர்க்கத்தில், எல்லாவிஷமுள்ள மண்களும் இருக்கின்றன. பூமியின் பேரில் கெட்ட உபயோகங்கள் என்பது என்னவென்று இந்த சொல்ப விவரங்கள் தெரியப்படுத்தும். கெட்ட உபயோகங்கள் என்பவை, நல்ல உபயோகங்களுக்கு எதிரிடையான எல்லா பொருள்களுமாய் இருக்கின்றன. அதைப் பற்றி மேலே 336-வது பிரிவில் பார்க்கவும்.

**339. II. கெட்ட உபயோகங்களா யிருக்கிற எல்லா பொருள்களும் நரகத்திலிருக்கின்றன; நல்ல உபயோகங்களா யிருக்கிற எல்லா பொருள்களும் சுவர்க்கத்திலிருக்கின்றன.**

பூமியின் பேரிலிருக்கிற எல்லா கெட்ட உபயோகங்களும், ஆண்டவரிட மிருந்தன்றி, நரகத்திலிருந்து வந்ததாக அறிந்து கொள்வதற்கு முன், சுவர்க்கத்தையும் நரகத்தையும் குறித்து சிலது முன் சொல்லவேண்டும். ஏனென்றால், இது தெரிந்திருக்காவிட்டால், நல்ல உபயோகங்களும் கெட்ட உபயோகங்களும் கூட ஆண்டவர் செய்ததாக அவர்பேரில் ஆரோபிக்கப்பட்டு, அந்த இரண்டும் ஏககாலத்தில் சிருஷ்டிக்கப்பட்டதாக நினைக்கப்படும்; அல்லது அவைகள் பிரகுருதிக்கும், அவைகளின் உற்பத்தி, அதன் சூரியனுக்கும் ஆரோபிக்கப்படும். மனிதர்களுக்கு சூட்சும உலகத்தில் காரணமும் உற்பத்தியும் உடைத்தாயிராத ஸ்தூல லோகத்தில் யாதொன்றுமில்லை யென்றும், நன்மையானது ஆண்டவரிடமிருந்து வருகிறதென்றும், தீமையானது பிசாசினிடமிருந்து அதாவது நரகத்திலிருந்து வருகிறதென்றும், தெரிந்திருக்கச் செய்தா

லொழிய, அவன் இந்த இரண்டு தப்பிதங்களிலிருந்தும் விடுவிக்கப்பட முடியாது. சூட்சும உலகமென்பதால், சுவர்க்கமும் நரகமும் அறிந்துகொள்ளப்படுகிறது. நல்ல உபயோகங்களாயிருக்கிற எல்லா பொருள்களும் சுவர்க்கத்தில் தோன்றுகின்றன (336 பிரிவைப் பார்க்கவும்.); கெட்ட உபயோகங்களாயிருக்கிற எல்லா பொருள்களும் நரகத்தில் தோன்றுகின்றன (அவைகள் சொல்லப்பட்ட 338-வது பிரிவைப் பார்க்கவும்). அவைகளாவன:—பாம்புகள், தேள்கள், பறவை நாகங்கள். முதலைகள், புலிகள், ஓனாய்கள், குள்ளநரிகள், பன்றிகள் போன்ற எல்லா காட்டு மிருகங்களும், பலவித ஆந்தைகளும் இரவுப் பட்சிகளும், வௌவால்களும், சுண்டெலிகளும், எலிகளும், தவளைகளும் வெட்டுக்கிளிகளும், சிலந்திப் பூச்சிகளும், பலவித தீங்கான பூச்சிகளும்; விஷச்செடிகளும், நாபிகளும், விருக்ஷ வர்க்கத்தையும் தாவர வர்க்கத்தையும் சேர்ந்த எல்லாவித விஷங்களும்; சுருங்கச் சொல்லில், மனிதர்களுக்கு தீங்கு செய்கிறதும், அவர்களைக் கொல்லுகிறதுமான எல்லாபொருள்களும்; நரகத்திலிருக்கும் இவ்விதப் பொருள்கள், பூமிகள் பேரிலும், அவைகளிலுமிருக்கும் பொருள்கள் போல் உயிருடனிருப்பதாகத் தோன்றுகின்றன. அவர்களிட தீமையான ஆசைகளிலிருந்து ஓடிவரும் லோபிதனத்தின் அன்னுவயங்களாக மாத்திரம் அவைகளிருக்கிறபடியினாலும், பார்ப்பவர் முன்பாக அவ்வித ரூபங்களை எடுத்துக் கொள்ளுகிறபடியினாலும், அங்கே அவைகள் தோன்றுகின்றனவென்று சொல்லப்படுகிறது; என்றாலும் பூமியிலிருப்பது போல் அங்கே அவைகளில்லை. இவ்விதப் பொருள்கள் நரகங்களிலிருப்பதால், பிராணிகள் துர்நாற்ற முள்ளவைகளில் சந்தோஷப்படுவது போல், அங்கிருக்கும் துஷ்ட பேய்தன முள்ள

ஆவிகள் சந்தோஷப்படும், அருவருப்பானதும், பிரேதம் போன்றதும், அழுக்கானதும், அழுகலானதுமான நாற்றங்களால் அவைகள் நிறைந்திருக்கின்றன. ஆகவே, ஸ்தூல லோகத்திலுள்ள அதை ஒத்த பொருள்கள் ஆண்டவரிடமிருந்து உற்பத்தியாகவில்லை யென்றும், அவைகள் ஆதியில் சிருஷ்டிக்கப்படவில்லை யென்றும், பிரகுருதியிலிருந்து அதன் சூரியன் மூலமாய் உண்டாகவில்லை யென்றும், ஆனால், அவைகள் நரகத்திலிருந்து உண்டானவை என்றும் விசதமாகிறது. பரமார்த்தமானது ஸ்தூலமானதில் உட்பெருக்கால் பிரவேசிக்கிறபடியினாலும், எதிரிடையாய் அப்படி நடக்காதபடியினாலும், பிரகுருதியிலிருந்து அதன் சூரியன் மூலமாய் அவைகள் உண்டாகவில்லை என்பது தெளிவாயிருக்கிறது. நரகமும்,ஆகையினால், நரக வாசிகளின் தீமைகளுக்கு ஒத்துப் போகிற நரகத்திலுள்ள எந்த பொருளும் அவரிடமிருந்து உண்டாகாதபடியினாலும், ஆண்டவரிமிருந்து அவைகள் உற்பத்தியாகவில்லை என்பது தெளிவாயிருக்கிறது.

340. III. சூட்சும லோகத்திலிருந்து ஸ்தூல லோகத்துக்கு தொடர்ச்சியான உட்பெருக்கு இருக்கிறது.

ஒரு பரமார்த்த உலகமிருக்கிறதென்றும், முந்தியது பிந்தியதிலிருந்தும், அல்லது காரணம் காரியப்பட்டதிலிருந்தும் வேறாயிருப்பது போல, ஸ்தூல லோகத்திலிருந்து அது வேறாயிருக்கிறதென்றும் தெரியாதவனுக்கு, இந்த உட்பெருக்கைப் பற்றி எதுவும் தெரிந்து கொள்ள முடியாது. இந்த காரணத்துக்காகதான், செடிகளிடவும் பிராணிகளிடவும் உற்பத்தியைப் பற்றி எழுதினவர்கள், அந்த உற்பத்தியானது பிரகுருதிக்கு அரோபிக்க வேண்டியதாய் நேரிட்டது. கடவுள் அவைகளுக்கு உற்பத்தி ஸ்தானமாக அவர்கள் எண்ணினால், பிர

குருதியில் எந்த இயல்பான சக்தியுமில்லே என்று தெரியாமல்,
அவர் ஆரம்பத்தில் இவ்வித பொருள்களே உண்டாக்க, பிர
குருதிக்கு ஓர் சக்தியை கொடுத்தார் என்கிற அர்த்தத்தில்
அப்படி எண்ணினர்கள்; ஏனென்ருல், பிரகுருதியானது
சுயமாய் உயிரில்லாததாயிருக்கிறது; மேலும், செயல்பட
ஓயாது இயக்கப்படவேண்டிய, தன் வேலே செய்ய வேண்டும்
கம்மாளன் ஆயுதத்தைவிட அவைகளே உண்டாக்க அதிகம்
உதவுகிறதில்லே.

ஆண்டவர் இருக்கப்பட்ட சூரியனிடமிருந்து உற்பவிக்
கிறதும், பிரகுருதியின் இறுதிப்பொருள்களுக்கு செல்லுகிறது
மான சூக்கும பொருள்தான், செடிகளிடவும் பிராணிகளிட
வும் ரூபங்களே உண்டாக்கி, இரண்டிலுமிருக்கும் அற்புதங்
களேக் காண்பித்து, அவைகளுக்கு ஸ்திரத்தையும் நிலேயையும்
கொடுக்க, பூமியிலிருந்து பதார்த்தங்களால் நிரம்புகிறதுமா
யிருக்கிறது. ஒரு சூட்சும உலகு இருப்பதாகவும், அது அவ
ரிடமிருந்து உண்டாவதால், ஆண்டவர் இருக்கப்பட்ட சூரிய
னிடமிருந்து சூக்குமபொருள் வருகிறதாகவும், உயிருள்ள
பொருள் உயிரில்லாத பொருளே ஏவுகிறதுபோல், பிரகுரு
தியை செயல்பட அது தூண்டுகிறதாகவும், மேலும்,
ஸ்தூல லோகத்தில் இருப்பது போன்ற பொருள்கள் அந்த
உலகத்திலிருப்பதாகவும் தெரிந்திருக்கிறபடியினுல், செடிக
ளும் பிராணிகளும், வழிவகையாக சூக்கும உலகத்தின் மூல
மாய்த் தவிர வேறு வழியில் ஆண்டவரிடமிருந்து உண்டாக
வில்லே யென்றும், அதனுல் அவைகள் மூலமாய் எப்பொழு
தும் வெளிவருகின்றன வென்றும், அறிந்து கொள்ளலாம்.
இவ்விதமாக, சூட்சுமலோகத்திலிருந்து ஸ்தூல லோகத்துக்கு
இடைவிடாத உட்பெருக்கிருக்கிறது. விஷயம் இப்படி இருக்

கிற தென்று அடுத்த பிரிவில் அநேக ஆலோசனைகளால் இது ரூபகாரம் செய்யப்படும். தீமைகள் தாமே மனிதர்களிடம் நரகத்திலிருந்து வருகிற அந்த அனுமதி சட்டத்தால், தீங்கான பொருள்கள் நரகத்திலிருந்து உட்பெருக்கால் பூமியின் பேரில் உண்டாக்கப்படுகின்றன. தெய்வபராமரிப்பைக் குறித்த தேவர்கள் ஞானம் என்னும் நூலில் இந்த சட்டம் எடுத்துக் காட்டப்படும்.

நரகத்திலிருந்து வரும் உட்பெருக்குகள், அவைகளுடன் அன்னுவயப்படுகிற பொருள்களிருக்கப்பட்ட இடங்களில் கெட்ட உபயோகங்களா யிருக்கிற பொருள்களை உண்டாக்குகின்றன.

341. IV. கெட்ட உபயோகங்களோடு, அதாவது, விஷமுள்ள செடிகளோடும் தீங்கான பிராணிகளோடும் அன்னுவயப்படுகிற பொருள்கள் பிரேதமுகம் போன்றதும், அழுகலானதும் மலமுள்ளதும், அழுக்கானதும் ஊசிப் போனதுமான பொருள்களா யிருக்கின்றன. ஆகையினால், இந்த பொருள்க ளிருக்கப்பட்ட இடங்களில் மேல்கூறிய படி அவ்வித செடிகளும் சிறு கிருமிகளும் உண்டாகின்றன. உஷ்ண மண்டலங்களில், பாம்புகள், குக்கல சர்ப்பங்கள், முதலைகள், தேள்கள், எலிகள் முதலியவை போன்ற பொருள்கள் அதிகமாய் காணப்படுகின்றன. சேற்று நிலங்களும், அசையா நீருள்ள தடாகங்களும், குப்பை மேடுகளும், துர்க்கந்தமான சதுப்பு நிலங்களும் இவ்வித பொருள்களால் நிறைந்திருக்கின்றன வென்றும், மேலும் தீங்கான பூச்சிகள் மேகங்களைப்போல், காற்றில் நிறைந்திருக்கின்றன வென்றும், தீங்கான மூட்டுப்பூச்சி, எலி முதலியவைகள் படைபடையாக பூமியின்பேரில் நடந்து செடிகளை வேரோடு சேர்த்துத் தின்று

விடுகின்றன வென்றும், ஒவ்வொருவனுக்கும் தெரியும். என்னுடைய தோட்டத்தில், ஏறக்குறைய ஒன்றேகால் கஜ அளவு தூரத்தில் எல்லா தூசியும், ஒரு கோலால் அசைக்கப் பட்டபோது, மேகங்களாக எழுந்த சிறு பூச்சிகளாக மாறுத லடைந்ததை நான் ஒருதரம் பார்த்திருக்கிறேன். அழுக்கான தும், அழுகலானதுமான பதார்த்தங்கள், இந்த தீங்கானதும், உபயோகமில்லாததுமான கிருமிகளோடு பொருந்துகின்றன வென்பதும், இந்த இரண்டுவகைப் பொருள்களும் ஒரே இயல் புள்ள தென்பதும், அனுபவத்திலிருந்து விசதமாகும். அவ் வித கிருமிகள்கூட காணப்படுகிற நரகங்களில் அதைப்போன்ற கெட்டுப்போதலும், துர்நாற்றங்களு மிருக்கின்றன வென்பதி லிருந்து, இது தெளிவாய் அறிந்து கொள்ளப்படும். ஆகை யினுல், அந்த நரகங்களுக்கு அந்தப்பிரகாரம் பெயரிடப்பட் டிருக்கின்றன; சிலவற்றை பிரேதமுகம் போன்றதென்றும், சிலவற்றை அழுக்கானதென்றும், இவ்விதமாகச் சொல்லப்படு கின்றன; ஆனுல் இந்த நரகங்களெல்லாம், அந்த ஆவிகள் அவைகளிலிருந்து வெளிவந்தபடி மூடப்பட்டிருக்கின்றன. ஏனென்ருல், புதிய பிசாசுகள் பிரவேசிக்கும்போது வழக்கப் படி அவைகள் கொஞ்சம் திறக்கப்பட்டால், அவைகள் வாந்தி செய்தலையும் குரூரமான தலைவலியையும் உண்டாக்குகின்றன. அதேகாலத்தில் விஷமுள்ள நரகங்கள் மூர்ச்சையை உண் டாக்குகின்றன. அங்கிருக்கும் தூசியேகூட அதைப்போன்ற சுவாசமுடையதா யிருக்கிறது. ஆதலால் அதை அங்கே சிட்சை விதிக்கப்பட்ட தூசியென்று சொல்லப்படுகின்றன. இந்த இரண்டும் அன்னுவயப்படுகிற படியினுல் இந்த தீங் கான பொருள்கள் அவ்வித நாற்றங்களுள்ள இடங்களில் இருக்கின்றன வென்பது விசதமாகிறது.

342. காற்றின் மூலமாயாவது மழையின் மூலமாயாவது அல்லது நீரோட்டத்தினலாவது, மண்ணின்மூலமாய் தண்ணீர் ஊறுதலினலாவது, அந்த இடத்துக்கு கொண்டுவரப்பட்ட முட்டைகளிலிருந்து அவ்விதப் பொருள்கள் வருகின்றனவா அல்லது ஈரத்தினுலும் துர்நாற்றத்தினுலும் அவைகள் உற்பவிக்கின்றனவா என்கிற கேள்வி இப்பொழுது உண்டாகிறது. மேலேகூறிய இத்திங்கான கிருமிகளும், பூச்சிகளும், சிருஷ்டி முதல் அந்த இடத்தில்வைக்கப்பட்ட அல்லதுபூமியில் புதைக்கப்பட்டமுட்டைகளிலிருந்து, குஞ்சு பொரிக்கப்பட்டன என்பது, அநுபவத்தில் ரூபகாரம் செய்யப்படுகிறதில்லை. ஏனென்ருல், புழுக்கள் நுட்பமான விதைகளிலும், கொட்டைகளிலும், மரங்களிலும், கற்களிலும், இலைகளிலிருந்தும் கூட உண்டாகின்றன. செடிகள் பேரிலும், செடிகளிலும், அவைகளுடன் அன்னுவயப்படுகிற பேன்களும் கிருமிகளு மிருக்கின்றன. வீடுகளிலும், வயல்களிலும், தோட்டங்களிலும், ஈக்கள்கூட அவைகள் இருக்க நியாயம் காட்ட முட்டையிடுகிற பதார்த்தம் ஒன்று மில்லாமல், கோடை காலங்களில் பெருங் கூட்டங்களாகத் தோன்றுகின்றன. புற்றரைகளிலும் பசும்புல் நிலங்களிலும் மேயப்பட்டதும் உஷ்ணமான சில இடங்களில் காற்றில் நிறைந்து, அதை கெடுக்கிறதுமான பிராணிகளும், துர்க்கந்தமான ஜலங்களிலும்,புளித்து பொங்குகிற மதுவிலும், தொத்து வியாதியான காற்றிலும் நீந்தி கண்களுக்கு புலப்படாமல் அசையும் பிராணிகளும் இருக்கின்றன. செடிகளிலிருந்தும், மண்களிலிருந்தும், தடாகங்களிலிருந்தும் வரும் அந்த நாற்றங்களும், ஆவிகளும், வெளி வருபவைகளுமே அவ்வித பிராணிகளுக்கு உற்பத்தி ஸ்தானமென்று சொல்லப்பட்டவர்களை இந்த விஷயங்கள் பலப்படுத்துகின்றன. அவைகள்

உண்டாக்கப்பட்டபோது, முட்டைகள் மூலமாய் அல்லது முட்டையிடுவதினால், பின்னிட்டு விருத்தியாக்கப்படுகின்றன வென்கிற விஷயம் அவைகளின் நேரான உற்பத்தியை நிராகரிக்கிறதில்லை. ஏனென்றால், அவ்வித ஒவ்வொரு உயிருள்ள பிராணியும், தன்னிட சிறிய அங்கங்களோடு பிறப்பிக்கும் அங்கங்களையும் விருத்தி செய்யும் வழி வகைகளையும் அடைகின்றது (கீழே 34-வது பிரிவைப் பார்க்கவும்). நரகங்களிலும் அதைப்போன்ற பொருள்கள்கூட இருக்கின்றன என்கிற, இதுவரையில் தெரியாத உண்மையால், இந்த பிரதிக்கினைகள் இப்பொழுது நிஜப்படுத்தப்படுகின்றன.

343. மேல் கூறிய நரகங்கள், பூமியில் பேரிலுள்ள அவ்விதமான பொருள்களோடு சம்பந்தம் மாத்திரமல்லாமல், சேர்க்கையையும் உடைத்தாயிருக்கின்றனவென்பது, நரகங்கள் மனிதர்களுக்கு தூரத்திலில்லாமல், அவர்களுக்கு சுற்றிலும், உண்மையில், கெட்டவர்களாயிருக்கிறவர்களோடும், இவ்விதமாக பூமிகளுக்கு சேர்ந்திருக்கின்றன வென்பதிலிருந்து கிரகிக்கப்படலாம். ஒரு மனிதனானவன் அவனிட ஆசைகளிலும், லோபித்தனத்திலும், அதனால் உண்டாகும் சிந்தனையிலும், இவைகளிலெல்லாமிருந்து உண்டாகும் நல்ல அல்லது கெட்ட உபயோகங்களாயிருக்கிற அவன் செய்கைகளிலும், சுவர்க்கத்து தேவர்கள் மத்தியில், அல்லது நரகத்து பேய்கள் மத்தியிலிருக்கிறான்; பூமியின் பேரிலிருப்பது போல சுவர்க்கங்களிலும் நரகங்களிலும் அவ்வித பொருள்களிருப்பதால், அவைகளிலிருந்து வரும் பெருக்கு, சந்தர்ப்பங்கள் அனுகூலமாயிருக்கும்போது, அவைகளை நேராய் உற்பத்தி செய்கின்றனவென்று ஏற்படுகிறது. பரலோகத்தில் சுவர்க்கத்திலும் நரகத்திலும் இரண்டிலும் பார்க்கப்பட்ட பொருள்கள்,

ஆசைகளுக்கும் லோபித்தனத்துக்கும் அன்னுவயப்படுகின்றன ; ஏனென்ருல், இவைகளுக்குத் தக்கபடி அந்த இரண்டிலும் அவைகள் உண்டாகின்றன. ஆகையினுல், தாங்களே பரமார்த்தமாயிருக்கிற ஆசைகளும் லோபித்தனங்களும், பூமிகளின் மேல் ஓர் இயல்புள்ள அல்லது அவைகளோடு பொருந்துகிற பொருள்களே சந்திக்குங்கால், ஆன்மாவை கொடுக்கப்பட்ட ஒரு பரமார்த்தமானதும், சரீரத்தைக் கொடுக்கப்பட்ட ஒரு ஸ்தூலமானதும் ஹாஜராயிருக்கின்றன. இதுவுமல்லாமல், ஒவ்வொரு பரமார்த்த பொருளிலும், ஒரு சரீரத்தைத் தானே உடுத்துக்கொள்ள ஒரு முயற்சியிருக்கிறது. நரகங்கள் மனிதனேச் சுற்றியும், ஆகையினுல் பூமிகளேச் சேர்ந்தும் ஏன் இருக்கின்றனவென்பதற்குக் காரணம், பரலோகமானது இடவரைக்குட்படாமல், அதனுடன் பொருந்துகிற ஆசையிருக்குமிடத்தில் அது இருக்கிறது என்பதாயிருக்கிறது.

344. ஆங்கிலேய ராஜரீக சபைக்கு இரண்டு சபாநாயகர்களாகிய (Sir Hans Sloan) சர் ஹான்ஸ ஸ்லோன் என்பவரும், (Martin Folkes) மார்டின் போக்ஸ் என்பவரும், விதைகளிடவும் முட்டைகளிடவும் நிலைமையைப் பற்றியும், இவைகளிலிருந்து பூமியில் உண்டாகும் உற்பவங்களேப்பற்றியும், பரலோகத்தில் சேர்ந்து அளவளாவினதை நான் கேட்டிருக்கிறேன். முன் கூறியவர் முழுமையும் பிரகுருதிக்கு ஆரோபித்து, சூரியனிட சூட்டினுல், அவ்வித காரியப்பாடுகளே உற்பத்தி செய்யும்படி சக்தியும் பலமும், சிருஷ்டியிலேயே பிரகுருதிக்கு கொடுக்கப்பட்டதென்று தர்க்கித்தார். மற்றவர், பிரகிருதியில் அந்த சக்தியானது சிருஷ்டி கர்த்தாவாகிய கடவுளிடமிருந்து தொடர்ச்சியாயிருக்கிறதென்று சாதித்தார். இந்த வாக்குவாதத்தை தீர்மானிக்க, சர் ஹான்ஸ் ஸ்லோன்

என்பவருக்கு ஒரு அழகுள்ள பட்சி காண்பிக்கப்பட்டு, அதை ஜாக்கிரதையாய்ப் பார்த்து, பூமியின்பேரிலுள்ள அதைப்போன்ற பட்சியிலிருந்து மிகவும் சிறிய விவரத்திலும், அது வித்தியாசப்பட்டதா என்பதை கவனிக்க அவருக்கு சொல்லப்பட்டது. அதை அவர் கையில் பிடித்துக் கொண்டு, பரீக்ஷித்து பார்த்து, எவ்வித வித்தியாசமுமில்லையென்று சொன்னார். ஒரு பட்சியைப்போல அவருக்கு வெளியே காண்பிக்கப்பட்ட ஒரு தேவனிட அன்பைத் தவிர அது வேறொன்றுமில்லையென்றும், அந்தத் பட்சியானது தன்னிட அன்பிற்குத் தக்கபடி மறையும்அல்லது ஒழியுமென்றும், அவருக்கு அக்காலத்தில் எல்லாம்தெரியும்; இது கூட சம்பவித்தது. பிரகுருதியானது, செடிகளையும் பிராணிகளையும் உற்பத்தி செய்ய சுத்தமாய் கொஞ்சம்கூட உதவாமல், சூக்கும உலகத்திலிருந்து ஸ்தூல உலகத்திற்கு செல்லப்பட்டதினால் மாத்திரம் அவைகள் எல்லாம் செய்யப்படுகிறதென்றும்,**சர் ஹான்ஸ் ஸ்லோன்** என்பவருக்கு இந்த அனுபோகத்தால், நம்பிக்கை உண்டாயிற்று. அந்த பட்சியானது அதன் நுண்ணிய பாகங்களில், உலகத்திலுள்ள அதனுடன் பொருந்தும் பொருள்களால் நிரப்பப்பட்டு, அவ்விதமாய் ஸ்திரப்படுத்தப்பட்டால், அது, பூமிகளின்பேரிலுள்ள பட்சிகளைப்போல ஒரு நெடுங்கால மிருக்கக்கூடிய பட்சியாகுமென்றும், நரகத்திலிருந்த பொருள்களோடும் விஷயம் அதைப்போன்றிருக்கிறதென்றும், அவர் சொன்னார். பரலோகத்தைப்பற்றி அவருக்கு அப்பொழுது தெரிந்தவைகள் முன்னமே தெரிந்திருந்தால், பிரகுருதிக்குள் இடைவிடாமல் உள்ளே பாய்கிற பொருள்களுக்கு ஸ்திரத்தைக்கொடுக்க, கடவுளிடமிருந்து வந்த பரமார்த்தமானதற்கு, அந்த பிரகுருதியானது உபயோகமாகிற

தென்பதைத் தவிர வேறு அதிகம் யாதொன்றும் அதற்கு அரோபித்திருக்கமாட்டேன் என்று இன்னமும் சொன்னர்.

**345. V. அதற்கு மேலான நிலைகளிலிருந்து பிரிக்கப் பட்ட இறுதியான பரமார்த்த பொருள் இந்த காரியப்பாட்டை உண்டாக்குகிறது.**

பரமார்த்தமானது, அதன் சூரியனிடமிருந்து மூன்று படிகள் மூலமாய் பிரகுருதியின் இறுதியான பொருள்களுக்கு பாய்கிறதென்றும், இந்த நிலைகள் சுவர்க்கத்தை அடுத்த அல்லது அதிசூக்குமமானதென்றும், சூக்குமமானதென்றும், ஸ்தூலமானதென்றும் பெயரிடப்பட்டிருக்கின்றனவென்றும், இந்த மூன்று நிலைகளும் மனிதனில் சிருஷ்டி முதல், பின்னிட்டு பிறந்ததுமுதல் இருக்கின்றனவென்றும், அவைகள் அவனிட வாழ்க்கைக்குத் தக்கபடி திறக்கப்படுகின்றனவென்றும் மூன்ருவது பாகத்தில் காண்பிக்கப்பட்டது. மேலும், மிகவும் உயர்ந்ததும், மிகவும் உள்ளானதுமான, சுவர்க்கத்துக்கு அடுத்த அதிசூக்கும நிலையானது, திறக்கப்பட்டால், மனிதன் சுவர்க்கத்துக்கு அடுத்தவனுகிருன் என்றும், மத்தியில் உள்ள சூக்கும நிலையானது திறக்கப்பட்டால், அவன் பரமார்த்தமாகிருனென்றும், மிகவும் தாழ்ந்ததும் மிகவும் புறம்பானதுமான ஸ்தூலமான நிலைமாத்திரம் திறக்கப்பட்டால், அவன் ஸ்தூலமாகிரு னென்றும் அங்கே காண்பிக்கப்பட்டது. அவன் ஸ்தூலமாக மாத்திரம் ஆய்விட்டால், அப்பொழுது சரீரத்துக்கும் உலகத்துக்கும் சேர்ந்த பொருள்களை மாத்திரம் நேசிக்கிருனென்றும், மேலும் இவைகளை அவன் எவ்வளவு நேசிக்கிருனே அவ்வளவு சுவர்க்கத்துக்கு அடுத்ததும் பரமார்த்தமான பொருள்களை நேசிக்கிறதில்லையென்றும், கடவுளை எதிர் பார்க்கிறதில்லையென்றும், அவ்வளவு தீங்கான

வனுகிறுனென்றும் இன்னம் காண்பிக்கப்பட்டது. பரமார்த்த ஸ்தூல மென்று சொல்லப்பட்ட இறுதியான பரமார்த்த பொருள் அதற்கு மேலானவைகளிருந்து பிரிக்கப்படக்கூடு மென்றும், நரகம் நிறைந்திருக்கிற மனிதர்களில் அது பிரி கப்பட்டிருக்கிறதென்றும், இதிலிருந்து தெளிவாகிறது. இறு தியான பரமார்த்த பொருள், மிருகங்களிலாவது பூமிகளி லாவது, அதற்குமேலான நிலைகளிலிருந்து தானுகப்பிரிக்கப் பட்டு நரகத்தை பார்க்க முடியாது ; மனிதர்களில் மாத்திரம் தவிர வேறு எங்கும் அது அப்படிப் பிரிக்கப்பட முடியாது. ஆகையினுல் நரகத்தி லிருப்பவர்களிடம் இருப்பதுபோல மேலான நிலைகளிலிருந்து பிரிக்கப்பட்ட இறுதியான பரமார் த்த பொருள், மேல் சொல்லிய பூமியின்பேரிலுள்ள கெட்ட உபயோகங்களுக்கு காரணமாயிருக்கிற தென்பது பின்தொட ருகிறது. பூமியின்பேரிலுள்ள தீங்கான பொருள்கள் மனித ணிடமிருந்தும்,இவ்விதமாகநரகத்திலிருந்தும்,தங்களிடஉற்பத் தியை அடைகின்றனவென்பதை வேதத்தில் காண்பிக்கப் பட்டபடி கானேன் தேசத்து நிலைமையிலிருந்து ரூபகாரப் படுத்தலாம். ஏனென்றுல், இஸ்ரவேல் புத்திரர் கட்டளைகள் படிவாழ்ந்தபோதுபூமியானது அதன்விளைவைத்கொடுத்தது; ஆடு மாடுகள் மந்தைகள் அப்படியே செய்தன ; அந்த கட் டளைகளுக்கு மீறி அவர்கள் வாழ்ந்தபோது பூமியானது கரம் பானதாயிருந்தது; சொல்லப்படுகிறபடி அதுசபிக்கப்பட்டதா யிருந்தது. அதுவிளைவுகளுக்குப் பதிலாகமுட்களையும் நெருஞ் சில்களையும் கொடுத்தது, ஆடுமாடுகள் மந்தைகள் கர்ப்ப பங்க கானது, காட்டு மிருகங்கள் படை எடுத்து மேல் விழுந்தன. எகிப்து தேசத்திலுள்ள வெட்டுக்கிளிகளிலிருந்தும், தவளை களிலிருந்தும், பேன்களிலிருந்தும், அதையே அறிந்து கொள் ளலாம்.

346. VI விருக்ஷரூப மென்றும் பிராணி ரூபமென்றும் இரண்டு ரூபங்களில், உட்பிரவேசத்தால் செய்கை சம்பவிக்கிறது.

பூமியிலிருந்து உண்டாக்கப்படுகிற இரண்டு பொதுவான ரூபங்கள் மாத்திரம் இருக்கின்றன வென்பது, பிராணிவர்க்க மென்றும், விருக்ஷ வர்க்கமென்றும், சொல்லப்படுகிற பிரகுருதியின் இரண்டு வர்க்கங்களிலிருந்து தெரிந்து கொள்ளப்படுகிறது; மேலும் இரண்டு வர்க்கங்களுக்கும் பொதுவில் அநேக பொருள்களிருக்கின்றன வென்பதும் தெரிந்திருக்கிறது. உதாரணமாக பிராணி வர்க்கத்து பொருள்களுக்கு, ஞானேந்திரியங்களும் சலன இந்திரியங்களும், மூளைகளாலும், இருதயங்களாலும், சுவாசாசயங்களாலும் ஏவப்பட்ட அவயவங்களும் ஆந்திரியங்களும் உண்டு. அம்மாதிரியே விருக்ஷவர்க்கத்து பொருள்கள் கூட பூமிக்குள் ஓர் வேறை அனுப்பி, தண்டையும், கிளைகளையும், இலைகளையும், புஷ்பங்களையும், பழங்களையும், விதைகளையும் உண்டாக்குகின்றன. பிராணிவர்க்கம், விருக்ஷவர்க்கமாகிய இரண்டு வர்க்கங்களும், தங்கள் ரூபங்களை தோற்றுவிப்பதில் அதன் சூரியனால் பிரகுருதியின் பெருக்கத்திலிருந்தும் செய்கையிலிருந்து மல்லாமல், ஆண்டவர் இருக்கப்பட்ட சுவர்க்கத்து சூரியனிடமிருந்து பரமார்த்தமான பெருக்கினலும் செய்கையினலும் தங்களிட உற்பத்தியை அடைகின்றன. பெரியதும் சிறியதுமான எல்லா உயிருள்ள பிராணிகளும், ஸ்தூலமான தாயிருக்கிற இறுதியான நிலையிலிருக்கும் பாமார்த்தமான திலிருந்து உற்பத்தி யாகின்றன; மனிதன் மட்டும் சுவர்க்கத்துக்கு அடுத்த அதிசூக்குமமானதும், சூக்குமமானதும், ஸ்தூலமானதுமாகிற எல்லா மூன்று நிலைகளிலுமிருந்து உற்

பத்தியாகிறான். ஒவ்வொரு உயரத்தைச் சேர்ந்த அல்லது வேறு வேறாகும் நிலை, வெளிச்சம் நிழலுக்கு குறைதல்போல், பூரணத்திலிருந்து அபூரணத்துக்கு தொடர்ச்சியாய் குறைகிறபடியினால், அம்மாதிரியே பிராணிகளும்கூட குறைகின்றன. ஆகையினால் பூரணமானதும் குறைவான பூரணமானதும், அபூரணமானதுமாகிய பிராணிகளிருக்கின்றன. பூரணமான பிராணிகள் யானைகளும், ஒட்டகங்களும், குதிரைகளும், கோவேறு கழுதைகளும், எருதுகளும், ஆடுகளும், வெள்ளாடுகளும், மந்தைகளைச் சேர்ந்த மற்றவைகளாயிருக்கின்றன; குறைந்தபூரணமுள்ளவை பட்சிகளாயிருக்கின்றன; அபூரணமானவைகள் மீன்களும், சிப்பிக்குள்ளிருக்கும் ஜலஜந்துக்களுமாயிருக்கின்றன. அந்த நிலையில் இவைகள் மிகவும் தாழ்ந்தாயிருப்பதினால், மற்றவைகள் வெளிச்சத்திலிருக்கும்போது நிழலிலிருப்பது போலிருக்கின்றன. அப்படியிருந்தாலும், ஸ்தூலமென்றுசொல்லப்படுகிற இறுதியான பரமார்த்த நிலையிலிருந்துமாத்திரம், இவைகள்உயிரோடிருக்கிறபடியினால், அவைகள் உணவுக்கும், விர்த்தி செய்ய தங்கள் இனத்துக்கும், பூமியைத் தவிர வேறு இடத்தைப் பார்க்க முடியாது; இவைகளுக்கெல்லாம் ஆன்மா இயற்கை அன்பும் ஆவலுமாயிருக்கிறது. விருக்ஷவர்க்கத்துப் பொருள்களோடும் அதேவாக யிருக்கிறது. அவைகளும் பூரணமானதென்றும், குறைந்த பூரணமானதென்றும், அபூரணமானதென்றும் பிரிந்திருக்கின்றன ; கனிதரும் மரங்கள் பூரணமானவை, இரசத்தையும் பூண்டுகளையும் தரும் மரங்கள் குறைந்த பூரணமானவை, புற்கள் அபூரமானவை. செடிகள் தங்களிட பரமார்த்த உற்பத்தியிலிருந்து, அவைகள் உபயோகங்களா யிருக்கின்றன வென்பதை அடைகின்றன. பிராணிகள் தங்களிட பரமார்த்த உற்பத்தியிலி

ருந்து மேல் கூறியபடி, அவைகள் அன்புகளும் ஆசைகளுமா யிருக்கின்றன வென்பதை அடைகின்றன.

347. VII. இந்த இரண்டு ரூபங்களும் நிலைத்திருக் கும்போது, விருத்தியாக்கும் வழி வகைகளை அடைகின்றன.

மேல் கூறியபடி, விருக்ஷ வர்க்கத்துக்கு அல்லது பிராணி வர்க்கத்துக்கு சேர்ந்தபூமியிலிருந்து உண்டாக்கப்பட்ட எல்லா பொருள்களிலும், சிருஷ்டியின் கொஞ்சம் ஒப்பனையும், மனி தனிட கொஞ்சம் ஒப்பனையும், முடிவற்றதும் நித்தியமானது மான பொருளின் கொஞ்சம் ஒப்பனையும் இருக்கிறதென்று, மேல் பிரிவுகள், 313 முதல் 318 வரையில் காண்பிக்கப்பட்ட து. முடிவற்றதும் நித்தியமுமான பொருளின் ஒப்பனையானது, இந்தபொருள்கள் அளவின்றியும் சதாகாலம் விருத்தி செய்யப் படலாமென்கிற உண்மையிலிருந்து விசதமாகிறதென்பதும், காண்பிக்கப்பட்டது. இதனால் தான் அவைகளெல்லாம் விருத் தியாகும் வழிவகைகளை அடைகின்றன ; பிராணிவர்க்கத்து பிராணிகள், முட்டையிலாவது அல்லது கருப்பையிலாவது, விதைகளினாலும் கருவினாவதினாலும், விருக்ஷவர்க்கத்து பொருள்கள், பூமியிலுள்ள விதைகளினாலும் அவைகளை அடைகின்றன. அதிகம் அபூரணமானதும் தீங்கானதுமான பிராணிகளும் செடிகளும் நரகத்திலிருந்து வரும் நேரான பெருக்கினால் உற்பத்தியானாலும், அவைகள் பின்னிட்டு விதை களாலும் முட்டைகளாலும் ஒட்டவைத்த கிளைகளாலும், ஒன்றன் மூலமாய் விருத்தியாக்கப்படுகின்றன வென்று இதி லிருந்து விசதமாகிறது. ஆகையினால் ஒரு விதம் மற்றதை அழிக்கிறதில்லை.

348. நல்லதும் கெட்டதுமாகிய எல்லா உபயோகங் களும், பரமார்த்த உற்பத்தியை சேர்ந்தவைகளாயிருக்கின்றன

வென்பதும், ஆகையினுல் ஆண்டவர் இருக்கப்பட்ட சூரியனிடமிருந்து உண்டாகின்றன வென்பதும், இந்த அனுபோகத்தால் திருஷ்டாந்தப்படுத்தலாம். நன்மைகளும் உண்மைகளும், சுவர்க்கங்கள் மூலமாய் ஆண்டவரால் நரகங்களுக்கு அனுப்பப்பட்டனவென்றும், அவைகள் படிப்படியாய்ப் பெரிய ஆழத்துக்குச்சென்று, அனுப்பப்பட்ட நன்மைகளுக்கும் உண்மைகளுக்கும் எதிரிடையான தீமைகளாயும், பொய்களாயும் அங்கே மாற்றப்பட்டனவென்றும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஏற்றுக்கொள்ளும் பொருள்கள், தங்களிட சொந்த ரூபங்களுக்கு ஏற்றவைகளுல்லே பாயும் எல்லா பொருள்களையும் மாற்றுகின்றனவென்பது, இதற்கு காரணமாயிருந்தது. அம்மாதிரியே, சூரியனிட வெண்மையான வெளிச்சமானது, அந்த வெளிச்சத்தை மங்கலாக்கி, அணைக்கும்படியாக தன் பொருள்கள் உள்ளுக்குள்ளாய் அவ்வித ரூபமாயிருக்கிற பொருள்களில் பார்க்க சகியாத நிறங்களாகவும், கருப்புநிறமாகவும் மாற்றப்படுகின்றது; அசையாமல், நீர் தங்கும் தடாகங்களும், குப்பை மேடுகளும், பிரேதங்களும், சூரியனிட சூட்டை அறுவறுக்கத்தக்க நாற்றங்களாக மாற்றுகின்றன. கெட்ட உபயோகங்களும் கூட பரமார்த்த சூரியனிடமிருந்து வருகின்றனவென்றும், ஆனுல் நல்ல உபயோகங்கள் கெட்ட உபயோகங்களாக நரகத்தில் மாற்றப்படுகின்றன வென்றும், இவைகளிலிருந்து அறிந்துகொள்ளலாம். ஆதலால் ஆண்டவர் நல்ல உபயோகங்கள் தவிர யாதொன்றையும் சிருஷ்டித்ததுமில்லை, சிருஷ்டிக்கிறதுமில்லை என்றும், ஆனுல் நரகமானது தீங்கான உபயோகங்களை உண்டாக்குகிறதென்றும் விசதமாகிறது.

சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தில் தோற்றமுள்ளபொருள்கள், பிருகுருதியானது யாதோன்றையும் உண்டாக்கினதில்லையென்றும், யாதோன்றையும் உண்டாக்குகிறதில்லையென்றும், ஆனால், தெய்வமானது சுயமாயும் பரலோகத்தின் மூலமாயும், எல்லா பொருள்களையும் உண்டாக்குகிறதென்றும் சாட்சியிடுகின்றன.

349. உலகத்திலுள்ள அநேக ஜனங்கள், தோற்றத்தை அனுசரித்து, சூரியன் சூட்டினாலும் வெளிச்சத்தினாலும் மைதானங்களிலும், வயல்களிலும், தோட்டங்களிலும், காடுகளிலும், பார்க்கப்படும் காரியப்பாடுகளை உண்டாக்குகிறதென்றும், மேலும் சூரியன் அதன் சூட்டினால் முட்டைகளிலிருந்து புழுக்களை குஞ்சு பரிபலிக்கிற தென்றும், பூமியின் பேரிலிருக்கும் பல மிருகங்களையும் காற்றிலுள்ள பறவைகளையும் விஸ்தாரமாய் பலிக்கச் செய்கிறதென்றும், மனுஷ ஜாதிக்கு உயிரையும் கூட கொடுக்கிறதென்றும் நினைக்கிறார்கள். தோற்றத்திலிருந்து மாத்திரம் இம்மாதிரியாக பேசப்பட்டவர்கள், இந்த விஷயத்தைப்பற்றி யோசிக்காதபடியினால், சூரியன் உதயமாகிறதென்றும் அஸ்தமிக்கிறதென்றும், நாட்களையும் வருஷங்களையும் உண்டாக்குகிறதென்றும், இப்பொழுது இந்த அல்லது அந்த உயரத்தின் நிலையிலிருக்கிறதென்றும் பேசப்பட்டவர்களைப் போல், பிரகுருதிக்கு இவைகளை ஆரோபிக்காமல் அப்படி பேசலாம். இந்த ஜனங்கள் கூட சூரியன் சலனமில்லாத தென்றும், பூமி அதைச்சுற்றி திரும்புகிறதென்றும், ஆலோசிக்காதபடியினால், தோற்றத்திலிருந்து பேசி அப்படி செய்தபோதிலும், அவ்வித பலன்களை சூரியனுக்கு ஆரோபிக்கிறதில்லை. ஆனால், சூரியன் சூட்டினாலும் வெளிச்சத்தினாலும், பூமியின்பேரில் தோன்றும் பொருள்

களை உண்டாக்குகிற தென்கிற நம்பிக்கையில் ஸ்திரப்படுகிற வர்கள், கடைசியில் எல்லா பொருள்களையும் பிரகுருதிக்கும், பிரபஞ்ச சிருட்டிக்கும் கூட ஆரோபித்து, வேத விரோதிகளாக வும், நாஸ்திகர்களாகவு மாகிறார்கள். அவர்கள், கடவுள் பிர குருதியை சிருட்டித்து, அவ்விதப் பொருள்களை உண்டாக் கும் சக்தியை அதில் வைத்தார் என்று பின்னிட்டு நிஜமாகவே சொல்லுவார்கள்; ஆனால் தங்களிட நல்ல பெயர் போய் விடுமென்கிற பயத்தினால், இதை அவர்கள் சொல்லு கிறார்கள்; அப்படி யிருந்தாலும் சிருட்டி கர்த்தாவாகிய கட வுள் என்பதால் பிரகுருதியை கருதுகிறார்கள்; சிலர் பிர குருதியின் உள்ளுக்குள்ளானதை கருதுகிறார்கள். அப் பொழுது திருச்சபை கற்பிக்கும் தெய்வீக உண்மைகளை அவர்கள் கவனிக்கிறதில்லை.

350. சிலர் காணக்கூடிய சில பொருள்களை பிரகுருதிக்கு ஆரோபித்ததைப்பற்றி உண்மையாக மன்னிக்கப்படவேண்டும். இதுவும், இரண்டு காரணங்களுக்காக செய்யப்படவேண்டும். முதலாவது காரணம், ஆண்டவர் இருக்கப்பட்ட சுவர்க்கத்து சூரியனைப்பற்றியும், அதிலிருந்து வரும் பெருக்கைப்பற்றி யும், பரலோகத்தைப் பற்றியும், அதன் நிலைமையைப்பற்றியும், நிஜமாகவே, அது மனிதனிடத்திலிருப்பதைப் பற்றியும், யா தொன்றும் அவர்களுக்கு தெரியாது என்பது. இந்த காரணத் தினால், பரமார்த்தமானது அதிக சுத்தமான ஸ்தூல மென்ப தைத்தவிர வேறுவிதமாக நினைக்க அவர்கள் சக்தியில்லாதவர் களாயிருந்திருக்கிறார்கள்; தேவர்கள், (Ether) எனும் ஆகா யத்திலும் அல்லது நட்சத்திரங்களிலும் இருப்பதாக அவர் கள் நினைக்கிறார்கள். பேயானது மனிதனில் தீமையான தென்றும், அல்லது அது நிஜமாய், இருக்கும் பட்சத்

தில் காற்றிலாவது சமுத்திரத்திலாவது இருக்கிறதென்றும், மேலும், இறந்த பிறகு மனிதர்களின் ஆன்மாக்கள் பூமியின் மத்தியிலும், அல்லது தீர்ப்பு நாள் வரையில் ஏதோ ஒரு பிரத்தியேகமான இடத்தில் இருப்பதாகவும், பரலோகத்தைப் பற்றியும், அதன் சூரியனைப்பற்றியும் மனிதர்களுக்கிருக்கும் அஞ்ஞானத்தால் மனோபாவனை கற்பிக்கும், அதைப்போன்ற இதர விஷயங்களையும் அவர்கள் எண்ணுகிறார்கள். நல்லதும் கெட்டதுமான பொருள்கள் இருக்கப்பட்ட பூமியின்பேரில் பார்க்கப்பட்ட எல்லா பொருள்களையும் தெய்வமானது எப்படி உண்டாக்கக் கூடுமென்று, அவர்கள் அறிந்துகொள்ளக் கூடவில்லை என்பது; அவர்களுக்கு இரண்டாவது காரணமாயிருக்கிறது;எல்லா கெட்ட பொருள்களையும் கூட கடவுளுக்கு ஆரோபித்து, அவரைப்பற்றி ஸ்தூலமான கருத்து கொண்டு, இவ்விதமாக கடவுளையும் பிருகுருதியையும்,ஒன்றுபடுத்தி,இவ்விதமாக அவர்களை மலைக்கச்செய்யும் என்கிற பயத்தினால், ஒரு அபிப்பிராயத்தில் தாங்களே ஸ்திரப்படஅவர்கள் பயப்பட்டார்கள்.பிரகுருதியானது தோற்றமுள்ளஉலகத்தை சிருட்டியினால் அதில் நடப்பட்ட ஓர் சக்தியால், உற்பத்தி செய்கிறதென்றுநம் பினவர்களை மன்னிக்க, இவைகள் இரண்டு காரணங்களாயிருக்கின்றன. அப்படி யிருந்தாலும், பிரகுருதிக்கு அனுகூலமாக தாங்களே ஸ்திரம்படுவதினால், நாஸ்திகர்களானவர்கள், இதை தெய்வத்துக்கு அனுகூலமாக செய்யக்கூடுமாகையால், மன்னிக்கப்படமாட்டார்கள். உண்மையாகவே, அஞ்ஞானம் மன்னிக்கிறது; ஆனால், அவ்விதப்பொய்யானது தீமையோடும், இவ்விதமாக நரகத்தோடும் சேர்ந்திருக்கிறபடியினால், அது ஸ்திரப்பட்ட பொய்களை நீக்குகிறதில்லை. இந்த காரணத்துக்காக, அதிலிருந்து தெய்வத்தை பிரிக்கும்படியாக, பிரகுருதிக்கு அனு

கூலமாக அவ்வளவு ஸ்திரப்பட்ட அதே ஜனங்கள், எல்லா பாவங்களும் தாங்கள் பிரித்து இவ்விதமாக தள்ளிவிட்ட தெய்வத்துக்கு விரோதமாயிருப்பதினால், எதையும் பாவமாக மதிக்கிறதில்லை. ஆன்மாவில் எதையும் பாவமென்று நினைக்காதவர்கள், இறந்த பிறகு ஆவிகளானபோது, நரகத்திற்கு முடிவு கட்டப்பட்டு, தாங்கள் சுயற்சியாய்கொண்ட ஆசைகளுக்குத் தக்கபடி துன்மார்க்கத்திற்கு வேகமாய்ச் செல்லுகிறார்கள்.

351. பிரகுருதியின் எல்லா விவரணங்களிலும், தெய்வத்தின் கிருத்தியத்தை நம்புகிறவர்கள், தாங்கள் பிரகுருதியில் பார்க்கும் அநேக பொருள்களால் தெய்வத்துக்கு அனுகூலமாகத் தாங்களே ஸ்திரப்படவும், பிருகுருதிக்கு அனுகூலமாகத் தாங்களே ஸ்திரப்படுபவர்களைவிட முழுவதும் ஸ்திரப்படுத்தவும், சக்தியுள்ளவர்களாயிருக்கிறார்கள். தெய்வத்துக்கு அனுகூலமாகத் தாங்களே ஸ்திரப்படுகிறவர்கள், செடிகள் பிராணிகள், இந்த இரண்டும் உற்பத்தியாவதில் மேன்மையாயிருக்கிற அதிசயமான பொருள்களை கவனிக்கிறார்கள். செடிகளின் உற்பவத்தில், பூமியில் விதைக்கப்பட்ட ஒரு சிறிய விதையிலிருந்து ஒரு வேரும் தண்டும் வருவதையும், விதையானது அனுக்கிரமத்தையும், தானே புதிதாக்கிக்கொள்ளும் வழியையும் தெரிந்து கொண்டதுபோல், கிளைகளும், இலைகளும், புஷ்பங்களும், கனிகளும் தோன்றி புதுவிதைகளில் முடிவதையும் அவர்கள் பார்க்கிறார்கள். சுத்த நெருப்பாயிருக்கும் சூரியனுக்கு இது தெரியுமென்றும், இந்த பலன்களை காரியப்படுத்தவும், செடிகளிலிருக்கும் அதிசயமான பொருள்கள் உருவாக்கவும், உபயோகத்தை எதிர்பார்க்கவும், அல்லது தன்னிட சூட்டிலும் வெளிச்சத்திலும் அதை வைக்கக்வும்

கூடுமென்று, எந்த பகுத்தறிவுள்ள மனிதன் நினைக்கக்கூடும்? இந்த பொருள்களைப்பார்த்து, ஆலோசிக்கிற உயர்த்தப்பட்ட பகுத்தறிவுள்ள எந்த மனிதனும், முடிவற்ற ஞானமுள்ளவரிடமிருந்து, ஆகையினால் கடவுளிடமிருந்து அவைகள் உண்டாகின்றனவென்பதை நினைப்பதைவிட வேறொன்றும் செய்யமுடியாது. தெய்வத்தை ஒத்துக்கொள்பவர்கள் இதையும் பார்த்து இவ்விதமாய் நினைக்கிறார்கள்; ஆனால், அப்படி ஒத்துக்கொள்ளாதவர்கள், தங்களுக்கு அப்படி செய்ய இஷ்டமில்லாதபடியினால், அதை பார்க்கிறதில்லை அல்லது அப்படி நினைக்கிறதில்லை; ஆகையினால், சரீரத்தின் ஐம்புலன்களிருக்கப்பட்ட வெளிச்சத்திலிருந்து, தன் அபிப்பிராயங்களை எல்லாம் அடைகிறதும், அதன் ஜாலங்களை எல்லாம ஸ்திரப்படுத்துகிறதுமான, இந்திரிய சம்பந்தமானதில் தங்கள் பகுத்தறிவுடைமையை அமிழ்த்துகிறார்கள். அந்த இந்திரிய சம்பந்தமானது, சூரியனானவன் தன் சூட்டினாலும் வெளிச்சத்தினாலும், இந்தப் பொருள்களைச் செய்கிறதென்று நீங்கள் அறிந்து கொள்ளுகிறதில்லையா என்றும், நீங்கள் அறிந்து கொள்ளாதது எதுவென்றும், அது ஏதாவது ஒன்றுமென்றும் அவர்களுக்கு சொல்லுகிறது. தெய்வத்துக்கு அனுகூலமாய் ஸ்திரப்பட்டவர்கள், பிராணிகளின் உற்பவத்தில் விளக்கமாயிருக்கிற அதிசயமான பொருள்களை கவனிக்கிறார்கள். முட்டைகள் விஷயத்தை மாத்திரம் கவனிப்போம். ஓட்டை விடுவதற்குமுன், எல்லா தேவையான பாகங்களோடும், அதனுடன் அது பட்சியாக அல்லது பெற்றோர் போன்று, உருவத்தில் இரக்கையுள்ள பொருளாகியவரையில், பின்னிட்டு எல்லா வளர்ச்சிகளோடும், ஒரு சிறு குஞ்சு அதன் விதையில் அல்லது தொடக்கத்தில் மறைந்து கிடக்கிறது. தோற்ற முள்ளதிலும்,

இல்லாததிலும், இந்த உயிருள்ள பிராணிகளில் மிகச் சிறியதிலும் மிகப் பெரியதிலும் ஞானேந்திரியங்கள் அதாவது ரூபம் கந்தம், ரசம், பரிசம் இவைகளைச் சேர்ந்த அவயவங்களும், அவைகள் பறக்கிறதும் நடக்கிறதுமாயிருந்தபடியினுல், சலனத்தை உண்டாக்கும் அங்கங்களும், அல்லது தசைநார்களும், மூளைகளால் சலனத்தை அடைகிற இருதயங்களுக்கும் சுவாசாசயங்களுக்கும் சுற்றிலும் ஆந்திரிகங்களும் இருக்கிறபடியினுல், பிறகு ஆழ்ந்து யோசிக்கிறவர்களை பிரமிக்கப் பண்ணவேண்டிய உருவத்தை கவனித்து பாருங்கள். எளிய பூச்சிகளும் கூட, அவ்வித அவயவ அமைப்புகளை உடைத்தாயிருக்கின்றன வென்பது, அவைகளைக் குறித்த அங்காதிபாத சாஸ்திரங்களிலும், சுவாம்மர்டாம் என்பவரால் தம்மிட பிரகுருதி சாஸ்திரம் எனும் நூலில் காண்பிக்கப் பட்டிருக்கிறது. ஒவ்வொன்றையும் பிரகுருதிக்கு ஆரோபிக்கிறவர்கள், இவைகளை எல்லாம் பார்க்கிருர்கள், ஆனுல் அவைகள் இருக்கின்றனவென்பதைமட்டும் ஒத்துக்கொண்டு, பிரகுருதி அவைகளை உண்டாக்குகின்றனவென்று சொல்லுகிருர்கள்; தெய்வத்தை நினைப்பதிலிருந்து தங்கள் மனதை திருப்பிவிட்டபடியினுல், அவர்கள் இதை சொல்லுகிருர்கள். தெய்வத்தை நினைப்பதிலிருந்து தாங்களே திரும்பிக்கொண்டவர்கள், பிரகுருதியில் அதிசயிக்கத்தக்க பொருள்களை பார்க்கும்போது, அவர்கள் பகுத்தறிவுடனும், இன்னும் குறைவான பரமார்த்தத்துடனும் நினைக்க சக்தியற்றவர்களா யிருக்கிருர்கள், ஆனுல் அவர்கள் இந்திரிய சம்பந்தமாயும் ஸ்தூலமாயும் நினைக்கிருர்கள். நரகத்திலிருக்கிறவர்களைப்போல், பிரகுருதிக்கு மேலல்லாமல், பிரகுருதியிலிருந்து, பிரகுருதியில் அப்பொழுது அவர்கள் நினைக்கிருர்கள். பகுத்தறியும் மனேசக்தி தங்களுக்கு இருக்

கிறதென்பதில், அதாவது தாங்கள் அறிந்துகொள்ள, ஆகையினால் தாங்களிஷ்டப்பட்டால் வேறுவிதமாய் நினைக்க தங்களுக்கு சக்தியிருக்கிற தென்பதில் மட்டும் மிருகங்களிலிருந்து வித்தியாசப்படுகிறார்கள்.

352. தெய்வசிந்தனையை இவ்விதமாக அசட்டைப் பண்ணுகிறவர்கள்,பிரகுருதியிலுள்ள அற்புதங்களைப்பார்த்து, அதனால் இந்திரிய சம்பந்தமுள்ளவர்களாகும்போது, இந்த பூச்சிகள் ஒவ்வொன்றும் ஞானேந்திரியங்களையும் இயக்கும் அவயவங்களையும் அடைந்து, ஆகையினால் நார்களோடும் நாடிகளோடும், சிறிய இருதயத்தோடும், நுரையீரல் சம்பந்தமான குழாய்களோடும், நுண்ணிய ஆந்திரிகங்களோடும், மூளைகளோடும் சேட்டிக்கப்பட்டிருந்தாலும், கண்ணானது, அநேக பூச்சிகளை ஒரு மங்கலான பதார்த்தமாக பார்க்கும்படியாக, கண்பார்வை அவ்வளவு தடித்ததாயிருக்கிறதென்று யோசிக்கிறதில்லை. இந்த அங்கங்கள் பிரகுருதியிலுள்ள மிகவும் சுத்தமான பொருள்களால் உருவாக்கப்படுகின்றன; அவைகளின் நெசவு அவைகளின் மிகவும் நுண்ணிய பாகங்கள் தெளிவாய் உயிர்ப்பிக்கப்படுகிற உயிரின் ஏதோ ஒன்றுக்கு அன்னுவயப் படுகின்றன. கண்ணின் பார்வையானது, அவ்விதமான அநேக பிராணிகள், ஒவ்வொன்றிலும் கணக்கற்ற விவரணங்களோடு, அதன்முன் ஒரு மங்கலான புள்ளிபோன்று தோன்றும்படி, அவ்வளவு பருமையானதா யிருந்தாலும்,ஐம்புலன்களிலிருந்து நினைத்து தீர்மானிக்கிறவர்கள் தாங்கள் பார்க்கிறதிலிருந்து, தங்கள் முடிவுகளை ஏற்படுத்துகிறபடியினால், அவர்களிட மனதானது எவ்வளவு தடித்ததா யிருக்கிறதென்றும், பரமார்த்த விஷயங்களைப் பற்றி அவர்கள் என்ன பெரிய இருட்டிலிருக்கிறார்களென்பதும் விசதமாகிறது.

353. தான் இஷ்டப்பட்டால், ஒவ்வொருவனும், பிரகுருதியில் காணப்படும் பொருள்களால், தெய்வத்துக்கு அனுகூலமாகத் தானே ஸ்திரப்பட சக்தியுள்ளவனு யிருக்கிறுன்; உயிருள்ள பொருள்களிலிருந்து கடவுளை நினைக்கிற எவனும், அவ்விதமாகவே தானே கூட ஸ்திரப்படுகிறுன். ஏனென்றுல், அவன் ஆகாயத்திலுள்ள பட்சிகளைப் பார்த்து, ஒவ்வொரு இனமும் தன் ஆகாரத்தையும், அது அகப்படும் இடத்தையும் தெரிந்து கொள்வதையும், சப்தத்தினுலும் பார்வையினுலும் அதன் இனத்தை ஒப்புக்கொள்வதையும், மற்ற இனங்களில் யார் சினேகிதர்களென்றும், யார் விரோதிகளென்றும் தெரிந்துகொள்வதையும் கவனிக்கிறுன். அவைகள் ஜோடு ஆகிறதையும், விவாக சம்பந்தமான சம்போகத்தை தெரிந்து கொள்ளுகிறதையும், தங்கள் முட்டைகளை சமத்காரமான கூண்டுகளை கட்டுகிறதையும், இவைகள் பேரில் உட்காருகிறதையும், அவயவம் காக்கும் காலத்தை தெரிந்துகொள்ளுகிறதையும், பொரித்த சிறு குஞ்சுகளை வளர்க்கிறதையும், அவைகளை மிகவும் உருக்கமாய் நேசிக்கிறதையும், தங்கள் சிறகுகளின்கீழ் அவைகளை சேர்க்கிறதையும், சிறு குஞ்சுகள் தாங்களே சேகரித்துக் கொள்ளும் வரையில் தங்கள் மூக்குகளில் ஆகாரத்தைக் கொண்டுவந்து அவைகளுக்கு ஊட்டுகிறதையும், அவ்வித வாழ்வை திரும்பச் செய்து, தங்கள் இனம் சாசுவதமாயிருக்க ஒரு குடும்பத்தைச் ஜெனிப்பிக்கிறதையும் கூட அவன் பார்க்கிறுன். பரமார்த்த உலகத்தின் மூலமாக ஸ்தூல உலகத்திற்குள் பாயும் தெய்வ பெருக்கைப்பற்றி நினைக்க இஷ்டமுள்ள ஒவ்வொருவனும், இந்த பொருள்களில் அந்த பெருக்கைக் காணலாம்; அவனுக்கு இஷ்டமிருந்தால், "பிரகுருதியானது தனது உற்பத்தியை

யும் சாரத்தையும் அடைகிற சூரியன், சுத்த நெருப்பாயும், ஆகையினால் இந்த வெளிச்சமுள்ள கிரணங்கள் சுத்தமாய் உயிரில்லாதவைகளாயுமிருக்கிறபடியினால்,அவ்விதமான அறிவு இந்த பிராணிகளுக்குள் சூரியனிடமிருந்து, அதன் வெளிச்சமுள்ள கிரணங்கள் மூலமாய் பிரவேசிக்காதென்றும்" கூட அவன் நினைத்து கொள்ளக்கூடும்; ஆகையினால் அவ்விதமான பொருள்கள் பிரகுருதியின் இறுதியானவைகளில் பரமஞான சக்தியின் பெருக்கத்திலிருந்துவருகிறதென்று அவன் தீர்மானிக்கலாம்.

354. ஒவ்வொருவனும் சிறு புழுக்களிடவும் கம்பளிப் பூச்சிகளிடவும் விஷயங்களை யோசித்தால், தோற்றமுள்ள பொருள்களிலிருந்து,தெய்வத்துக்கு அனுகூலமாக ஸ்திரப்பட சக்தியுள்ளவனாயிருக்கிறான். இவைகள் ஓராசையால் ஏவப் பட்டு தங்களிட பூதலநிலைமையை,சுவர்க்கத்தைப் போன்றதாய் மாற்ற ஆவாகொண்டு நாடுகின்றன. இந்த எண்ணத்தோடு அவைகள் மூலைகளுக்குநகர்ந்து,மறுபடியும்பிறக்கும் பொருட்டு ஒரு கருப்பையில் பிரவேசிப்பது போல் பிரவேசித்து, அங்கே நான்கு வித புழுக்களாக மாறி கடைசியில் வண்ணாத்தி பூச்சாக வுமாகின்றன. இந்த வேற்றுருவை அடைந்து, ஒவ்வொன்றும் அதன் இனத்தைப்போல், அழகுள்ள இறகுகளால் உடுத்தப் பட்டபோது, தங்கள் சுவர்க்கமாக காற்றில் எழுந்து, அங் கேவிளையாடி, விவாகசம்மந்தமான சடங்குகளைச்செய்து, முட் டைகளை யிட்டு, ஒரு சந்ததியை சித்தப்படுத்துகின்றன; இதற் குள்ளே, புஷ்பங்களிலிருந்து சந்தோஷமானதும்,மதுரமானது மான ஆகாரத்தால் அவைகள் போஷிக்கப்படுகின்றன. பிர குருதியில் பார்க்கப்படும் பொருள்களிலிருந்து தெய்வத்துக்கு அனுகூலமாக ஸ்திரப்படுகிற எவனும், இந்தபிராணிகள் புழுக்

களாயிருக்கும்போது மனிதனிட பூதல நிலைமையில் ஏதோ ஒரு ஒப்பனையையும், அவைகள் வண்ணத்திபூச்சாக இருக்கும் போது அவைகளில், சுவர்க்க நிலைமையின் ஓர் ஒப்பனையையும் காணவே வேண்டும். ஆனால், பிரகுருதிக்கு அனுகூலமாக ஸ்திரபடுகிறவர்கள், அதே பொருள்களை பார்க்கிறார்கள். ஆனால், மனிதனிட சுவர்க்க நிலைமையை மனதார தள்ளிவிட்ட படியினால், அவர்கள் அவைகளை பிரகுருதின் இயற்கை அறிவுகளென்று மாத்திரம் சொல்லுகிறார்கள்.

355. தேனீக்களைப்பற்றி தெரிந்திருக்கும் செய்திகளை கவனித்தால், ஒவ்வொருவனும் பிரகுருதியில் காணப்படும் பொருள்களிலிருந்து தெய்வத்துக்கு அனுகூலமாக தானே ஸ்திரப்படுவார்கள். மெழுகை சேர்க்கவும், பூண்டுகளிலிருந்தும் புஷ்பங்களிலிருந்தும் தேனை அடையவும், சிறு வீடுகளைப்போல் சிற்றறைகளைக் கட்டவும், தாங்கள் வரவும் போகவும், தெருக்களோடு ஒரு நகரத்தைப்போன்ற ரூபமாக அவைகளை ஒழுங்குபடுத்தவும், அவைகளுக்கு தெரியும். அதிக தூரத்திலிருந்து, தங்கள்கூண்டுகளுக்கு, மெழுகையும், ஆகாரத்துக்கு தேனையும் சேர்க்கிற புஷ்பங்களையும் பூண்டுகளையும் வாசனை பிடிக்கின்றன; இவைகளை சுமந்துகொண்டு, தங்கள் தேன்கூண்டுக்கு நேராக மறுபடியும் பறந்து போகின்றன. அவைகள் அதை முன்கண்டு தெரிந்துகொண்டதுபோல, இவ்விதமாக பின்வரும் மாரிகாலத்துக்காக ஆகாரத்தையும் ஒதுக்கிடத்தையும் சம்பாதிக்கின்றன. அவைகள், ஒரு சந்ததி பரவச்செய்யப்பட, தங்களுக்கு மேலே ஒரு தலைவி அல்லது இராணியை கூட ஏற்படுத்துகின்றன; அதற்காக சுற்றிலும் காவலர்களோடு அவைகளுக்கு மேலே ஒரு அரண்மனையை அவைகள் கட்டுகின்றன ; அதுவும், காலம் வந்த காலத்தில்

தன் காவலர்களால் சூழப்பட்டு அறை அறையாய் போய், காற்றிலிருந்து அவைகளை காப்பாற்ற சூழ்ந்திருப்பவர்கள் கூட்டம் ஒன்று எண்ணெ பூசுகின்ற, தன் மூட்டைகளை யிடுகின்றன; அவைகளிலிருந்து ஒரு புது சந்ததி உண்டா கிறது. பின்னிட்டு அந்த சந்ததி வயது வந்து, இந்த காரியங்களை திரும்ப செய்ய சக்தியுண்டான காலத்தில், கூண்டிலிருந்து அது துறத்தப்படுகின்றது; இவ்விதமாக துரத்தப்பட்ட கூட்டம் முதலில் சேர்ந்து, பின்னிட்டு அவைகள் சிதறிப் போகாதபடி, ஒரு கூட்டமாக ஒரு புது வீட்டை கண்டுபிடிக்க பறந்துபோய்விடுகின்றன. இலையுதிர் காலத்தில்கூட, உபயோகமில்லாத தேனீக்களாகிய, வேலை செய்யாத ஆண் தேனீக்கள் வெளியே கொண்டுபோய் விடப் பட்டு, திரும்பி வராதபடிக்கும், தாங்கள் கஷ்டப்பட்டு உண் டாக்காத ஆகாரத்தை தின்றுவிடாதபடி தடுக்க, அவைகளின் சிறகுகள் நீக்கப்படுகின்றன. அநேக மற்ற விவரங்களை சொல்லவேண்டியதில்லை.

தேனீக்கள், மானிட ஜாதிக்கு செய்யும் உபயோகங்களுக் காக, பரலோகத்திலிருந்து வரும் ஒரு பெருக்கிலிருந்து மனி தர்களுக்குள்ளிருக்கும் துரைத்தனத்தைப் போன்றும், நிஜ மாகவே சுவர்க்கத்திலுள்ள தேவர்களுக்குள்ளிருக்கும் துரைத் தனத்துக்கு ஒப்பான ஓர்வித துரைத்தனத்தையும் பெற்றிருக் கின்றனவென்று இந்த சரித்திரத்தால் அறிந்து கொள்ளப் படும். இந்த பிராணிகள் செய்யும் இவ்வித காரியங்கள் ஸ்தூல உலகத்திலிருந்து உண்டாகவில்லை என்று அறியாத நல்ல ஸ்திதியிலுள்ள மனதை உடைய மனிதன் எவனுவது இருக்கிருனு ? சுவர்க்கத்து துரைத்தனத்துக்கு போட்டி செய் வதும் உவமையானதுமான துரைத்தனத்துடன், பிரகுருதி

உற்பத்தியாகும் சூரியன் எதை பொதுவாக உடைத்தாயிருக்கிறது? மிருக சிருஷ்டியில் உள்ள அவைகளைப் போன்ற இந்த பொருள்களிலிருந்தும் மற்றவைகளிலிருந்தும், பிரகுருதியை நம்பி அதை ஆராதனை செய்கிறவன், அதற்கு அனுகூலமாக தானே ஸ்திரப்படுகிருன்; அப்படியிருக்கையில், கடவுளை நம்பி அவரை ஆராதனை செய்கிறவன், அதே பொருள்களிலிருந்து தெய்வத்துக்கு அனுகூலமாக தானே ஸ்திரப்படுகிருன். அவைகளில் ஞானியானவன் பரமார்த்தமானதையும், ஸ்தூல மனிதன் ,ஸ்தூலப் பொருள்களையும் அவைகளில் பார்க்கிருன். ஒவ்வொருவனும் தன்னிட குணத்துக்கு தக்கபடி பார்க்கிருன். என் விஷயத்திலோ, இவ்வித பொருள்கள், ஸ்தூலமானதில் பரமார்த்தமானதினிடவும், ஸ்தூல லோகத்தில் பரலோகத்தினிடவும், ஓர் உட்பெருக்கத்தின் சாட்சியங்களாகவும், பரம ஞான சத்தியிலிருந்து ஓர் பெருக்கத்தின் சாட்சியங்களாகவும் எனக்கிருந்தது. இன்னும் இந்தக் கேழ்வியைப்பற்றி யோசித்துப் பாருங்கள். தெய்வமானது தம்மிட ஞான சக்தியிலிருந்து பரலோகத்தின் மூலமாய் உட் பெருக்கிஞல் பிரவேசித்தாலொழிய, எவ்வித துரைத்தனத்தைபற்றியாவது, எந்த தேசா சாரமான சட்டத்தைப்பற்றியாவது, எந்த சன்மார்க்கமான ஒழுக்கத்தைப்பற்றியாவது, எந்த பரமார்த்த உண்மையைப்பற்றியாவது நீங்கள் கூறுகூருய்பிரித்து யோசிக்கக்கூடுமா? என்விஷயத்திலோ நான் அப்படி நினைக்கும் ஸ்திதியிலுமில்லை, எனக்கு நினைக்கசக்தியுமில்லை. ஏனென்ருல், நான் அந்தப் பெருக்கை ஏறக்குறைய பத்தொன்பது வருஷகாலம் தொடர்ச்சியாய் பார்த்து அனுபவித்திருக்கிறேன்; ஆகையிஞல் அதற்கு இங்கே நான் சாட்சிகொடுக்கிறேன்.

356. எந்த ஸ்தூல பொருளாவது உபயோகத்தை ஒரு நோக்கமாகவைத்து, உபயோகங்களை ஒழுங்குகளாகவும் ரூபங்களாகவும் ஏற்படுத்தக்கூடுமோ? ஞானமுள்ள ஒருவரால் தவிர யாராலும் இதைசெய்யமுடியாது; முடிவற்ற ஞானத்தை உடைய கடவுள் தவிர பிரபஞ்சத்தை அவ்விதமாய் ஒழுங்கு படுத்தி உருவாக்க யாராலும் முடியாது. பூமியின் பலன்களிலிருந்தும் பிராணிகளிடமிருந்தும் ஆகாரத்தையும், அவைகளிலிருந்தே உடுப்பையும் இவ்விதமாக மானிட ஜாதிக்கு ஆகாரமாகவும், உடுப்பாகவுமிருக்கிற எல்லா பொருள்களையும் யார் அல்லது எது முன்னறிந்து சித்தப்படுத்தக் கூடும்? பட்டுப் பூச்சிபோன்ற ஒரு தாழ்ந்த பிராணியானது, இராணிகள் இராஜாக்கள் முதல் வேலைக்காரிச்சிகள் வேலைக்காரர்கள்வரையில் மனிதர்களையும் ஸ்திரிகளையும் பட்டினுலும் மகத்துவமான வஸ்திரபூஷணங்களினுலும் உடுத்துவதும், தேனீக்களைப்போன்ற எளிய பூச்சிகள் பிரகாசத்துக்காக மெழுகை கொடுத்து, கோயில்களுக்கும் அரண்மனைகளுக்கும் சோதியை தருவதும், அநேக ஆச்சரியங்களில் ஒன்றுயிருக்கிறது. இவைகளும் இன்னும் அநேக இதர விஷயங்களும், ஆண்டவர் தாமே பிரகுருதியில் வரும் எல்லா பொருள்களையும் பரலோகத்தின் மூலமாய் காரியப்படுத்துகிருரென்பதற்கு தெளிவான சாட்சியங்களா யிருக்கின்றன;

357. உலகத்தில் பார்க்கப்பட்ட பொருள்களிலிருந்து கடைசியில் நாஸ்திகர்களாகிற வரையில், பிரகுருதிக்கு அனுகூலமாக தாங்களே ஸ்திரப்பட்டவர்கள் பரலோகத்தில் என்னுல் பார்க்கப்பட்டிருக்கிருர்கள் என்பது மேல் கூறியவற்றிற்கு சேர்க்கப்படவேண்டும்; சிந்தனையில் அவர்கள் மேலே சுவர்க்கத்தை பார்க்காமல், கீழே பூமியை பார்த்தபடியினுல், ஞான,

வெளிச்சத்தில், அவர்கள் புத்தி கீழே திறந்தும், ஆனால் மேலே மூடியுமிருப்பதாக தோன்றினது. புத்தியின் மிகவும் தாழ்ந்த பாகமான இந்திரிய சம்பந்தமானதற்கு மேல், ஒரு திறையின் ஒப்பனை தோன்றினது: அது சிலரில் நரகத்து நெருப்பினால் பளீரென்றது; சிலரில் ஒட்டரையைப்போன்று கருப்பாயிருந்தது; சிலரில் பிரேதத்தைப் போன்று மங்கல் நிறமாயிருந்தது. ஆகையினால், பிரகுருதிக்கு அனுகூலமாய் ஸ்திரப்படுவதைப் பற்றி எல்லாரும் ஜாக்கிரதையா யிருங்கள்: தெய்வத்துக்கு அனுகூலமாக அவர்கள் ஸ்திரப்படட்டும்; உபகரணங்களுக்கு குறைவில்லை.

# ஐந்தாம் பாகம்

---

பசு.

**சித்தமென்றும் புத்தியென்றும் சொல்லப்பட்ட இரண்டு ஆசயங்களும் வாசஸ்தானங்களும், ஆண்டவரால் தமக்காகவே மனிதனில் சிருஷ்டிக்கப்பட்டு, உருவாக்கப்பட்டிருக்கின்றன; சித்தம் அவரிட இச்சாசத்திக்காகவும், புத்தி அவரிட ஞான சத்திக்காகவும் சிருஷ்டிக்கப்பட்டது.**

358. சதாகாலம் ஆண்டவராயிருக்கிற சிருட்டிகர்த்தாவாகிய கடவுளின் இச்சா சத்தியைப்பற்றியும் ஞானசத்தியைப்பற்றியும், அதனுடன் பிரபஞ்ச சிருட்டியைப்பற்றியும் கூட சொல்லப்பட்டிருக்கிறது; மனிதன் சிருஷ்டிக்கப்பட்டதைப்பற்றி சிலது இப்பொழுது சொல்லப்பட வேண்டும். மனிதனனவன் கடவுளின் சாயலாகவும் அவரிட ரூபத்தின்படியும் சிருஷ்டிக்கப்பட்டானென்று நாம் வாசிக்கிறோம் (ஆதி ஆகமம் I. 26). அங்கே கடவுளின் சாயல் என்பதால் அவரிட ஞானசத்தியும், கடவுளின் ரூபம் என்பதால் அவரிட இச்சா சத்தியும் அருத்தம் கொள்ளப்படுகின்றன. ஏனென்றால், அன்பானது ஞானத்தில் பார்க்கப்பட்டு, தெரியப்பட தானே தெரியக்காட்டுகிறபடியினால், ஞானமானது அன்பின் சாயலைத் தவிர வேறொன்றுமில்லை; அது அங்கே பார்க்கப்பட்டு, அறிந்துகொள்ளப்படுகிறபடியினால், ஞானம் அதின் சாயலா யிருக்கிறது; அன்புகூட உயிரின் சொரூபமாகவும், ஞானம் அதிலிருந்து வந்த உயிரின் தடத்தமாகவு மிருக்கிறது. அமரர்களில் கடவுளின் ரூபமும்

சாயலும் தெளிவாய்த் தோன்றுகின்றன; ஏனென்றால், உள்ளிருந்து வரும் அன்பானது அவர்கள் முகங்களிலும், ஞானம் அவர்களின் அழகிலும் பிரகாசிக்கின்றன; அழகானது அவர்கள் அன்பின் உருவமாயிருக்கிறது. நான் இதைப் பார்த்துமிருக்கிறேன், தெரிந்துகொண்டுமிருக்கிறேன்.

359. கடவுள் அவனிலிருந்தும், அவனிட உயிரானது மிகவும் அந்தரங்கமானதிலிருந்து வந்தாலொழிய, ஒரு மனிதனானவன் கடவுளின் சாயலாகவும், அவரிட ரூபத்தின்படியும் இருக்க முடியாது. கடவுள் மனிதனிலிருக்கிறாரென்பதும், அவனிட உயிர் மிகவும் அந்தரமானதிலிருந்து வருகிறதென்பதும், கடவுள் மாத்திரம் உயிரென்றும், மனிதர்களும் தேவர்களும் அவரிடமிருந்து உயிரை அடைகிறவர்களென்றும், மேலே (பிரிவு 4 முதல் 6 வரையில்) மெய்ப்பிக்கப்பட்டதிலிருந்து ஏற்படுகிறது. கடவுள் மனிதனிலிருக்கிறாரென்றும், அவர் தன்னிட வாசஸ்தானத்தை அவனில் வைக்கிறாரென்றும், வேதத்திலிருந்து தெரிந்துகூடயிருக்கிறது; அது வேதத்திலிருந்து தெரிந்திருக்கிறபடியினால், கடவுளானவர் அவர்களுக்குள்ளே பிரவேசித்து, அவர்கள் இருதயங்களிலிருக்கவும், அவைகள் அவரிட வாசஸ்தானங்களாகயிருக்கவும், தங்கள் சபையாரை கடவுளே ஏற்றுக்கொள்ள பக்குவம் செய்துக்கொள்ளும் பொருட்டு, போதகர்கள் எச்சரித்தல் வழக்கமாயிருக்கிறது. பக்திமான்கள் தங்கள் ஜெபங்களில் அதையே கூட சொல்லுகிறார்கள்; சிலர் பரிசுத்தமான வைராக்கியத்திலிருந்துகொண்டு, அதிலிருந்து நினைத்து, பேசி, பிரசங்கம் செய்யும்போது, தங்களிலிருப்பதாக நம்புகிற **பரிசுத்த ஆவியைப்பற்றி** பகிரங்கமாய் பேசுகிறார்கள். **பரிசுத்த ஆவி** ஆண்டவரென்றும், பரத்து

வத்தில் ஒரு தனித்த பொருளல்லவென்றும், ஆண்டவரைக் குறித்த புதிய எருசலேம் நகரத்தின் கோள்கை எனும் நூலில் 51, 52, 53-வது பிரிவுகளில் காண்பிக்கப்பட்டிருக் கிறது. ஏனென்ருல், ஆண்டவர் சொல்லுகிறதாவது : "அந் நாளிலே நீங்கள் என்னிலும் நான் உங்களிலும் இருக்கிறதை நீங்கள் அறிவீர்கள்" (யோவா XIV. 20; அம்மாதிரியே கூட XV, 4, 5; XVII. 23).

360. ஆண்டவர் இச்சாசத்தியும் ஞான சத்தியுமா யிருப்பதாலும், இந்த இரண்டும் முக்கியமாய் அவராகவே இருக்கிறபடியினுலும், அவர் மனிதனில் வசிக்கவும், மனித னுக்கு உயிரைக் கொடுக்கவும், அவர் அன்புக்கு ஒன்றும், ஞானத்துக்கு மற்ருென்றுமாக, மனிதனில் ஆசயங்களும் வாசஸ்தானங்களும் தனக்காகவே சிருட்டித்து உருவாக்கி யிருக்கவேண்டு மென்பது அவசியமாயிருக்கிறது. மனிதனி லிருக்கும் சித்தமும் புத்தியும், இந்த ஆசயங்களாகவும் வாசஸ் தானங்களாகவு மிருக்கின்றன; சித்தமானது அன்பின் ஆசய மாகவும் வாசஸ்தானமாகவு இருக்கிறது; புத்தியானது ஞானத் தின் ஆசயமும் வாசஸ்தானமாயு மிருக்கிறது. இந்த இரண் டும் மனிதனில் ஆண்டவருடையவைக ளென்பதும், ஒரு மனிதன் உயிர் முழுதும் இந்த இரண்டிலிருந்து வருகிற தென்பதும், பின் வருவதில் அறிந்துகொள்ளப்படும்.

361. சித்தமென்றும் புத்தி என்றும் இந்த இரண்டும் ஒவ்வொரு மனிதனுக்கும் உண்டென்பதும், அன்பும் ஞான மும் வேருனதாயிருப்பதுபோல், அவைகள் ஒன்றுக்கொன்று வேருயிருக்கிறதென்பதும், உலகத்தில் தெரிந்தும், தெரியா மலுமிருக்கிறது. அது சாமானிய புலப்பாட்டிலிருந்து தெரிந் திருக்கிறது, ஆனுல் சிந்தனையிலிருந்தும், இன்னும் குறைவாய்

புஸ்தகங்களில் சொல்லப்பட்ட சிந்தனையிலிருந்தும் தெரிந்து கொள்ளப்படுகிறதில்லை. சித்தமும் புத்தியும் ஒருமனிதனில் இரண்டு வேறான பொருள்களென்று சாமானிய புலப்பாட்டினால் யாருக்குத் தெரியாது? ஒவ்வொருவனும், அதைக்கேட்கும்போதும், சம்பாஷணையில் ஜனங்கள், "இந்த மனிதன் திறமாய் இச்சிக்கிறான், ஆனால் திறமாய் அறிந்துகொள்ளுகிறதில்லை; இந்த மனிதன் நன்றாய் அறிந்துகொள்ளுகிறான், ஆனால் நன்றாய் இச்சிக்கிறதில்லை; திறமாய் அறிந்துகொண்டு திறமாய் இச்சிக்கிறவனை நான் நேசிக்கிறேன், ஆனால் நன்றாய் அறிந்துகொண்டு, கேடாய் இச்சிக்கிறவனை நான் நேசிக்கிறதில்லை" என்றும் சொல்லும்போது இதை அறிந்து கொள்ளுகிறான். ஆனால் அதே மனிதன் சித்தத்தையும் புத்தியையும் குறித்து நினைக்கும்போது, அவைகளை இரண்டாக்கி, அவைகளுக்குள் பேதம் காட்டாமல் ஒன்றை வேறொன்றாக நினைத்து பிரமிக்கிறான்; இதற்கு காரணம் சிந்தனையானது சரீரபார்வையோடு சம்பந்தப்படுகிறதென்பதாயிருக்கிறது. அவன் எழுதிக்கொண்டிருந்தால், சித்தமும் புத்தியும் இரண்டு பிரத்தியேகமான பொருள்களென்பதை இன்னும் குறைவாய் அறிந்து கொள்ளுகிறான்; அதற்கு காரணம், சிந்தனையானது அப்பொழுது மனிதனுக்கு சொந்தமானதாகிய இந்திரியங்களோடு சம்பந்தப்படுகிறது என்பதாயிருக்கிறது. அதனால்தான் சில ஜனங்கள் நன்றாய் நினைத்து நன்றாய் பேசுவார்கள். அப்படியிருந்தும் நன்றாய் எழுதமாட்டார்கள்; இது ஸ்திரீஜாதிகளில் சாமானிய சங்கதி. அநேக இதர பொருள்களோடும் அம்மாதிரியே யிருக்கிறது. நல்லவாழ்வை நடத்துகிறவன் இரட்சிக்கப் படுகிறானென்றும், கெட்டவாழ்க்கை யுள்ளவன் தண்டனைக் குள்ளாகிறானென்றும், நல்லவாழ்க்

கையுள்ளவன் தேவர்கள் மத்தியில் வந்து, பிறகு ஒரு மனிதனைப்போல் பார்த்து, கேட்டு பேசுகிறுனென்றும், நியாயத்துக்காக நியாயமானதையும், நேர்மையிலிருந்து நேர்மையானதையும் செய்கிறவனுக்கு ஒரு மனசாட்சி உண்டென்றும், சாமானிய புலப்பாட்டிலிருந்து யாருக்குதெரியாது? ஆனால்சாமானிய புலப்பாட்டை தள்ளிவிட்டு, இவைகளை சிந்தனைக்கு அவன் ஒப்புவித்தால், அப்பொழுது அவனுக்கு மனசாட்சி என்னவென்பதும், ஆண்மாவானது ஒருமனிதனைப்போல் பார்த்து, கேட்டு, பேசக்கூடு மென்பதும், அல்லது வாழ்க்கையின் நன்மை ஏழைகளுக்கு தருமம் கொடுத்தலைவிட வேறு அதிகமில்லை யென்பதும் தெரியாது. இந்த விஷயங்களைப்பற்றி அவன் எழுதினல், அர்த்தமில்லாத, ஆடம்பரமான வார்த்தைகளாலும், தோற்றங்களாலும், போலி நியாயங்களாலும், சாரமில்லாத கேவல வார்த்தைகளாலும், அவைகளை ரூபகாரம் செய்கிறுன். இதனுல்தான், அதிகம் யோசித்து, முக்கியமாய் அதிகம் எழுதின அநேக கல்விமான்கள் தங்களிட சாமானிய புலப்பாட்டை பலயீனப்படுத்தி, மங்கலாக்கி, நிஜமாகவே அதைஅழித்து விட்டார்கள்;மேலும் இதனுல்தான் சாமானிய ஜனங்கள் ஞானத்தில் மேலானவர்களென்று, தாங்களே நினைத்துக் கொள்ளுகிறவர்களைப் பார்க்கிலும், எது நன்மையானதென்றும், எது உண்மையானதென்றும், மிகவும் தெளிவாய் அறிந்து கொள்ளுகிறுர்கள். இந்த சாமானிய புலப்பாடு சுவர்க்கத்திலிருந்து வரும் பெருக்கிலிருந்து வந்து சிந்தனையிலும் பார்வையிலும் பிரவேசிக்கிறது; ஆனல், சாமானிய புலப்பாட்டிலிருந்து பிரிக்கப்பட்ட சிந்தனையானது பார்வையிலிருந்தும் சொந்தமானதிலிருந்தும் மனக்கற்பனையாகிறது. இது அப்படியிருக்கிறதென்று, நீ அனு

பவத்தில் தெரிந்து கொள்வாய். சாமானிய புலப்பாட்டில் இருக்கப்பட்ட எவனுக்காவது, எதோ ஒரு உண்மையை நீ சொன்னால், அவன் அதை அறிந்து கொள்வான்; நாம் கடவுளாலும் கடவுளிலும் இருந்து கொண்டு, ஜீவித்து சலனமடைகிறோமென்று, அவனுக்கு சொன்னால் அவன் அதை அறிந்து கொள்வான். அவனுக்கு, கடவுளானவர் மனிதனில் அன்பிலும் ஞானத்திலும் வசிக்கிறாரென்றுசொன்னால், அவன் அதை அறிந்து கொள்வான்; இன்னும் அவனுக்கு, சித்தமானது அன்பின் ஆசயமென்றும், புத்தியானது ஞானத்தின் ஆசய மென்றும் சொல்லி, அதை கொஞ்சம் விளக்கினால், அவன் அதை தெரிந்து கொள்வான்; அவனுக்கு, கடவுளானவர் அன்பே என்றும் ஞானமே என்றும் சொன்னால், அதை அவன் அறிந்து கொள்வான்; அவனை மனசாட்சி என்னவென்று கேட்டால் அவன் அதை சொல்லுவான். ஆனால் சாமானிய புலப்பாட்டிலிருந்து நினைக்காமல், பார்க்கும் புலனால் உலகத்திலிருந்து தெரிந்து கொண்ட நியாயங்களிலிருந்தும் அல்லது அபிப்பிராயங்களிலிருந்தும், நினைத்த கல்விமான்களில் ஒருவனுக்கு அநேகவிஷயங்களைச்சொன்னால், அது அவனுக்கு புலப்படாது. பின்னிட்டு இவர்களிருவரில் யார் அதிக புத்தியுள்ளவனென்று யோசித்துப்பார்.

அன்புக்கும் ஞானத்திற்கும் ஆசயங்களாயிருக்கிற சித்தமும் புத்தியும், மூளையில் முழுவதிலும், அதன் ஒவ்வொரு பாகத்திலுமிருக்கின்றன; ஆகையினால் சரீரத்தில், முழுவதிலும் அதன் ஒவ்வொரு பாகத்திலுமிருக்கின்றன.

362. இவைகளெல்லாம் அடியில் கண்ட ஒழுங்கில் மெய்ப்பிக்கப்பட வேண்டும்:—I. அன்பும் ஞானமும், ஆகையினால் சித்தமும் புத்தியும், மனிதனிட உயிரேயாகின்றன.

II. மனிதனிட உயிரானது, அதன் தொடக்கங்களை மூளை யிலும், முடிவுகளை சரீரத்திலும் உடைத்தாயிருக்கின்றது. III. உயிரானது அதன் தொடக்கங்களிருப்பது போலவே, முழுவதிலும், ஒவ்வொரு பாகத்திலு மிருக்கிறது. IV. இந்த தொடக்கங்கள் மூலமாய், உயிரானது ஒவ்வொரு பாகத்திலு மிருந்து, முழுவதிலும், முழுவதிலுமிருந்து ஒவ்வொரு பாகத் திலுமிருக்கிறது. V அன்பு இருப்பது போலவே, ஞானமு மிருக்கிறது, ஆகையினால் மனிதனும் அப்படியே யிருக்கிறான்.

363. I. அன்பும் ஞானமும், ஆகையினால் சித்தமும் புத்தியும், மனிதனிட உயிராகவே யிருக்கின்றன. உயிர் என்னவென்று யாருக்கும் தெரியாது. ஒரு மனிதனவன் உயிரைப்பற்றி நினைத்தால், யாதொரு அபிப்பிராயமும் சேர்க்கப்படாத ஆவியாய் பறக்கிற சுபாவமுடைய ஏதோ ஒன்று என்று அவனுக்கு தோன்றுகிறது. கடவுள் மாத்திரம் உயிரென்றும், அவரிட உயிர், இச்சாசத்தியும் ஞானசத்தியுமா யிருக்கிறதென்றும், தெரியாதபடியினால், இது நேரிடுகிறது. ஆகையினால், மனிதனிட உயிர், இதைத் தவிர வேறொன்று மில்லை என்றும், அவன் ஏற்றுக்கொள்ளுகிற அளவு உயிர் அவனில் இருக்கிறதென்றும் தெளிவாயிருக்கிறது. சூடும் ஒளியும், சூரியனிடமிருந்து புறப்படுகிறதென்றும், பிரபஞ் சத்திலுள்ள எல்லா பொருள்களும் ஏற்றுக்கொள்பவைக ளென்றும், பொருள்கள் அவைகள் ஏற்றுக்கொள்ளும் அளவு, வெப்பமாகவும் பிரகாசமாகவுமாகின்றன வென் றும் நமக்கு தெரியும். அப்படியேகூட ஆண்டவர் இருக்கப் பட்ட சூரியனிட மிருந்து சூடும் ஒளியும் புறப்படுகின்றன. இரண்டாவது பாகத்தில் காண்பித்தபடி, வெளிவரும் சூடு

அன்பாகவும், வெளிவரும் ஒளி ஞானமாகவும், இருக்கிறது. ஆகையினால், சூரியனாக வரும், ஆண்டவரிட மிருந்து புறப்படு கிற இந்த இரண்டு பொருள்களிலிருந்தும் உயிர் வருகிறது. ஆண்டவரிடமிருந்து வரும் அன்பும் ஞானமும் உயிராயிருக் கிறதென்பது, மனிதனானவன், தன்னிட மிருந்து அன்பு போய்விடவே, இயக்கமற்றவனாகிறா னென்பதிலிருந்தும், தன் னிடமிருந்து ஞானம் போகவே, மூடனாகிறானென்பதிலிருந் தும், அவைகள் இரண்டும் முழுமையும் போய்விட்டால் அவன் அழிந்துபோவானென்பதி லிருந்தும் கூட, விசத மகிறது. அவைகள் உற்பன்னங்களா யிருப்பதினால், இதரப் பெயர்களை அடைந்திருக்கிற அன்பின் பலவகைகள் இருக் கின்றன; நேசங்களும், ஆசைகளும், பசிகளும், அவைகளின் இன்பங்களும், இரஞ்சிதங்களும், அவ்விதமானவைகள். புலப்பாடு, மனனம், ஞாபகம், சிந்தனை, முடிவை நோக்கல் போன்ற ஞானத்தின் பலவகைகளுமிருக்கின்றன. மற்றவைக ளோடு, அங்கீகாரம், ஸ்திரபுத்தி, இயக்கம்பட தீர்ப்பும் போன்ற, அன்பு ஞானம் இரண்டுக்கும் பொதுவான அநேக மிருக்கின்றன. இவைகள் எல்லாம், உண்மையில், இரண்டுக் கும் சேர்ந்தவைகள், ஆனால் அவைகள் பிரபலமாயிருக்கிறதி லிருந்து பெயரிடப்படுகின்றன. இந்த இரண்டிலிருந்தும், கடைசியில், இந்திரிய ஞானங்களாகிய ரூபமும், சப்தமும், கந்தமும், ரசமும், ஸ்பரிசமும், அவைகளில் இன்பங்க ளும் பிரீதிகளும் உண்டாகின்றன. கண் பார்க்கிறதென் பது ஓர் தோற்றமாயிருக்கிறது; ஆனால் புத்தியானது கண்ணின் மூலமாய் பார்க்கிறது ; ஆகையினால் புத்தியா னது பார்க்கிறதாக சொல்லப்படுகிறது ; காது கேட்கிறது என்பது ஓர் தோற்றமாயிருக்கிறது; ஆனால் புத்தியானது

காதின் மூலமாய் கேட்கிறது; ஆகையினால் கூட கேட்டல் என்பது புத்தியின் செயல்களாயிருக்கிற கவனித்தலுக்கும், உற்றுக் கேட்டலுக்கும் குறிக்கப்படுகிறது. நாசித்துவாரங்கள் வாசனைப் பார்க்கிறதென்பதும், நாக்கு ருசிபார்க்கிறதென்பதும், தோற்றம்; ஆனால் அதன் புலப்பாட்டினால் புத்தியானது வாசனை பார்க்கிறது; அதனுடன் ருசியும்பார்க்கிறது; ஆகையினால்கூட வாசனை பார்த்தலும் ருசிபார்த்தலும் புலப்பாட்டுக்கு குறிக்கப்படுகின்றன. மற்ற விஷயங்களிலும் அப்படியே. முன்சொன்னதும் பின் சொன்னதுமாகிய இவைகளுக்கெல்லாம் மூலங்கள் அன்பும் ஞானமுமா யிருக்கின்றன; அதிலிருந்து, இந்த இரண்டும் மனிதனிட உயிராகின்றன வென்பது விசதமாகிறது.

364. புத்தியானது ஞானத்தின் ஆசயமென்று, ஒவ்வொருவனும் அறிந்து கொள்ளுகிறான், ஆனால், சிலர் தான் சித்தமானது அன்பின் ஆசயமென்று அறிந்துகொள்ளுகிறார்கள். சித்தமானது தானே ஒன்றையும் செய்கிறதில்லை என்பதும், புத்தியின் மூலமாய் செயல்படுகிறதென்பதும், அதனுடன் கூட சித்தத்தின் அன்பானது புத்தியின் ஞானத்தில் செல்லுகிறபோது, அது முதலில் நேசத்திற்குள் சென்று, அப்படியே மேல் செல்லுகிற தென்பதும், கவனிக்கப்படாத நினைப்பதிலும், பேசுவதிலும், செயல்படுவதிலும் உண்டாகிற ஒரு சந்தோஷத்தினால் தவிர, அன்பானது புலப்படுகிறதில்லை என்பதும், இதற்குக் காரணமாயிருக்கிறது. அப்படியிருந்தாலும், ஒவ்வொருவனும் தான் நேசிப்பதை இச்சிக்கிறபடியினாலும், தான் நேசிக்காததை இச்சிக்காததினாலும், இது அன்பிலிருந்து வருகிறதென்பது விசதமாகிறது.

365. II மனிதனிட உயிரானது, அதன் தொடக்கங்களை மூளைகளிலும், முடிவுகளை சரீரத்திலும் உடைத்தாயிருக்கிறது அது, தொடக்கங்களில், அதன் முதன்மையான பொருள்களிலிருக்கிறது; இறுதிகளில், முதன்மைப் பொருள்களிலிருந்து உண்டாக்கப்பட்டு,உருவாக்கப்பட்டபொருள்களிலிருக்கிறது; ஆரம்பங்களிலுள்ள உயிரென்பதால், சித்தமும் புத்தியும் அர்த்தம் கொள்ளப்படுகிறது. அவைகளின் தொடக்கங்களில் மூளைகளிலும், முடிவுகளில், சரீரத்திலும் இருக்கப்பட்டவை இந்த இரண்டுமாயிருக்கின்றன. உயிரின் தொடக்கங்கள் அல்லது முதன்மைப் பொருள்கள் மூளைகளில் இருக்கின்றன வென்பது,பின்வருவதில் வெளிப்படையாகிறது; 1 மனமறிந்த உணர்ச்சியிலிருந்து, ஏனென்றால், ஒரு மனிதன் மனதை தொழிற்படுத்தி நினைத்தால், அவன் மூளையில் நினைப்பதாக அறிந்துகொள்ளுகிறான்; அவன் கண் பார்வையை உள்ளுக் கிழுப்பதுபோல் இழுத்து, நெற்றியை நீட்டி, உள்ளே, முக் கியமாய் நெற்றிக்குள்ளேயும், அதற்கு கொஞ்சம் மேலேயும், ஓர் ஆலோசனை இருப்பதாகத் தெரிந்துகொள்ளுகிறான். 2. கருப்பையில்மனிதன் உருவாக்கப்படுதலிலிருந்து,ஏனென்றால் மூளை அல்லது தலை முதலில் உண்டாக்கப்படுகிறது. பின் னிட்டு நெடுங்காலம் சரீரத்தைவிட அது பெரியதா யிருக் கிறது. 3. தலை மேலேயும், சரீரம் கீழேயும் இருக்கிறது; மேலானவைகள் கீழானவைகளின்பேரில் செயல்படுதல் என் பது ஒழுங்குக்கு ஒத்திருக்கிறது, அதற்கு எதிரிடை அப்படி யல்ல. 4. கருப்பையில் மூளையானது சேதப்பட்டால், அல் லது தற்செபலாய் அல்லது நோயால், பழுதாக்கப்பட்டால், அல்லது அதிக பெரிய பிரயாசத்தால், சிந்தனையானது பல யீனப்பட்டால், சிலவேளைகளில் மனதானது தள்ளாடுகிறது.

5. ரூபம், சத்தம், கந்தம், ரசமாகிய சரீரத்தின் புறம்பான இந்திரிய ஞானங்கள், எங்கும் நிறைந்த இந்திரிய ஞானமாகிய பரிசத்துடனும், இன்னும் பேச்சுடனும், முகம் என்று சொல்லப்பட்ட தலையின் முன் புறத்தில் இருந்துகொண்டு, நார்கள் மூலமாய் மூளைகளோடு நேராய் சம்பந்தப்பட்டு, அதிலிருந்து அவைகளின் உணர்ச்சியுள்ளதும், முயற்சியுள்ளதுமான உயிரை அடைகின்றன 6. இந்த காரணத்துக்காக, அன்பின் விருப்பங்கள் முகத்தில் ஒப்பனையால் தோன்றுகின்றன; ஞானத்தைச் சேர்ந்த சிந்தனைகள் கண்களில் ஓர் வித வெளிச்சத்தால் தாங்களே தோன்றுகின்றன. 7. எல்லா நார்களும் மூளைகளிலிருந்து கழுத்தின் மூலமாய் சரீரத்தில் இறங்குகின்றன வென்றும், சரீரத்திலிருந்து கழுத்தின்மூலமாய் மூளைகளுக்குள்ளே எந்த நாரும் ஏறுகிறதில்லை யென்றும்,நார்கள் தங்கள் தொடக்கங்களிலும் முதன்மைப்பொருள்களிலும் இருக்கப்பட்ட இடங்களில் உயிரானது அதன் தொடக்கங்களிலும், முதன்மைப்பொருள்களிலும் இருக்கிறதென்றும் கூட சரீர சாஸ்திரம் தெரிவிக்கிறது. நார்களின் உற்பத்தி யிருக்கிறயிடத்தில், உயிரின் உற்பத்தி இருக்கிறதென்பதை எவனாவது நிராகரிக்க ஒத்துக்கொள்வானோ? 8. சாதாரண புலப்பாடுள்ள யாரையாவது, அவன் சிந்தனை எங்கே யிருக்கிறதென்றும், அல்லது எந்த பாகத்தில் அவன் நினைக்கிறானென்றும் கேட்டால், அவன் தன்னிட தலையில் நினைப்பதாக பதில் சொல்லுவான். ஆனால் ஆன்மாவுக்கு, குறித்த கோளத்தில் அல்லது இருதயத்தில் அல்லது வேறு இடத்தில் ஆசனம் கொடுத்த, ஒருவனை பின்னிட்டு பிடித்து கொண்டு விருப்பமும் சிந்தனையும் முதன்மையாய் எங்கே இருக்கின்றனவென்றும், அவைகள் மூளையில் இல்லையா

வென்றும் கேட்டால், அவன் இல்லையென்றாவது, தனக்கு தெரியாதென்றாவது சொல்லுவான். இந்த அறிவின்மைக்கு காரணம் மேலே (பிரிவு 361) பார்க்கலாம்.

366. III. **உயிரானது அதன் தொடக்கங்களிருப்பது போலவே, முழுவதிலும் ஒவ்வொரு பாகத்திலு மிருக்கிறது.**

இது அறிந்து கொள்ளப்பட, மூளையில் அந்த ஆரம்பங்கள் எங்கே யிருக்கின்றன வென்றும், அவைகள் எப்படி உண்டாகின்றன வென்றும், இப்பொழுது நாம் சொல்லுவோம். சரீர சாஸ்திரத்தில், அந்த தொடக்கங்கள் மூளையில் எங்கேயிருக்கின்றனவென்று தெளிவாயிருக்கிறது. அது இரண்டு மூளைகள் இருக்கின்றனவென்றும், இவைகள் தலையிலிருந்து, முதுகின் தண்டெலும்புக்குள்ளே, தொடர்ச்சியாயிருக்கிறதென்றும், புறணிக்குறிய ஒருபொருளும், மூளை சம்பந்தமான ஒரு வெள்ளை பொருளும், ஆக இரண்டு பொருள்களால் அவைகள் உண்டாக்கப்பட்டிருக்கின்றனவென்றும், புறணிக்குறிய பொருள், கணக்கற்ற மாம்ச கிரந்திபோன்றவைகளாலும், மூளை சம்ப்பந்தமுள்ள வெள்ளைப்பொருள், கணக்கற்ற நார்களாலும் உண்டாக்கப்பட்டிருக்கின்றனவென்றும், காண்பிக்கிறது. இந்த மாம்ச கிரந்திகள், சிறு நார்களுக்கு உற்பத்தி ஸ்தானங்களாயிருப்பதால், அவைகளின் தொடக்கங்களாகவும் கூட இருக்கின்றன; நார்கள் அவைகளிலிருந்து புறப்பட்டு, பிறகு வெளியே புறப்பட்டு, தொடர்பாய் நரம்புகளின் கட்டுகளை உருவாக்குகின்றன. கட்டுகளானபோது அல்லது நரம்புகளானபோது, முகத்திலுள்ள ஞானேந்திரியங்களுக்கும், சரீரத்திலுள்ள சலன சம்பந்தமான அங்கங்களுக்கும் இறங்கி, அவைகளை உருவாக்குகின்றன. சரீர சாஸ்திரத்தில் சாமார்த்தியமுள்ள எவனையாவது யோசித்துப் பார், இதை

உனக்கு அவன் ரூபகாரம் செய்வான். புறணிக்குறிய அல்லது கோளம்போன்ற பொருள்பெரிய மூளையினிடவும், அதனுடன் முள்ளந்தண்டு கொடியின்சிகரத்தைஉண்டாக்குகிற(Corpora Striata) எனும்பாகத்தினிடவும் மேற்புறத்தை உண்டாக்குகிறது; மேலும் சிறு மூளையின் நடுபாகத்தையும், முள்ளந்தண்டு கொடியின் நடுபாகத்தையும் கூட உருவாக்குகிறது. ஆனால் மூளை சம்பந்தமான அல்லது சிறு நார் சம்பந்தமான பொருள், புறணிக்குறியதிலிருந்து ஆரம்பித்து, எவ்விடத்திலும் சென்று, சரீரத்தின் எல்லா பொருள்களும் உண்டாகிற நரம்புகளின் உற்பத்தி ஸ்தானமாயிருக்கிறது. விஷயம் இப்படியிருக்கிறதென்பதற்கு நமக்கு கண்ணுரைக்கண்ட அத்தாட்சியிருக்கிறது. சரீர சாஸ்திரத்திலிருந்தாவது அல்லது சரீர சாஸ்திரிகள் வெளிப்படுத்திய சங்கதிகளிலிருந்தாவது, இந்த விஷயங்களை அறிந்துகொண்டவர்கள், உயிரின் தொடக்கங்கள் நார்களின் தொடக்கங்களைப்போல், ஒரே இடத்திலிருக்கின்றனவென்றும், வேறிடத்தில் இல்லையென்றும், நார்கள் தங்களிடமிருந்தே வெளிப்பட முடியாதென்றும், ஆனால் அந்த தொடக்கங்களிலிருந்தே புறப்படவேண்டுமென்றும், தெரிந்துகொள்வார்கள். கோளங்களாக தோன்றுகிற தொடக்கங்கள் ஏறக்குறைய கணக்கற்றவைகளாயிருக்கின்றன. அவைகளின் கூட்டத்தை பிரபஞ்சத்திலுள்ள நட்சத்திரங்கள் கூட்டத்திற்கு ஒப்பிடலாம். அவைகளிலிருந்து வரும் சிறு நார்களின் கூட்டத்தை, நட்சத்திரங்களிலிருந்து வெளிப்படுகிறதும், அவைகளின் சூட்டையும் ஒளியையும் பூமிக்கு கொண்டு போகிறதுமான கிரணங்கள் கூட்டத்திற்கு ஒப்பிடலாம். இந்த கோளம்போன்ற அங்கங்கள் கூட்டத்தை, கணக்கற்றதாயும் கூட இருக்கிறதும், எனக்கு சொல்லப்பட்டபடி,

கோளம்போன்ற அங்கங்கள் இருப்பதுபோல், அதே ஒழுங்கில் இருக்கிறதுமான சுவர்க்கங்களிலுள்ள தேவர்கள் கூட்டத்திற்குக்கூட ஒப்பிடலாம்; இந்தகோளங்களிலிருந்து உற்பத்தியாகும் சிறு நார்கள் கூட்டத்தை, அம்மாதிரியே, தேவர்கள் கூட்டங்களிலிருந்து கிரணங்களைப்போல், கீழே வருகிற பரமார்த்த உண்மைகளுக்கும் நன்மைகளுக்கும் ஒப்பிடலாம். அதனுல்தான் ஒரு மனிதனுனவன் ஓர் பிரபஞ்சத்தைப் போலவும், சின்னஞ்சிறிய உருவத்தில் சுவர்க்கத்தைப்போலவும், பல இடங்களில் சொல்லி மெய்ப்பிக்கப்பட்டபடி இருக்கிருன். இவைகளிலெல்லா மிருந்து, உயிரானது அதன் தொடக்கத்திலிருப்பதுபோல், அதின் இறுதிப் பொருள்களிலும் அப்படியே யிருக்கிறதென்பதும் அல்லது மூளைகளில் அதன் முதன்மையான பொருள்களில் உயிரிருப்பதுபோல், சரீரத்தில் உற்பன்னமானவைகளி லிருக்கிறதென்றும் அறிந்து கொள்ளலாம்.

367. IV இந்த தோடக்கங்கள் மூலமாக, உயிரானது ஒவ்வோரு பாகத்திலுமிருந்து முழுவதிலும், முழுவதிலுமிருந்து ஒவ்வோரு பாகத்திலு மிருக்கிறது. ஏனென்ருல், மூளையும் சரீரமும் சேர்ந்து உண்டாகிற முழுவதும், மூளைகளில் அவைகளின் தொடக்கங்களிலிருந்து புறப்படுகிற நார்களைவிட வேறொன்ருலும், ஆரம்பத்தில் உண்டாக்கப்படுகிறதில்லை. அதற்கு இதர உற்பத்தி ஸ்தானமில்லை; கொஞ்சம் மேலே (பிரிவு 366) காண்பித்ததிலிருந்து இது விசதமாகிறது. ஆதலால்,முழுமை என்பது ஒவ்வொருபாகத்திலிருந்து வருகிறது. மேலும், முழுமை என்பது ஒவ்வொரு பாகத்திற்கும் அதன்வேலையையும், வேண்டியதையும் கொடுத்து, அதனுல் முழுமையில் அதை ஓர்பாகமாக செய்கிறபடியினுல்,

இந்த தொடக்கங்கள் மூலமாக உயிரானது முழுவதிலு மிருந்து ஒவ்வொரு பாகத்திலு மிருக்கிறது. சுருங்கச்சொல் லில், முழுமையானது, பாகங்களிலிருந்து நிலைத்திருக்கிறது, பாகங்கள் முழுவதிலுமிருந்து ஜீவிக்கிறது. அவ்வித அன்னியோன்னிய சம்பந்தமும், அதனால் ஐக்கியமும் இருக்கிறதென்பது, சரீரத்திலுள்ள அநேக பொருள்க ளால் நிரூபிக்கப்படுகிறது. அது ஒரு நகரத்திலும், குடியரசு நாட்டிலும், இராச்சியத்திலும், இருப்பதுபோல் இருக்கிறது. ஓர் கூட்டத்தைச்சேர்ந்த ஜனங்கள், பாகங்களாயிருக்கிற மனி தர்களிலிருந்து உண்டாகிறது, பாகங்கள் அல்லது மனிதர்கள் அந்த கூட்டத்து ஜனங்களிலிருந்து ஜீவிக்கிறார்கள். எந்த உருவத்தையும் உடைய ஒவ்வொரு பொருளோடும், முக்கிய மாய் மனிதனோடும் விஷயம் அம்மாதிரியே கூட இருக்கிறது.

368. **V. அன்பு இருக்கிறதுபோல, ஞானமும் அப்படியே யிருக்கிறது, ஆகையினால் மனிதனும், அப்படியே யிருக்கிறான்.** ஏனென்றால், சித்தம் அன்பின் ஆசயமாகவும், புத்தி ஞானத் தின் ஆசயமாகவும், மேல் காண்பித்தபடி இருப்பதினால், சித்த மும்புத்தியும் அன்பும்ஞானமுமிருப்பதுபோலஇருக்கின்றன; இந்தஇரண்டும்மனிதனையும் அவன்குணத்தையும் உண்டாக்கு கின்றன. அன்பு பலவிதமா யிருக்கிறது ; பூமியின்மேரிலும் சுவர்க்கங்களிலும் இருக்கும் மானிட ஜாதியிலிருந்து விசத மாகிறபடி, அதன் பேதங்கள் நிர்ணயமில்லாமல் பெரியதா யிருக்க அவ்வளவு நானுவிதங்களா யிருக்கின்றன; கொஞ்ச மாவது வித்தியாச மில்லாதபடி ஒரேமாதிரியிருக்கிற ஒரு மனிதனும் ஒரு தேவனும்கூட இல்லை. பேதங்காட்டுகிறது அன்பாயிருக்கிறது; ஏனென்றால், ஒவ்வொரு மனிதனும் அவ னிட சொந்தஅன்பாயிருக்கிறான். ஞானமானது பேதங்காட்டு

கிறது, நினைக்கப்படுகிறது, ஆனால் ஞானமானது, அன்பிலிருந்து வருகிறது. அது அன்பின் உருவம்; ஏனென்றால், அன்பானது உயிரின் சொரூபமாயிருக்கிறது; ஞானமானது அந்த சொரூபத்திலிருந்து வந்த உயிரின் தடத்தமாயிருக்கிறது. உலகத்தில், புத்தியானது மனிதனை உண்டாக்குகிறதென்று நம்பப்படுகிறது; ஆனால், புத்தியானது சுவர்க்கத்து வெளிச்சத்துக்கு; மேல் காண்பித்தபடி, உயர்த்தப்பட்டு, இவ்விதமாக ஒரு மனிதன் அறிவுள்ளவனை தோன்றலாமாகையால், இது நம்பப்படுகிறது. ஒருமனிதனிட அன்போடு சேராத புத்தியின் ஓர் பாகம் அவனுக்கு சேர்ந்திருப்பதாகவும், இது இருப்பது போல அவனிருக்கிறானென்றும் தோன்றும், ஆனால் அது ஒரு தோற்றமாக யிருக்கிறது. வாழ்க்கையில் தன்னிட அறிவையும் ஞானத்தையும் ஆரோபிக்க வேண்டுமென்கிற அன்பிற்கு சேராமல், தெரிந்து கொள்ளவும், அறிவுள்ளவனுயிருக்கவும், வேண்டுகிற அன்பிற்கு நிஜமாகச் சேர்ந்த அவன்புத்தியின் அதிகமானதொன்று இருக்கிறது. உலகத்தில், இந்த மேல் மிச்சம் காலக்கிரமத்தில் பின்னுக்கு செல்லுகிறது அல்லது ஞாபகத்தின் கடை எல்லையில் விழுந்துவிட ஆயத்தமாய் தாமதப்படுகிறது; இந்தக் காரணத்துக்காக, இறந்த பிறகு அது பிரிக்கப்படுகிறது; ஆன்மாவிற்கு சொந்தமான அன்புடன் ஒத்துக் கொள்ளாதது எதுவும் நிற்கிறதில்லை. அன்பானது மனிதனிட உயிரை உண்டாக்கி, அதினால் மனிதனையே உண்டாக்குகிறபடியினால், சுவர்க்கத்திலுள்ள எல்லா கூட்டங்களும், அந்த கூட்டங்களிலுள்ள எல்லா தேவர்களும், அன்பிற்கு சேர்ந்த விருப்பங்களுக்குத் தக்கபடி ஒழுங்குபடுத்தப்படுகிறார்கள்; எந்த கூட்டமும், ஒருகூட்டத்தின் எந்த தேவனும், அன்பிலிருந்து பிரிந்த புத்தியில் எதற்கு தக்கபடியும் இடம் ஒழுங்குபடுத்

தப்படுகிறதில்லை. அம்மாதிரியே கூட நரகங்களிலும், அவைகளின் கூட்டங்களிலும், சுவர்க்கத்து அன்புகளுக்கு எதிரிடையான அன்புகளுக்குத் தக்கபடி, ஒழுங்குபடுத்தப்படுகிறார்கள். இவைகளிலிருந்து ஒரு மனிதனிட ஞானமும், மனிதனேகூட அவன் அன்பு இருக்கிறதுபோல், இருக்கின்றனவென்று விசதமாகிறது.

369. ஒரு மனிதனானவன் அவனிட பிரபல அன்பு இருக்கிறது போல, இருக்கிறானென்று நிஜமாகவே ஒத்துகொள்ளப்படுகிறது; அப்படி யிருத்தலும், மனதிலும் குணத்திலும் மாத்திரமே, சரீரத்தில் அப்படியில்லை; இவ்விதமாக முழுமையும் அப்படி இல்லை. ஆனால், தலை முதல் பாதம் வரையில் அல்லது சிரசிலுள்ள தொடக்கங்களிலிருந்து, சரீரத்திலுள்ள இறுதிப் பொருள்கள் வரையில், ஒரு மனிதன், தன் அன்பு இருக்கிறது போல் இருக்கிறானென்று, பரலோகத்தில் அதிக அனுபவத்திலிருந்து, எனக்கு தெரியப்படுத்தப்பட்டிருக்கிறது.ஏனென்றால் அந்த உலகத்தில் உள்ளவர்களெல்லாம்,அவர்கள் சொந்தஅன்பின் உருவங்களாயிருக்கிறார்கள். தேவர்கள் சுவர்க்கத்துக்கு அடுத்த அன்பின்உருவங்களாயிருக்கிறார்கள், பேய்கள் நரகத்துக்கு அடுத்த அன்பின் உருவங்களாயிருக்கிறார்கள்; பின் கூறியவர்கள் முகமும் சரீரமும் அவலட்சணமாயிருக்கின்றன, ஆனால் தேவர்கள் முகமும் சரீரமும் இரண்டும் அழகாயிருக்கின்றன. அவர்கள் அன்பு தாக்கப்பட்டபோது, அவர்கள் முகங்கள் மாற்றப்படுகின்றன. அது குரூரமாய் தாக்கப்பட்டால், அவர்கள் முழுமையும் தோன்றாமல் போய்விடுகிறார்கள். இது அந்த உலகத்துக்கு சிறப்பானது. அவர்கள் சரீரம் அவர்கள் மனதுடன் ஒன்றாகிறபடியினால், அது நேரிடுகிறது. மேல் சொன்னதிலிருந்து,

அதாவது, சரீரத்தின் எல்லாப் பொருள்களும் இறுதியான வைகளென்பதிலிருந்தும், அதாவது அன்பினிடவும் ஞானத்தினிடவும் ஆசயங்களாயிருக்கிற தொடக்கங்களிலிருந்து, நார்களினால் நெய்யப்பட்டவைக ளென்பதிலிருந்தும், காரணம் தெளிவாயிருக்கிறது ; தொடக்கங்கள் அவ்விதமாயிருக்கும் போது, இறுதியானவைகள் வேறு விதமாயிருக்க முடியாது. ஆகையினால், தொடக்கங்கள் போகிற இடத்துக்கு, இறுதியானவைகள் தொடர்கின்றன ; அந்த இரண்டையும் பிரிக்க முடியாது. அதனால்தான், கடவுளிடத்து மனதை உயர்த்துகிறவன், கடவுளிடத்து முழுமையும் உயர்த்தப்படுகிறான்; நரகத்துக்கு மனதை கீழே தள்ளுகிறவன், முழுமையும் அங்கே தள்ளப்படுகிறான். ஆகையினால், முழுமனிதனும், அவன் உயிரின் அன்புக்குத்தக்கபடி, சுவர்க்கத்துக்காவது நரகத்துக்காவது போகிறான். கடவுள் மனிதனானபடியினால், தேவதாசம்பந்தமான ஞானமானது ஒரு மனிதனிட மனது, ஒரு மனிதனென்றும், உணர்ந்து செயல்படுகிற சரீரமானது, மனதின் புறம்பானதென்றும், இவ்விதமாக, அவைகள் இரண்டல்லாமல், ஒன்றென்றும் சொல்லுகிறது.

370. மனிதனிலிருக்கும் அவயவங்களிடவும், அங்கங்களிடவும், ஆந்திரிகங்களிடவும் உருவங்களே, நெசவு விஷயத்தில், மூளைகளில் அவைகளின் தொடக்கங்களிலிருந்து, உண்டாகிற நார்களிலிருந்து வருகின்றன வென்பதைகவனிக்க வேண்டியது ; ஆனால் பூமிகளிலும், பூமிகளிலிருந்து காற்றிலும், (Ether) எனும் காற்றிலும் இருக்கப்பட்ட பதார்த்தங்களாலும் ஜடப்பொருள்களாலும், அவைகள் ஸ்தாபிக்கப்படுகின்றன. இது இரத்தத்தின் மூலமாய்செய்யப்படுகிறது. ஆகையினால் சரீரத்திலுள்ள எல்லா பொருள்களும் தங்கள் நிருமா

ணத்தில் நிலைநிற்கவும், அதனால், தங்கள் தொழில்களில் மாரு திருக்கவும், மனிதனானவன் ஸ்தூல ஆகாரத்தால் போஷிக்கப் பட்டு, இடைவிடாமல் புதுப்பிக்கப்படவேண்டும்.

சித்தத்திற்கு இருதயத்தோடும், புத்திக்கு சுவாசாசயங்களோடும், ஒரு அன்னுவயமிருக்கிறது.

371. இது பின்வரும் வரிசையில் நிச்சயப்படுத்தப் படும். I. மனதைச் சேர்ந்த எல்லா பொருள்களும், புத்திக்கும் சித்தத்துக்கும், சரீரத்தைச் சேர்ந்த எல்லா பொருள்களும் இருதயத்துக்கும் சுவாசாசயங்களுக்கும், சம்பந்தப்பட்டிருக்கின்றன. II. இருதயத்தோடும் சுவாசாசயங்களோடும், சித்தத்தினிடவும் புத்தியினிடவும் ஒரு அன்னுவயமிருக்கிறது, ஆகையினால், சரீரத்துக்குச் சேர்ந்த எல்லாபொருள்களோடும், மனதுக்குச் சேர்ந்த எல்லாபொருள்களின் ஒரு அன்னுவயமுமிருக்கிறது. III. சித்தமானது இருதயத்தோடு அன்னுவயப் படுகிறது. IV. புத்தியானது சுவாசாசயங்களோடு அன்னுவயப்படுகிறது. V. சித்தத்தைப்பற்றியும் புத்தியைப் பற்றியும், ஆகையினால், அன்பைப் பற்றியும் ஞானத்தைப் பற்றியும் கூட அநேக இரகசியங்கள், இந்த அன்னுவயத்தின் மூலமாகக் கண்டுபிடிக்கப்படலாம். VI. மனிதனிட மனது அவனிட பிராணனுயிருக்கிறது, பிராணனானது மனிதனுயிருக்கிறது, சரீரமானது, மனது அல்லது பிராணன் அதன் மூலமாய் அதன் உலகத்தில் உணர்ந்து செயல்படுகிற புறம்பானதாயிருக்கிறது. VII. மனிதனிட இருதயத்தோடும் சுவாசாசயங்களோடும் அவனிட சித்தமும் புத்தியும் அன்னுவயப் படுவதின் மூலமாய் மனிதனிடபிராணன் சரீரத்தோடு ஐக்கியமுண்டாகிறது, அப்படி அன்னுவயப்படாவிட்டால் பிரிதல் நேரிடுகிறது.

372. I. மனதைச் சேர்ந்த எல்லா பொருள்களும், சித்தத்துக்கும் புத்திக்கும், சரீரத்தைச் சேர்ந்த எல்லா பொருள்களும், இருதயத்துக்கும் சுவாசாசயங்களுக்கும், சம்பந்தப்பட்டிருக்கின்றன. தங்களிட சம்பூரணத்தில் ஒரு மனிதனை இயக்குகிற எல்லா பொருள்களையும், அவன் நினைக்கிற எல்லா பொருள்களையும், இவ்விதமாக அவனிட பட்சத்துக்கும் சிந்தனைக்கும் சேர்ந்த எல்லா பொருள்களையும் தழுவுகிற சித்தத்தையும் புத்தியையும் தவிர, மனது என்பதனால் வேறொன்றும் அர்த்தம் கொள்ளப்படுகிறதில்லை. ஒரு மனிதனை மாறுதல் செய்கிற பொருள்கள் அவனிட சித்தத்திற்கும், ஒரு மனிதன் நினைப்பவைகள் அவனிட புத்திக்கும் சேர்ந்திருக்கின்றன. அவன் புத்தியிலிருந்து நினைக்கிறபடியினால், ஒரு மனிதனிட சிந்தனையானது அவன் புத்திக்கு முழுமையும் சேர்ந்திருக்கின்றது என்று நன்றாய் தெரிந்திருக்கிறது; ஆனால், ஒரு மனிதனிட பட்சங்களெல்லாம் அவனிட சித்தத்திற்கு சேர்ந்திருக்கிறதென்று, அவ்வளவு நன்றாய் தெரிந்திருக்கப்படவில்லை. ஒரு மனிதன் நினைக்கும்போது, அவன் பட்சத்தை கவனிக்காமல், அவன் நினைப்பதை மாத்திரம் கவனிக்கிறானென்பது, இது ஏன் தெரியாமலிருக்கிறது என்பதற்கு காரணமாயிருக்கிறது. ஆனபடியினால், பட்சமானது சிந்தனைவிஷயத்தில், பேச்சில் சப்தத்தைப்போலிருந்தாலும், ஒரு மனிதன் பேசுவதைக் கேட்கும்போது, அவன் சப்தத்தை கவனிக்காமல் பேச்சையே கவனிக்கிறான். ஆகையினால், பேசுபவனிட பட்சமானது சப்தத்திலிருந்தும், அவனிட சிந்தனையானது பேச்சிலிருந்தும் தெரிந்துகொள்ளப்படுகிறது. மேல் காண்பித்தபடி எல்லா பட்சமும் அன்புக்குச் சேர்ந்திருக்கிறபடியினாலும், சித்தமானது அன்பின் ஆசயமாயிருப்பதாலும், பட்சமானது சித்தத்திற்குச்

சேர்ந்திருக்கிறது. பட்சமானது சித்தத்திற்கு சேர்ந்ததென்று தெரியாதவன், பட்சத்தை புத்தியென்று தடுமாறுகிறான். சிந்தனையோடு, அதுவொன்று என்று அவன் சொல்லுகிறான், ஆயினும், ஒன்றாக அவைகள் செயல்பட்டாலும், அவைகள் ஒன்றல்ல. "நான் அதை செய்ய இச்சிக்கிறேன்" என்று அர்த்தம் கொள்ளும், "நான் இதைச்செய்வேன் என்று நினைக்கிறேன்" என்று சொல்லும் சாதாரண வாக்கால், இரண்டையும் குறித்த தடுமாற்றம் விசதமாகிறது. ஆனால், அவைகள் இரண்டென்பது, "நான் இதைப்பற்றி நினைக்கிறேன்" என்று சொல்லும் சாதாரணவாக்கால்கூட விசதமாகிறது. முன்சொல்லியபடி, ஒருவன் ஒருபொருளைப்பற்றி நினைக்கும்போது, பேச்சில் சப்தம் இருப்பதுபோல், சித்தத்தின் பட்சம், புத்தியின் சிந்தனையிலிருக்கிறது. சரீரத்தின் எல்லா பொருள்களும், இருதயத்துடனும் சுவசாசயங்களோடும் சம்பந்தப்பட்டிருக்கிறதென்பது தெரிந்த விஷயம் ; ஆனால் சித்தத்தோடும் புத்தியினோடும், இருதயத்தினிடவும் சுவாசாசயங்களிடவும், ஒரு அன்னுவயமிருக்கிறதென்பது தெரியப்படாமல் இருக்கிறது. ஆகையினால் இந்த விஷயமானது பின்வருவதில் பேசப்படும்.

373. சித்தமும் புத்தியும், அன்பினிடவும் ஞானத்தினிடவும் ஆசயங்களாயிருப்பதால், இந்த இரண்டும், அங்கங்கள் சேர்ந்து உண்டான உருவங்கள் அல்லது மிகவும் சுத்தமான பொருள்களிலிருந்து, அந்த கிரமத்தோடு உருவாக்கப்பட்ட, உருவங்களாயிருக்கின்றன. ஏனென்றால், அவைகள் ஆசயங்களாயிருக்க, அவ்விதமாயிருக்கவேண்டும். இந்த விஷயத்திற்கு, அவைகளின் அவயவ அமைப்பு கண்ணுக்கு தெரிகிறதில்லையென்பது ஆக்ஷேபனையாகாது; ஏனென்றால், பூதக்கண்ணாடியின் உதவியால் கூட அது கண்ணால் பார்க்கமுடியாது. உதவியில்

லாத கண்ணின் மூலமாய் பார்க்கமுடியாத சிறு பூச்சிகள்கூட இருக்கின்றன; என்றாலும் அவைகள் உணர்ந்து, நடந்து, பறக்கிறபடியினால், அவைகளுக்கு சேதனநிலையங்களும், அசைக்கும் அங்கங்களுமிருக்கின்றன. அவைகளுக்கு மூளைகளும், இருதயங்களும், சுவாசாசயக்குழாய்களும், ஆந்திரிகங்களும், இருக்கின்றனவென்பது, அவைகளின் சரீரத்தை சரீரசாஸ்திரபடி ஜாக்கிறதையாய் பரிசோதித்தவர்களால் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த சிறுபூச்சிகள் கண்ணுக்கு தெரியாமலிருக்கிறபடியினாலும், அவைகளின் ஆந்திரிகங்கள் இன்னும் அதிகமாய் அப்படியேயிருப்பதனாலும், அவைகள் ஒவ்வொரு பாகத்திலும் உருவாக்கப்பட்டிருக்கிறதென்பது நிராகரிக்கப் படாததினாலும், அன்பினிடவும் ஞானத்தினிடம் இரண்டு ஆசயங்களுமாகிய சித்தமும் புத்தியும், அங்கங்கள் சேர்ந்து உண்டான உருவங்கள் அல்லவென்று எப்படி சொல்ல முடியும்? ஆண்டவரிடமிருந்து வந்த உயிராயிருக்கிற அன்பும் ஞானமும், ஒரு பொருளாயிராததின் பேரிலும் அல்லது உண்மையால் நிலைத்திராத ஏதோ ஒன்றின் பேரிலும் எப்படி சேட்டிக்கும்? வேறு எந்த விதத்தில் சிந்தனையானது ஒன்றில் நிலைகொள்ளும், ஒன்றிலும் தங்காத சிந்தனையிலிருந்து எவனாவது எப்படி பேசக்கூடும்? சிந்தனை இருக்கப்பட்ட மூளையானது பூரணமாகவும், முழுமையும் உருவாக்கப்பட்டு மில்லையா? அதற்குள்ளிருக்கும் அங்க சம்பந்தமான உருவங்கள் வெறும் கண்ணுக்கு கூட தோன்றுகின்றன, புத்தியினிடவும் சித்தத்தினிடவும் ஆசயங்கள் சிறிய கோளம்போன்ற பொருள்கள் காணப்படுகிற புறணிக்குறிய பொருளில் அவைகளின் தொடக்கங்களில் காணப்படுகின்றன. அந்த விஷயத்தைப் பற்றி மேலே (பிரிவு 366) பார்க்கவும், சூனியத்தை அனு

சரித்த ஓர் அபிப்பிராயத்தைக்கொண்டு, இவைகளைப்பற்றி நினைக்காதபடி நான் உங்களை கேட்டுக்கொள்ளுகிறேன். சூனியம் என்பது இல்பொருள், இப்பொருளில் ஒன்றும் நடக்கிறதில்லை, இல்பொருளிலிருந்து எதுவும் உண்டாகிறதில்லை. சூனியத்தைப்பற்றிய அபிப்பிராயத்தைக் குறித்து மேலே பிரிவு 82ஐ பார்க்கவும்

374. **II. இருதயத்தோடும் சுவாசாசயங்களோடும், சித்தத்தினிடவும் புத்தியினிடவும் ஒரு அன்னுவய மிருக்கிறது, அதிலிருந்து சரீரத்தின் எல்லாப் பொருள்களோடும், மனதின் எல்லா பொருள்களிட ஒரு அன்னுவய மிருக்கிறது.**

சூக்குமமானது என்ன வென்றும், அதற்கும் ஸ்தூலமானதுக்கும் உள்ள வித்தியாசம் என்ன வென்றும் தெரிந்திருக்காதபடியினால், இது புதிதாயிருக்கிறது, மேலும் இதுவரையில் தெரியாமலு மிருக்கிறது; ஆகையினால், அன்னுவயமென்பது என்ன வென்றும் தெரிந்து கொள்ளப்படாமலிருந்திருக்கிறது. ஏனென்றால், ஸ்தூல பொருள்களோடு சூட்சுமப் பொருளின் ஒரு அன்னுவய மிருக்கிறது; இதின் மூலமாய், இந்த இரண்டுக்கும் சேர்க்கை உண்டாக்கப்படுகிறது. ஆனால், சூக்குமமானது என்னவென்றும், ஸ்தூலமானதோடு, அதன் அன்னுவயம் என்னவென்றும், ஆதலால், அன்னுவயம் என்ன வென்றும் இதுவரையில் தெரியாமலிருந்தாலும், இரண்டும் தெரிந்திருக்கப்படலாம். பட்சமும் சிந்தனையும் சூக்குமமென்றும், ஆகையினால் பட்சத்தினிடவும் சிந்தனையினிடவும், எல்லா பொருள்களும் சூக்குமமென்று யாருக்குத் தெரியாது ? சலனமும் பேச்சும் ஸ்தூலமென்றும், ஆகையினால் சலனத்தினிடவும் பேச்சினிடவும் எல்லா பொருள்களும் ஸ்தூலமென்று யாருக்குத் தெரி

யாது ? சூக்குமமாயிருக்கிற பட்சமும் சிந்தனையும், மனிதனை செயல்படவும், பேசவும்,செய்கிறதென்று யாருக்கு தெரியாது? இந்த காரணங்களால், ஸ்தூலமான பொருள்களோடு சூக்கும பொருள்களின் அன்னுவயம் என்னவென்று யார் அறிந்து கொள்ளக் கூடாது ? சிந்தனையானது நாக்கை பேசவும், பட்சமும் சிந்தனையும் சேர்ந்து சரீரத்தை சலனமடையவும் செய்கிறதில்லையா ? இங்கே இரண்டு பிரத்தியேகமான பொருள்கள் இருக்கின்றன. நான் நினைத்து, பேசாமலிருக்கக்கூடும், நான் இச்சித்து, செயல்படாமலிருக்கக்கூடும். சரீரமானது நினைக்கிறதில்லை என்றும், இச்சிக்கிறதில்லை யென்றும், ஆனால் சிந்தனையானது பேச்சிலும், சித்தமானது செயலிலும் விழுகிறதென்று தெரிந்திருக்கிறது. பட்சமானது முகத்தில் பிரகாசித்து, அங்கே அதன் ஒரு அடையாளத்தைக் காட்டுகிறதில்லையா ? இது எல்லாருக்கும் தெரியும். பட்சமானது சுயமாய்ப் பார்த்தால், சூக்குமமானதல்லவா, முகரூபங்கள், என்று சொல்லப்பட்ட முகத்தின் மாறுதல்கள் ஸ்தூல மானதல்லவா? இதிலிருந்து, ஒரு அன்னுவயமிருக்கிறதென்றும், அதனால், சரீரத்தின் எல்லா பொருள்களோடும் மனதிட எல்லா பொருள்களின் ஒரு அன்னுவய மிருக்கிறதென்று யார் தீர்மானிக்க மாட்டார்கள் ? மனதைச் சேர்ந்த எல்லா பொருள்களும்,பட்சத்துக்கும் சிந்தனைக்கும் அல்லது அதேவாகிற, சித்தத்துக்கும் புத்திக்கும், சரீரத்தின் எல்லா பொருள்களும், இருதயத்துக்கும் சுவாசாசயங்களுக்கும் சம்பந்தப்பட்டிருப்பதினால், இருதயத்துடன் சித்தத்தினிடவும், சுவாசாசயங்களோடு புத்தியினிடவும், ஒரு அன்னுவய மிருக்கிறதென்று தீர்மானித்திருக்கலாம். ஸ்தூலமானதைத் தவிர மனிதனானவன் வேறொன்றையும் ஒத்துக்கொள்ளாதபடி, அவ்வளவு

புறம்பானவனுய் விட்டபடியினுல், இவ்வித விஷயங்கள் தெரிந்துக்கொள்ளக் கூடுமாயினும், அவைகள் தெரிந்து கொள்ளப்படாம லிருக்கிறது. அவனிட சிந்தனைகளை, ஸ்தூலமான தற்கு மேல், ஸ்தூலமானதிற்கு வேருன சூக்குமமான ஒன்றுக்கு உயர்த்த, அவனுக்கு உபாதி உண்டாகிற வரையில், இது அவனிட அன்பின் பிரியமான வஸ்துவாயிருந்தது; ஆகையினுல், அவனிட புத்தியின் பிரியமான வஸ்துவாயிருந்தது. ஆகையால், அவனிட ஸ்தூல அன்பினிடவும், அதன் இன்பத்தினிடவும் விஷயத்தில், சூக்குமமானது அதிக சுத்தமான ஸ்தூலமானதென்றும், அன்னுவயமென்பது தொடர்ச்சியாய் பாயப்பட்ட எதோ ஒரு பொருளென்றும் மாத்திரம் அவன் நினைக்கக்கூடும். உண்மையில், கேவலம் ஸ்தூலமான மனிதன், ஸ்தூலமானதிலிருந்து, வேருன எந்த பொருளைப்பற்றியும் நினைக்க முடியாது ; அப்பேர்பட்ட பொருள் அவனுக்கு இல்பொருளாகும். அவர்கள் சொல்லுகிறபடி, அவைகள் புத்திக்கு எட்டாதபடியினுல், சபைகளும் சில தலைவர்களும் தீர்மானித்த பரமார்த்தமான வேதசாஸ்திர விஷயங்கள் குருட்டுத்தனமாய் நம்பப்படவேண்டுமென்று எல்லா கிறிஸ்துவ தேசங்களில் பரவி இருக்கும் கோட்பாட்டினுல், சமயத்தைச் சேர்ந்த எல்லா விஷயங்களும், எல்லா பரமார்த்த விஷயங்களும், மனிதனிட பார்வையிலிருந்து நீக்கப்பட்டதென்பது, இவைகளெல்லாம், இதுவரையில் ஏன் முதலில் பார்க்கப்பட்டு, அறிந்து கொள்ளப்படவில்லை என்பதற்கு வேறு காரணமாயிருக்கிறது. ஆதலால், கண்ணின் அருகே பறந்து, தன்னிட அழகான சிறகுகளால், அதன் கண்மணியை தொட்டு, பார்க்கப்பட விரும்புகிற சுவர்க்க லோகத்து பட்சியைப்போல் இருந்த அதாலும், பரமார்த்தமானது கண்பார்வைக்கு எட்

டாத ஒரு (Ether) என்னும் சூக்கும ஆகாயத்தில் காற்றுக்கு மேல் பறக்கும் பறவையைப்போலிருப்பதாக, சிலர் நினைத்தார்கள். கண்பார்வை என்பதால், ஞானப்பார்வை என்று அர்த்தம் கொள்ளப்படுகிறது.

375. இருதயத்தோடும் சுவாசாசயங்களோடும், சித்தத்தினிடவும், புத்தியினிடவும் அன்னுவயமானது கேவலமான ஒரு பிரதிக்ஞையாக அல்லது அறிவினால் மட்டும், ரூபகாரம் செய்யப்பட முடியாது. ஆனால் காரியப்பாடுகளால் ரூபகாரம் செய்யலாம். நிஜமாகவே, அறிவினால் அறியக்கூடிய பொருள்களின் காரணங்களுக்கு அதே வாக்கியத்தை ஆரோபிக்கலாம், ஆனால் பலன்கள் மூலமாய்த் தவிர தெளிவாய் அப்படி சொல்ல முடியாது; ஏனென்றால், காரணங்கள் காரியங்களிலிருந்து கொண்டு, அவைகளின் மூலமாய் தாங்களே தோற்றமுள்ளதாகின்றன. இது சம்பவிக்கிற வரையில், மனதானது காரணங்களைக்குறித்து நம்பிக்கை அடைகிறதில்லை. மேற்கூறிய அன்னுவயத்தின் பலன்கள், பின்வரும் பக்கங்களில் சொல்லப்படும். ஆனால், இங்கு அன்னுவயத்தைப்பற்றி நினைக்கப்பட்ட எவனும், ஆன்மாவைக்குறித்த கற்பனைகளிலிருந்து வந்த அபிப்பிராயங்களில் விழாதபடி, முன்பிரிவில் சொல்லிய பிரதிஞ்ஞைகளையும், 363, 364 பிரிவுகளில் சொல்லியதையும் கூட முதலில் ஜாக்கிரதையாய்வாசிக்கட்டும். அன்பும் ஞானமும்,அதிலிருந்து சித்தமும் புத்தியும், மனிதனிட உயிரையே உண்டாக்குகின்றன. மனிதனிடஉயிரானது தொடக்கங்களில் மூளைகளிலும், இறுதிகளில் சரீரத்திலுமிருக்கிறது(பிரிவு 365). தொடக்கங்களில் உயிரிருக்கிறதுபோல், அது முழுவதிலும், எவ்வொருபாகத்திலுமிருக்கிறது (பிரிவு 366). இந்ததொடக்கங்கள் மூலமாய் உயிரானது, ஒவ்வொரு பாகத்திலுமிருந்து முழுவதிலுமிருக்கிறது,

முழுவதிலுமிருந்து ஒவ்வொரு பாகத்திலுமிருக்கிறது (பி. 367). அன்பு இருக்கிறதுபோல,ஞானமுமிருக்கிறது, ஆகையினால் மனிதனும் அப்படியே யிருக்கிறான் (பிரிவு. 368).

376. இங்கே ரூபகாரம் செய்யும் பொருட்டு இருதயத்தோடும் சுவாசங்களோடும், சித்தத்தினிடவும் புத்தியினிடவும் அன்னுவயத்தின் தோற்றம் சுவர்க்கத்து தேவர்களுக்குள் பார்க்கப்பட்டபடி எடுத்து சொல்ல, உத்திரவு கொடுக்கப்பட்டிருக்கிறது. எந்தவார்த்தைகளும் வெளிப்படுத்தமுடியாத ஒரு ஆச்சரியமான சக்கர வடிவமுள்ள பெயர்ச்சியால், ஒவ்வொன்றின் உள்ளானவைகளோடு,இருதயத்தினிடவும் சுவாசாசயங்களிடவும் ஓர் ஒப்பனை உண்டாக்கப்பட்டது; பிறகு,சுவர்க்கத்து உட்பெருக்கை அவர்கள் தொடர்ந்தார்கள்; ஏனென்றால்,சுவர்க்கமானது, ஆண்டவரிடமிருந்துவரும்,அன்பினிடவும் ஞானத்தினிடவும் பெருக்கினால்,அவ்வித உருவங்களுக்குள்ளே தள்ளிக்கொண்டுபோகிறது. அவ்விதமாக இருதயத்தினிடவும் சுவாசாசயங்களிடவும் சேர்க்கையையும், அதனுடன் சித்தத்தின் அன்பினோடும், புத்தியின் ஞானத்தோடும், அவைகளின் அன்னுவயத்தையும், காண்பித்தார்கள். இந்த அன்னுவயத்தையும் சேர்க்கையையும் சுவர்க்கத்து விவாகமென்று அவர்கள் சொன்னார்கள். முழுசரீரத்திலும், அதன் பற்பல அவயவங்களிலும், அங்கங்களிலும், ஆந்திரிகங்களிலும், அங்கே இருதயத்திலும் சுவாசாசயங்களிலும் காண்பிக்கப்பட்டவைகள்போல், அதே நிலைமைகள் சம்பவிக்கின்றன வென்றும், இருதயமும் சுவாசாசயங்களும் செயல்படாதபோதும், ஒவ்வொன்றும் அதன் தொழில்களை செய்யாதபோதும், தன்னிஷ்டமான உயிரின் எந்த சலனமும் கிடையாதென்றும்,எந்த புத்தியுள்ள தொடக்கத்திலிருந்தும், உயிரின் உணர்ச்சி கிடையாதென்றும் அவர்கள் சொன்னார்கள்.

377. சித்தத்துடனும் புத்தியுடனும், இருதயத்தினிடவும் சுவாசாசயங்களிடவும் அன்னுவயம், இப்பொழுது பின் வருவதில் சொல்லப்படுவதாலும், சரீரத்தின் முழுமையின் அவயங்களினிடவும், ஞானேந்திரியங்களினிடவும், ஆந்திரிகங்களினிடவும் எல்லாபொருள்களின் அன்னுவயமும், இந்தஅன்னுவயத்தின்பேரில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதாலும், சூக்கும பொருள்களோடு, ஸ்தூல பொருள்களின் அன்னுவயம் இது வரையில் தெரியாதிருந்தும், ஒன்று **சுவர்க்கத்தையும் நரகத்தையும்** குறித்து சொல்லுகிறதும், மற்றதாகிய **தேய்வலோக இரகசியம், ஆதியாகமத்திலும், யாத்திராகமத்திலும்** வேதத்தின் ஞானார்த்தத்தை குறித்து சொல்லுகிறது மாகிய இரண்டு நூல்களில் விஸ்தாரமாய் சொல்லப்பட்டிருப்பதாலும், இந்த இரண்டு நூல்களிலும் அன்னுவயத்தைப்பற்றி எழுதப்பட்டு, காண்பிக்கப்பட்டதை நான் இங்கே வெளிப்படுத்துகிறேன். **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலில், மனிதனிட எல்லா பொருள்களோடும், சுவர்க்கத்தின் எல்லா பொருள்களின் அன்னுவயம், பிரிவுகள் 87 முதல் 102 வரையில். பூமியின் பேரில் உள்ள எல்லா பொருள்களோடும், சுவர்க்கத்தின் எல்லா பொருள்களின் அன்னுவயம், பிரிவுகள் 103 முதல் 115 வரையில் **ஆதியாகமத்திலும் யாத்திராகமத்திலும்** வேதத்தின் ஞானார்த்தத்தைக் குறித்த நூலாகிய **தேய்வலோக இரகசியம்** எனும் நூலில். மனதின் பட்சங்களோடு முகத்தினிடவும் அதன் சாயல்களிடவும் அன்னுவயம், பிரிவுகள் 1568, 2988, 2989, 3631, 4796, 4797, 4800, 5165, 5168, 5695, 9306. புத்தி சம்பந்தமான பொருள்களோடும், தன்னிஷ்டமாய் நடக்கும் பொருள்களோடும், சரீரத்தினிடவும், அதன் சைகைகளினிடவும், செயல்களிடவும், அன்னுவயம்

பிரிவுகள் 2988, 3632, 4215. பொதுவாக இந்திரியங்களின் அன்னுவயம், பிரிவுகள் 4318 முதல் 4330 வரையில். கண்களிடவும் அவைகளின் பார்வைகளிடவும் அன்னுவயம், பிரிவுகள் 4403 முதல் 4420 வரையில். நாசித்துவாரங்களிடவும் நாற்றங்களிடவும் அன்னுவயம், பிரிவுகள் 4624 முதல் 4634 வரையில் காதுகளிடவும் கேட்கையினிடவும் அன்னுவயம், பிரிவுகள் 4652 முதல் 4660 வரையில். நாவினிடவும் சுவையினிடவும் அன்னுவயம், பிரிவுகள் 4791 முதல் 4805 வரையில். கைகளிடவும், புயங்களிடவும், தோள்களிடவும், பாதங்களிடவும் அன்னுவயம், பிரிவுகள் 4931 முதல் 4953 வரையில். அறைகளிடவும், ஜனிப்பிக்கிற அங்கங்களிடவும் அன்னுவயம், பிரிவுகள் 5050 முதல் 5062 வரையில். சரீரத்தின் உள்ளான ஆந்திரிகங்களிடவும், முக்கியமாய், அன்னசயத்தினிடவும், Thymus என்கிற கோளத்தினிடவும், அன்னரசத்தினிட குழாய்களிடவும், ஆசயங்களிடவும், Lacteal என்பதினிடவும்,mysentery என்பதினிடவும் அன்னுவயம், பிரிவுகள் 5171 முதல் 5181 வரையிலும், 5189லும். மண்ணிரலின் அன்னுவயம், பிரிவு 9698. வயிற்றின் உள்ளிருக்கும் ஜவ்வுகளிடவும், மூத்திர பிண்டங்களிடவும், மூத்திரபையினிடவும், அன்னுவயம், பிரிவுகள் 5377 முதல் 5385 வரையில். பித்தாசாயத்தினிடவும்,பித்தாசாயக்குழாய்களிடவும்,Cystic குழாய்களிடவும், pancreas எனும் அவயவத்தின் குழாய்களிடவும், அன்னுவயம் பிரிவுகள் 5183 முதல் 5185 வரையில். குடல்களிட அன்னுவயம், பிரிவுகள் 5392 முதல் 5395 வரையிலும், 5379-லும். எலும்புகளின் அன்னுவயம், பிரிவுகள் 5560 முதல் 5564 வரையில். தோலின் அன்னுவயம், பிரிவுகள் 5552 முதல் 5559 வரையில். மனிதனுடன் சுவர்க்கத்

தின் அன்னுவயம், பிரிவுகள் 911, 1900, 1982, 2996, 2998 3624 முதல் 3649 வரையில், 3741 முதல் 3745 வரையில், 3884, 4051, 4279, 4423, 4524, 4525, 6013, 6057, 9279, 9632. ஸ்தூல லோகத்திலும், அதன் மூன்று வர்க்கங்களிலும் இருக்கும்எல்லா பொருள்களும் சூக்கும உலகத்தில் தோன்றுகிற எல்லா பொருள்களுடனும் அன்னுவய மிருக்கிறது, பிரிவுகள், 1632, 1881, 2758, 2890 முதல் 2893 வரையில், 2897 முதல் 3003 வரையில், 3213 முதல் 3227 வரையில், 3483, 3624முதல் 3649 வரையில், 4044, 4053, 4186, 4366, 4939, 5116, 5377, 5428, 5477, 8211, 9280. சுவர்க்கங்களில்தோன்றும் எல்லா பொருள்களும் அன்னுவயங்களாயிருக்கின்றன. பிரிவுகள் 1521, 1532, 1619 முதல் 1625 வரையில், 1807, 1808, 1971, 1974, 1977, 1980, 1981, 2299, 2601, 3213 முதல் 3226 வரையில், 3348, 3350, 3472 முதல் 3485 வரையில், 3748, 9481, 9570, 9576, 9577. வேத சொல் பொருளுக்கும் அதன் ஞானார்த்தத்துக்கும் உள்ள அன்னுவயம், தெய்வலோக இரகசியமெனும் நூலில் முழுமையும் சொல்லப்பட்டிருக்கிறது ; இந்த விஷயத்தைப்பற்றி பரிசுத்தவேதத்தை குறித்த புதிய யெருசலேம் நகரத்தின் கோட்பாடு எனும் நூலைப்பார்க்கவும், பிரிவுகள் (5 முதல் 26 வரையில், 27 முதல் 65 வரையில்.)

378. III. சித்தமானது இருதயத்தோடு அன்னுவயப்படுகிறதென்பது, மேற்கூறியபடி (பிரி. 375) காரியப்பாடுகளில் சித்தத்திலிருந்து,பார்ப்பதுபோல் ஒரு பிரமேயமாக அவ்வளவு தெளிவாய் பார்க்கப்படமுடியாது. கலப்பற்று இருதயத்தோடு ஏககாலத்தில் செயல்படுகிற சுத்தரத்த நாடிகளின் துடிப்புகளால் காண்பிக்கப்படுகிறபடி, அன்பிலிருந்து வருகிற எல்லா

ஆசைகளும், இருதயத்தின் துடிப்புகளைத் தாக்கி, அதில் மாறுதல்களை செய்விக்கின்றன வென்பதினால் ரூபிக்கப்படுகிறது. அன்பின் ஆசைகளுக்கு உத்தரமாக, உண்டாகும் அதன் மாறுதல்களும் துடிப்புகளும் கணக்கற்றவைகளா யிருக்கின்றன. விரலினால் உணரப்பட்டவை சிலது, அவையாவன, தாமததுடிப்பு, விரைவானதுடிப்பு, உயர்ந்தது அல்லது தாழ்ந்தது, மிருதுவானது அல்லது கடினமானது, ஒழுங்கானது அல்லது ஒழுங்கீனமானது முதலியவை. ஆனால், இருதயமானது சந்தோஷத்திலும் விசனத்திலும், மனதின் அமைதியிலும், உக்கிரமான கோபத்திலும், நிர்ப்பயமானதிலும், பயமானதிலும், உஷ்ண வியாதிகளிலும், சீதள வியாதிகளிலும் இன்னும் மற்றவைகளிலும் வேறு விதமாய் கூட துடிக்கிறது. இருதயத்தின் சலனங்களாகிய, அதன் பெருகுதலும் சுருங்குதலும் ஒவ்வொருமனிதனிட அன்பின் ஆசைகளுக்குத் தக்கபடி இந்தவிதமாய் மாறி விகர்ப்பப்படுகிறபடியினால், பூர்வீகர்களில் அநேகரும், அவர்களுக்கு பின்னிட்டு, இக்காலத்தாரில் சிலரும், இருதயத்துக்கு ஆசைகளை ஆரோபித்து, அதன் வாசஸ்தானத்தை அதில் வைத்தார்கள். சாதாரண சம்பாஷணையில் அநேக பதக்கூட்டங்கள் இதிலிருந்து உண்டாயிருக்கின்றன. இவ்விதமாக பலமுள்ள இருதயமென்றும், கோழை இருதயமென்றும்' சந்தோஷமான இருதயமென்றும் விசனமுள்ள இருதயமென்றும், மிருதுவான இருதயமென்றும், கடினமான இருதயமென்றும், பெரிய இருதயமென்றும் சிறிய இருதயமென்றும், ஆரோக்கியமான இருதயமென்றும், துக்கத்தில் ஒடுங்கிப் போன இருதயமென்றும், மாம்ச இருதயமென்றும், கல் இருதயமென்றும் நாம் சொல்லுகிறோம். மேலும், இருதயத்தில் கொழுத்தும், மிருதுவாயும், சாந்தமா

யிருத்தலென்றும், ஒன்றுக்கு இருதயத்தைக் கொடுத்தலென்றும், கபடமில்லாத இருதயத்தை உடைத்தாயிருத்தலென்றும், புது இருதயத்தை உடைத்தாயிருத்தலென்றும், இருதயத்தில் வைத்தலென்றும், இருதயத்தில் ஏற்றுக் கொள்ளுதலென்றும், இருதயத்தின் பேரில் ஏறுதிருத்தலென்றும், ஒருவனிட இருதயத்தை கடினப்படுத்துதலென்றும், இருதயத்தில் சினேகிதனென்றும் கூட நாம் சொல்லுகிறோம். இதிலிருந்துகூட, அன்பிற்கும், அதன் ஆசைகளுக்கும் உபயோகப் படுத்தப்படுகிற, ஒற்றுமை என்றும், ஒவ்வாமை என்றும், பைத்தியமென்றும் சொல்லப்பட்ட வார்த்தைகளும், அதைப் போன்றவைகளும் உண்டாகின்றன. வேதமானது அன்னுவயங்களால் எல்லாம் எழுதப்பட்டிருப்பதால், அதுவும் அம் மாதிரியே சொல்லுகிறது. மேல் விவரித்தபடி சித்தமானது அன்பின் ஆசயமாயிருப்பதினால், நீங்கள் அன்பென்றுவது சித்தமென்றுவது, சொன்னால் ஒன்றே யாகிறது.

379. உயிருள்ள சூடு, மனிதனிலும் ஒவ்வொரு உயிருள்ள பிராணியிலும், இருக்கிறதென்று நன்றாய் தெரிந்திருக்கிறது ; ஆனால் அதற்கு உற்பத்தி ஸ்தானம் தெரிந்திருக்க வில்லை. ஜனங்கள் அதைப்பற்றி உத்தேசத்திலிருந்து பேசுகிறார்கள். சூக்குமமானவைகளுடன், ஸ்தூல பொருள்களின் அன்னுவயத்தைப்பற்றி ஒன்றும் தெரியாதவர்கள், அதன் உற்பத்தி ஸ்தானத்தைச்,சூரியன் சூட்டுக்காவது, பாகங்களின் முயற்சிக்காவது அல்லது உயிருக்கே ஆரோபித்தார்கள் ; ஆனால் அவர்களுக்கு உயிர் என்னவென்று தெரியாதபடியினால், வார்த்தைகளை மாத்திரம் உபயோகிப்பதில், முடிவு பெற்றார்கள். ஆனால், இருதயத்தோடும் அதன் உற்பன்னங்களோடும், அன்பினிடவும் அதன் ஆசைகளிடவும், ஒரு அன்

னுவயமிருக்கிறதென்று தெரிந்தவன், அன்பானது உயிருள்ள சூட்டுக்கு உற்பத்தி ஸ்தானமென்று தெரிந்து கொள்ள சக்தியுள்ளவனுயிருக்கிறுன். ஏனென்றால், அன்பானது ஆண்டவர் இருக்கப்பட்ட சூக்கும சூரியனிடமிருந்து, சூடாக புறப்படுகிறது ; மேலும் அது தேவர்களால் சூடாக உணரப்படுகிறது. அதன் சாரத்தில், அன்பாயிருக்கிற இந்த சூக்கும சூடு அன்னுவயத்தால், இருதயத்திற் குள்ளும், அதன் இரத்தத்திற்குள்ளும் பெருக்கெடுத்து, அதில் சூட்டை உண்டாக்கி, அதேகாலத்தில் அதை உயிரோடிருக்கச் செய்கிறதாயிருக்கிறது. ஒரு மனிதனுனவன் தன்னிட அன்பிற்கும், அதன் பிரமாணத்துக்கும் தக்கபடி, தீ மூட்டப்பட்டது போல் உஷ்ணமானவனுகிறுனென்றும், அதன் தளர்ச்சிக்குத் தக்கபடி, அசைவற்றவனுகவும் சீதளமடைந்தவனுகவும், ஆகிறுனென்றும் தெரிந்திருக்கிறது; ஏனென்றால் அது உணர்ந்து பார்க்கப்படுகிறது. அது முழு சரீரத்தின் சூட்டில் உணரப்படுகிறது, முகத்தின் சிவப்பு நிறத்தில் பார்க்கப்படுகிறது; அப்படியல்லாமல்,அதன் நாசம் சரீரத்தின் குளிர்ச்சியில் உணரப்படுகிறது, முகத்தின் வெளிறின நிறத்தால் பார்க்கப்படுகிறது. அன்பானது, மனிதன் உயிராயிருப்பதால், இருதயமானது, அவன் உயிரில் முதன்மையானதும், இறுதியானதுமாயிருக்கிறது. மறுபடியும், அன்பானது மனிதனிட உயிராயிருப்பதாலும், ஆன்மாவானது அதினிட உயிரை இரத்தத்தின் மூலமாய் சரீரத்தில் நடத்துகிறபடியினுலும், வேதத்தில் இரத்தமானது ஆன்மாவென்று சொல்லப்பட் டிருக்கிறது (ஆதி. IX. 4; லேவி. XVII. 14.). பல அர்த்தங்களில் ஆன்மா வென்பதால் என்ன தெரிந்துகொள்ளப்படுகிறதென்று பின்வருவதில் காண்பிக்கப்படும்.

380. மேலும், அன்பினேடும் அதின் ஆசைகளோடும், இருதயத்தினிடவும் இரத்தத்தினிடவும் அன்னுவயத்தால், இரத்தமானது சிவப்பாயிருக்கிறது. சூக்குமலோகத்தில் எல்லாவித நிறங்களு மிருக்கின்றன. சிவப்பும் வெண்மையும், இவைகளுக்கெல்லாம் அஸ்திபாரமானது, மற்றவைகள் தங்களிட விகற்பங்களை, அவைகளிலிருந்தும், உக்கிரமான இருட்டானதாகவும், கருப்பானதாகவு மிருக்கிற அவைகளின் எதிரிடையானவைகளிலிருந்தும், அடைகின்றன. சிவப்பு நிறம் அங்கே அன்புக்கு அன்னுவயப்படுகிறது. வெள்ளை நிறம், ஞானத்திற்கு அன்னுவயப்படுகிறது. சிவப்புநிறம் ஏன் அன்புக்கு அன்னுவயப்படுகிற தென்பதற்குக் காரணம், அங்கிருக்கும் சூரியனிட நெருப்பிலிருந்து உற்பத்தியாகிற தென்பதாயிருக்கிறது, வெள்ளைநிறம் ஞானத்திற்கு ஏன் அன்னுவயப்படுகிறது என்பதற்கு காரணம், அதே சூரியனிட வெளிச்சத்திலிருந்து உற்பத்தியாகிற தென்பதாயிருக்கிறது. இருதயத்தோடு அன்பினிட அன்னுவயத்தால், இரத்தமானது சிவப்பாகாமலும், அதன் உற்பத்தி ஸ்தானத்தைக் காண்பிக்காமலும் இருக்கமுடியாது. அதனுல் தான் ஆண்டவரிடத்து அன்பு, அரசு புரிகிற சுவர்க்கங்களில், வெளிச்சமானது சுவாலிக்கிறதாயிருக்கிறது. அங்கிருக்கும் தேவர்கள் சிவப்பும் நீலமும் கலந்த ஆடைகளால் உடுத்தப்படுகிருர்கள்; ஞானம் அரசு புரியும் சுவர்க்கங்களில், வெளிச்சம் வெண்மையாயிருக்கிறது, அங்கிருக்கும் தேவர்கள் வெள்ளை நிறமுள்ள நாரால் நெய்யப்பட்ட ஆடைகளால் உடுத்தப்படுகிருர்கள்.

381. தேவர் உலகங்களில், ஒன்று சுவர்கத்துக்கு அடுத்த அதிசூக்கும இராச்சியமென்றும், மற்றது ஞான அல்லது சூக்கும லோகமென்றும், இரண்டு இராச்சியங்களாக பேதங்

காட்டப்படுகின்றன; ஆண்டவரிடத்து அன்பு சுவர்க்கத்துக்கு அடுத்த அல்லது அதிசூக்கும இராச்சியத்திலும், அந்த அன்பிலிருந்து வந்த ஞானம் பரலோகத்திலும், அரசு புரிகிறது. அன்பு அரசு புரியும் இராச்சியம் சுவர்க்கத்து இருதயமென்றும், ஞானம் அரசு புரியும் இராச்சியம் சுவர்க்கத்து சுவாசாசயமென்றும் சொல்லப்படுகிறது. சர்வ வியாபகமான தேவருலகு அதன் வட்டத்தில் ஒரு மனிதனை சாயல்காட்டி, ஆண்டவர் முன்பாக ஒரு மனிதனைப்போல், தோன்றுகிறதென்று தெரிந்திருக்க வேண்டியது ; ஆகையினால், அதன் இருதயம் ஒரு இராச்சியத்தையும், அதன் சுவாசாசயங்கள் வேறொரு இராச்சியத்தையும் உண்டாக்குகின்றன. ஏனென்றால், இருதயத்தைச் சேர்ந்ததும், சுவாசாசயத்துக்குச் சேர்ந்ததுமான சலனம் முழு சுவர்க்கத்தில் பொதுவாக இருக்கிறது. ஆகையினால், ஒவ்வொரு தேவனிடத்திலும் விசேஷமாயிருக்கிறது; அன்பும் ஞானமும் அவரிட மிருந்து மாத்திரம் வருகிறபடியினால், பொதுவான இருதயத்துக்கும் சுவாசாசயங்களுக்கும் சம்பந்தப்பட்ட சலனம், ஆண்டவரிடமிருந்து மாத்திரம் வருகிறது. ஆண்டவர் இருக்கிறதும், ஆண்டவரிடமிருந்து வருகிறதுமான, சூரியனில் அந்த இரண்டு சலனங்களும் இருக்கின்றபடியினால், அவைகள் தேவலோகத்திலும் பிரபஞ்சத்திலும் கூட இருக்கின்றன. இடவரைக்குட்படுத்தாமல் சர்வ வியாபகம் என்பதை நினைத்துப் பார், அது அப்படியிருக்கிறதென்று நீ அறிந்து கொள்வாய். சுவர்க்கங்கள், அதி சூக்குமமானதென்றும் சூக்குமமானதென்றும், இரண்டு இராச்சியங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றனவென்பது, **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலில் (பிரிவுகள் 26 முதல் 28 வரையில்)பார்க்கலாம். சர்வ வியாபகமான தேவருலகு, மொத்தத்தில் ஒரு மனிதனை

சாயல் காட்டுகிறது என்பது பிரிவுகள் 59 முதல் 87வரையில் பார்க்கலாம்.

382. **IV புத்தியானது சுவாசாசயங்களுடன் அன்னுவயப் படுகிறது.** இருதயத்துடன் சித்தத்தின் அன்னுவயத்தைக் குறித்து சொல்லப்பட்டதிலிருந்து இது தொடர்கிறது. பரமார்த்த மனிதனில் அல்லது மனதில் அரசுபுரிகிற, சித்தமென்றும் புத்தியென்றும், இரண்டு பொருள்கள் இருக்கின்றன; ஸ்தூல மனிதன் அல்லது சரீரத்தில் அரசுபுரிகிற, இருதயமென்றும் சுவாசாசயங்களென்றும், இரண்டு பொருள்கள் இருக்கின்றன; மேற்கூறியபடி, சரீரத்தின் எல்லா பொருள்களோடும், மனதினிட எல்லா பொருள்களின் ஒரு அன்னுவயமிருக்கிறது; ஆகையினுல், சித்தம் இருதயத்துடன் அன்னுவயப்படுவதுபோல, புத்தியானது சுவாசாசயங்களோடு, அன்னுவயப்படுகிறது என்று ஏற்படுகிறது. புத்தியானது சுவாசாசயங்களோடு அன்னுவயப்படுகிறது என்பதை, தன்னிட சிந்தனையிலிருந்தும் பேச்சிலிருந்தும், ஒவ்வொருவனும் தன்னிலேயே பார்க்கலாம். சிந்தனையிலிருந்து. சுவாசாசய சுவாசம் சிந்தனையுடன் ஏககாலத்தில் சம்பவித்தாலொழிய, எவனும் நினைக்க முடியாது; ஆகையினுல், ஒரு மனிதன் மௌனமாய் நினைத்தால், அவன் மௌனமாய் சுவாசிக்கிறுன்; அவன் ஆழ்ந்து யோசித்தால், ஆழ்ந்து சுவாசிக்கின்றுன்; சிந்தனையின்படி, இவ்விதமாக அன்பிலிருந்துவரும் ஆசையின் பெருக்கத்திற்கு தக்கபடி தாமதமாயும், விறைவாயும், ஆவலாயும், அமைதியாயும், அதி சிந்தையாயும், அவன் சுவாசித்தலை அடக்குகிறுன், அல்லது வளமாய் சுவாசிக்கிறுன், சுவாசாசயங்களை சுருக்குவான் அல்லது விரிப்பான். அவன் தன்னிட சுவாசத்தை முழுமையும் பிடித்துக்கொண்டால்,

வெளிப்படையாய் பார்க்கப்படாத தன் ஆவியில், அதன் சுவா சத்தால் தவிர, அவன் நினைக்க முடியாது. பேச்சிலிருந்து. ஏனென்றால், சுவாசாசயங்களின் உதவியன்றி வாயிலிருந்து ஒரு வார்த்தையின் சின்னஞ் சிறிய பாகம்கூட வெளியே போகிறதில்லை. வார்த்தைகளாக ஒலிக்கப்படுகிற சப்தம், சுவா சாசயங்களிலிருந்து சுவாசக்குழல் மூலமாயும், (Epiglottis) எனும் வாயிற் கபாடத்தின் மூலமாயும் முழுமையும் உண்டா கிறது. ஆகையினால், அந்த துருத்திகளின் ஊதல்களுக்கும் வழிதிறப்பதற்கும் தக்கபடி, பேச்சு உரத்த சப்தமாக உயர்த் தப்படுகிறது, அவைகள் சுருங்குதலுக்குத் தக்கபடி குறைந்து போகிறது: வழி மூடப்பட்டால், பேச்சானது சிந்தனையுடன் நின்று போகிறது.

383. புத்தியானது சுவாசாசயங்களோடும், அதிலிருந்து சிந்தனையானது சுவாசாசயங்களின் சுவாசத்துக்கும் அனு வயப்படுகிறபடியினால், வேதத்தில் ஆன்மாவென்றும் ஆவி என் றும் சொல்லப்படுவதினால், புத்தியானது அர்த்தம் கொள்ளப் படுகிறது. உதாரணமாக:—"உன் தேவனாகிய ஆண்டவரிடத் தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆன்மாவோடும் அன்பு கூறுவாயாக" (மத்தே XXII. 37)"); "கடவுளானவர் ஒருபுதிய இருதயத்தையும், புதிய ஆவியையும் கொடுப்பார்" (எசே. XXXVI. 26; சங்கீதம் li. 10). இருதயமானது சித்தத்தின் அன்பு என்று அர்த்தம் கொள்ளப்படுகிற தென்று மேலே காண்பிக்கப்பட்டது. ஆகையினால், ஆன் மாவும் ஆவியும் புத்தியின் ஞானத்தை கருதுகிறது. பரிசுத்த ஆவி என்றும்கூட சொல்லப்படுகிற கடவுளின் ஆவி, பரமஞான சக்தியென்றும், ஆகையினால் மனிதர்களுக்கு வெளிச்சமாயிருக்கிற தெய்வீக உண்மை என்றும் அர்த்தம்

கொள்ளுகிறது என்பது, ஆண்டவரைக் குறித்த புதிய எருசலேம் நகரத்தின் சித்தாந்தம் எனும் நூலில் பிரிவுகள் 50, 51ல் பார்க்கலாம். அதனால்தான், "ஆண்டவர் தன்னிட சீடர்கள் மேல் ஊதி, பரிசுத்த ஆவியை பெற்றுக்கொள்ளுங்கள்" என்று சொன்னார் (யோவா. XX. 22). அதனால் கூட, "ஏகோவாவாகிய கடவுள் ஆதாமினிட நாசியிலே ஜீவசுவாசத்தை ஊதினார், அவன் ஜீவாத்மாவானான்" என்று (ஆதிகா II·7) சொல்லப்பட்டிருக்கிறது. ஏகோவா தீர்க்கதரிசிக்கு சொன்னதாவது, "நீர் ஆவியை, நோக்கி தீர்க்கதரிசனம் உரை, ஆவியைநோக்கி, ஆவியே, காற்றுதிசை நான்கிலுமிருந்து வந்து, கொலையுண்ட இவர்கள் உயிரை அடையும்படி இவர்கள் மீது ஊது" (எசேக். XXXVII. 9). இதர இடங்களிலும் அப்படியே சொல்லியிருக்கிறது. ஆகவே, ஆண்டவர் "நாசிகளின் சுவாசமென்றும், உயிரின் சுவாச வழியென்றும் சொல்லப்படுகிறார். சுவாசம் நாசித்துவாரங்கள் மூலமாய் செல்லுதலால், அவைகளினால் உணர்ச்சி என்பது அர்த்தம் கொள்ளப்படுகிறது ; விவேகமுள்ள மனிதன் கூர்மையான நாசித்துவாரமுள்ள மனிதன் என்றும், விவேகமில்லாத மனிதன், மந்தமுள்ள நாசித்துவாரமுள்ள மனிதனென்றும், சொல்லப்படுகிறது. இந்தக்காரணத்தினால் கூட தான், ஆவி அல்லது சுவாசமும், காற்றும், ஹீபிரு பாஷையிலும் மற்ற சில பாஷைகளிலும் ஒரு வார்த்தையில் சொல்லப்படுகிறது. ஏனென்றால், ஆவி என்கிற வார்த்தை சுவாசித்தல் அல்லது உயிர்ப்பு என்பதிலிருந்து உற்பத்தியாகிறது; ஆகையினால், ஒரு மனிதன் இறக்கும்போது, உயிரைவிட்டுவிடுகிறானென்று சொல்லப்படுகிறது. அதிலிருந்து கூட, மனிதர்கள் ஆவியானது சுவாசாசயங்கள் வெளிவிடும் சுவாசம் போன்ற ஒரு காற்று என்றும்,

அல்லது காற்று சம்பந்தமான ஏதோ ஒன்றென்றும், ஆன் மாவும் அப்படியே என்றும், மனிதர்கள் நம்புகிறார்கள். முழு இருதயத்தோடும் முழுஆன்மாவோடும் கடவுளைநேசித்தல் என்பது எல்லா அன்போடும் எல்லா புத்தியோடும் அவரைநேசித்த லென்றும்,புதியஇருதயத்தையும் புதியஆவியையும்கொடுத்தல், புதிய சித்தத்தையும் புதிய புத்தியையும் கொடுத்தலென்றும், இவைகளிலிருந்து விசதமாகிறது. ஆவி என்பது புத்தி என்று அர்த்தம் கொள்ளுகிறபடியினால், பேஜாலீல் என்பவரைப் பற்றி, "அவர் ஞானத்தினிடவும், புத்தியினிடவும் அறிவினிடவும் ஆவியினால் நிறப்பப்பட்டாரென்றும், (யாத்தி. XXXI. 3); யோசுவாவைப்பற்றி, "ஞானத்தின் ஆவியினால் நிறப்பப்பட்டார் என்றும்" (உபாக. XXXIV. 9) சொல்லப் படுகிறது. தானியலைப்பற்றி நெபுசட்நெஜார், "அறிவினிடவும் புத்தியினிடவும் ஞானத்தினிடவும் மேலான ஆவியானது அவரிலிருந்ததாக" சொல்லுகிறார் (தானி. VI 3). ஏசாயாவில், "வழுவிப்போகிற மனதையுடையவர்கள், புத்திமான்களாவார்கள்" (XXIX. 24) என்று சொல்லப்பட்டிருக்கிறது. அம்மாதிரியேகூட இதர அநேக இடங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

384. மனதைச் சேர்ந்த எல்லா பொருள்களும், சித்தத்துக்கும், புத்திக்கும், சரீரத்தைச் சேர்ந்த எல்லா பொருள்களும், இருதயத்துக்கும் சுவாசாசயங்களுக்கும் சம்பந்தப் பட்டிருப்பதினால், சிரசில் இரண்டு மூளைகளிருக்கின்றன, இவைகள், சித்தமும், புத்தியும் வேறாயிருப்பது போல், ஒன்றுக்கொன்று வேறாயிருக்கின்றன. சிறிய மூளையானது முக்கியமாய் சித்தத்துக்கும், பெரிய மூளையானது முக்கியமாய் புத்திக்கும் ஏர்பட்டிருக்கிறது. அம்மாதிரியே

சரீரத்திலுள்ள இருதயமும் சுவாசாசயங்களும், அங்கிருக்கும் அங்கங்களுக்கு வேருயிருக்கின்றன. அவைகள் ஈரல் தாங்கியால் இவைகளிலிருந்து பிரிக்கப்பட்டு, தங்களிட சொந்தபோர்வையாகிய (Pleura) என்பதால் சூழப்பட்டு, மார்பு கூடென்று சொல்லப்பட்ட சரீரத்தின் ஓர்பாகத்தை உண்டாக்குகிறது. சரீரத்தின் மற்ற பாகங்களில், அதாவது, அவயவங்களிலும், அங்கங்களிலும், ஆந்திரிகங்களிலும், சித்தமும் புத்தியும் சேர்க்கப்பட்டிருக்கின்றன ; ஆகவே, இந்த பாகங்கள் இரட்டைகளாக இருக்கின்றன. புயங்களுக்கும், கைகளுக்கும் அரைகளுக்கும், பாதங்களுக்கும், கண்களுக்கும், நாசித்துவாரங்களுக்கும், விஷயம் இம்மாதிரியே யிருக்கிறது. மேலும் சரீரத்துக்குள், மூத்திர பாண்டங்களும், மூத்திர நாளங்களும், பீசங்களும் இரட்டையாயிருக்கின்றன. இரட்டையாயிராத ஆந்திரிகங்கள், வலது பக்கங்கள், இடது பக்கங்கள் என்று பிரிக்கப்பட்டிருக்கின்றன. மூளையே இரண்டு அர்த்த கோளங்களாகவும், இருதயமே இரண்டு ஜடரிகைகளாகவும், சுவாசாசயங்களே இரண்டு இதழ்களாகவும், கூட பிரிக்கப்பட்டிருக்கின்றன ; இவைகளின் வலது பக்கம் உண்மையின் நன்மைக்கும், இடது பக்கம் நன்மையின் உண்மைக்கும் சம்பந்தப்பட்டிருக்கிறது. அல்லது அதே ஆகிறபடி, வலது பக்கம், ஞானத்தின் உண்மை வருகிற அன்பின் நன்மைக்கும், இடது பக்கம் அன்பின் நன்மையிலிருந்து வருகிற ஞானத்தின் உண்மைக்கும் சம்பந்தப்பட்டிருக்கிறது. நன்மையினிடவும் உண்மையினிடவும் சேர்க்கை பரஸ்பரமாயிருப்பதாலும், அந்த சேர்க்கையானது இரண்டையும்ஒன்றைப்போல் செய்கிறபடியினுலும், மனிதனிலிருக்கும் எல்லா இரட்டைப் பொருள்களும் தொழில்களிலும் சலனங்களிலும், உணர்ச்சியிலும் கூடி ஒன்ருய் செயல்படுகின்றன.

385. V. சித்தத்தையும் புத்தியையும் பற்றியும், ஆகையினால் கூட அன்பையும் ஞானத்தையும் பற்றியும் அநேக இரகசியங்கள், இந்த அன்னுவயத்தின் மூலமாய்க் கண்டுபிடிக்கப் படலாம். உலகத்தில் மனிதனானவன் தானே தெரிந்துகொண்டு நினைக்க சக்தியுள்ளவனாயிருப்பதுபோல, அவன் அன்புகூறவும், அன்பினால் தானே இச்சிக்கவும், சக்தியில்லாதவனாயிருக்கிறபடியினால், சித்தம் என்னவென்றும், அன்பு என்னவென்றும் தெரிந்திருக்கப்படவில்லை. அவன் தானே சுவாசாசயங்களை சுவாசிக்கச் செய்ய சக்தியுள்ளவனாயிருப்பதுபோல், இருதயத்தை அசையச்செய்ய தனக்கே சக்தியில்லை என்பது ஓர் ஒப்பனையான விஷயமாயிருக்கிறது. சித்தமும் அன்பும் என்னவென்று உலகத்தில் ஏறக்குறைய தெரியாது. அப்படியல்லாமல் இருதயத்தினிடவும், சுவாசாசயங்களினிடவும் சுபாவம் என்னவென்று தெரிந்திருக்கிறது. ஏனென்றால், பின்கூறிய இரண்டும் பார்க்கப்படவும் பரிசோதிக்கப்படவும் கூடும்; சரீர சாஸ்திரிகளால் பரிசோதிக்கப்பட்டு, விவரிக்கப்பட்டுமிருக்கின்றன; ஆனால், சித்தமும் புத்தியும் பார்க்கக்கூடியதுமல்ல, பரிசோதிக்கப்படவும் முடியாது. ஆகையினால், அவைகள் அன்னுவயப்படுகிறதென்றும், அன்னுவயத்தால் ஒன்றுகிறதென்றும், தெரிந்திருக்கும்போது, வேறு விதத்தில் கண்டுபிடிக்கப்படாத சித்தத்தையும் புத்தியையும் சேர்ந்த அநேக இரகசியங்கள் கண்டு பிடிக்கப்படலாம். உதாரணமாக, புத்தியினுடன், சித்தத்தினிட சேர்க்கையைப் பற்றியும், சித்தத்துடன், புத்தியின் பரஸ்பர சேர்க்கையைப்பற்றியும், அல்லது ஞானத்துடன், அன்பின் சேர்க்கையைப் பற்றியும், அன்புடன், ஞானத்தின் பரஸ்பர சேர்க்கையைப் பற்றியும், மேலும், அன்பு ஆசைகளாகப் பிறந்து, அவைகள் ஐக்கியப்பட்டு,

உணர்ச்சிகளிலும் சிந்தனைகளிலும், கடைசியில், அனுபவபத் துக்குத்தக்கபடி செயல்களிலும், சரீர இந்திரியங்களிலும், பெருந்தலைபற்றியும், அநேக விஷயங்கள் தெரிந்து கொள்ளலாம். இவைகளும் இன்னும் அநேக இதர இரகசியங்களும், இருதயத்தினிடவும் சுவாசாசயங்களிடவும் சேர்க்கையிலிருந்தும், இருதயத்திலிருந்து, சுவாசாசயங்களுக்குள்ளும், பரஸ்பரமாய் சுவாசாசயங்களிலிருந்து, இருதயத்துக்குள்ளும் பிறகு, சுத்த இரத்த நாடிகள் மூலமாய் சரீரத்தின் எல்லா அவயவங்களிலும், அங்கங்களிலும், ஆந்திரிகங்களிலும் இரத்தம் ஓடுவதிலிருந்தும், கண்டு பிடிக்கப்பட்டு ரூபகாரம் செய்யப்படலாம்.

386 VI. மனிதனிட மனது, அவனுடைய ஆவியாயிருக்கிறது, ஆவியானது ஒரு மனிதனுயிருக்கிறது, சரீரமானது மனது அல்லது ஆவி உலகத்தில் உணர்ந்து செயல்படுகிற புறம்பானதாயிருக்கிறது. மனிதனிட மனது அவனிட ஆவியென்பதும், ஆவி மனிதனென்பதும், ஆவி காற்றென்றும், ஆன்மா சுவாசாசயங்களிலிருந்து, வெளியே விடப்பட்ட சுவர்க்கத்தைப்போன்ற, அதேஇயல்புடைய அதிசூக்குமமான ஏதோஒரு பொருளென்றும், எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருந்தவர்களின் நம்பிக்கையில், பிரவேசிக்க முடியாது. ஏனென்றால், "ஆவியானது சுவாசமாயிருக்கும்போது, அது எப்படி மனிதனுயிருக்கக் கூடும் என்றும், ஆன்மாவானது சுவாசமாயிருப்பதால், அது எப்படி மனிதனுயிருக்கக்கூடுமென்றும்" அவர்கள் கேட்கிறார்கள். கடவுளும் ஆவியென்று சொல்லப்படுகிற படியினால், அவரைப்பற்றியும் கூட அம்மாதிரியே நினைக்கிறார்கள். ஆவி என்கிற வார்த்தையும், காற்று என்கிற வார்த்தையும், சில பாஷைகளில் ஒரே வார்த்தையினால், சொல்லப்படுகிற தென்

கிற சந்தர்ப்பத்திலிருந்தும், ஒரு மனிதன் இறக்கும்போது அவன் உயிரை விட்டுவிடுகிருனென்று சொல்லப்படுவதிலிருந்தும், மூச்சுவிடாமல் செய்யப்பட்ட பிறகும் அல்லது மூர்ச்சைக்குப்பின்னிட்டும், ஆவி அல்லது சுவாசாசயங்களின் சுவாசம் திரும்பி வரும்போது உயிர் திரும்புகிற தென்பதிலிருந்தும், ஆவியைக்குறித்தும் ஆன்மாவைக் குறித்தும் இந்த அபிப்பிராயத்தை அவர்கள் கொண்டார்கள். இந்த விஷயங்களில் அசையும் காற்று, அசையாத காற்று என்பவைகளைத் தவிர, அவர்கள் வேருென்றும் அறிந்து கொள்ளாதபடியினுல், ஒரு மனிதனிட ஆவியும்ஆன்மாவும் இறந்த பிறகு மனிதன் அல்லவென்று, கண்ணிலிருந்தும், சரீரத்தின் இந்திரியங்களிலிருந்தும், அவர்கள் தீர்மானிக்கிருர்கள். ஆவியைப்பற்றியும், ஆன்மாவைப் பற்றியும் அவர்கள் செய்யும், இந்த சரீரசம்பந்தமான தீர்ப்பிலிருந்து, பல உத்தேசங்கள் உண்டாகி, இவைகள் ஒரு மனிதனுனவன் கடைசி தீர்ப்பு நாள் வரையில், மனிதனுகிறதில்லை என்றும், **கடைசி தீாப்பைக் குறித்த தொடர்ச்சி** என்னும் நூலில் (பிரிவுகள் 32 முதல் 38 வரையில்) காண்பிக்கப்பட்டபடி, இடையில் எங்கேயோ ஓரிடத்திலிருந்து கொண்டு, மறுபடியும் சேர காத்துக்கொண்டிருக்கிருனென்றும், ஓர் நம்பிக்கையை உற்பத்தி செய்துவிட்டன. ஒரு மனிதனிட மனது அவனிட ஆவியாயிருப்பதினுல், ஆவிகள் என்று கூட சொல்லப்படுகிற தேவர்கள், மனதுகள் என்று சொல்லப்படுகிருர்கள்.

387. ஏன் மனிதனிட மனது, அவனிட ஆவியாயிருக்கிறதென்பதற்கும், ஏன் ஆவி ஒரு மனிதனுயிருக்கிருனென்பதற்கும் காரணமானது, மனிதனிட சித்தத்தினிடவும் புத்தியினிடவும் எல்லா பொருள்களும் மனது என்பதால் கருதப்படுகிற தென்பதும், இவைகள் தொடக்கங்களில் மூளைகளி

லும் காட்சிகளில் சரீரத்திலும் இருக்கின்றன என்பதுமா யிருக்கிறது; ஆகையினால் அவைகள் எல்லாம், அவைகளின் உருவங்கள் விஷயத்தில் மனிதனிட பொருள்களாயிருக்கின் றன. விஷயம் இப்படி இருப்பதினால், மனது அதாவது சித் தமும் புத்தியும், சரீரத்தையும் அதன் எல்லா பாகங்களை யும், தன் இஷ்டப்பிரகாரம் கட்டளையிடுகிறது. மனது நினைத்து இச்சிக்கிற எதையும் சரீரம் செய்கிறதில்லையா? மனது காதை கேட்கும்படி நிமிர்த்துகிறது; பார்க்கும்படி கண்ணை குறிக்கிறது; மனது நாக்கையும் உதடுகளையும் பேசும் படி அசைக்கிறது; கைகளையும் விரல்களையும் அதற்கு இஷ்டமானதைச் செய்ய வைக்கிறது; பாதங்களை தான் இஷ்டப்படும் இடத்துக்கு போகச் செய்கிறது. சரீர மானது, மனது சொன்னபடி கீழ்படிவதை தவிர வேறுயா தொன்றையாவது செய்கிறதா? மனதானது சரீரத்தில் அதன் காட்சிகளால் இருந்தால் ஒழிய, இப்படி நடக்குமா? மனதானது இஷ்டப்படுகிறபடியினால், அதன் உத்திரவுபடி சரீரம் கீழ்ப்படிகிறதென்பது, புத்திக்கு ஒத்திருக்கிறதா? அப்படியானால், ஒன்று மேலேயும் ஒன்று கீழேயும், அவைகள் இரண்டாயிருக்கும்; ஒன்று கட்டளையிடும்; மற்றது கீழ்ப்படி யும். இது எந்தவிதத்திலும் புத்தியுடன் ஒத்துப்போகாத படியினால், மேல் கூறியபடி (பிரிவு 365) மனிதனிட உயி ரானது தொடக்கங்களில் மூளைகளிலும், காட்சிகளில் சரீரத் திலும் இருக்கிறதென்றும், மேலும் தொடக்கங்களில் உயி ரிருப்பதுபோல், அது முழுவதிலும் ஒவ்வொரு பாகத்திலும் இருக்கிறதென்றும் (பிரிவு. 366.), அந்த தொடக்கங்கள் மூலமாய் ஒவ்வொரு பாகத்திலுமிருந்து முழுவதிலும், முழுவதிலுமிருந்து ஒவ்வொன்றிலும் உயிரிருக்கிறதென்றும்,

(பிரிவு 367), ஏற்படுகிறது. மனதினிட எல்லா பொருள்களும், சித்தத்துடனும் புத்தியுடனும், சம்பந்தப்பட்டிருக்கிறதென்பதும், சித்தமும் புத்தியும் ஆண்டவரிடமிருந்து வரும் அன்பினிடவும் ஞானத்தினிடவும் ஆசயங்களாயிருக்கின்றனவென்பதும், இந்த இரண்டும் மனிதனிட உயிரை உண்டாக்குகின்றனவென்பதும், முன்பக்கங்களில் காண்பிக்கப்பட்டிருக்கிறது.

388. இப்பொழுது சொல்லப்பட்டதிலிருந்து, மனிதனிட மனது, மனிதனே என்று கூட அறிந்து கொள்ளலாம். ஏனென்றால், மானிட ரூபத்தின் முதல் தரிநூல் அல்லது மானிட ரூபமே அதைச் சேர்ந்த எல்லாவற்றோடும், நரம்புகள் மூலமாய் மூளையிலிருந்து தொடர்ச்சியாயிருக்கிற தொடக்கங்களிலிருந்து, மேலே காண்பித்தபடி கூட, உண்டாகிறது. இறந்த பிறகு மனிதன் வருகிறதும், அப்பொழுது அதை ஓர் ஆவியென்றும், தேவனென்றும் சொல்லப்படுகிறதும், எல்லா சம்பூரணத்திலும் மனிதனுயிருக்கிறதும், ஆனால் ஒரு பரமார்த்த மனிதனுயிருக்கிறதும், இந்த ரூபம் தான். உலகத்தில் சேர்ப்பதும், மேலே போடுவதுமான, ஸ்தூல ரூபம் தானே மானிட ரூபமல்லாமல், மற்ற சூக்கும ரூபத்தினால் அப்படியாகிறது: ஸ்தூல லோகத்தில் மனிதனானவன் உபயோகங்களைச் செய்யவும், மேலும், உலகத்திலுள்ள அதிக சுத்தமான பொருள்களிலிருந்து, சூக்கும பொருள்கள் உள்ளிருக்கும், ஒரு ஸ்திரமான பொருளைத் தன்னுடன் கொண்டு போகவும், இவ்விதமாக உயிரை தொடர்ச்சியாய் வைக்கவும், நீடிக்கச் செய்யவும், சக்தியுள்ளவனுயிருக்க அது சேர்க்கப்பட்டு மேலே போடப்படுகிறது. கடவுள் மனிதனுயிருக்கிறபடியினால், மனிதனிட மனது பொதுவாக மட்டு மல்லாமல் சிறப்

பாகவும், மானிட சரீரத்தை அடைய சதாகாலம் பிரசவ வேதனைப்படுகிறதென்பது, தேவர்கள் ஞானத்தில் ஒரு வார்த்தையாயிருக்கிறது.

389. ஒரு மனிதன், மனிதனாயிருக்க வேண்டுமானால், சிரசிலாவது, சரீரத்திலாவது, சம்பூர்ண மனிதனிலிருக்கும் எந்த பாகமும் இல்லாமலிருக்க முடியாது ; ஏனென்றால், தானே தெய்வமாயிருக்கிற அன்பினிடவும் ஞானத்தினிடவும் ரூபமாய் இருப்பதினால், அந்த ரூபத்தில் பிரவேசித்து அதை உண்டாக்காதது அங்கே ஒன்றுமில்லை. அன்பினிடவும் ஞானத்தினிடவும் நிர்ணயங்கள் எல்லாம் அதிலிருக்கிறது ; இவைகள் தேவ மனிதனில் முடிவற்றவைகளாயிருக்கின்றன, ஆனால் அவரிட பிரதிமையில், அதாவது மனிதனிலும், தேவனிலும், ஆவியிலும் முடிவுள்ளவைகளாயிருக்கின்றன. மனிதனிலிருக்கப்பட்ட எந்த பாகமாவது இல்லாமல் போனால், அவைகளுடன் அன்னுவயப்படுகிற அன்பினாலும் ஞானத்தினாலும் நிர்ணயிக்கப்பட்ட ஏதோ சிலதும், முதன்மை பொருளிலிருந்து இறுதிப் பொருள்கள் வரையில் ஆண்டவர் மனிதரோடு இருக்கக்கூடியதும், அவரிட இச்சாசத்தியிலிருந்து, ஞான சக்தியின் மூலமாய் சிருஷ்டிக்கப்பட்ட உலகத்தில், உபயோகங்களை ஏற்படுத்தக்கூடியதுமான, ஏதோ சிலதும் இல்லாமல் போய்விடும்.

390. VII. சரீரத்துடன் ஆன்மாவின் சேர்க்கையானது அவனிட இருதயத்துடனும் சுவாசாசயங்களுடனும், சித்தத்தினிடவும்,புத்தியினிடவும் அன்னுவயத்தின் மூலமாய் உண்டாகிறது. வேறுகுதல், அப்படி அன்னுவயப்படாவிட்டால் உண்டாகிறது. சித்தமும் புத்தியும் அர்த்தம் கொள்ளப்படுகிற மனிதனிட மனது அவனிட ஆவியென்றும், ஆவியானது மனித

னென்றும், இதுவரையில் தெரிந்திருக்கப்படாதபடியினுலும், சரீரத்துக்கு சமமாய் மனிதனிட ஆவிக்கு ஒரு தாது துடிப்பும், சுவாசமும் இருக்கிறதென்று தெரிந்திருக்காதபடியினுலும், மனிதனில் ஆவியின் நாடி துடிப்பும் சுவாசமும், அவனிட சரீரத்தின் நாடி துடிப்புள்ளும் சுவாசத்துக்குள்ளும் பாய்ந்து, அவைகளை உண்டாக்குகின்றனவென்று தெரிந்திருக்கப்பட முடியாது. ஆகையினுல், சரீரத்தைப்போல, மனிதனிட ஆவிக்கு ஒரு நாடிதுடிப்பும் சுவாசமும் இருக்கிறபடியினுல், அவனிட சரீரத்தின் நாடிதுடிப்புடனும் சுவாசத்துடனும், மனிதனிட ஆவியின் நாடிதுடிப்பினிடவும் சுவாசத்தினிடவும் ஒரு ஒப்பான அன்னுவயமிருக்கிறதென்று பின் தொடருகிறது; ஏனென்ருல், முன் சொல்லியபடி, மனதானது அவனிட ஆவியாயிருக்கிறது ; ஆகையினுல், இந்த இரண்டு சலனங்களின் அன்னுவயம் நிற்கின்றபோது, மரணம் என்று சொல்லப்பட்ட ஒரு பிரிவினை சம்பவிக்கிறது. அது அதன் ஆவியோடு ஒன்றுபட்டு செயல்பட முடியாதபடி நோவினுலாவது விபத்தினுலாவது சரீரமானது அவ்வித நிலைக்கு வந்தபோது பிரிவினை அல்லது மரணம் சம்பவிக்கிறது; ஏனென்ருல் இவ்விதமாக அன்னுவயமும், அன்னுவயத்தோடு சேர்க்கையும் அழிந்துபோகிறது. சுவாசம் நின்றபோது இது ஏற்படுகிறதில்லை; ஆனுல் இருதயத்தின் துடிப்பு நின்றபோது அப்படி ஏற்படுகிறது. ஏனென்ருல், இருதயம் அசையும் போது, அன்பு அதன் உயிருள்ள சூட்டுடன் மிகுந்திருந்து, உயிரை பாதுகாக்கிறது. மூர்ச்சையிலும், மூச்சு விடாமல் தடுக்கப்பட்டபோதும், கருப்பையிலுள்ள இளஞ்சூலிலிருந்தும் கூட இது விசதமாகிறது. சுருங்கச்சொல்லில், மனிதனிட சரீரத்தின் உயிர், அவனிட ஆவியின் நாடி துடிப்புடனும்

சுவாசத்துடனும், அதனிட நாடி துடிப்பினிடவும் சுவாசத்தி னிடவும், அன்னுவபத்தின்பேரில் சார்ந்திருக்கிறது ; அந்த அன்னுவயம் நிற்கிறபோது, சரீரத்தின் உயிர் விட்டுவிடுகிறது; அந்த உயிரை விட்டு விட்டானென்று, அவன் தெரிந்துகொள் ளாதபடி, ஸ்தூல உலகத்தில் இருந்த உயிரோடு அவ்வளவு ஒப்பானதாயிருக்கிற சூக்கும உலகில், அவன் ஆவி சென்று அதன் உயிரை தொடர்ச்சியில் வைக்கிறது. பெரும்பான்மை யோர், சரீரத்தைவிட்ட இரண்டு நாள் பொருத்து, சூக்கும உலகிலிருக்கிறார்கள் ; அந்த காலத்திற்கு பிந்தி நான் சிலருடன் பேசி யிருக்கிறேன்.

391. ஆவியானது, இங்கே சரீரத்தோடு உள்ள மனித னேடு சமமாய், ஒரு நாடி துடிப்பையும் சுவாசத்தையும் உடைத்தாயிருக்கிறதென்பது, அவர்களோடு பேச ஒருவ னுக்கு உத்திரவு கொடுக்கப்பட்டபோது, ஆவிகளிடவும் தேவர்களிடவும் சாட்சியத்தைத் தவிர இதர சாட்சியத்தால் ரூபகாரம் செய்யப்பட முடியாது. இந்த அனுமதி எனக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி அவர்களைக் கேட்ட போது, உலகத்திலிருக்கும் மனிதர்களைப்போல் அவ்வளவு மனிதர்களாக தாங்கள் இருக்கிறதாகவும் ; அவர்களைப்போல், கூட ஒரு சரீரத்தை உடைத்தாயிருப்பதாகவும், ஆனல் அது சூக்குமமானதென்றும், மார்பில் இருதய துடிப்பையும், மணிக்கட்டில் சுத்த இரத்த நாடிகளின் துடிப்பையும், ஸ்தூல உலகத்தில் மனிதர்களா யிருப்பவர்கள்போல், தாங்களும் உணருகிறதாகவும், அவர்கள் சொன்னர்கள் : இந்த விஷயத் தைப்பற்றி நான் அநேகரைக் கேட்டேன், அவர்கள் எல்லாம் அதே மாதிரி சொன்னர்கள். மனிதனிட ஆவியானது அவனிட சரீரத்தில் சுவாசிக்கிறது என்பது, என்னிட சொந்த

அனுபவத்தில் தெரிந்துகொள்ள அருள் செய்யப்பட்டது. ஒரு சமயத்தில், தேவர்கள் என்னிட சுவாசத்தை நடத்தவும், இஷ்டப்படி குறைக்கவும், கடைசியில் அப்பொழுது நான் புத்தியுடன் பார்த்த என்னிட ஆவியின் சுவாசம் மாத்திரம் மிகுந்திருக்கிற வரையில், அதை விடாமல் நிருத்திக்கொள் ளவும் அனுமதி கொடுக்கப்பட்டார்கள். இறந்து போகிறவர் களின் நிலைமையை அறிந்து கொள்ள எனக்கு அருள் செய் யப்பட்டபோது, அம்மாதிரியே எனக்கும் செய்யப்பட்ட தென்பது, **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலில் 449வது பிரி வில் பார்க்கலாம். சில சமயங்களில்கூட, என்னிட ஆவியின் சுவாசத்திற்கு மாத்திரம் நான் குறைக்கப்பட்டேன்; அது சுவர்க்கத்து பொது சுவாசத்துடன் ஒத்துப்போகிறதை, நான் அப்பொழுது புத்தியினல் பார்த்தேன். அநேக தடவை களில் கூட தேவர்களோடு அதைப்போன்ற நிலைமையிலிருந் திருக்கிறேன்; மேலும் சுவாக்கத்தில் அவர்களிடம் உயர்த்தப் பட்டிருக்கிறேன், அப்பொழுது சரீரத்துக்கு வெளியே ஆவி யிலிருந்துகொண்டு, உலகத்தில் செய்வதுபோல சுவாசத் துடன் அவர்களோடும் பேசினேன். இதிலிருந்தும், இன்னும் இதர உயிருள்ள ரூபகராங்களிலிருந்தும், மனிதனிட ஆவி யானது சரீரத்தில் மாத்திரம் அல்லாமல், சரீரத்தை அது விட்ட பிறகும் கூட சுவாசிக்கிறதென்றும், ஆவியினிடம் சுவாசம் மனிதன் அறிந்து கொள்ளாதபடி அவ்வளவு மௌன மாயிருக்கிறதென்றும், ஏறக்குறைய காரணமானது காரியத் தில் ஓடுகிறது போலவும், சிந்தனையானது சுவாசாசயங்களி லும், சுவாசாசயங்கள் மூலமாய் பேச்சிலும் ஓடுவது போல வும், சரீரத்தின் வெளிப்படையான சுவாசத்தில் அது ஓடுகிற தென்றும், எனக்கு தெளிவாக்கப்பட்டது.. மனிதனிடத்தில்,

ஆவியினிடவும் சரீரத்தினிடவும் சேர்க்கையானது, அந்த இரண்டின், இருதய சலனத்தினிடவும் சுவாசாசய சலனத்தினிடவும் வரிசைப்படி, அன்னுவயத்தின் மூலமாய் உண்டாகிறதென்பது,இவைகளிலிருந்து அது தெளிவாகக்கூட இருக்கிறது.

392. பொதுவாகவும் சிறப்பாகவும் தேவர்கள் சுவர்க்கம் முழுவதும் இந்த இரண்டு உயிருள்ள சலனங்களை உடைத்தாயிருப்பதினால், இருதயத்தைச் சேர்ந்ததும், சுவாசாசயத்தைச் சேர்ந்ததுமான இந்த இரண்டு சலனங்களும், நிலைத்து பிடிவாதமாயிருக்கின்றன; அவர் இருக்கப்பட்டதும், அவரிடமிருந்து வருகிறதுமான சூரியனிடமிருந்து, ஆண்டவர் அவைகளை உள்ளே கொட்டுகிறபடியினால், முழு அமரர் உலகமும் அவைகளிலிருக்கின்றன. அந்த சூரியன் ஆண்டவரிடமிருந்து, இந்த இரண்டு சலனங்களையும் செயல்படுத்துகிறது. சுவர்க்கத்திலும் உலகத்திலுமுள்ள எல்லா பொருள்களும், அந்த சூரியன் மூலமாய் ஆண்டவரிடமிருந்து, முதன்மையானதிலிருந்து இறுதியானவைகள் வரையில் அவைகளை ஒரு பூரணமான முழுமையாயிருக்கும்படியாக, உருவத்திலிருந்து அவ்வித சம்பந்தத்தை உடைத்தாயிருப்பதினாலும், அன்பினிடவும் ஞானத்தினிடவும் உயிரானது அவரிடமிருந்து வருகிறபடியினாலும், பிரபஞ்சத்தின் எல்லா சக்திகளும் உயிரிடமிருந்து வருகிறபடியினாலும், இந்த இரண்டு சலனங்களுக்கும் வேறு உற்பத்தி ஸ்தானமில்லை என்று விசதமாகிறது. இவைகளின் விகர்ப்பம், அன்பையும் ஞானத்தையும் ஏற்றுக்கொள்வதற்கு தக்கபடி இருக்கிறதென்று ஏற்படுகிறது.

393. பின் வருவதில், இந்த சலனங்களின் அன்னுவயத்தைப்பற்றி, சுவர்க்கத்தோடு சுவாசிக்கிறவர்களோடு அந்த அன்னுவயத்தின் சுபாவம் என்னவென்றும், நரகத்தோடு சுவாசிச்கிறவர்களுடன் அது என்னவென்றும், மேலும் சுவர்க்கத்தோடு பேசி, நரகத்தோடு நினைக்கிறவர்களுடன் அது என்னவென்றும், இவ்விதமாக வேஷதாரிகளோடும், முகஸ்துதி செய்கிறவர்களோடும், பாசாங்கர்களோடும் அது என்னவென்றும், இவைபோன்ற அநேகம் சொல்லப்படும்.

**394. சித்தத்தைப் பற்றியும் புத்தியைப்பற்றியும், அல்லது அன்பைப்பற்றியும் ஞானத்தைப்பற்றியும், ஆகையினுல் மனிதனிட ஆன்மாவைப்பற்றியும், தெரிந்துகொள்ளக்கூடிய எல்லா பொருள்களும், சித்தத்துடன் இருதயத்தினிடவும், சுவாசாசயங்களோடு புத்தியினிடவும், அன்னுவயத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம்.**

பாண்டித்தியமுள்ள உலகத்தில் அநேகர் ஆன்மாவைப் பற்றிய விசாரணையில் அதிகமாய் கஷ்டப்பட்டிருக்கிறார்கள்; ஆனுல் சூக்கும உலகத்தைப்பற்றியும், இறந்த பிறகு மனிதன் நிலைமையைப்பற்றியும், அவர்களுக்கு ஒன்றும் தெரியாதபடியினுல், ஆன்மாவின் சுபாவத்தைப்பற்றி யல்லாமல், ஆனுல் சரீரத்தின்பேரில் அது சேட்டித்தலைப்பற்றி, ஊகைகளை ஏற்படுத்துவதைத் தவிர, அவர்கள் அதிகம் ஒன்றும் செய்ய முடியாது. ஆன்மாவின் சுபாவத்தைப்பற்றி,(ether) எனும் சூக்கும ஆகாயத்தில், மிகவும் சுத்தமான ஏதோ ஒன்று என்பதைத் தவிரவும், அதே (eιher) எனும் சூக்கும ஆகாயத்தைப்பற்றி, அதன் ஏதோ ஒரு முக்கிய அம்சம் என்பதைத் தவிரவும், அவர்கள் வேறு அபிப்பிராயம் கொள்ள முடியாது. ஆயினும், ஆன்மாவானது சூக்குமமானதென்று தெரிந்திருக்

கிறபடியினுல், ஆன்மாவிற்கு ஏதோ ஸ்தூலமான குணத்தை ஆரோபிப்போம் என்கிற பயத்தினுல், அதிகம் சொல்ல இங்கே அவர்கள் தைரியப்படவில்லை. ஆன்மாவானது சரீரத்தின்பேரில் செயல்பட்டு, அதன் இந்திரியங்களின் ஞானத்துக்கும், அதன் சலனத்துக்கும் சம்பந்தப்பட்ட எல்லா பொருள்களையும், அங்கே உண்டாக்குகிறதென்றுதெரிந்திருந்தும், ஆன்மாவைப்பற்றி அப்படி நினைத்தபடியினுல், முன் கூறியபடி, பெருக்கத்தால் செய்யப்பட்டதென்று சிலர் சொன்னதும், ஒற்றுமையால் செய்யப்பட்டதென்று, சிலர் சொன்னதுமான சரீரத்தின்பேரில் ஆன்மா சேட்டித்தலை சோதனை செய்ய அவர்கள் அதிகமாய் கஷ்டப்பட்டார்கள். ஆனுல், நிஜமான சங்கதியை அறிய ஆவலுள்ள மனது ஒத்துக்கொள்ளக்கூடிய யாதொன்றையும் இந்த விசாரணையால் கண்டுபிடிக்கப்படாதபடியினுல், தேவர்களோடு பேசவும், அவர்கள் ஞானத்தின் மூலமாய் அந்த விஷயத்தைப்பற்றி அறிவு உண்டாக்கப்படவும் எனக்கு அருள் செய்யப்பட்டது. அதிலிருந்து இது ஏற்படுகிறது. இறந்த பிறகு உயிரோடிருக்கிற மனிதனிட ஆன்மா அவனிட ஆவியாயிருக்கிறது, அது சம்பூரணரூபத்தில் ஒரு மனிதனுயிருக்கிறது; இந்த மனிதனிட ஆன்மா சித்தமும் புத்தியுமாயிருக்கிறது; இவைகளின் ஆன்மா ஆண்டவரிடமிருந்துவரும் அன்பும் ஞானமுமாயிருக்கிறது; இந்த இரண்டும் ஆண்டவரிடமிருந்து மாத்திரம் வருகிற மனிதனிட உயிரை உண்டாக்குகிறவைகளாயிருக்கின்றன; ஆண்டவர், மனிதன் தன்னைஏற்றுக்கொள்ளும்பொருட்டு, உயிரானது மனிதனுடையதுபோல் தோன்றும்படி செய்கிருர். ஆனுல் மனிதனுனவன், உயிரை தனக்கே சொந்தமாக பாத்தியதை கொண்டாடி, அப்படியே ஆண்டவரை ஏற்றுக்

கொள்ளாமல் விட்டுவிடாதபடி,, நன்மை என்று சொல்லப் பட்ட அன்பின் எல்லாமும், உண்மை என்று சொல்லப்பட்ட ஞானத்தின் எல்லமும் தன்னிடமிருந்து வருகிறதாகவும், அவைகளில் யாதொன்றும் மனிதனிடமிருந்து வருகிறதில்லை யென்றும், இந்த இரண்டும் உயிராயிருப்பதினால் உயிராயிருக் கிற உயிரின் முழுவதும் தன்னிட மிருந்து வருவதாகவும் கற் பித்திருக்கிறார்.

395. தன் சொரூபத்திலேயே ஆன்மாவானது, அன்பும் ஞானமுமாயிருக்கிறபடியினாலும், இந்த இரண்டும் ஆண்ட வரிடமிருந்து, மனிதனில் இருக்கிறபடியினாலும், மனிதனில் ஆண்டவரிட இருப்பிடங்களாயிருக்கிற, ஒன்று அன்புக்கும், மற்றது ஞானத்துக்குமாக, இரண்டு ஆசயங்கள் சிருட்டிக்கப் பட்டிருக்கின்றன. அன்பிற்கு ஏற்பட்டது சித்தமென்றும், ஞானத்துக்கு ஏற்பட்டது புத்தியென்றும், சொல்லப்பட் டிருக்கிறது. அன்பும் ஞானமும் ஆண்டவரில் வேறாக ஒன்று யிருப்பதினாலும், (மேலே பிரிவுகள் 17 முதல் 22 வரையில்) இச்சாசத்தி அவரிட ஞான சத்திக்கு சேர்ந்தபடியினாலும், ஞானசத்தி அவரிட இச்சா சத்திக்கு சேர்ந்தபடியினாலும் (பிரிவுகள் 34 முதல் 39 வரையில்), இவைகள் அம்மாதிரியே தேவ மனிதனிட மிருந்து அதாவது ஆண்டவரிட மிருந்து புறப்படுகிறபடியினாலும், சித்தமும், புத்தியுமென்கிற மனிதனி லிருக்கும் அந்த இரண்டு ஆசயங்களும் வாசஸ்தானங்களும், வேறாய் இரண்டாயிருக்கும்படியாகவும், அப்படியிருந்தும், இவைகளில் சித்தமும் புத்தியும் பிரிக்கமுடியாத படியினால், எல்லா தொழில்களிலும், எல்லா இந்திரிய ஞானங்களிலும் ஒன்றாகும்படிக்கும், ஆண்டவரால் சிருட்டிக்கப்பட்டிருக் கின்றன. ஆனால், ஒரு மனிதனானவன் ஒரு ஆசயமாக

வும் வாசஸ்தலமாகவும் இருக்க சக்தியுள்ளவனுயிருக்கும் பொருட்டு, அந்த நோக்கத்தை அனுசரித்தே, அதன் அன்பில் தான் இராத ஞானத்தின் ஏதோ ஒரு வெளிச்சத்தில் மனிதனிட புத்தி தன்னிட அன்பிற்கு மேலே உயர்த்தப்பட சக்தியுள்ளதாயிருக்கவேண்டு மென்றும், அதனுல், அந்த அன்பில் கூட, வந்து, சதாகாலம் சுகத்தை அனுபவிக்கத் தான் எப்படி வாழவேண்டுமென்று பார்க்கவும், கற்பிக்கப்படவும், அது ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. மனிதனுனவன் புத்தியை தன்னிட சொந்த அன்புக்கு மேலே உயர்த்தும் சக்தியை துர்வினியோகம் செய்துவிட்டபடியினுல், சித்தத்தை தன்னையும் உலகத்தையும் நேசித்தலின் வாசஸ்தானமாகவும், புத்தியை அந்த ஆசைகள் ஸ்திரப்படுத்தப்படுகிற வழிவகைகளாகவும் செய்து, ஆண்டவரிட அதாவது ஆண்டவரிடமிருந்து வரும், அன்பினிடவும் ஞானத்தினிடவும் ஆசயமாகவும் இருப்பிடமாகவும் இருக்கக்கூடியதை, அவன் தனக்குள்ளே அழித்துவிட்டான். சித்தமும் புத்தியுமாகிய அந்த இரண்டு இருப்பிடங்கள், நரகத்துக்கு அடுத்த அன்பின் இருப்பிடங்களாகவும், அவ்வித அன்புகளுக்கு உதவியாக ஸ்திரப்படுத்துவதினுல், நரகத்தில் ஞானமென்று எண்ணப்படுகிற நரகத்துக்கு அடுத்த சிந்தனையின் இருப்பிடங்களாகவும், ஏன் ஆய்விட்டன வென்பதற்கு, இதுதான் காரணம்.

396. தன்னையும் உலகத்தையும் நேசித்தல், ஏன் நரகத்துக்கடுத்த அன்புகள் என்பதற்கும், ஏன் மனிதன் அவைகளுக்குள் வந்து, அதனுல் இவ்விதமாக தனக்குள்ளேயே சித்தத்தையும் புத்தியையும் அழிக்க சக்தி யுள்ளவனுயிருந்தானென்பதற்கும் காரணம், தன்னை நேசித்தலும் உலகத்தை நேசித்தலும், அஸ்திவாரம் ஒரு வீட்டுக்கு உபயோகப்படுவதுபோல்,

அவைகள் பரயார்த்த அன்புகளுக்கு உபயோகமாயிருக்கிற ஸ்தூல மனிதனிட அன்புகளாயிருப்பதினால், சிருட்டியிலேயே சுவர்க்கத்தை அடுத்தவைகளாயிருக்கின்றன. ஏனென்றால், தன்னையும் உலகத்தையும் நேசித்தலிருந்து, மனிதனானவன் தன் சரீரத்தின் க்ஷேமத்தைக் கோருகிறான்; அவன் போஷிக்கப்படவும், உடுக்கப்படவும், வசிக்குமிடம் உடைத்தாயிருக்கவும், வீட்டின் நன்மையை யோசிக்கவும், உபயோகமானதைசெய்ய உத்தியோகம் சம்பாதிக்கவும், கீழ்ப்படிதலுக்காக, தான் நடப்பிக்கிற காரியங்களின் கண்ணியத்திற்குத் தக்கபடி, கனம் பண்ணப்படவும், அதனுடன் உலகத்தின் சந்தோஷங்களால் மனோரஞ்சிதமடைந்து உயிர்ப்பிக்கப்படவும் அவன் விரும்புகிறான். ஆனால் இவைகளை எல்லாம் உபயோகமாயிருக்கிற ஏதோ ஒரு முடிவுக்கு விரும்புகிறான். ஏனென்றால், இவைகளினால் ஆண்டவருக்கும் அயலானுக்கும், உழைக்கும் ஓர் நிலைமைக்கு அவன் வருகிறான். ஆனால், ஆண்டவருக்கும் அயலானுக்கும் உழைப்பதற்கு அன்பில்லாமல், உலகத்தின் செலவில் தனக்கே உழைக்க மாத்திரம் அன்பிருந்தால், அந்த அன்பானது, சுயமாய் முழுமையும் தீமையாயிருக்கிற தன்னிட சுயதன்மையில் தன்னிட மனதையும் நடத்தையையும் அமிழ்த்த ஒரு மனிதனை செய்கிறபடியினால், அது சுவர்க்கத்தைச் சேர்ந்தாயிருப்பதிலிருந்து நரகத்தைச் சேர்ந்ததாக ஆகிறது.

397. ஒரு மனிதனானவன் புத்தியின் மூலமாக தான் இருக்கக்கூடியபடி சுவர்க்கத்திலும், சித்தத்தின் மூலமாய் நரகத்திலும், இவ்விதமாக ஒரு கூறு செய்த மனதை உடைத்தாயிருக்காதபடி, இறந்த பிறகு, அவனிட சுய அன்புக்கு மேல், அளவுக்கு மிஞ்சியிருக்கிற புத்திக்குச் சேர்ந்த எல்லாம் நீக்கப்

படுகின்றன ; ஆகையினால், எல்லாரிலும் சித்தமும் புத்தியும், கடைசியில் ஒன்றாக செயல்படுகின்றன என்று ஏற்படுகிறது. சுவர்க்கத்திலிருக்கப்பட்டவர்கள் விஷயத்தில், சித்தமானது நன்மையை விரும்புகிறது, புத்தியானது உண்மையை நினைக்கிறது ; ஆனால் நரகத்தில் இருப்பவர்கள் விஷயத்தில், சித்தம் தீமையை விரும்புகிறது, புத்தியானது பொய்யை நினைக்கிறது. தான் தனியாய் இல்லாதபோது நேரிடுகிறபடி, சரீரத்திலிருக்கும் போது அநேகர் வேறு விதமாய் செய்தாலும், தான் தனியாயிருக்கும்போது, நேரிடுகிறபடி, தன்னிட சொந்த ஆவியிலிருந்து நினைக்கும்போது, மனிதன் உலகத்தில் அதையே செய்கிறான். அவர்கள், தங்களிட சித்தத்தினிடவும் அல்லது ஆவியினிடவும், சுய அன்பிற்கு மேலே தங்களிட புத்தியை உயர்த்துகிறார்களென்பது, அப்பொழுது ஏன் அவர்கள் வேறு விதமாய் செய்கிறார்களென்பதற்கு காரணமாயிருக்கிறது. சித்தமும் புத்தியும் இரண்டு வேறான பொருள்களென்றும், அப்படியிருந்தும் ஒன்றாக செயல்பட சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறதென்றும், இறப்பதற்கு முன் இல்லாவிட்டாலும், இறந்த பிறகு ஒன்றாக செயல்பட கட்டாயம் செய்யப்படுகிறதென்றும், தெரிந்திருக்கும்படி இவைகள் சொல்லப்பட்டன.

398. அன்பும் ஞானமும், ஆகையினால் சித்தமும் புத்தியும் ஆன்மாவென்று சொல்லப்படுகிற பொருள்களாயிருப்பதாலும், ஆன்மா சரீரத்தின்பேரில் எப்படி சேட்டித்து, அதன் காரியங்களை எல்லாம் நடத்துகிறது என்பதும், பின்வருவதில் காண்பிக்கப்படவேண்டியிருப்பதாலும், இந்த அறிவானது சித்தத்துடன் இருதயத்தினிடவும், புத்தியுடன் சுவாசாசயங்களினிடவும், அன்னுவயத்திலிருந்து அடையக்கூடுமாகையாலும், பின்வரும் விஷயங்கள் அந்த அன்னுவயத்தி

லிருந்து கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. I. அன்பு அல்லது சித்தமானது மனிதனிட உயிராகவேயிருக்கிறது ; II. அன்பு அல்லது சித்தம் மானிட ரூபத்துக்கும், மானிட ரூபத்துக்குச் சேர்ந்த எல்லா பொருள்களுக்கும் இடைவிடாமல் பிரசவ வேதனைப் படுகிறது III. அன்பு அல்லது சித்தம் ஞானம் அல்லது புத்தியுடன் விவாகம் செய்துக்கொள்ளாமல் அதன் மானிட ரூபத்தின் மூலமாய் எதையும் செய்ய சக்தியில்லாததாய் இருக்கிறது. IV. அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது புத்தியாயிருக்கிற பின்வரும் மனைவிக்கு ஒரு வீட்டை அல்லது மணமஞ்சத்தை தயார் செய்கிறது. V. அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது புத்தியுடன் ஒன்றுபட்டு செயல்பட சக்தியுண்டாக, அதன் மானிட ரூபத்தில் எல்லா பொருள்களையும் கூட தயார் செய்கின்றது. VI. விவாகம் முடிந்தபின், முதல் புணர்ச்சி, தெரிந்து கொள்ளும்பொருட்டு கொள்ளும் ஆசையின் மூலமாய் உண்டாகிறது, அதிலிருந்து உண்மையினிடத்து அன்பு உற்பவிக்கிறது. VII. இரண்டாவது புணர்ச்சி, புத்தியுடன் தெரிந்து கொள்ளும் ஆசையின் மூலமாய் உண்டாகிறது, அதிலிருந்து, உண்மையை உணர்தல் உற்பவிக்கிறது. VIII. மூன்றாவது புணர்ச்சி உண்மையைப் பார்க்கக்கொள்ளும் ஆசையின் மூலமாய் உண்டாகிறது, அதிலிருந்து,சிந்தனை உற்பவிக்கிறது. IX. இந்த மூன்று உணர்ச்சிகளின் மூலமாய்,அன்பு அல்லது சித்தம் அதன் உணர்ச்சியுள்ள உயிரிலும், அதன் முயற்சியுள்ள உயிரிலுமிருக்கிறது. X. அன்பு அல்லது சித்தம் ஞானத்தை அல்லது புத்தியை அதன் வீட்டின் எல்லா பொருள்களிலும் நடத்துகிறது. XI. அன்பு அல்லது சித்தம், அதனுடன் ஒன்றுபடாமல், ஒன்றையும் செய்கிறதில்லை. XII. அன்பு அல்லது சித்தம்

ஞானம் அல்லது புத்தியுடன் தானே கூடிக்கொண்டு, ஞானம் அல்லது புத்தியை பரஸ்பரமாய் சேர்க்கப்படச் செய்கிறது. XIII. ஞானம் அல்லது புத்தி, அன்பு அல்லது சித்தத்தினால் அதற்கு கொடுக்கப்பட்ட வல்லமையினால், உயர்த்தப்படவும், சுவர்க்கத்திலிருந்து வந்த ஒளிக்கு சேர்ந்த பொருள்களை பெற்றுக்கொள்ளவும், அவைகளைப்பார்க்கவும் சக்தியுடையதாயிருக்கிறது. XIV. அன்பு அல்லது சித்தம், அதன் மனையாட்டியை அந்த அளவு நேசித்தால், உயர்த்தப்படவும், சுவர்க்கத்திலிருந்துவரும் சூட்டைச்சேர்ந்த பொருள்களைப் பார்க்கவும் சக்தியுடையதாயிருக்கிறது. XV. அல்லாவிட்டால், அன்பும் சித்தமும் ஞானம் அல்லது புத்தியை, தன்னுடன் ஒன்றுபட்டு செயல்பட, அதன் உன்னதத்திலிருந்து பின்னுக்கு இழுக்கிறது. XVI. அவைகள் ஒருமிக்க உயர்த்தப்பட்டால், அன்பு அல்லது சித்தம் புத்தியில் ஞானத்தினால் சுத்தப்படுத்தப்படுகிறது. XVII. அவைகள் ஒருமிக்க உயர்த்தப்படாவிட்டால், அன்பு அல்லது சித்தம் புத்தியில் அல்லது அதனால் அசுசியாக்கப்படுகிறது. XVIII புத்தியில் ஞானத்தினால் சுத்தமாக்கப்பட்ட அன்பு சூக்குமமானதும் அதிசூக்குமமானதுமாகிறது. XIX. புத்தியிலும் அதனாலும் அசுசியாக்கப்பட்ட அன்பு ஸ்தூலமானதாகவும் இந்திரிய சம்பந்தமானதாகவும் ஆகிறது. XX பகுத்தறிவுடைமை என்று சொல்லப்பட்ட அறிந்துகொள்ளும் மனோசக்தியும், சுதந்திரமென்று சொல்லப்படும் செயல்படும் சக்தியும், இன்னும் மிகுந்திருக்கின்றன. XXI. சூக்கும அன்பு என்பதும், அதிசூக்கும அன்பு என்பதும், அயலானிடத்திலும் ஆண்டவரிடத்திலும் அன்புகூறுதலாயிருக்கிறது ; ஸ்தூலமானதும் இந்திரிய சம்பந்தமானதுமான அன்பானது, உலகத்தையும் தன்னையும் நேசித்தலாயிருக்கிறது.

XXII. சித்தத்துடனும் புத்தியுடனும், அவைகளின் சேர்க்கையுடனும் இருக்கிறதுபோல், தருமத்துடனும் பக்தியுடனும் அவைகளின் சேர்க்கையுடனும் விஷயம் அம்மாதிரியே யிருக்கிறது.

399. **I. அன்பு அல்லது சித்தம் மனிதனிட உயிராகவே யிருக்கிறது.** சித்தத்துடன், இருதயத்தினிட அன்னுவயத்திலிருந்து இது ஏற்படுகிறது, (மேலே பிரிவுகள் 378 முதல் 381 வரையில் பார்க்கவும்). ஏனென்றால், இருதயம் சரீரத்தில் செயல்படுகிறதுபோல், அப்படியே சித்தமானது மனதில் செயல்படுகிறது. சரீரத்தின் எல்லா பொருள்களும், இருத்தலுக்கும் சலனத்துக்கும், இருதயத்தைச் சார்ந்திருப்பதுபோல, மனதின் எல்லா பொருள்களும், இருத்தலுக்கும் உயிருக்கும் சித்தத்தின்பேரில் சார்ந்திருக்கிறது. சித்தமானது அன்பின் ஆசயமாயிருக்கிறபடியினாலும், அன்பு உயிராகவே இருக்கிறபடியினாலும், (மேலே பிரிவுகள் 1, 2, 3, பார்க்கவும்) உயிராகவே இருக்கிற அன்பானது ஏகமான ஆண்டவரிடமிருந்து வருகிறபடியினாலும், சித்தத்தின்பேரில் என்று சொல்லப்பட்டது; ஆனால், அது அன்பின்பேரில் என்று அர்த்தம் கொள்ளப்படுகிறது. அன்பு அல்லது சித்தம் மனிதனிட உயிரென்பது, சுத்த ரத்த நாடிகள் மூலமாயும், கருத்த ரத்த நாடிகள் மூலமாயும், சரீரத்தில் இருதயத்திலிருந்தும், அதன் விரிவிலிருந்தும், ஏன் தெரிந்துகொள்ளப்படலா மென்பதற்குக் காரணமானது, ஒன்றோடொன்று அன்னுவயப்படுகிற பொருள்கள், ஒன்று ஸ்தூலமானதாயும், மற்றது சூக்குமமானதாயு மிருக்கிறதென்கிற வித்தியாசத்தோடு ஒரே மாதிரியாக செயல்படுகின்றன. இருதயமானது அதிலிருந்து அனுப்பப்படும் ரத்தநாடிகள் மூலமாய் செயல்படுகிற இடத்தில், ஒவ்வொரு பாகமும் உயி

ரோடிருக்கிறது அல்லது உயிருக்கு கீழ்ப்படிந்து இருக்கிறது என்றும், இருதயமானது அதன் இரத்த நாடிகள் மூலமாய் செயல்படாத இடத்தில், பாகொன்றும் உயிரோடிருக்கிறதில்லை யென்றும், காண்பிக்கிற சரீர சாஸ்த்திரத்திலிருந்து இருதயமானது சரீரத்தில் எப்படி செயல்படுகிறதென்பது விசதமாகிறது. இதைத்தவிர, இருதயமானது சரீரத்தில் செயல்படுகிற முதன்மையான பொருளாயும், இறுதியான பொருளாயுமிருக்கிறது. அது முதல்மையானதென்பது, இளஞ்சூலிலிருந்தும், அது இறுதியானதென்பது, மரணத்தருவாயிலிருப்பவர்களிடமிருந்தும், விசதமாகிறது ; சுவாசாசயங்களோடு கூடி வேலை செய்யாமலே, அது செயல்படுகிறதென்பது மூச்சுவிடாதபடி செய்யப்பட்ட நிலைமைகளிலிருந்தும், மூர்ச்சைகளிலிருந்தும் விசதமாகிறது. ஆகையினால், சரீரத்தின் உதவியான உயிர், இருதயத்தின்பேரில் மாத்திரம் சார்ந்திருப்பதுபோல், அம்மாதிரியே மனதின் உயிர் சித்தத்தின்பேரில் மாத்திரம் சார்ந்திருக்கிறது என்றும், சுவாசம் நின்றபோது இருதயம் உயிரோடிருப்பதுபோல், சிந்தனை நிற்கும்போது சித்தம் உயிரோடிருக்கிறதென்றும், விசதமாகிறது. இது மறுபடியும் இளஞ்சூல்களிலிருந்தும், மரணத்தருவாயிலிருக்கப்பட்டவர்களிடமிருந்தும், மூச்சுவிடாமல் தடுக்கப்படுவதிலிருந்தும், மூர்ச்சையிலிருந்தும், விசதமாகிறது. இவைகளிலெல்லாமிருந்து அன்பு அல்லது சித்தம் மனிதனிட உயிராகவேயிருக்கிறதென்று ஏற்படுகிறது.

400. II. அன்பு அல்லது சித்தம் மானிட ரூபத்துக்கும், மானிட ரூபத்துக்குச் சேர்ந்த எல்லா பொருள்களுக்கும், இடைவிடாமல் பிரசவவேதனைப் படுகிறது. சித்தத்துடன் இருதயத்தினிட அன்னுவயத்திலிருந்து இது விசதமாகிறது.

ஏனென்றால், சரீரத்தின் எல்லாபொருள்களும், கருப்பையில் உருவாக்கப்படுகின்றனவென்றும், அவைகள் மூளைகளிலிருந்து வரும் நார்கள் மூலமாயும், இருதயத்திலிருந்துவரும் ரத்த நாடிகள் மூலமாயும், உருவாக்கப்படுகின்றனவென்றும், எல்லா அங்கங்களிடவும் ஆந்திரிகங்களிடவும், இணைப்புகள் இந்த இரண்டிலிருந்தும் செய்யப்படுகின்றனவென்றும் நன்றாய் தெரிந்திருக்கிறது. மனிதனிலிருக்கும் எல்லா பொருள்களும், அன்பாயிருக்கிற சித்தத்தின் உயிரிலிருந்து, நார்கள் மூலமாய், மூளைகளிலிருந்து அவைகளின் தொடர்க்கங்களினால் வருகின்றனவென்றும், அவன் சரீரத்தைச் சேர்ந்த எல்லா பொருள்களும், இருதயத்திலிருந்து சுத்த இரத்த நாடிகள் மூலமாயும், கருத்த இரத்த நாடிகள் மூலமாயும் வருகின்றனவென்றும் இதிலிருந்து விசதமாகிறது. இந்த காரணங்களுக்குக்காக, அன்பாயிருக்கிற உயிரும், பிறகு சித்தமும், இடைவிடாமல் மானிட ரூபத்துக்கு, பிரசவ வேதனைப்படுகிறதென்று மிகவும் தெளிவாயிருக்கிறது. மானிட ரூபமானது மனிதனிலிருக்கும் எல்லா பொருள்களாலும் உண்டாக்கப்பட்டிருப்பதால், அன்பு அல்லது சித்தம் அவைகளை உருவாக்க இடைவிடாத முயற்சியிலும் வேதனையிலும் மிருக்கிறதென்று பின் தொடர்கிறது. மானிட ரூபத்துக்காக முயற்சியினிடவும் வேதனையினிடவும் காரணம், கடவுள் மனிதன் என்பதும், பரம இச்சாசத்தியும் பரம ஞானசத்தியும், உயிரின் ஒவ்வொன்றும் புறப்படுகிற அவரிட உயிராயிருக்கின்றன வென்பதுமா யிருக்கிறது. மனிதனுகவே யிருக்கிற உயிரானது, சுயமாய் உயிராயிராததின்பேரில் செயல்பட்டாலொழிய, மனிதனிலிருக்கும் அவ்வித நிருமாணங்கள் இருக்க முடியாது என்று, எவனும் அறிந்துகொள்ளலாம்; ஏனென்

ருல், மனிதனிலிருக்கும் ஆயிரங்கள் ஆயிரங்கள் கணக்கான பொருள்கள் ஒரு பொருளாய், மனிதனுனவன் அவரிட ஆசயமாகவும் வாசஸ்தானமாகவும் சக்தியுடையவனுயிருக்கும் நோக்கத்தோடு, அவைகள் உற்பவிக்கிற உயிரின் பிரதிமையை அடைய ஒருமிக்க பிரயாசைப்படுகின்றன. இவைகளிலெல்லாமிருந்து, அன்பும், அன்பிலிருந்து சித்தமும், சித்தத்திலிருந்து இருதயமும், மானிடரூபத்தை யடைய இடைவிடாமல் பிரசவவேதனைப்படுகின்றனவென்று அறிந்து கொள்ளலாம்.

**401. III அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது புத்தியுடன் விவாகம் செய்துக்கொள்ளாமல் அதன் மானிடரூபத்தின் மூலமாய் எதையும் செய்ய சக்தியில்லாததாயிருக்கிறது.**

சித்தத்துடன் இருதயத்தினிட அன்னுவயத்திலிருந்து இதுகூட விசதமாகிறது. இளஞ்சூலாகிய மனிதன் சுவாசாசயங்களிலல்லாமல், இருதயத்தில் உயிரோடிருக்கிறுன். ஏனென்றுல், இந்த காலத்தில், ரத்தமானது இருதயத்திலிருந்து சுவாசாசயங்களுக்கு, அவைகளுக்கு சுவாசிக்கும் சக்தியைக் கொடுக்க ஓடுகிறதில்லை. ஆனுல் அது (Foramen ovale) எனும் துவாரத்தின் மூலமாய் இருதயத்தின் இடது சடாரத்துக்குள் ஓடுகிறது; ஆகையினுல் இளஞ்சூல் சரீரத்தின் எதையும் அசைக்கமுடியாமல், சுற்றி கட்டப்பட்டு கிடக்கிறது; ஞானேந்திரியங்கள் மூடப்பட்டிருப்பதால், அது எதையும் உணரவும் முடியாது. ஆயினும் இலஞ்சூல் உயிரோடிருப்பதும், ஆனுல் அறிவின்மையால், அதாவது உணர்ச்சியும் செய்கையுமில்லாமலிருக்கிறதுமான, அன்பு அல்லது சித்தத்துடன் அது அம்மாதிரியே இருக்கிறது. ஆனுல், பிறந்த உடனே, நேரிடுகிறபடி, சுவாசாசயங்கள்

திறக்கப்பட்ட உடனே, குழந்தை உடனே உணரவும், செயல்படவும், அம்மாதிரியே இச்சிக்கவும், நினைக்கவும், ஆரம்பிக்கிறது. இவைகளிலிருந்து அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது புத்தியுடன் விவாகம் செய்துகொள்ளாமல், அதன் மானிட ரூபத்தின் மூலமாக எதையும் செய்ய சக்தியற்றதாயிருக்கிறது என்பது தோன்றும்.

402. IV **அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது புத்தியாயிருக்கிற பின்வரும் மனைவிக்கு ஒரு வீட்டை அல்லது மணமஞ்சத்தை தயார் செய்கிறது.** சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்திலும், அதன் எல்லா பாகங்களிலும், நன்மையினிடவும் உண்மையினிடவும் விவாக 'மிருக்கிறது; நன்மை அன்புக்கும், உண்மை ஞானத்துக்கும் சேர்ந்திருக்கிறபடியினாலும், இந்த இரண்டும் ஆண்டவரிலிருக்கிறபடியினாலும், அவரிடமிருந்து எல்லா பொருள்களும் சிருஷ்டிக்கப்படுகிறபடியினாலும், விஷயம் இம்மாதிரி யிருக்கிறது. இந்த விவாகம் மனிதனில் எப்படி உண்டாகிறது என்பதை, சுவாசாசயங்களோடு இருதயத்தினிட சேர்க்கையில், கண்ணாடியில் பார்ப்பது போல் தெளிவாய் பார்க்கலாம்; ஏனென்றால், இருதயம் அன்புக்கு அல்லது நன்மைக்கும், சுவாசா சயங்கள் ஞானம் அல்லது உண்மைக்கும் அனுவயப்படுகிறது; மேலே பிரி. 378 முதல் 381 வரையிலும், 382 முதல் 384 வரையிலும் பார்க்கவும். அன்பு அல்லது சித்தம் தனக்கே ஞானம் அல்லது புத்தியை எப்படி விவாக நிச்சயம் செய்து கொண்டு, பின்னிட்டு அதனுடன் விவாக சம்பந்தத்தில் பிரவேசிக்கிறது அல்லது விவாகம் செய்துக் கொள்ளுகிறது என்பது, அந்த சேர்க்கையினால் அறிந்து கொள்ளலாம். அன்பானது, ஞானத்துக்கு ஒரு வீட்டை அல்லது மணமஞ்சத்தை தயார் செய்

துக் கொள்ளுகிறது ; விருப்பங்களால் ஞானத்தை தன்னுடனேயே சேர்த்துக் கொள்வதால், அதை விவாகம் செய்துக் கொள்ளுகிறது ; பிறகு ஞானமானது அந்த வீட்டில் ஏற்படுத்தப்படுகிறது. அன்பும் ஞானமும், ஆகையினால் சித்தமும் புத்தியும், சூக்குமமானவைகளான படியினால், இது அப்படியிருக்கிறதென்று தேவ பாஷையில் தவிர முழுமையும் விவரிக்கப்பட முடியாது ; இவைகள் எல்லாம் ஸ்தூல பாஷையில் நிஜமாகவே சொல்லப்படலாம்; ஆனால், அன்பு என்னவென்றும், ஞானம் என்னவென்றும், நன்மையின் விருப்பங்கள் என்னவென்றும், உண்மையின் விருப்பங்களாயிருக்கிற ஞானத்தின் விருப்பங்கள் என்னவென்றும் தெரியாதபடியினால், அவைகள் தெளிவின்றி போய்விடும். ஆனால் அப்படியிருந்தும், ஞானத்துடன் அன்பினிடவும், புத்தியுடன் சித்தத்தினிடவும், விவாக நிச்சயத்தினிடவும் விவாகத்தினிடவும் சுபாவம், இருதயத்தோடும் சுவாசாசயங்களோடு மிருக்கும் அவைகளின் அன்னுவயத்தால் கொடுக்கப்படுகிற உவமானத்தால் அறியப்படலாம். அவைகளுடன் போல, இவைகளுடனும் விஷயம் ஒரேமாதிரி யிருக்கிறது ; ஒன்று சூக்குமமானதென்பதும், மற்றது ஸ்தூலமானதென்பதும், தவிர கொஞ்சம்கூட வித்தியாசமில்லை என்று சொல்லும்படி அவ்வளவு ஒரே மாதிரி யிருக்கிறது. ஆகையினால், இருதயத்திலிருந்தும் சுவாசாசயங்களிலிருந்தும், இருதயமானது முதலில் சுவாசாசயங்களை உருவாக்கி பின்னிட்டு அவைகளோடு தானே சேர்கிறதென்று விசதமாகிறது ; அது இளஞ்சூலில் சுவாசாசயங்களை உருவாக்கி, பிறந்த பிறகு தானே அவைகளோடு கூடுகிறது. ஈரல் தாங்கி என்று சொல்லப்பட்ட தடுப்பு சுவராலும், (Pleura) எனும் ஓர்வித ஜவ்வின்

போர்வையாலும் சரீரத்தின் மற்ற பொருள்களிலிருந்து பிரிக்கப்பட்டு, அவர்கள் விவாக மண்டபமிருக்கப்பட்ட, மார்பு என்று சொல்லப்படும், அதன் வீட்டில் இருதயமானது இதை செய்கிறது. அன்புடனும் ஞானத்துடனும் அல்லது சித்தத்துடனும் புத்தியுடனும் அம்மாதிரியே யிருக்கிறது.

403. V. அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது புத்தியுடன் ஒன்றுபட்டு செயல்பட சக்தியுண்டாக, அதன் மானிட ரூபத்தில் எல்லாபொருள்களையும் தயார் செய்கிறது.

சித்தமும் புத்தியும் இங்கே குறித்துச் சொல்லப்பட்டிருக்கின்றன, ஆனால் சித்தமானது முழு மனிதனென்று மனதில் சாக்கிரதையாய் வைக்கவேண்டும்; ஏனென்றால், புத்தியுடன் சித்தமானது மூளைகளில் தொடக்கத்திலும், சரீரத்தில் இறுதியானவைகளிலும், ஆகையினால் முழுவதிலும் ஒவ்வொரு பாகத்திலுமிருக்கிறது; மேலே பிரிவுகள் 365, 366, 367 இவைகளைப் பார்க்கவும். ஆகவே, எல்லாபொருள்களின் பொதுரூபம் சிறப்பு ரூபமாகிய இரண்டு ரூபத்தையே யோசிக்குங்கால், சித்தமானது முழு மனிதனென்றும், சுவாசாசயங்கள் இருதயத்தின் கூட்டாளியாயிருப்பதுபோல, புத்தியானது அதன் கூட்டாளியென்றும் விசதமாகும். அது அதே ரூபமாயிருப்பதால், சித்தத்தின் ஓர் அபிப்பிராயம், மானிட ரூபத்திலிருந்து வேறான ஏதோ ஒன்றென்று கொள்ளாதபடி எச்சரிக்கையாயிருங்கள். சித்தமானது புத்திக்கு எப்படி மணமஞ்சத்தை தயார் செய்கிறது என்பது மட்டுமல்லாமல்,புத்தியுடன் ஒருமிக்க செயல்பட,சக்தியுண்டாக்கப்பட, அது முழுசரீரமாயிருக்கிற அதன் வீட்டில் எல்லாபொருள்களையும் எப்படிதயார்செய்கிறது என்பதைக்கூட,இதிலிருந்து அறிந்துகொள்ளலாம். தயார்செய்யும் விதம் இது: சரீரத்

தைச்சேர்ந்த எல்லா பொருள்களும், அவைகள் சித்தத்தோடு சேர்க்கப்பட்டிருப்பதுபோல், புத்தியோடு சேர்க்கப்பட்டிருக்கிறது என்பதும், அல்லது சரீரத்தின் எல்லா பொருள்களும், சித்தத்துக்கு கீழ்ப்படிதல்போல், புத்திக்கும் கீழ்ப்படிகின்றன என்பதுமாயிருக்கிறது. சரீரத்தில் எல்லா பொருள்களும், சித்தத்தோடு ஐக்கியப்பட தயார் செய்யப்படுவதுபோல், புத்தியுடன் ஐக்கியப்பட எப்படி தயார் செய்யப்படுகின்றனவென்பதும், தேக சாஸ்திரத்தின் மூலமாய் சரீரத்தில் ஒரு கண்ணுடியில் அல்லது ஒரு பிரதிமையில்போல் தவிர, பார்க்கப்படமுடியாது. இந்த சாஸ்திரமானது சுவாசாசயங்கள் சுவாசிக்கும்போது, முழுசரீரத்திலுமுள்ள எல்லா பொருள்களும் சுவாசாசயங்களின் சுவாசத்தாலும், அதே காலத்தில், இருதயத்தின் துடிப்பாலும் செயல்படும்படி, எப்படி அவ்விதமாய் சேர்க்கப்பட் டிருக்கின்றன வென்பதைக் கற்பிக்கிறது. இருதயம் சுவாசாசயங்களுடன், சிரவங்களால் சேர்க்கப்பட் டிருக்கிறதென்றும், இவைகள் சுவாசாசயங்களின் உட்பாகங்களுக்குள்ளே தொடர்ந்திருக்கிறதென்றும், மேலும், முழு சரீரத்தின் எல்லா ஆந்திரிகங்களும், (Ligaments) என்று சொல்லப்படும் ஓர்வித வெண்மை நிறமான நரம்புகளினுல், மார்பினிட அறையோடு சேர்க்கப்பட்டிருக்கின்றனவென்றும், சுவாசாசயங்கள் சுவாசிக்கும் போது, எல்லா பாகங்களும் முழுவதிலும் ஒவ்வொரு பாகத்திலும், சுவாசசம்பந்தமான சலனத்தில் எதோ ஒன்றை பெற்றுக்கொள்ளும்படியாக சேர்க்கப்பட்டிருக்கிற தென்றும், சரீர சாஸ்திரம் காண்பிக்கிறது. இப்படி, சுவாசாசயங்கள் எழும்போது, விலா வெலும்புகள் நெஞ்சு அறையை விரிக்கின்றன, (Pleura) எனும் ஜவ்வு விஸ்தரிக்கப்படுகிறது, ஈரல்

தாங்கி விசாலமாக நீட்டப்படுகிறது ; இவைகளோடு (Ligaments) எனும் ஓர்வித வெண்மை நிரமுள்ள நார்களினுல் அவைகளோடு சேர்க்கப்பட்டிருக்கிற சரீரத்தின் கீழ்ப்பாகங்கள், சுவாசாசயசம்பந்தமான செய்கையினுல் ஏதோ ஒரு செய்கையை அடைகின்றன. சரீர சாஸ்திர ஞானமில்லாதவர்களும், அதன் நிபந்தனைகள் தெரியாதவர்களும், இப்பொழுது யோசிக்கும் விஷயத்தில் அறிவில்லாமல் போகாதபடி, நான் இன்னும் விவரித்து உரைக்கிறதில்லை. சுவாசாசயங்கள் சுவாசிப்பதினுல் எழுந்து விரிந்தபோது, ஒவ்வொரு பாகமும் சுவாசாசய சம்பந்தமான இயக்கத்துடன் ஏககாலத்தில் செயல்பட தூண்டப்படும்படி, மார்பிலிருந்து மிகவும் கீழான பாகம் வரையில், முழு சரீரத்தில் எல்லா பொருள்களும் அவ்விதமாக பந்தப்பட்டிருக்க வில்லையா என்று, அந்த சாஸ்திரத்தில் அறிவும் நுண்ணிய விசாரணையும் உள்ளவர்களோடு மாத்திரம் ஆலோசியுங்கள். இவைகளிலிருந்து, மானிட ரூபத்தின் எல்லா பாகங்களோடு சித்தத்தினுல் புத்திக்கு தயார் செய்யப்பட்ட அந்த விசேஷமான சேர்க்கைஎன்னவென்பது, இப்பொழுது தெளிவாய் அறியப்படலாம். சம்பந்தங்களை மட்டும் நன்ருய் ஆராய்ச்சி செய்யுங்கள், சரீர சாஸ்திரம் தெரிந்த கண்ணேடு அவைகளைப் பாருங்கள்,பின்னிட்டு,அந்த சம்பந்தங்களை அனுசரித்து, சுவாசிக்கும் சுவாசாசயங்களோடும், இருதயத்தோடும் அவைகளின் கூட்டுத்தொழிலை ஆலோசியுங்கள். பின்னிட்டு, சுவாசாசயங்களுக்குப் பதிலாக, புத்தியையும், இருதயத்துக்குப் பதிலாக சித்தத்தையும், சிந்தனை செய்யுங்கள். பிறகு கருதினது எது என்று நீங்கள் அறிந்து கொள்வீர்கள்.

404. VI. விவாகம் முடிந்த பின் முதல் புணர்ச்சியானது, தெரிந்து கொள்ளும் பொருட்டு கொள்ளும் ஆசையின் மூலமாய் உண்டாகிறது, அதிலிருந்து உண்மையினிடத்து அன்பு உற்பவிக்கிறது.

விவாகங்கள் என்பதால், மூடத்தனத்திலிருந்து புத்தியுள்ளநிலைமை வரையிலும், இதிலிருந்து ஞானநிலைமை வரையிலும் பிறந்த பிறகு மனிதனிட நிலைமை, இங்கே அர்த்தம் கொள்ளப்படுகிறது. மூடத்தனமாய் மாத்திர மிருக்கிற முதல் நிலைமை, விவாகங்கள் என்பதால் அர்த்தம் கொள்ளப்படுகிறதில்லை; ஏனென்றால் இந்த காலத்தில் புத்தியிலிருந்து எந்த எந்த சிந்தனையுமில்லாமல், அன்பு அல்லது சித்தத்தினிட ஒரு மங்கலான ஆசைமட்டுமிருக்கிறது. இந்த நிலைமையானது, அந்த விவாகத்துக்குஆரம்பமானதாயிருக்கிறது. சிறுபிராயத்தில் மனிதனுக்குச் சேர்ந்த இரண்டாவது நிலைமையில் விஷயங்களை தெரிந்து கொள்ள ஒரு ஆசை இருக்கிறதென்பது அனுபோக விஷயமாயிருக்கிறது. இதன் மூலமாய் சிறுகுழந்தையானது பேசவும், படிக்கவும் கற்றுக்கொள்ளுகிறது, பின்னிட்டு புத்திக்கு சம்பந்தப்பட்ட மற்றவிஷயங்களைப் படிப்படியாய் கற்றுக்கொள்ளுகிறது. சித்தத்தைச் சேர்ந்த அன்பு இதை உண்டாக்குகிறதென்பதை சந்தேகப்பட வேண்டியதில்லை; ஏனென்றால், அன்பு அல்லது சித்தம் அதை உண்டாக்கினால் ஒழிய, அது செய்யப்பட முடியாது. விஷயங்களைத் தெரிந்து கொள்ளும் ஆசை, பிறந்த உடன் ஒவ்வொருவனுக்கும் உண்டென்றும், இந்த ஆசையின் மூலமாய், அவன் புத்தியானது படிப்படியாய் உருவாக்கப்பட்டு, அதிகரிக்கப்பட்டு, பூரணப்படுத்தப்படுகிற அந்தப் பொருள்களை அவன் கற்றுக்கொள்ளுகிறானென்றும், அனுபோக விஷயங்களில் தங்கள்விவேகத்தை உப

யோகப்படுத்துகிறவர்கள் ஒத்துக்கொள்ளுகிறார்கள். உண்மையினிடத்து பாராட்டும் ஆசை இந்த மூலத்திலிருந்து வருகிறது என்பதும் கூட தெளிவாயிருக்கிறது. ஏனென்றால் ஒரு மனி தன் விஷயங்களைத் தெரிந்துகொள்ளும் ஆசையினால், புத்தியுள்ளவனைபோது, தர்க்கம் செய்யவும்,அவைகள் குடும்ப சம்பந்தமானதும், தேசாசாரமானதும், சன்மார்க்கமானதும் எதுவாகிலுமிருந்தாலும், தன்னிட அன்பிற்கு சேர்ந்த விஷயங்களை தீர்மானிக்கவும் கொள்ளும் ஆசையினால்போல், விஷயங்களை தெரிந்து கொள்ளும் ஆசையினால், அவன் அவ்வளவு நடத்தப்படுகிறதில்லை. இந்த ஆசையானது பரமார்த்த விஷயங்களில் செலுத்தப்பட்டபோது, அது பரமார்த்த உண்மைகளைத் தெரிந்து கொள்ளும் ஆசையாகிறது. அதன் தொடக்கமானது விஷயங்களைத் தெரிந்து கொள்ளும் ஆசை என்பது, உண்மையினிடத்து ஆசையானது விஷயங்களை தெரிந்துகொள்ளும் உன்னதமான ஆசையாயிருக்கிற தென்பதிலிருந்து தெரிந்துகொள்ளலாம்; ஏனென்றால், உண்மையினால் மாறுபடுதலென்பது, ஆசையினால் அவைகளைத் தெரிந்துகொள்ள விரும்புகிறதும், அவைகள் அகப்பட்டபோது,ஆசையின் சந்தோஷத்திலிருந்து அவைகளை உட்கொள்ளுகிறதுமாயிருக்கிறது.

VII. இரண்டாவது புணர்ச்சி புத்தியுடன் தெரிந்துகொள்ளும் ஆசையின் மூலமாய் உண்டாகிறது, அதிலிருந்து உண்மையை அறிதல் உண்டாகிறது.

இந்த விஷயத்தை விவேகத்தோடு இசைந்த உள்ளாராய்விலிருந்து யோசிக்க இஷ்டமுள்ளவர்கள் எல்லாருக்கும் இது தெளிவாயிருக்கிறது. உண்மையினிடத்து ஆசையும், உண்மையைப்பார்த்தலும், சிலரில் பொருந்துகிறதும், சிலரில்

பொருந்தாததுமான, புத்தியின் இரண்டு சக்திகளாயிருக்கின் றனவென்று தேர்ந்த அறிவிலிருந்து விசதமாகும். அவைகள், உண்மைகளை தெரிந்து கொள்ள மாத்திரம் விரும்புகிறவர் களிடத்தில பொருந்தாமல், புத்தியின் உண்மைகளைப் பார்க்க விரும்புகிறவர்களுடன் பொருந்தினவைகளாயிருக் கின்றன. ஒவ்வொருவனும், விவேகத்துடன் அறிந்து கொள்ளும் ஆசையில் இருக்கிற அளவே, உண்மையைப் பார்த்தலிலிருக்கிறனென்பது கூட தெளிவாயிருக்கிறது: ஏனென்றால், உண்மையை விவேகத்துடன் அறிந்து கொள் ளும் ஆசையை எடுத்துவிட்டால், உண்மையைப் பார்த்தல் என்பது ஒன்றும் கிடையாது; உண்மையை விவேகத்துடன் தெரிந்து கொள்ளும் ஆசையிருந்தால், அதன்பேரில் கொள் ளும் ஆசையின் அளவுக்குத் தக்கபடி, அதைப் பார்த்தல் உண் டாகிறது. சரியான அறிவுள்ள எந்த மனிதனுக்கும் உண் மையை விவேகத்துடன் அறிந்துகொள்ளும் ஆசை யிருக்கிற வரையில், உண்மையை பார்த்தலில்லாமல் போகிறதில்லை. ஒவ்வொரு மனிதனுக்கும், பகுத்தறிவுடைமை என்று சொல் லப்பட்ட உண்மையை விவேகத்துடன் அறிந்துகொள்ளும் சக்தி யிருக்கிறது.

**VIII. மூன்றுவது புணர்ச்சி உண்மையைப்பார்க்கும் பொருட்டு கோள்ளும் ஆசையின் மூலமாய் உண்டாகிறது, அதிலிருந்து சிந்தனை உற்பவிக்கிறது.**

உண்மையை அறிந்து கொள்ளும் ஆசை ஒன்று, அதை விவேகத்துடன் தெரிந்து கொள்ளல் வேறொன்று. அதைப் பார்த்தல் மூன்றுவதாயிருக்கிறது; வேறு வார்த்தைகளில் சொன்னால், உண்மையினிடத்து கொள்ளும் ஆசை ஒன்று, உண்மையைப் பார்த்தல் வேறொன்று, சிந்தனை மற்

றென்று. ஆனால் மனதின் தொழிற்பாடுகளை தெளிவாய்ப் பார்க்க முடியாதவர்களால், இந்த வித்தியாசங்கள் மங்கலாய் மாத்திரம் பார்க்கப்படுகின்றன; ஆனால் அப்படி பார்க்கக் கூடியவர்களால் தெளிவாய் பார்க்கப்படுகின்றன. மனதின் இந்த தொழிற் பாடுகளை தெளிவாய் பார்க்கக்கூடாதவர்களிடத்தில் இருக்கும் அஞ்ஞானத்துக்குக் காரணம், அந்த சக்திகள், உண்மையினிடத்து ஆசையிலும், உண்மையை உணர்தலிலும் இருக்கப்பட்டவர்களோடு, சிந்தனையில் ஏககாலத்தில் இருக்கின்றனவென்பதும், இப்படி ஒருமிக்க இருக்கும் காலத்தில் அவைகளுக்குள் பேதங்காட்ட முடியாதென்பதுமாயிருக்கிறது. ஆன்மா சரீரத்தில் நினைக்கும்போது ஒரு மனிதன் தெளிவான சிந்தனையிலிருக்கிறான்; அவன் மற்றவர்களோடு சகவாசம் செய்யும்போது, இது முக்கியமாய் சம்பவிக்கிறது. ஆனால், அவன் விவேகத்துடன் தெரிந்து கொள்ளும் ஆசையிலிருக்கும்போதும், இதன் மூலமாய் உண்மையை பார்க்க நேரிட்டபோதும், அவன் அப்பொழுது தியானமாயிருக்கிற ஜீவனிட சிந்தனையிலிருக்கிறான்; இது நிஜமாகவே சரீரத்தின் சிந்தனையில் விழுகிறது. ஆனால், அது பேசாத சிந்தனையா யிருக்கிறது; ஏனென்றால், அது அவைகளிலிருந்து தீர்மானிக்கிறபடியினால் அல்லது அவைகளைக் கொண்டு ஸ்திரப்படுத்துகிறபடியினால், அவன் சரீர சிந்தனைக்கு மேலே இருந்து கொண்டு ஞாபகத்திலிருந்து வரும் சிந்தனைகளை கீழே பார்க்கிறான். ஆனால், நிஜமான உண்மையினிடத்து அன்பு, கவனிக்கப்படாதிருக்கிற தியானத்தில் அதன் உயிராக மறைந்து கிடக்கிற இன்ப சுகந்தரும் சில உணர்ச்சியிலிருந்து, சித்தத்தின் ஒரு முயற்சியாக மட்டும் பார்க்கப்படுகிறது. உண்மையினிடத்து அன்பும், உண்மையைப் பார்த்

தலும், சிந்தனையுமாகிய இந்தமூன்றும் அன்பிலிருந்து ஒழுங்கில் தொடர்கின்றனவென்றும், அவைகள் புத்தியில் தவிர வேறு எங்குமில்லை யென்றும், இதிலிருந்து இப்பொழுது அறிந்து கொள்ளலாம். ஏனென்றால், அந்த சேர்க்கை முடிந்த பிறகு, அன்பு புத்தியில் பிரவேசிக்கிறபோது, அது அப்பொழுது முதலில் உண்மையினிடத்து ஆசையையும், பிறகு தனக்கு தெரிந்ததை விவேகத்துடன் தெரிந்து கொள்ளும் ஆசையையும், கடைசியில் அது விவேகத்துடன் அறிந்து கொண்டதை சரீரத்தின் சிந்தனையில் பார்க்கக் கொள்ளும் ஆசையையும், உற்பத்தி செய்கிறது ; ஏனென்றால், சிந்தனையானது உள்ளான பார்வையைத் தவிர வேறொன்றுமில்லை. சிந்தனையானது ஸ்தூல மனதுக்குச் சேர்ந்தபடியினால், அது முதலில் இருக்கிறது ; ஆனால், உண்மையினிடத்து கொள்ளும் ஆசையிலிருந்து வருகிற, உண்மை உணர்தலிலிருந்து வரும் சிந்தனை, கடைசியில் வருகிறது. இந்த சிந்தனை ஞானத்தின் சிந்தனை, ஆனால் முன் கூறியது ஸ்தூல மனதின் பார்வை மூலமாய் ஞாபகத்திலிருந்துவரும் சிந்தனையாயிருக்கிறது. புத்திக்குப் புறம்பான அன்பு அல்லது சித்தத்தின் தொழிற்பாடுகள் எல்லாம் உண்மையின் ஆசைகளோடு அல்லாமல், நன்மையின் ஆசைகளுடன் சம்பந்தப்பட்டிருக்கின்றன.

405. சித்தத்தைச் சேர்ந்த அன்பிலிருந்து வரும் இந்த மூன்றும், புத்தியில் ஒழுங்கில் தொடர்கின்றன வென்பது, பகுத்தறிவுள்ள மனிதனால் நிஜமாகவே கிரகிக்கப்படக்கூடும். அப்படியிருந்தும், நம்பும்படியான விஷயமாக அவ்வளவு தெளிவாய் பார்க்கப்பட முடியாது. மேல் காண்பித்தபடி அன்னுவயத்தினால், சித்தத்தைச் சேர்ந்த அன்பு, இருதயத்துடன் ஒன்றாக செயல்படுகிறபடியினாலும், புத்தியைச்

சேர்ந்த ஞானம் சுவாசாசயங்களோடு ஒன்றாக செயல்படுகிற படியினாலும், உண்மையினிடத்து ஆசையைப்பற்றியும், உண்மையைப் பார்த்தலைப் பற்றியும், சிந்தனைகளைப் பற்றியும் இப்பொழுதே (பிரிவு 404) சொல்லியது, சுவாசாசயங்களிலும் அதன் நிருமாணத்திலும் போல், வேறு எவ்விடத்திலும் அவ்வளவு தெளிவாய் பார்க்கவும், ரூபகாரம் செய்யவும் முடியாது; ஆகையினால் சுவாசாசயங்கள் சுருக்கமாய் விவரிக்கப்பட வேண்டும். பிறந்த பிறகு, இருதயமானது, அதன் வலது சடரத்திலிருந்து, சுவாசாசயங்களில் இரத்தத்தை அனுப்புகிறது ; இரத்தமானது அவைகளில் சென்ற பிறகு, அதன் இடது சடரத்தில் அதை அனுப்பி, இவ்விதமாக சுவாசாசயங்களைத் திறக்கிறது. இருதயமானது இதை புப்புச நாடிகள், புப்புச நாளங்கள் மூலமாய் செய்கிறது. சுவாசாசயங்கள் கிளை விடுகிற சுவாசக்குழலின் கிளைகளை உடைத்தாயிருக்கின்றன ; கடைசியில், அதற்குள் சுவாசாசயங்கள் காற்றை ஏற்றுக்கொள்ளுகிற கண்ணறைகளில் முடிவாய், இவ்விதமாக சுவாசிக்கின்றன. சுவாசக்குழல்களையும், அவைகளின் கிளைகளையும் சுற்றி, (Vena Azygos) அல்லது (Vena Cava) எனும் நாளங்களிலிருந்தும், (Aorta) எனும் சுத்த ரத்தக் குழாயிலிருந்தும், எழுகிற சுவாசக்குழலின் கிளைகளைச் சேர்ந்தவைகளென்று சொல்லப்படும் இதர சுத்த ரத்த நாடிகளும்,கருத்த இரத்த நாளங்களும் கூட இருக்கின்றன. இந்த சுத்த ரத்த நாடிகளும், கருத்த ரத்த நாளங்கலும், புப்புச நாடிகளுக்கும் புப்புச நாளங்களுக்கும், வேறானதாயிருக்கின்றன. இரத்தம் சுவாசாசயங்களுக்குள் இரண்டு வழிகளிலும், அவைகளிலிருந்து வெளியே இரண்டு வழிகளிலும் ஓடுகின்றதென்று, இதிலிருந்து விசதமாகிறது. அதனால்தான் சுவா

சாசயங்கள் இருதயத்துடன் ஏககாலத்தில் அல்லாமல் சுவாசிக்க சக்தியுள்ள வைகளாயிருக்கின்றன. இருதயத்தின் பரஸ்பர இயக்கங்களும் சுவாசாசயங்களின் பரஸ்பரஇயக்கங்களும் ஒத்துப்போகிறதில்லை என்பது நன்ருய் தெரிந்திருக்கிறது. மேற்கூறியபடி சித்தத்துடனும் புத்தியினுடனும், இருதயத்தினிடவும் சுவாசாசயங்களினிடவும், ஒரு அன்னுவய மிருக்கிறபடியினுலும், ஒன்று செய்கிறதுபோல மற்றதும் செய்யும்படியாக, அன்னுவயத்திஞல் உண்டாகும் சேர்க்கை அவ்விதமாக இருப்பதினுலும், இருதயத்திலிருந்து சுவாசயங்களில் இரத்தம் உட்பெருக்கெடுப்பதினல், சித்தமானது புத்தியினுள் எப்படி ஓடி, உண்மையினிடத்து ஆசைக்கும், உண்மையைப் பார்த்தலுக்கும், சிந்தனைக்கும் சம்பந்தப்பட்டிருக்கிற, மேல் விவரித்தபடி (பிரிவு 404) காரிய சித்திகளை சம்பவிக்கச் செய்கிறதென்று அறிந்து கொள்ளலாம். அந்த அன்னுவயம், எனக்கு இதையும் சுருக்கமாய் விவரிக்க முடியாத, அந்த விஷயத்தைச் சேர்ந்த இதர அநேக விஷயங்களை வெளிப்படையாக்கினது. அன்பு அல்லது சித்தம்,இருதயத்துடனும்ஞானம் அல்லது புத்தி, சுவாசயங்களுடனும் அன்னுவயப்படுகிற படியினுல், சுவாசாசயங்களிலிருக்கும் இருதயத்தின் இரத்தக் குழாய்கள் உண்மையினிடத்து ஆசைகளோடும்,சுவாசாசயங்களின்சுவாசக்குழல்களின்கிளைகள் அந்தஆசைசளிலிருந்துவரும் உணர்ச்சிகளோடும் சிந்தனைகளோடும் அன்னுவயப்படுகின்றனவென்று ஏற்படுகிறது. இந்த உற்பத்தி ஸதானங்களிலிருந்து சுவாசாசயங்களின் எல்லா நிருமாணங்களையும் கண்டுபிடித்து, சித்தத்தின் ஆசையுடனும், புத்தியின் ஞானத்துடனும் அந்த உவமானத்தைப்பற்றி பாடுபடுகிற எவனும் மேலே (பிரிவு 404) சொல்லிய விஷயங்களை ஒரு ஒப்பனையில் பார்க்கவும்,

ஸ்திரமான ஒரு நம்பிக்கைகு வரவும், சக்தியுள்ளவனுயிருப் பான். ஆனல், இருதயத்தையும் சுவாசாசயங்களையும் குறித்த சரீர சாஸ்திரத்தின் விவரங்கள் சிலருக்குமாத்திரம் தெரிந் திருக்கிறபடியினுலும், ஒரு பொருளை, தெரியாத ஒன்றினுல் மற்றொன்றை ஸ்திரப்படுத்தல், அந்தகாரத்தைகொண்டுபோய்த் தருகிறபடியினுலும், அந்த உபமானத்தை இன்னும் அதிகம் விவரணத்தில் ருசுபடுத்தாமல் நான் விட்டுவிடுகிறேன்.

406. **IX.** அன்பு அல்லது சித்தம், இந்த மூன்று புணர்ச்சிகளினுல், அதன் இந்திரிய ஞானமுள்ள உயிரிலும், அதன் செய்கையுள்ள உயிரிலுமிருக்கிறது.

புத்தி சேராத அன்பும், அல்லது புத்தியின் சிந்தனை சேராத அன்பின் ஆசையும், ஒரு சரீரத்தில் உணரவும் முடியாது, செயல்படவும் முடியாது ; ஏனென்றல் புத்தி சேராத அன்பு, குருடானதைப்போலிருக்கிறது; புத்தியானது அன்பு பார்க்கப்பட்ட வெளிச்சமாயிருப்பதினுல், சிந்தனை சேராத ஆசையானது இருட்டிலிருப்பதுபோலிருக்கிறது. மேலும், புத்தியின் ஞானம் ஆண்டவரிடமிருந்து ஒரு சூரியனைகப் புறப்படுகிற வெளிச்சத்திலிருந்து உண்டாகிறது. ஆகையினுல், புத்தியின் ஒளி நீங்கலான சித்தத்தின் அன்பு, ஒன்றையும் பார்க்காமல், குருடானதாயிருப்பதினுல், புத்தியின் வெளிச்சம் நீங்கலாய், இந்திரிய ஞானங்களே, பார்வையும் கேட்டலு மட்டுமல்லாமல் மற்றவைகளும்கூட, குருட்டுத்தனத்திலும் சூனியத்திலுமிருக்குமென்று பின் தொடருகிறது. எல்லா உண்மையை உணர்தலும், மேல் காண்பித்தபடி, புத்தியிலுள்ள அன்புக்கு சேர்ந்திருக்கிறபடியினுல், மற்ற இந்திரியங்களும் அப்படியே யிருக்கும் ; சரீரத்திலுள்ள எல்லா இந்திரியங் களும், மனதின் பார்வையிலிருந்து தங்கள் பார்வையை

அடைகின்றன. சரீரத்தின் ஒவ்வொரு செய்கைக்கும் அம் மாதிரியே யிருக்கிறது. ஏனென்றால் புத்தி நீங்கலான அன்பி னால் உண்டாகும் செய்கை, இரவில் ஒரு மனிதன் செய்யும் செய்கைபோலிருக்கிறது. ஏனென்றால், அம்மாதிரி காலத்தில் தான் செய்கிறது அவனுக்கு நிச்சயமில்லை. ஆகையினால் அவ்வித செய்கையில், புத்தியும் ஞானமும் இருக்கமுடியாது, அந்த செய்கையானது உயிருள்ள செய்கையென்று சொல்ல முடியாது; செய்கையானது அதன் சாரத்தை அன்பிலிருந் தும், அதன் குணத்தை விவேகத்திலிருந்தும் அடைகிறது. மேலும், நன்மையின் எல்லா சக்தியும், உண்மையின் மூலமாய் வருகிறது, ஆகையினால் நன்மையானது உண்மையிலும், இவ் விதமாக அதன் மூலமாயும், செயல்படுகிறது; நன்மை அன் புக்கு சேர்ந்தது, உண்மை புத்திக்கு சேர்ந்தது. இவைகளி லிருந்து, அன்பு அல்லது சித்தம், இந்த மூன்று சேர்க்கைகள் மூலமாய் (பிரி. 404 ஐ பார்க்கவும்) அதன் இந்திரிய ஞான முள்ள உயிரிலும், அதன் செய்கையுள்ள உயிரிலுமிருக்கிற தென்று விசதமாகும்.

407. அன்பானது புத்தியுடன் சூக்குமமாய் செய்வதை, இருதயமானது சுவாசாசயங்களோடு ஸ்தூலமாய் செய்யும்படி யாக, சித்தத்துக்கும் இருதயத்துக்கும், புத்திக்கும் சுவாசா சயங்களுக்கும் அவ்விதமாய் அன்னுவய மிருக்கிறபடியினால், உயிருக்கும் இது அப்படி யிருக்கிறதென்று சுவாசாசயங் களோடு இருதயத்தினிட புணர்ச்சியினால் நிரூபிக்கலாம். ஆகை யினால் மேற்கூறியவைகள் ஒரு ஒப்பனையில்போல் பார்க்கப்பட லாம். இருதயமும் சுவாசாசயங்களும் சேர்ந்து ஒரே காலத்தில் செயல் படாதபோது, மனிதனானவன் எந்த இந்திரிய ஞானமுள்ள உயிரிலும், எந்த செய்கையுள்ள உயிரிலும்

இல்லையென்பது, இளஞ்சூலின் அல்லது கருப்பையிலுள்ள சிறு குழந்தையின் நிலைமையிலிருந்தும், பிறந்த பிறகு அதன் நிலைமையிலிருந்தும் தெளிவா யிருக்கிறது. மனிதன் கருப்பையில் ஒரு இளஞ்சூலாக இருக்கிற காலம் வரையில், சுவாசாசயங்கள் மூடப்பட்டிருக்கின்றன; ஆகையினால், அவனுக்கு உணர்ச்சியுமில்லை, செய்கையுமில்லை, ஞானேந்திரியங்கள் மூடப்பட்டிருக்கின்றன, கால்களும் கைகளும் கட்டப்பட்டிருக்கின்றன; ஆனால், பிறந்த பிறகு சுவாசாசயங்கள், திறக்கப்படுகின்றன. அது திறக்கப்படுவதால், மனிதன் உணருகிறான், செயல்படுகிறான்; சுவாசாசயங்கள் இருதயத்திலிருந்து அனுப்பப்படும் இரத்தத்தினால் திறக்கப்படுகின்றன. இருதயத்தினிடவும் சுவாசாசயங்களிடவும் கூட்டுத்தொழிலில்லாமல், மனிதனுக்கு இந்திரிய ஞானமுள்ள உயிரும் செய்கையுள்ள உயிருமில்லை என்பது, சுவாசம் அக்காலத்தில் நீக்கப்படுகிறதினால், சுவாசாசயமில்லாமல், இருதயம் மாத்திரம் செயல்படுகிற, மூர்ச்சைகளில் கூட நிரூபிக்கப்படுகிறது; நன்றாய் தெரிந்திருக்கிறபடி, இந்த சந்தர்ப்பத்தில், இந்திரிய ஞானமுமில்லை, செய்கையுமில்லை. தண்ணீர் மூலமாயாவது, குறல்வளையை நிருத்தி, சுவாசாசயங்கள் சுவாசிக்கும் வழியை மூடுகிற எதினாலாவது உண்டாகிற திக்குமுக்குகளில் அம்மாதிரியே நேரிடுகிறது. அப்பொழுது ஒரு மனிதன் இறந்துபோனவனைப்போல் தோன்றுகிறான். அவன் ஒன்றையும் உணருகிறதில்லை, ஒன்றையும் செய்கிறதில்லை, அப்படியிருந்தும், நன்றாய் தெரிந்து இருக்கிறபடி அவன் இருதயத்தில் இன்னும் உயிரோடிருக்கிறான்; ஏனென்றால், சுவாசாசயத்துக்கு தடை நீங்கப்பட்ட உடனே, இந்திரிய ஞானமுள்ளதும் செய்கையுள்ளதுமான இரண்டு உயிர்களுக்கும்

அவன் திரும்புகிறுன். இரத்தமானது இடையில், சுவாசா சயங்கள் மூலமாய்ச்சுற்றுகிறது. ஆனுல்சுவாசக்குழலைச்சேர்ந்த நாடிகள்,நாளங்கள் மூலமாய் அல்லாமல்,புப்புசநாடிகள் நாளங் கள் மூலமாய் சுற்றுகிறது; முன் சொன்னவைகள்தான் சுவாசிக்கும் சக்தியை மனிதனுக்குக் கொடுப்பவைகள். அது புத்திக்குள் அன்பினிட பெருக்கத்தைப்போல் இருக்கிறது.

408. **X அன்பு அல்லது சித்தம் ஞானம் அல்லது புத் தியை, தன் வீட்டின் எல்லா பொருள்களிலும் அழைத்துக் கொண்டு போகிறது.**

இங்கே அன்பு அல்லது சித்தத்தின் வீடு என்பதால், அவன் மனதுக்குச் சேர்ந்த எல்லா பொருள்கள் விஷயத் திலும், முழு மனிதன் என்று அர்த்தம் கொள்ளப்படுகிறது. மேலே காண்பித்தபடி, இவைகள் சரீரத்தின் எல்லா பொருள் களோடும் அன்னுவயப்படுகிறபடியினுல், இந்த வீடு என்ப தால், எல்லா அவயவங்களும், அங்கங்களும், ஆந்திரிகங் களும் என்று சொல்லப்பட்ட அவன் சரீரத்தைச் சேர்ந்த எல்லா பொருள்கள் விஷயத்திலும், முழு மனிதன் என்று கூட அர்த்தம் கொள்ளப்படுகிறது. புத்தியானது மனதின் எல்லா பொருள்களிலும் வழி காட்டப்படுவது போல, சுவா சாசயங்கள் இவைகளிலெல்லாம் அம்மாதிரியே வழி காட்டப் படுகிறதென்பது மேல் நிரூபித்ததிலிருந்து, அதாவது, அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது புத்தியாயிருக்கிற இனி வரும் தனது துணைவிக்கு ஒரு வீட்டை அல்லது மணமஞ் சத்தைதயார்செய்கிறதென்பதிலிருந்தும் (பிரிவு 402), அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது புத்தியுடன் சேர்ந்து செயல்பட சக்தியுண்டாக எல்லா பொருள்களையும் அதன் மானிட ரூபத்தில் அதாவது அதன் வீட்டில் தயார்செய்கிற

தென்பதிலிருந்தும் (பிரிவு 403) விசதமாகிறது. இந்த இரண்டு தலைப்பெயர்களின் கீழ் சொல்லிய விசேஷ சங்கதிகளால், சுவாசாசயங்கள் சுவாசிக்கும்போது, இவைகளெல்லாம் அம்மாதிரியே மாறி மாறி வரும் செயல்களாக முன்னுக்கு தள்ளிக்கொண்டு போகும்படியாக, சரீரத்திலுள்ள எல்லா பாகங்களும், விலாவெலும்பிலிருந்தும், முள்ளெலும்பிலிருந்தும், மார்பெலும்பிலிருந்தும், ஈரல்தாங்கியிலிருந்தும் இந்த சாய்மானங்கள் பேரில் தொங்கும் (Peritoneum) எனும் அடிவயிற்றகத்தை மூடிய ஜவ்விலிருந்தும், அனுப்பப்பட்ட பந்திக்கும் நார்களினால் அவ்விதமாய் சேர்க்கப்பட்டிருக்கின்றனவென்பது விசதமாகிறது. மேலும், மாறி மாறி வரும் சுவாசஅலைகள் ஆந்திரிகங்களில் அவைகளின் மிகவும்உள்ளுக்குள்ளான மூலைகளிலேயே நிஜமாய் பிரவேசிக்கின்றனவென்று சரீர சாஸ்திரம், தெளிவாய் சொல்லுகிறது; ஏனென்றால், மேல் சொல்லிய பந்திக்கும் ஜவ்வுகள், ஆந்திரிகங்களின் புறணிகளோடு ஓட்டிக்கொண்டு கூடுகின்றன. இதை மூடிக் கொண்டிருக்கும் புறணிகள், அவைகளின் உள்ளுக்குள்ளான பாகங்களில், சுத்த ரத்த நாடிகளும் கருத்த ரத்த நாளங்களும்கூட அவைகளின் கிளை விடுதலால், பிரவேசிக்கிறது போல், தங்கள் விரிவுகளினாலும் நீட்சிகளாலும் பிரவேசிக்கின்றன. ஆதலால், சுவாசாசயங்களின் சுவாசம் இருதயத்தோடு சரீரத்தின் எல்லா பாகங்களிலும் முழு சேர்க்கையிலிருக்கிறதென்பது விசதமாகிறது. அந்த சேர்க்கையானது திட்டமானதாயும், நிறைவானதாயுமிருக்க, இருதயமே கூட புப்புச சலனத்திலிருக்கிறது; ஏனென்றால், அது சுவாசாசயங்களின் மத்திய பாகத்தில் இருக்கிறது, சிரவங்கள் மூலமாய் அவைகளை ஓட்டிக்கொண்டு, ஈரல்தாங்கி பேரில் சாய்ந்து

கொண்டிருக்கிறது, அதினல், அதன் சுத்த இரத்த நாடிகள் மறுபடியும் புப்புச சலனத்தில் பகிர்ந்து கொள்ளுகின்றன. மேலும் அன்னுசயமானது சுவாசக்குழலோடு, அதனிட (Aesophagus) அன்னவாகி என்பதின் கூட்டும் சேர்மானத்தால், அம்மாதிரியான சேர்க்கையிலிருக்கிறது. ஞானம் அல்லது புத்தியுடன், அன்பினிடவும் சித்தத்தினிடவும் சேர்க்கையின் சுபாவமும், அதனுடன், சரீர சாஸ்திர சேர்க்கையானது, மனதினிட சேர்க்கைக்கு உவமானமாயிருத்தலால், மனதின் எல்லா பொருள்களின் துணையோடும், இரண்டின் சேர்க்கையின் சுபாவமும் அறிந்துகொள்ளும் பொருட்டு, இந்த சரீர சாஸ்திர உண்மைகள் எடுத்துக் காட்டப்பட்டன.

409. **XI. அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது பத்தியுடன், ஐக்கியப்பட்டால் ஒழிய யாதோன்றையும் செய்கிறதில்லை.**

ஏனென்றல், புத்தி நீங்கலாய், அன்புக்கு, இந்திரிய ஞானமுள்ள உயிரும், அதனுடன் செய்கையுள்ள உயிரும் இல்லாதபடியினலும், மேலே சொல்லியபடி (பிரிவுகள் 407, 408) அன்பானது புத்திக்கு மனதின் எல்லா பொருள்களிலும் வழிகாட்டுகிறபடியினலும், அன்பு அல்லது சித்தம் புத்தியுடன் ஐக்கியப்பட்டால் ஒழிய யாதொன்றையும் செய்கிறதில்லை என்பது தொடர்கிறது. ஏனென்றல், புத்தியில்லாமல் அன்பிலிருந்து செயல்படுதல் என்னத்தை காண்பிக்கிறது? அது பகுத்தறிவில்லாதது, வேறென்றுமில்லை. புத்தியானது என்ன செய்யப்பட வேண்டுமென்பதையும், அது எப்படி செய்யப்பட வேண்டுமென்பதையும் கற்பிக்கிறது. புத்தியில்லாமல் அன்புக்கு இது தெரியாது. ஆகையினல் அவைகள் இரண்டாக யிருந்தபோதிலும், ஒன்றுக

செயல்படும்படியாக அன்புக்கும், புத்திக்கும், அவ்வித விவாக மிருக்கிறது. நன்மையானது அன்புக்கும், உண்மையானது புத்திக்கும் சேர்ந்திருக்கிறபடியினுல், நன்மைக்கும் உண்மைக் கும், அதைப்போன்ற ஓர் விவாகமிருக்கிறது. ஆண்டவரால், சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் எல்லா பொருள்களிலும் அவ்வித விவாகம் இருக்கிறது ; அவைகளின் உபயோகம் நன் மைக்கும்,உபயோகத்தின் ரூபம் உண்மைக்கும் சம்பந்தப்பட்டி கிறது. இந்த விவாகத்தினுல்தான் சரீரத்தின் எல்லாபாகங்களி லும், ஒரு வலது பக்கமும், ஒரு இடது பக்கமுமிருக்கிறது. வலதுபக்கம் உண்மை வெளிப்படுகிற நன்மைக்கு சம்பந்தப்பட் டிருக்கிறது. இடது பக்கம் நன்மையிலிருந்துவரும் உண் மைக்கு சம்பந்தப்பட்டிருக்கிறது; இவ்விதமாக சேர்க்கைக்கு சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆகையினுல்தான் மனிதனில் ஜதைக ளிருக்கின்றன. இரண்டு மூளைக ளிருக்கின்றன, மூளையின் இரண்டு அர்த்த கோளங்களிருக்கின்றன, இருதயத்தின் இரண்டு சடரங்களிருக்கின்றன, சுவாசாசயங்களின் இரண்டு இதழ்களிருக்கின்றன, இரண்டு கண்களும், இரண்டு காது களும், இரண்டு நாசித்துவாரங்களும், இரண்டு புயங் களும் கைகளும், இடுப்புகளும், கால்களும், மூத்திர பிண்டங்களும், பீஜங்களும் மற்றவைகளும் இருக்கின்றன. அவயவங்கள் ஜதைகளாயில்லாதபோது, ஒரு வலது பக்க மும், ஒரு இடது பக்கமு மிருக்கிறது. நன்மையானது, நிலைத் திருக்க, உண்மையை எதிர்பார்க்கிற படியினுலும், உண் மையானது, நிலைத்திருக்க நன்மையை எதிர்பார்க்கிறபடியி னுலும், விஷயம் இம்மாதிரி யிருக்கிறது. அமரர் உலகங் களிலும், அவர்கள் பலகூட்டங்களிலும், அது அப்படியேயிருக் கிறது. அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது புத்தியுடன்

விவாகம் நீங்கலாய், அதன் மானிடரூபத்தின் மூலமாக, யாதொன்றையும் செய்ய சக்தியில்லாததாயிருக்கிறதென்று காண்பிக்கப்பட்ட 401-வது பிரிவில், இந்த விஷயத்தைப் பற்றி மேலே அதிகம் பார்க்கலாம். நன்மையினிடவும், உண்மையினிடவும், சேர்க்கைக்கு எதிரிடையான தீமையினிடவும், பொய்யினிடவும் சேர்க்கையைப்பற்றி வேறு இடத்தில் பேசப்படும்.

410. XII. **அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது புத்தியுடன் தானே சேர்ந்து கொள்ளுகிறது; ஞானம் அல்லது புத்தியை பரஸ்பரமாய் சேர்ந்திருக்கச் செய்கிறது.**

அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது புத்தியுடன் தானே சேர்ந்துக்கொள்ளுகிறதென்பது, இருதயத்துடனும் சுவாசாசயங்களுடனும் இருக்கும் அவைகளின் அன்னுவபத்தால் விசதமாகிறது. சுவாசாசயங்களோடு, இன்னும் விஷயம் அப்படி யில்லாதபோது, இருதயமானது, அதன் உயிரின் சலனத்தில் முன்னமே இருக்கிறதென்று, சரீர சாஸ்திர அனுபோகம் காண்பிக்கிறது. மூர்ச்சையான போதும், திக்குமுக்கிலும், அதனுடன் கருப்பையில் உள்ள இளஞ்சூல் விஷயத்திலும், முட்டையில் உள்ள குஞ்சி விஷயத்திலும், அனுபோகம் அதையே கற்பிக்கிறது. இருதயமானது தனியாய் செயல்படும்போது, சுவாசாசயங்களை உருவாக்குகிறதென்றும், அவைகளில் சுவாசத்தை ஏற்படுத்த தனக்கு சக்தியுண்டாக அவைகளை பொருந்தப்பண்ணுகிறதென்றும், மேலும் அவைகளில் பல உபயோகங்களை நிறைவேற்ற, அது மற்ற ஆந்திரிகங்களையும் அங்கங்களையும் உருவாக்குகிறதென்றும், உதாரணமாக, உணர சக்தியுடையதாயிருக்க முகத்தின் அங்கங்களையும், செயல்பட சக்தியுள்ளதாயிருக்க

சலனமுள்ள அங்கங்களையும், அன்பின் ஆசைகளுக்குத் தக்கபடி உபயோகங்களைக் காண்பிக்க சக்தியுடையதாயிருக்க சரீரத்தின் மீதி பாகங்களையும், உருவாக்குகிறதென்றும் கூட, சரீர சாஸ்திரம் கற்பிக்கிறது. இருதயமானது, அது சரீரத்தில் செய்யவேண்டிய பல தொழில்களுக்காக இவ்வித பொருள்களை உண்டாக்குகிறதுபோல, அன்பானது, சித்தம் என்று சொல்லப்பட்ட அதன் ஆசயத்தில், மேலே மானிட ரூபமென்று காண்பிக்கப்பட்ட அதன் ரூபத்தை உண்டாக்குகிற பற்பல ஆசைகளின் பொருட்டு அவ்விதமான பொருள்களை உண்டாக்குகின்றனவென்பது, இங்கே முக்கியமான தீர்மானமாயிருக்கிறது. அன்பின் முதன்மையானதும் மிகவும் சமீபமானதுமான ஆசைகள், தெரிந்து கொள்ளும் ஆசையும், விவேகத்துடன் தெரிந்து கொள்ளும் ஆசையும், அது தெரிந்து, விவேகத்துடன் அறிந்து கொண்டதைப் பார்க்கும் ஆசையுமாக இருக்கிறபடியினால், அன்பானது புத்தியை இந்த ஆசைகளுக்காக உருவாக்குகிறதென்றும், அது உணரவும், செயல்படவும் ஆரம்பிக்கும்போதும், நினைக்க ஆரம்பிக்கும்போதும், அவைகளில் நிஜமாய் வருகிறதென்றும் பின் தொடருகிறது. புத்தியானது இந்த பலனுக்கு யாதொன்றையும் உதவுகிறதில்லை என்பது, இருதயத்தினிடவும், சுவாசாசயங்களினிடவும் உவமானத்தால் காண்பிக்கப்படுகிறது; அதைப்பற்றி மேலே பார்க்கவும். அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது புத்தியுடன் தானே சேர்ந்து கொள்ளுகிறதென்றும், ஞானம் அல்லது புத்தி, அன்பு அல்லது சித்தத்துடன் தானே சேருகிறதில்லையென்றும், இவைகளிலிருந்து அறிந்துகொள்ளலாம். ஆகையினால், அன்பானது, தெரிந்து கொள்ளும்

பொருட்டு, கொள்ளும் ஆசையிலிருந்து தனக்கே சம்பாதிக்கும் அறிவும், விவேகத்துடன் தெரிந்து கொள்ளும் பொருட்டு, கொள்ளும் ஆசையிலிருந்து தான் சம்பாதிக்கும் உண்மையை உணர்தலும், தான் தெரிந்து விவேகத்துடன் அறிந்து கொள்ளுகிறதை பார்க்கும் ஆசையிலிருந்து, தான் சம்பாதிக்கும் சிந்தனையும், புத்தியைச் சேர்ந்ததல்லவென்றும், ஆனால் அவைகள் அன்பைச் சேர்ந்ததென்றும், மறுபடியும் விசதமாகிறது. சிந்தனைகளும், உணர்ச்சிகளும், ஆகையினால் அறிவுகளும் சூக்கும உலகத்திலிருந்து நிஜமாகவே உட்பெருக்கினால் பிரவேசிக்கின்றன; அப்படியிருந்தும் அவைகள் புத்தியினால் பெற்றுக்கொள்ளப்படாமல், ஆனால் புத்தியில் அதன் ஆசைகளுக்குத் தக்கபடி அன்பினால் பெற்றுக் கொள்ளப்படுகின்றன. அன்பு அல்லது சித்தமல்லாமல், புத்தியானது அவைகளைப் பெற்றுக்கொள்வது போலத் தோன்றுகிறது; ஆனால் இது ஒரு போலி நியாயம். புத்தியானது அன்பு அல்லது சித்தத்துடன் தானே சேர்ந்து கொள்வது போல கூட தோன்றுகிறது, இதுவும் கூட பிழையானது; அன்பு அல்லது சித்தம் புத்தியுடன் தானே சேர்ந்துகொண்டு, ஒரு பரஸ்பர சேர்க்கையை உண்டாக்குகிறது. இந்த பரஸ்பர சேர்க்கை அதனுடன் அன்பின் விவாகத்தால், உண்டாகிறது; உயிரிலிருந்தும், ஆகையினால், அன்பின் சக்தியிலிருந்தும், பரஸ்பரம் போன்ற ஓர் சேர்க்கை இதை உண்டாக்குகிறது. நன்மையினிடவும் உண்மையினிடவும் விவாகத்துக்கும் விஷயம் அம்மாதிரியே; ஏனென்றால் நன்மையானது அன்பைச் சேர்ந்தது, உண்மையானது புத்தியைச் சேர்ந்தது. நன்மை எல்லாவற்றையும் செய்கிறது, உண்மையை தன்னிட வீட்டில் ஏற்றுக்கொண்டு, அது ஒத்துக்கொள்ளுகிறவரையில்

அதனுடன் சேருகிறது. நன்மையானது தன்னுடன் ஒத்துக் கொள்ளாத உண்மைகளையும் ஏற்றுக்கொள்ள சக்தி யுடையதாயும் கூட இருக்கிறது ; ஆனால் அதன் முடிவுகளா யிருக்கிறதும், அதன் நன்மைகள் என்று சொல்லப்படுகிறது மான உபயோகங்களுக்குத் தானே இன்னும் தீர்மானிக்காத காலத்தில், தெரிந்து கொள்ள வேண்டுமென்றும், விவேகத் துடன் அறிந்து கொள்ள வேண்டு மென்றும், தன்னிட சொந்தப் பொருள்களை நினைக்க வேண்டுமென்றும் கொள்ளும் ஆசையிலிருந்து இதை அது செய்கிறது. நன்மையோடு உண்மையின் பரஸ்பரமான ஐக்கியம் சுத்தமாய்க் கிடையாது. பரஸ்பரமாய் சேர்தல்,நன்மையான வாழ்விலிருந்து வருகிறது. அதனால்தான் ஒவ்வொரு மனிதனும், ஒவ்வொரு ஜீவனும், தேவனும், அவனிட அன்பு அல்லது நன்மைக்குத் தக்கபடி ஆண்டவரால் மதிக்கப்படுகிறான் ; எவனும் அன்பு அல்லது நன்மையிலிருந்து பிரிந்த விவேகம் அல்லது உண்மைக்குத் தக்கபடி மதிக்கப்படுகிறதில்லை. ஏனென்றால், மேல் காண் பித்தபடி ஒரு மனிதனிட உயிர் அவனிட அன்பாயிருக் கிறது, அன்பின் உயிர், தன்னிட ஆசைகளை உண்மைகளால் ஒருவன் உயர்த்தினதற்கு தக்கபடி அதாவது ஆசைகளை ஞானத்திலிருந்து அவன் பூரணமாக்கினதற்குத் தக்கபடி இருக்கிறது. ஏனென்றால், அன்பின் ஆசைகள் உண்மை களால், இம்மாதிரியாக ஞானத்தால் உயர்த்தப்பட்டு, பூரண மாக்கப்படுகின்றன ; அப்பொழுது அன்பானது ஞானத் துடன் சேர்ந்து, அல்லது அதிலிருந்து வந்தது போல் செயல் படுகிறது ; ஆனால், புத்தியிலிருந்து யாதொன்றையும் அடை யாமல், ஆசை என்று சொல்லப்பட்ட அன்பினிட ஒரு தீர் மானத்திலிருந்து எல்லாவற்றையும் அடைகிற, அதன் சொந்த

ரூபத்தின் மூலமாய் போல, அதன் மூலமாய்த் தானே செயல் படுகிறது.

411. அன்பானது, அதற்கு அனுகூலமான எல்லா பொருள்களையும் நன்மைகளென்றும், வழிவகைகளாக நன்மைகளுக்கு நடத்துகிற எல்லா பொருள்களையும் உண்மைகளென்றும் சொல்லுகிறது ; இவைகள் வழிவகைகளாகயிருக்கிறபடியினால், அவைகள் நேசிக்கப்பட்டு, கடைசியாக அதன் ஆசைக்கு சம்பந்தப்பட்டு, இவ்விதமாக உருவத்தில் ஆசைகளாகின்றன ; ஆகையினால், உண்மையானது, அன்புக்குச் சேர்ந்த ஆசையினிட உருவத்தைவிட வேறொன்றுமில்லை. மானிட ரூபமானது, அன்பினிட எல்லா ஆசைகளின் ரூபத்தைத் தவிர வேறொன்றுமில்லை ; அழகு என்பது புறம்பான அல்லது உள்ளான பார்வையினால் அல்லது கேள்வியினால் அது அடைகிற உண்மைகள் மூலமாய் அது சம்பாதிக்கிற அதன் விவேகமாயிருக்கிறது. இவைகள், அன்பானது அதன் ஆசைகளின் உருவங்களாக ஒழுங்குபடுத்துகிறவைகளாயிருக்கின்றன, இந்த ஆசைகளின் உருவங்கள் நானாவிதமாயிருக்கின்றன ; ஆனால், அவைகள் எல்லாம் அவைகளின் சாதாரண உருவத்திலிருந்து ஓர் ஒப்பனையை தேடிக்கொள்ளுகின்றன ; இது மானிட ரூபமாயிருக்கிறது. அன்பிற்கு இந்த ரூபங்களெல்லாம் அழகுள்ளதாயும், நேசிக்கத்தக்கதாயும்யிருக்கின்றன ; ஆனால் மற்றவைகளெல்லாம் அவலக்ஷணமானதாகவும் நேசிக்கத்தகாததாகவு மிருக்கின்றன. இவைகளிலிருந்து, அன்பானது புத்தியுடன் தானே சேருகிறதென்றும், அதற்கு எதிரானது அப்படியில்லை என்றும், பரஸ்பர சேர்க்கைகூட அன்பிலிருந்து உண்டாகிறதென்றும், மறுபடியும் விசதமாகிறது. அன்பு அல்லது சித்தம், ஞானம் அல்லது

புத்தியைப் பரஸ்பரமாய் சேர்ந்திருக்கும்படி செய்கிறதென் பதால், இதுதான் அர்த்தம் கொள்ளப்படுகிறது.

412. இந்த பிரதிக்கினைகள், அன்பினுடன் இருதயத்தி னிடவும், புத்தியுடன் சுவாசாசயங்களிடவும், அன்னுவயத் தால், ஓர் ஒப்பனையில் பார்க்கப்பட்டு ரூபகாரம் செய்யப் படலாம். அதைப்பற்றி மேலே பார்க்கவும்; ஏனென்றால் இருதயமானது அன்புடன் அன்னுவயப்பட்டால்,இரத்தநாடி களாகவும்,நாளங்களாகவு மிருக்கிற அதன் முடிவுகள், ஆசைக ளோடும், சுவாசாசயங்களில் உண்மைகளினிடத்து கொள்ளும் ஆசைகளோடும் அன்னுவயப்படுகின்றன. சுவாசாசயங்களில், சுவாசித்தல் நடக்கிற காற்று குழாய்கள் கூட இருக்கிறபடியி னால், இந்த குழாய்கள் உணர்ச்சிகளுக்கு அன்னுவயப்படுகின் றன. சுவாசாசயங்களிலுள்ள சுத்த இரத்தம் ஓடும் நாடிகளும், கருத்த இரத்தம் ஓடும் நாளங்களும், ஆசைகளல்லவென்றும், சுவாசங்கள், உணர்ச்சிகளும் சிந்தனைகளும் அல்லவென்றும் ஆனால், அவைகள் ஒத்து அல்லது ஒருமிக்க செயல்படுகிற படியினால், அவைகள் அன்னுவயங்களென்றும், எப்பொழு தும் ஞாபகத்தில் வைக்கவேண்டும். அம்மாதிரியே, இருத யத்தையும் சுவாசாசயங்களையும் குறித்து, அவைகள் அன்பும் ஞானமும் அல்லவென்றும், ஆனால் அவைகள் அன்னுவயங்க ளென்றும், சொல்லவேண்டும்; அவைகள் அன்னுவயங்க ளானபடியினால், ஒன்று மற்றொன்றில் பார்க்கப்படலாம். சரீர சாஸ்திரப்படி சுவாசாசயங்களின் நிருமாணத்தை முழு மையும் தெரிந்துகொண்டு, அதை புத்தியுடன் ஒத்து பார்க் கிற எவனும், புத்தியானது தானே ஒன்றையும் செய்கிற தில்லையென்றும் தானே ஒன்றையும் உணர்கிறதில்லை அல் லது நினைக்கிறதில்லை என்றும், ஆனால், அன்புக்குச் சேர்ந்த

ஆசைகளிலிருந்து எல்லாவற்றையும் செய்கிறதென்றும், தெளிவாய் அறிந்து கொள்வான்; இவைகள் புத்தியில் உண்மையை தெரிந்துகொள்ளும் ஆசையும், விவேகத்துடன் அறிந்துகொள்ளும் ஆசையும், அதைப் பார்க்கும் ஆசையுமா யிருக்கின்றன; இந்த ஆசைகளைப்பற்றி மேலே சொல்லப்பட் டிருக்கிறது. ஏனென்றால், சுவாசாசயங்களின் நிலைமைகள் எல்லாம் இருதயத்திலிருந்தும், (Vena cava) எனும் அசுத்த இரத்தக் குழாயிலிருந்தும், (Aorta)எனும் சுத்த இரத்தக்குழாயிலிருந்தும் வரும் இரத்தத்தைச் சார்ந்திருக்கின்றன. சுவாசக்குழலின் கிளைகளில் நடக்கும் சுவாசங்கள், இந்த இரத்தக் குழாய்களின் நிலைமைகளுக்குத் தக்கபடி இருக்கின்றன; ஏனென்றால், இரத்தத்தின் உட்பெருக்கு நின்றால், சுவாசம் நின்று விடுகிறது. சுவாசாசயங்களின் நிருமாணத்தை, அது அனுவபப்படுகிற புத்தியுடன் ஒத்துப்பார்த்தால், இன்னும் அதிகம் கண்டு பிடிக்கப்படலாம்; ஆனால் சரீர சாஸ்திரம் சிலருக்கு மட்டும் தெரிந்திருப்பதினாலும், தெரியாதவைகளைக்கொண்டு ரூபகாரம்செய்தலும், ஸ்திரப்படுத்தலும், ஒரு விஷயத்தை அஞ்ஞானத்தில் வைக்கிறபடியினாலும், இந்த விஷயத்தைப்பற்றி அதிகம் சொல்லுதல் நன்றாயில்லை. அன்பானது அதன் ஆசையின் மூலமாய் புத்தியுடன் தானே சேருகிறதென்றும், புத்தியானது அன்பின் எந்த ஆசையுடனும் தானே சேருகிறதில்லை என்றும், ஆனால் அன்பானது இந்திரிய ஞானமுள்ள உயிரையும் செய்கையுள்ள உயிரையும் உடைத்தாயிருக்கும் நோக்கத்தோடு, அது அன்பினால் பரஸ்பரமாய் சேர்க்கப்படுகிறதென்றும், சுவாசாசயங்களின் நிருமாணங்களைக் குறித்து எனக்கு இருக்கும் அறிவு என்னை முழுமையும் நம்பச் செய்தது. ஆனால், மனிதனுக்கு, ஒன்று ஜீவனிட சுவாச

மென்றும், மற்றது சரீரத்தினுடையதென்றும், இருமடங்கான சுவாசமிருக்கிறதென்றும், ஜீவனிட சுவாசம் மூளைகளிலிருந்து வரும் நார்களின்பேரில் சார்ந்திருக்கிறதென்றும், சரீரத்தின் சுவாசம் இருதயத்திலிருந்தும், (Vena Cava) எனும் அசுத்த இரத்தக் குழாயிலிருந்தும்,(Aorta)எனும் சுத்த இரத்தக்குழாயிலிருந்தும், வரும் இரத்தக்குழாய்கள்பேரிலும் சார்ந்திருக்கிறதென்றும், நிலையாய் மனதில் வைக்கப்படவேண்டும். மேலும் சிந்தனையானது சுவாசத்தை உண்டாக்குகிறதென்று விசதமாகிறது; அன்பைச்சேர்ந்தஆசையானது சிந்தனையை உண்டாக்குகிறதென்றும் கூட விசதமாகிறது ; ஏனென்றால், ஆசை நீங்கலான சிந்தனையானது ஒரு இருதயமில்லாத சுவாசத்தை ஒத்திருக்கிறது. இது முடியாத காரியம். ஆகையினால் அன்பின் ஆசையானது, மேல் கூறியபடி புத்தியின் சிந்தனையோடு, இருதயமானது சுவாசாசயங்களோடு சேர்ந்திருப்பது போல, தானே சேர்ந்திருக்கிறதென்பது விசதமாகிறது.

413. XIII. ஞானம் அல்லது புத்தி, அன்பினால் அதற்கு கொடுக்கப்பட்ட சக்தியினால், உயர்த்தப்படவும், சுவர்க்கத்திலிருந்து வரும் வெளிச்சத்திற்கு சேர்ந்த பொருள்களை பெற்றுக்கொள்ளவும், அவைகளை பார்க்கவும், சக்தியுள்ளதாயிருக்கிறது.

மனிதனானவன் அவைகளைக் கேட்கும்போது ஞானத்தின் இரகசியங்களைப் பார்க்க சக்தியுள்ளவனாயிருக்கிறானென்பது, மேலே அநேக இடங்களில் காண்பிக்கப்பட்டிருக்கிறது. சிருஷ்டிக்கப்பட்ட போதே, ஒவ்வொரு மனிதனுக்குமிருக்கிற பகுத்தறியும் மனோசக்தி இதுதான். பொருள்களை மிகவும் உள்ளுக்குள்ளாய் அறிந்துகொண்டு, எது நியாயமானதென்றும், எது சரியானதென்றும், எது நன்மையான

தென்றும், எது உண்மையானதென்றும், தீர்மானிக்கிற மனே சக்தியாயிருக்கிற இதன் மூலமாய், மனிதனுனவன் மிருகங் களிலிருந்து வகையறுக்கப்படுகிறுன். ஆகையினுல், புத்தி யானது உயர்த்தப்படவும், சுவர்க்கத்திலிருந்து வரும் வெளிச் சத்தைச் சேர்ந்த பொருள்களே பெற்றுக்கொள்ளவும், அவை களேப்பார்க்கவும், சக்தியுள்ளதாயிருக்கிறதென்பதினுல் அர்த் தம் கொள்ளப்பட்டது இதுதான். சுவாசாசயங்கள் புத்தி யுடன்அன்னுவயப்படுகிறபடியினுல், விஷயம்அவ்விதமாயிருக் கிறதென்பது, சுவாசாசயங்களில் ஓர் ஒப்பனேயில் கூட பார்க் கப்படலாம். சுவாசிக்கும் காலத்தில் காற்றின் ஆசயங்களா யிருக்கிற மிகவும் நுண்ணிய பொக்குகள் வரையில் தொடர்ந் திருக்கிற சுவாசக்குழலாயிருக்கிற சுவாசாசயங்களிலிருக்கும் அறை அறையான பொருள்களிலிருந்து அது பார்க்கப்பட லாம். அன்னுவயத்தால் சிந்தனேகள் ஒன்றுபடுகிற பொருள் கள் இவைகள்தான். இந்த பொக்குகள் போன்ற பொருள், ஒரு நிலேமையில் இருதயத்தோடும், மற்ற நிலேமையில் இரு தயத்திலிருந்து ஏறக்குறைய வேருயும், இரண்டு நிலேமை களில் விரிக்கப்படவும், சுருக்கப்படவும் சக்தியுள்ளதாயிருக்க அவ்வித சுபாவமுடையதாயிருக்கிறது. இருதயத்தோடு சேர்ந்திருக்கும் நிலேமையில், இருதயத்திலிருந்து மாத் திரம் வரும், புப்புச நாடிகள் புப்புச நாளங்கள் மூலமாயும் இருதயத்திலிருந்து ஏறக்குறைய வேருன நிலேமையில், (Vena Cava) எனும் அசுத்த இரத்தக்குழாயிலிருந்தும், (Aorta) எனும் சுத்த இரத்தக் குழாயிலிருந்தும் வரும் சுவா சக் குழலின் நாடிகள் மூலமாயும் நாளங்கள் மூலமாயும் அவைகள் விரிக்கப்பட்டு, சுருக்கப்படுகின்றன. கடைசியில் சொன்ன இரத்தக் குழாய்கள் இருதயத்துக்கு புறம்பானதா

யிருக்கின்றன. இருதயத்துடன் அன்னுவயப்படுகிறதும், சுவர்க்கத்திலிருந்து ஒளியை பெற்றுக் கொள்ளுகிறதுமான சுயலாபத்தைக் கோரும் இச்சைக்கு மேலே புத்தியானது உயர்த்தப்பட சக்தியுடையதாயிருப்பதினால், சுவாசாசயங் களில் விஷயம் இப்படியிருக்கிறது. அப்படி யிருந்தாலும் புத்தியானது சுயலாபத்தைக் கோரும் இச்சைக்கு மேல் உயர்த்தப்பட்டபோது, அதிலிருந்து விலகாமல் கொஞ்சம் கீர்த்தியையும், பிரதாபத்தையும், லாபத்தையும் உலகத் தில் அடையும் பொருட்டு, தெரிந்து கொள்ளும் ஆசையென் றும், விவேகத்துடன் அறிந்துகொள்ளும் ஆசையென்றும், சொல்லப்பட்டவைகளை அதிலிருந்து இழுக்கிறது ; இது ஒவ் வொரு அன்புடனும் புறக்கோலமாய் ஒட்டிக்கொள்ளு கிறது. அன்பானது அதிலிருந்து புறக்கோலமாய் பிரகாசிக் கிறது ; ஆனால், அது ஞானிகளிடத்தில் ஒளி வீசுகிறதா யிருக்கிறது. சுவாசாசயங்களைக் குறித்து இவைகளெல்லாம், புத்தியானது உயர்த்தப்படவும், சுவர்க்கத்து வெளிச்சத்துக்கு சேர்ந்தவைகளை பெற்றுக்கொண்டு பார்க்கவும், சக்தியுள்ள தாயிருக்கிற தென்கிறதை உறுதிபடுத்த எடுத்துக் காட்டப் பட்டன ; ஏனென்றால், அன்னுவயமானது பூரணமாயிருக் கிறது. அந்த அன்னுவயத்திலிருந்து, புத்தியிலிருந்து சுவா சாசயங்களையும், சுவாசாசயங்களிலிருந்து புத்தியையும் பார்க்க வும், இரண்டிலுமிருந்து உடனே ரூபகாரத்தை அடையவும் சுலபமா யிருக்கிறது.

414. XIV. அன்பு அல்லது சித்தம் அதன் துணை வியை அந்த அளவு நேசித்தால், உயர்த்தப்படவும், சுவர்க்கத்தி லிருந்துவரும் சூட்டைச் சேர்ந்த பொருள்களை பெற்றுக் கொள் ளவும், அம்மாதிரியே சக்தி யுடையதாயிருக்கிறது.

புத்தியானது சுவர்க்கத்து வெளிச்சத்திற்கு, உயர்த்தப்பட்டு, அதிலிருந்து ஞானத்தை பானம் பண்ணவும், கூடுமென்பது முன்பிரிவிலும், மேலே அநேக இடங்களிலும் காண்பிக்கப்பட்டிருக்கிறது; மறுபடியும், அன்பு அல்லது சித்தம், சுவர்கத்து வெளிச்சத்துக்குச் சேர்ந்த அல்லது ஞானத்துக்குச் சேர்ந்த பொருள்களை நேசித்தால், அது சமமாய் உயர்த்தப்படக் கூடுமென்பதும், அநேக இடங்களில் காண்பிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் உபயோகத்தைச் செய்யும் அன்பினால் தவிர, கௌரவம், பிரதாபம், அல்லது லாபம் ஒரு நோக்கமாக இவைகளைச் சேர்ந்த எதினாலும், அன்பு அல்லது சித்தம் உயர்த்தப்பட மாட்டாது; இவ்விதமாக அயலானுக்காக தவிர, நிஜமாகவே தனக்காக உயர்த்தப்படமாட்டாது; இந்த அன்பானது ஆண்டவரால் மாத்திரம் சுவர்க்கத்திலிருந்து கொடுக்கப்படுகிறபடியினாலும், மனிதனானவன் தீமைகளை பாவங்களாக நீக்கும்போது, ஆண்டவரால் அது கொடுக்கப்படுகிறபடியினாலும், இந்த வழிவகைகளால், அன்பு அல்லது சித்தம் உயர்த்தப்படவும் கூட சக்தியுள்ளதா யிருக்கிறது. இந்த வழிவகைகள் நீங்கலாய் அதற்கு சக்தியில்லை. ஆனால், அன்பு அல்லது சித்தம் சுவர்க்கத்து சூட்டுக்கு உயர்த்தப்படுகிறது, புத்தியானது சுவர்க்கத்து வெளிச்சத்துக்கு உயர்த்தப்படுகிறது; இரண்டும் உயர்த்தப்பட்டால், சுவர்க்கத்து அன்புக்கும் ஞானத்துக்கும் விவாகமாயிருப்பதினால், சுவர்க்கத்து விவாகமென்று சொல்லப்படும். அவைகளின் ஓர் விவாகம் அங்கே சம்பவிக்கிறது; ஆகையினால், அன்பானது தன் துணையாகிய ஞானத்தை அவ்வளவு தூரம் நேசித்தால் அன்புகூட உயர்த்தப்படுகின்றதென்று சொல்லப்படுகிறது. ஆண்டவரிடமிருந்து அயலானிடத்து காட்டும் அன்பு, ஞானத்

தின் அன்பு அல்லது மானிட புத்தியின் உண்மையான அன்பாயிருக்கிறது. இது உலகத்தில் வெளிச்சத்தினிடவும் சூட்டினிடவும் விஷயம்போலிருக்கிறது. சூடு நீங்கலாய் வெளிச்சமிருக்கிறது, சூட்டினுடன் வெளிச்சமிருக்கிறது; மாரிகாலத்தில் வெளிச்சமானது சூடு இல்லாமல் இருக்கிறது, கோடைகாலத்தில் அது சூட்டுடனிருக்கிறது; ஒளியுடன் சூடு இருக்கும்போது, எல்லா பொருள்களும் செழிக்கின்றன. மாரிகாலத்து வெளிச்சத்தோடு ஒத்துப்போகிற மனிதனிடமிருக்கும் வெளிச்சம், அதன் அன்பிலிருந்து நீங்கலான ஞானமாயிருக்கிறது, கோடைகாலத்துவெளிச்சத்தோடு ஒத்துப்போகிற மனிதனிடமிருக்கும் வெளிச்சம், அதன் அன்போடு சேர்ந்த ஞானமாயிருக்கிறது.

415. ஞானத்தினிடவும் அன்பினிடவும் இந்த சேர்க்கையும் பிரிவினையும், இருதயத்தோடு சுவாசா சயங்களிட சேர்க்கையில், ஓர் பிரதிமையாக்கப்பட்டதுபோல் பார்க்கப்படலாம். ஏனென்றால், இருதயமானது தன்னிடமிருந்தே அனுப்பப்பட்ட ரத்தத்தினால், சுவாசக் குழலின் குலையான பொக்குகளோடு சேர்க்கப்பட சக்தியுள்ளதாயிருக்கிறது, தன்னிடமேயிருந்து அல்லாமல், (Vena Cava) எனும் அசுத்த இரத்தக்குழாயிலிருந்தும்,(Aorta)எனும் சுத்த இரத்தக் குழாயிலிருந்தும் அனுப்பப்பட்ட இரத்தத்தினால் அவைகளுடன் சேர்த்தப்படகூட சக்தியுள்ளதாயிருக்கிறது.இதனால், சரீரத்தின் சுவாசம், ஆன்மாவின் சுவாசத்திலிருந்து பிரிக்கப்பட சக்தியுள்ளதாயிருக்கிறது. ஆனால், இருதயத்திலிருந்து வரும் இரத்தம் மாத்திரம் செயல்படும்போது, சுவாசங்கள் அப்பொழுது பிரிக்கப்பட முடியாது. சிந்தனைகள், அன்னுவயத்தால் சுவாசாசயங்களோடு ஒன்றுபடுகிறபடியினால், மற்ற

வர்கள் கூட்டத்தில் ஒரு வழியில் ஒரு மனிதன் நினைக்கவும், அவனிட சிந்தனையிலிருந்து, ஒரு வழியில் பேசவும் செயல்படவும், மற்றவர்கள் கூட்டத்தில் இல்லாதபோது அதாவது பெயர் கெடாதென்று பயப்படாதபோது, வேறு வழியில் நினைக்கவும், அவன் சிந்தனையிலிருந்து வேறு வழியில் பேசவும் செயல்படவும் கூடுமென்று, சுவாசத்தில் சுவாசாசயங்களின் இருமடங்கான நிலைமையிலிருந்து, அது விசதமாகிறது. ஏனென்றால், அவன் அப்பொழுது, கடவுளுக்கும்; அயலானுக்கும், திருச்சபையின் பரமார்த்த விஷயங்களுக்கும், சன்மார்க்க சட்டங்களுக்கும், தேசாசாரமான சட்டங்களுக்கும், விரோதமாய் நினைக்கவும் பேசவும் கூடும்; அவன் திருடுவதினாலும், சலஞ்சாதிப்பதாலும், தேவதூஷணம் செய்வதாலும், விபசாரம் செய்வதாலும், அவைகளுக்கு விரோதமாய் அவன் செயல்படவும் கூடும். ஆனால், தன் பெயர் கெட்டுப்போகுமென்று பயப்படுகிற கூட்டங்களில், ஞானமுள்ளவனைப் போலவும், சன்மார்க்கமானவனைப்போலவும் தேசாசாரமுள்ளவனைப்போலவும் பேசவும், பிரசங்கம்செய்யவும்,செயல்படவும் அவன் சக்தியுள்ளவனாயிருக்கிறான். புத்தியைப்போல், அன்பு அல்லது சித்தம் உயர்த்தப்படவும், அது ஞானத்தை, அந்த அளவு நேசித்தால் மாத்திரம், சுவர்க்கத்து சூடு அல்லது அன்பைச் சேர்ந்தவைகளை பெற்றுக்கொள்ளவும், சக்தியுடையதாயிருக்கிறதென்றும், ஞானத்தை அது நேசிக்காவிட்டால், அது பிரிக்கப்படுமென்றும், இவைகளிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

416. **XV. அல்லாவிட்டால், அன்பும் சித்தமும், ஞானம் அல்லது புத்தியை தன்னுடன் ஒன்றுபட்டு செயல்பட, அதன் உன்னதத்திலிருந்து பின்னுக்கு இழுக்கிறது.**

ஸ்தூல அன்பும் சூக்ஷும அன்புமிருக்கின்றன. ஸ்தூல அன்பிலும், அதே காலத்தில்சூக்ஷுமஅன்பிலும்இருக்கப்பட்ட மனிதன், பகுத்தறிவுள்ள மனிதன். ஆனால், ஸ்தூல அன்பில் மாத்திரம் இருக்கப்பட்டவன், ஞானியைப் போல பகுத்தறிவுடன் நினைக்கக்கூடும் என்றாலும், அவன் பகுத்தறிவுள்ள மனிதனல்லன் ; ஏனென்றால், அவன் அவனிட புத்தியை சுவர்க்கத்து வெளிச்சம் வரையில், இவ்விதமாக ஞானம் வரையில் உயர்த்துகிறான், அப்படி யிருந்தாலும், ஞானத்துக்கு அல்லது சுவர்க்கத்து வெளிச்சத்துக்குச் சேர்ந்தபொருள்கள், அவன் அன்பைச் சேர்ந்த பொருள்கள் அல்ல. அவனிட அன்பு,நிஜமாகவே, அவன்செயலுக்குக் காரணமாயிருக்கிறது; ஆனால் கௌரவத்தையும், பிரதாபத்தையும், லாபத்தையும் கோரும், ஓர் ஆசையிலிருந்து அது உதிக்கிறது. ஆனால் அவனிட ஸ்தூல அன்பிலிருந்து தன்னுடனேயே யோசிக்கும் போது, இந்தப் பொருள்களைத் தான் அடைகிறதில்லை யென்பதை அவன் பார்த்தால், அப்பொழுது சுவர்க்கத்து வெளிச்சத்துக்குஅல்லது ஞானத்துக்குச் சேர்ந்த பொருள்களைஅவன் நேசிக்கிறதில்லை ; ஆகையினால் அப்பொழுது தன்னுடனேயே ஒன்றுபட்டு செயல்பட, அதன் உயரத்திலிருந்து புத்தியை இழுக்கிறான். உதாரணமாக, புத்தியானது, உயர்தப்பட்டபடியினால் ஞானத்திலிருக்கும்போது, அன்பானது நியாயம் எதுவென்றும், உண்மை எதுவென்றும், கற்பு என்னவென்றும்,நிஜமான அன்பு கூட எதுவென்றும், அறிந்து கொள்ளுகிறது. ஸ்தூல அன்பானது, சுவர்க்கத்து வெளிச்சத்தில், பொருள்களை விவேகத்துடன் அறிந்துகொண்டு அவைகளைப் பார்க்கும் அதன் சக்தியின் மூலமாய் இவைகளை எல்லாம் பார்க்க சக்தியுடையதாயிருக்கிறது ; உண்மையில், இவைகளை எல்லாம்,

ஓரே காலத்தில் சன்மார்க்கமானதும், பரமார்த்தமானதுமான நீதிநெறிகளென்று, அது பேசவும், பிரசங்கம்செய்யவும், விவரிக்கவும் கூடும். ஆனால், புத்தியானது உயர்த்தப்படாவிட்டால், அப்பொழுது அன்பானது, ஸ்தூலமாக மாத்திர மிருந்தால், இந்தநீதிநெறிகளை அறிந்து கொள்ளாமல், நியாயத்துக்குப் பதிலாக அநியாயத்தையும், உண்மைகளுக்குப் பதிலாக மோசங்களையும், கற்புக்குப் பதிலாக கெட்ட நடத்தைகளையும் இவ்விதமே மற்றவைகளையும் அது அறிந்து கொள்ளுகிறது. அதன் புத்தியானது உன்னதத்திலிருந்தபோது, அது பேசின பொருள்களை அப்பொழுது நினைவு கூர்ந்தால், அது அவைகளைப் பார்த்து சிரித்து, மறறவர்களின் மனதை வலையில் அகப்படுத்த மாத்திரம் உபயோகமானதென்று அவைகளைப்பற்றி நினைக்கக்கூடும். அன்பானது அதன் துணைவியான ஞானத்தை அந்த அளவு நேசித்தாலொழிய, தன்னுடன் ஒன்றுபட்டு செயல்பட அதன் உன்னதத்திலிருந்து அதை இழுக்கிறதென்று, எப்படி தெரிந்துக்கொள்ளப்பட வேண்டுமென்று, இவைகளினால் விசதமாகிறது. அன்பானது, ஞானத்தை அந்த அளவு நேசித்தால், உயர்த்தப்பட சக்தியுள்ளதாயிருக்கிறதென்பது, மேலே (பிரிவு 414) பார்க்கப்படலாம்.

417. அன்பு இருயத்தோடும், புத்தி சுவாசாசயத்தோடும் அன்னுவயப்படுகிறபடியினால், முன் சொல்லியவைகள், அவைகளின் அன்னுவயத்தால் உறுதிபடுத்தப்படலாம்; உதாரணமாக, புத்தியானது சுய இச்சைக்கு மேலே ஞானம் வரையில் எப்படி உயர்த்தப்படக்கூடும் என்பதும், புத்தியானது அதன் உயர்ச்சியிலிருந்து அது ஸ்தூலமாய் மாத்திரமிருந்தால், அந்த அன்பினால் பின்னுக்கு எப்படி இழுக்கப்

படுகிறதென்பதும் உறுதிபடுத்தப்படலாம். ஒன்று சரீரத்தின் சுவாசமும், மற்றது ஜீவனிட சுவாசமுமாக மனிதனுக்கு இருமடங்கான சுவாசமுண்டு. இந்த இரண்டு சுவாசங்களும் பிரிக்கப்படவும், சேர்க்கப்படவும்கூட, சக்தியுள்ளவைகளா யிருக்கின்றன. ஸ்தூலமாய் மாத்திரம் இருக்கும் மனிதர்களி டத்திலும், முக்கியமாய் வஞ்சகர்களிடத்திலும், அவைகள் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், ஞானமுள்ளவர்களிடத்தி லும், உண்மையானவர்களிடத்திலும் அபூர்வமாய் பிரிக்கப் பட்டிருக்கின்றன. ஞானம் உயர்த்தப்பட்டும், தங்கள் ஞாப கத்தில், அதனால் ஞானத்தைச் சேர்ந்த அநேக பொருள்கள் நிற்கிறதுமான, ஸ்தூலமாய் மாத்திரம் இருக்கும் மனிதனும் வஞ்சகனும், கூட்டத்தில் ஞாபகத்திலிருந்து வரும் சிந்தனை யால் புத்தியாய் பேசக்கூடும்; ஆனால் அவர்கள் கூட்டத்தி லில்லாதபோது, ஞாபகத்திலிருந்து நினைக்காமல், தங்கள் ஜீவனிலிருந்து, இவ்விதமாக அவர்கள் அன்பிலிருந்து நினைக் கிறார்கள். சிந்தனையும் சுவாசமும் அன்னுவயத்தை அனு சரித்து செயல்படுகிறபடியினால், அவர்கள் அதே மாதிரியாக சுவாசிக்கிறார்கள். இருதயத்திலிருந்து வரும் இரத்தத்தி னாலும் இருதயத்துக்கு வெளியே யிருந்துவரும் இரத்தத்தி னாலும், அவர்கள் சுவாசிக்க சக்தியுள்ளவர்களா யிருக்கும் படியாக, சுவாசாசயங்களின் நிருமாணம் இருக்கிறதென்பது மேலேகாண்பிக்கப்பட்டது.

418. ஞானம் மனிதனை உண்டாக்குகிறதென்பது சாதாரண அபிப்பிராயம்; ஆகையினால் ஜனங்கள் யாராவது புத்தியாய் பேசுவதையும் கற்பிப்பதையும் கேட்டால், அவனை புத்தியுள்ளவனென்று நினைக்கிறார்கள்; உண்மையில், அவனே கூட அந்த காலத்தில் அதை நம்புகிறான்: ஏனென்றால், கூட்

டத்தில் அவன்பேசும்போதும், கற்பிக்கும்போதும், ஞாபகத்தி லிருந்து நினைக்கிறான்; அவன் ஸ்தூலமான மனிதனாக மாத் திர மிருந்தால், கௌரவத்தையும், பிரதாபத்தையும், லாபத் தையும் கோரும் அன்பாயிருக்கிற அவன் அன்பிலிருந்து புறக்கோலமாய் நினைக்கிறான். ஆனால், அதேமனிதன் தனியா யிருக்கும்போது, தன்னிட ஜீவனிட அதிகம் உள்ளான அன் பிலிருந்து நினைக்கிறான்; அப்பொழுது புத்தியீனமாயும் சில வேலைகளில் உன்மத்தமாயும் நினைக்கிறான். மனிதனானவன் புத்தியுள்ள பேச்சினாலல்லாமல், அவனிட வாழ்க்கையினால், அதாவது வாழ்க்கைக்கு வேறான புத்தியுள்ள பேச்சினால் அல்லாமல், வாழ்க்கைக்குச் சேர்ந்த புத்தியுள்ள பேச்சினால், நிதானிக்கப்பட வேண்டுமென்று இதிலிருந்து விசதமாகிறது. வாழ்க்கை என்பதால், அன்பு என்று அர்த்தம் கொள்ளப்படு கிறது. அன்பானது உயிரென்று மேலே காண்பிக்கப்பட்டது.

**419. XVI அவைகள் சேர்ந்து உயர்த்தப்பட்டால், அன்பு அல்லது சித்தம் ஞானத்தினால் புத்தியில் சுத்தப்படுத்தப் படுகிறது.**

மனிதனானவன் பிறந்ததுமுதல் தன்னையும் உலகத்தை யும் தவிர வேறு எதையும் நேசிக்கிறதில்லை; ஏனென்றால் அவன் கண்கள் முன்பாக வேறு எதுவும் தோன்றுகிறதில்லை, ஆகையினால், அவனிட மனதை வேறு எதுவும் குடிகொள்ளு கிறதில்லை. இந்த அன்பானது ஸ்தூலமானதாயும் சரீர முள்ளதாயு மிருக்கிறது, அதை ஜடமென்று சொல்லலாம்; மேலும், இந்த அன்பானது, பெற்றோர்களிடத்தில் சுவர்க்கத்து அன்பிலிருந்து வேறானதால், அசுத்தமானதாய் விட்டது. அவனிட அன்பு புத்தியுடன் சேர்ந்து, ஞானம் வரையில் உயர்த்தப்படும் பொருட்டு, மனிதனானவன் புத்தியை சுவர்க்

கத்து வெளிச்சம்வரையில் உயர்த்தவும், எப்படி ஜீவிக்க வேண்டுமென்று பார்க்கவும், சக்தியுடையவனு யிருந்தாலொழிய, அதன் அசுத்தத்திலிருந்து அது பிரிக்கப்பட முடியாது. புத்தியின் மூலமாய், அன்பு அதாவது மனிதனுனவன், அன்பை கறைபடுத்துகிறதும் தீட்டாக்குகிறதுமான தீமைகள் என்னவென்று பார்க்கிறுன்; அந்த தீமைகளை பாவங்களாக ஒழித்து, வெறுத்தால், அந்த தீமைகளுக்கு எதிரான பொருள்களை அப்பொழுது அவன் நேசிக்கிறுனென்றுங்கூட அவன் பார்க்கிறுன்; அவைகள் எல்லாம் சுவர்க்கத்து பொருள்களாயிருக்கின்றன. அப்பொழுதுகூட, அந்த தீமைகளை பாவங்களாக ஒழித்து வெறுக்கத் தனக்கு சக்தி உண்டாக்குகிற வழிவகைகளையும் அவன் பார்க்கிறுன். இதை, அன்பு அதாவது மனிதன், ஞானம் வெளிப்படுகிற சுவர்க்கத்து வெளிச்சத்திற்குள், அவனிட புத்தியை உயர்த்தும் சக்தியை உபயோகப்படுத்துவதினுல், பார்க்கிறுன். பிறகு, அன்பானது சுவர்க்கத்தை முதலிலும், உலகத்தை இரண்டாவதிலும் எவ்வளவு தூரம் வைக்கிறதோ, அதே காலத்தில் ஆண்டவரை முதலிலும், தன்னை இரண்டாவதிலும் எவ்வளவு தூரம் வைக்கிறதோ, அவ்வளவு தூரம் அன்பானது அதன் அசுத்தத்திலிருந்து நீக்கப்பட்டு, சுத்தப்படுத்தப்படுகிறது; அதாவது அது அவ்வளவு தூரம் சுவர்க்கத்து சூட்டிற்குள் உயர்த்தப்பட்டு, புத்தியிருக்கப்பட்ட சுவர்க்கத்து வெளிச்சத்துடன் சேர்க்கப்படுகிறது; நன்மையினிடவும் உண்மையினிடவும் அதாவது அன்பினிடவும் ஞானத்தினிடவும் விவாகமாயிருக்கிற ஒரு விவாகம் சம்பவிக்கிறது. ஒருவன் திருடுதலையும் வஞ்சனையையும் எவ்வளவு தூரம் ஒழித்து வெறுக்கிறுனே, அவன்

அவ்வளவு தூரம் உண்மையையும், நேர்மையையும் நீதியை யும் நேசிக்கிறனென்றும், சலஞ்சாதித்தலையும் வன்மத்தை யும் எவ்வளவு தூரம் ஒழித்து வெறுக்கிறனே, அவ்வளவு தூரம் அயலானை நேசிக்கிறனென்றும், அதனுடன், விபசா ரங்களை எவ்வளதூரம் ஒழித்து வெறுக்கிறனே, அவ்வளவு தூரம் கற்பை நேசிக்கிறனென்றும், இப்படியே மற்றவை களையும் செய்கிறனென்றும், ஒவ்வொரு மனிதனும் தன் புத்தியில் கிரகித்து பகுத்தறிவுடன் பார்க்கிறன். ஆனல், உண்மையிலும், நேர்மையிலும், நீதியிலும், அயலானிடத்து அன்பிலும், கற்பிலும், சுவர்க்கத்து அன்பின் மற்ற ஆசை களிலும், அவைகளின் எதிரானவைகளை நீக்கினல் ஒழிய, சுவர்க்கத்தினிடவும், ஆண்டவரிடவும் எவ்வளவு பாகம் இருக்கிறதென்று யாருக்கும் தெரியாது. அந்த எதிரி டையானவைகளை அவன் நீக்கிவிட்டபோது, அப்பொழுது அவன் அந்த ஆசைகளிலிருக்கிறன்; அவைகளிலிருந்து, அவைகளை ஒத்துகொண்டு பார்க்கிறன். அவன் இதைச் செய்கிற வரையில், அன்புக்கு சுவர்க்கத்து வெளிச்சத் தை நிஜமாகவே அனுப்புகிற ஒரு திரையைப் போன்றது இடையில் இடப்படுகிறது; ஆனல், அது அதன் துணைவி யாகிய ஞானத்தை அவ்வளவு நேசிக்காதபடியினல், அது அந்த வெளிச்சத்தை பெற்றுக்கொள்ளுகிறதில்லை; அவனிட உன்னதத்திலிருந்து மனிதன் திரும்பும்போது, அவன் ஒரு வேளை அதை மறுத்துக் கண்டிப்பான். அப்படியிருந்தும், அவ னிட புத்தியின் ஞானமானது கௌரவத்தையும், பிரதாபத் தையும், லாபத்தையும் அடைய ஒரு வழி வகையாக உதவு மென்கிற யோசனையில் அவன், தானே ஆறுதலடைகிறன்; பிறகு, தன்னையும் உலகத்தையும் முதலிலும், ஆண்டவரை

யும் சுவர்க்கத்தையும் இரண்டாவதிலும் வைக்கிறான் ; இரண்டாவது இடத்தில் வைக்கப்பட்டது, அது உதவுகிற வரையில் மாத்திரம் நேசிக்கப்படுகிறது ; அது உதவாவிட்டால், அலட்சியம் செய்யப்பட்டு தள்ளப்படுகிறது ; முன்னிட்டு இல்லாவிட்டாலும், இறந்த பிறகாவது எவ்விதத்திலாவது அப்படி செய்யப்படுகிறது. சேர்ந்து உயர்த்தப்பட்டால் அன்பு அல்லது சித்தம் புத்தியில் சுத்தப்படுத்தப்படுகிற தென்கிற உண்மையானது இவைகளிலிருந்து விசதமாகிறது.

420. மேற்கூறியபடி தங்கள் நாடிகளும் நாளங்களும் அன்புக்குச் சேர்ந்த ஆசைகளோடு அன்னுவயப்படுகிறதும், தங்கள் சுவாசங்கள் புத்திக்கு சேர்ந்த உணர்ச்சிகளுக்கும் சிந்தனைகளுக்கும் அன்னுவயப்படுகிறதுமான சுவாசாசயங்களில், அதே காட்டப்பட்டிருக்கிறது. இருதயத்தினிட இரத்தமானது, சுவாசாசயங்களில் ஜீரணமாகாத பொருள்களிலிருந்து தானே சுத்தப்படுத்திக்கொண்டு, அதனுடன் உள்ளே சுவாசித்த காற்றிலிருந்து உபயோகமானவைகளால் தானே போஷிக்கிறதென்பது, அதிக அனுபோகத்தினால் விசதமாகிறது. இரத்தமானது, சுவாசாசயங்களில் ஜீரணமாகாத பொருள்களில்ருந்து தானே சுத்தப்படுத்திக்கொள்ளுகிறதேன்பது, அசுத்த இரத்தமாயிருப்பதும், ஆகையினால், ஆஹாரத்திலிருந்தும், பானீயத்திலிருந்தும் சேர்க்கப்பட்ட அன்னசாரத்தினால் நிரப்பப்பட்டதுமான உள்ளே பாயும் இரத்தத்திலிருந்து மாத்திரமல்லாமல், வெளிவரும் சுவாசத்தின் ஈரத்திலிருந்தும், மற்றவர்களால் பார்க்கப்பட்டபடி, அவைகளின் நாற்றத்திலிருந்தும், இருதயத்தின் இடது ஜடரிகைக்குள்ளே பின் பாயும் இரத்தத்தின் குறைக்கப்பட்ட பரிமாணத்திலிருந்தும் கூட விசதமாகிறது. இரத்தமானது, உள்ளே சுவாசிக்கப்

பட்ட காற்றிலிருந்து உபயோகமான பொருள்களால் தானே போசித்துக் கொள்ளுகிறதென்பது, வயல்களிலிருந்தும், தோட்டங்களி லிருந்தும், சோலைகளிலிருந்தும், இடைவிடாமல் வெளியேபோகும், நாற்றங்களிடவும் ஆவிகளிடவும் பெருந்தொகையிலிருந்தும், பூமியிலிருந்தும், நதிகளிலிருந்தும், ஏரிகளிலிருந்தும், தண்ணீருடன் எழுகிற பலவிதமான உப்புகளின் ஏராளமான மொத்தத்திலிருந்தும், மனிதர்களிடமிருந்தும், பிராணிகளிட மிருந்தும், வெளிவரும் காற்று நிறைந்திருக்கும் ஆவிமுதலியவைகளின் ஏராளமான தொகையிலிருந்தும், விசதமாகிறது. இந்தப் பொருள்கள் எல்லாம் அவர்கள் சுவாசிக்கும் காற்றுடன் சுவாசாசயங்களில் பாய்கின்றன வென்பது நிராகரிக்கக் கூடாததாயிருக்கிறது. விஷயம் இப்படி இருப்பதினால், இரத்தமானது அதற்கு நெருங்கி இனமாயுள்ள பொருள்களை அவைகளின் உக்கிராணங்களிலிருந்து, எடுத்துக்கொள்ளுகிற தென்பதையும், அதன் அன்பின் ஆசைகளுக்கு அனுவயப்படுகிற பொருள்கள் அதற்கு இனமானவைகளென்பதையும் ஐயுறக்கூடாது. ஆகையினால் தான், சுவாசாசயங்களின் மிகவும் உள்ளுக்குள்ளான இடங்களிலும், பொக்குகளிலும், தங்களுக்கு வேண்டியதை உறிஞ்சுகிற சிறிய வாய்களையுடைய சிறிய நாளங்களில் பெருங்கூட்டங்களிருக்கின்றன; ஆகையினால், இருதயத்தின் இடது ஜடரிகைக்குள்பின் பாய்கிற இரத்தமானது, சோதியான நிறமுடைய சுத்த இரத்தமாக மாற்றப்படுகிறது. இந்த விஷயங்கள், ஒத்துப்போகாத பொருள்களிலிருந்து இரத்தம் தானே சுத்தம் செய்துக்கொள்ளுகிறதென்றும், தன்னுடன் ஒத்துப்போகப்பட்ட பொருள்களினால் தானே போஷித்துக் கொள்ளுகிற தென்றும், நிரூபிக்கின்றன. சுவாசாசயங்களி

னுள்ள இரத்தம், மனதின் ஆசைகளுக்கு ஒத்து தானே சுத்தி செய்துகொண்டு போஷித்துக் கொள்ளுகிறதென்பது, இது வரையில் தெரியாது, ஆனால் அது சூக்கும உலகத்தில் மிகவும் நன்றாய் தெரிந்திருக்கிறது ; ஏனென்றால், பரலோகங்களிலிருக்கும் அமரர்கள், தங்களிட ஞானத்தின் அன்புக்கு அன்னுவயப்படுகிற வாசனைகளிடத்தில் மாத்திரம் சந்தோஷப்படுகிறார்கள்; ஆனால் நரகத்திலிருக்கும் ஜீவன்கள் ஞானத்துக்கு எதிரிடையான அன்புக்கு அன்னுவயப்படுகிற நாற்றங்களிடத்தில் சந்தோஷப்படுகிறார்கள்; பின் சொல்லியவைகள் கவிச்சுகள், ஆனால் முன் சொல்லியவைகள் பரிமளங்கள். உலகத்தில் மனிதர்கள் தங்கள் இரத்தங்களை, அவர்களின் அன்பினிட ஆசைகளோடு அன்னுவயப்படுகிறதற்குத் தக்கபடி அம்மாதிரியான பொருள்களால் நிறப்புகிறார்களென்பது பலனாக ஏற்படுகிறது; ஏனென்றால், ஒரு மனிதனிட ஜீவன் எதை நோக்குகிறதோ, அதை அவனிட இரத்தம் அன்னுவயத்துக்குத் தக்கபடி தேடி, சுவாசத்தால் இழுக்கிறது. இந்த அன்னுவயத்தினால், ஒரு மனிதன் தன் அன்பு விஷயத்தில், அவன் ஞானத்தை நேசித்தால், சுத்தப்படுத்தப்படுகிறான் என்றும், அதை அவன் நேசிக்காவிட்டால், அசுத்தப்படுத்தப்படுகிறானென்றும், பின் தொடருகிறது. மேலும், மனிதனை பரிசுத்தம் செய்தலெல்லாம், ஞானத்தை சேர்ந்த, உண்மைகளால் உண்டாக்கப்படுகின்றன; மனிதனை அசுத்தப்படுத்துவதெல்லாம், ஞானத்தின் உண்மைகளுக்கு எதிரான பொய்கள் மூலமாய் உண்டாக்கப்படுகின்றன.

421. XVII. **சேர்த்து உயர்த்தப்படாவிட்டால் அன்பு அல்லது சித்தம் புத்தியிலும், புத்தியினாலும், அசுத்தமாக்கப் படுகிறது.**

ஏனென்றால், அன்பு உயர்த்தப்படாவிட்டால், அது அசுத்தமானதாய் நிற்கிறது, மேலேபிரிவுகள் 419, 420ல் பார்க்கவும். அது அசுத்தமாயிருக்கும்போது, பழிவாங்கலை யும், வெறுப்புகளையும் மோசங்களையும், தேவதூஷணங்களை யும், விபசாரங்களையும் போன்ற அசுத்தமானவைகளை நேசிக்கிறது; இவைகள் அப்பொழுது, மோகங்களென்று சொல்லப்படுகிற அதன் ஆசைகளா யிருக்கின்றன; அது தருமத்தையும், நீதியையும், நிஷ்கபடத்தையும், உண்மை யையும், கற்பையும் சேர்ந்தவைகளை தள்ளுகின்றது. அன் பானது, புத்தியிலும் புத்தியினாலும் அசுத்தப்படுத்தப் படுகிறதென்று சொல்லப்படுகிறது; அந்த அசுத்தமான பொருள்களால் தாக்கப்பட்டபோது புத்தியிலும், அன்பானது ஞானத்துக்குச் சேர்ந்த பொருள்களைத் தனது வேலைக்காரர்க ளாக செய்கின்றபோதாம், இன்னும் அதிகமாய், அது அவை களைக்கெடுத்து, பொய்ப்படுத்தி, பழுதாக்கும்போதும், புத்தியி னாலும் அசுத்தப்படுத்தபடுகிறது. இவைகளோடு அன்னுவயப் படுகிற இருதயத்தினிடவும், சுவாசாசயங்களில் அதன் இரத் தத்தினிடவும் நிலைமையைக் குறித்து, மேலே (பிரி.420) சொல் லியதற்கு அதிகமாய் சொல்ல வேண்டிய அவசியமில்லை; ஆனால், சுவர்க்கத்திலும் நரகத்திலும் அததற்கேற்றபடி சம்ப விக்கிறதுபோல, இரத்தம் சுத்திபடுத்தப்படுவதற்குப் பதிலாக அது அசுத்தப்படுகிறதென்றும், இரத்தம் பரிமளங்களால் போஷிக்கப்படுவதற்குப் பதிலாக கவிச்சுகளால் போஷிக்கப் படுகிறதென்றும் மாத்திரம் சொல்லப்படவேண்டும்.

422. XVIII. **புத்தியில், ஞானத்தினால் சுத்தப்படுத் தப்பட்ட அன்பு, சூக்குமமானதாகவும் அதிசூக்குமமானதாகவும் மாகிறது.** மனிதன் ஸ்தூலமாகபிறந்திருக்கிறான், ஆனால்,

புத்தியானது சுவர்க்கத்து வெளிச்சத்துக்கும், அன்பானது அதனுடன் சுவர்க்கத்து சூட்டுக்கும் உயர்த்தப்படுவதற்குத் தக்கபடி, அவன் சூக்குமமாகவும் அதிசூக்குமமாகவுமாகிறான்; அவன் அப்பொழுது, வசந்தகால வெளிச்சத்திலும், அதே காலத்தில் வசந்தகால சூட்டிலுமிருக்கிற ஈடன் தோட்டத்தைப் போலாகிறான். புத்தியானது சூக்குமமாகவும் அதிசூக்குமமாகவும் ஆகிறதில்லை, ஆனால் அன்பு அப்படியாகிறது; அன்பு அப்படி ஆனபோது, அது அதன் துணைவியாகிய புத்தியைகூட சூக்குமமாகவும்,அதிசூக்குமமாகவும்செய்கிறது. புத்தி கற்பித்து ஸ்தாபிக்கிறஞானத்தின் உண்மைகளுக்கு தக்கபடி வாழ்வதினால், அன்பானது சூக்குமமாகவும் அதிசூக்குமமாகவும் ஆகிறது. அன்பானது, அதன் புத்தியின் மூலமாய் இந்த உண்மைகளை உட்கொள்ளுகிறது, தானே அப்படி செய்கிறதில்லை; ஏனென்றால் அன்பானது, உண்மைகளை தெரிந்திருந்தாலொழிய, தானே உயர்த்திக்கொள்ள முடியாது, மேலும் உயர்த்தப்பட்டதும் அறிவுள்ளதுமான புத்தியின் மூலமாய்த்தவிர, இவைகள் அதற்கு தெரிந்திருக்க முடியாது; ஆகையினால், அவைகளை செய்வதினால், உண்மைகளை எவ்வளவு நேசிக்கிறதோ, அவ்வளவு அது உயர்த்தப்படுகிறது. விவேகத்துடன் அறிந்து கொள்ளல் ஒருசங்கதி, இச்சித்தல் வேறொரு சங்கதி; சொல்லுதல் ஒரு சங்கதி, செய்தல் வேறு சங்கதி. ஞானத்தின் உண்மைகளை தெரிந்து கொண்டு பேசியும், அவைகளை இச்சிக்காத படிக்கும் செய்யாதபடிக்கும், இருப்பவர்களுமிருக்கிறார்கள். ஆகையினால் அது அறிந்துகொண்டு பேசுகிற வெளிச்சத்தின் உண்மைகளை அன்பானது செய்யும் காலத்தில், அப்பொழுது அது உயர்த்தப்படுகிறது. இது அப்படி யிருக்கிறதென்பது, ஒரு மனிதன்

கேவலம் விவேகத்தினால் அறிந்துகொள்ளலாம்; ஏனென்றால், ஒரு மனிதன் அவைகளுக்கு விரோதமாய் வாழும்போது, அதாவது அவன் அவைகளுக்கு விரோதமாய் இச்சித்து, செயல்படும்போது, ஞானத்தின் உண்மைகளை அறிந்துகொண்டு பேசினால், அவன் என்னமனிதன்? இந்த நூலின் மூன்றாவது பாகத்தில் சொல்லிய,ஸ்தூலமானதென்றும்,சூக்குமமானதென்றும், அதிகசூக்குமமானதென்றும் சொல்லப்பட்ட மூன்று உயிரின் அந்தஸ்துகள் மனிதனுக்கு இருக்கிறபடியினால், ஞானத்தினால் சுத்தப்படுத்தப்பட்ட அன்பு சூக்குமமாகவும், அதிசூக்குமமாகவும் ஆகிறது; மனிதனானவன் ஒரு அந்தஸ்திலிருந்து மற்றதற்கு உயர்த்தப்பட சக்தியுள்ளவனா யிருக்கிறான். ஆனால், அவன் ஞானத்தினால் மட்டும் உயர்த்தப்படுகிறதில்லை; ஒரு மனிதனிட உயிரானது அவனிட அன்பாயிருப்பதினால், ஞானத்துக்குத் தக்கபடி வாழ்வதினால் உயர்த்தப்படுகிறான். ஆகையினால், ஞானத்துக்குத் தக்கபடி அவன் எவ்வளவு வாழ்கிறானோ, அவ்வளவு அதை அவன் நேசிக்கிறான்; பாவங்களாயிருக்கிற அசுத்தங்களிலிருந்து தானே சுத்தப்படுத்திக்கொள்ளுகிற அளவு, அவன் ஞானத்தை ஒத்து வாழ்கிறான்; அவன் இதை செய்கிற அளவு, ஞானத்தை நேசிக்கிறான்.

423. புத்தியில் ஞானத்தினால் சுத்தப்படுத்தப்பட்ட அன்பானது, சூக்குமமாகவும் அதிசூக்குகமமாகவும் ஆகிறதென்பது, சுவாசாசயங்கள் அவைகளின் பிரதம சுவாசிக்கும் நிலைமையில் வைக்கப்படுகிற இரத்தத்தின் தன்மையை எவனும் பார்க்க முடியாதபடியினால், இருதயத்தோடும் சுவாசாசயங்களோடும் இருக்கும் அன்னுவயத்தின் மூலமாய் நிஜமாகவே அறிந்துகொள்ளமுடியாது. இரத்தமானது அசுத்தத்தில்

மிகுந்திருக்கும், அப்படியிருந்தும், சுத்த ரத்தத்திலிருந்து வகையறுக்க முடியாமலிருக்கும். கேவலம் ஸ்தூலமான மனித னிட சுவாசம், ஞானியின்சுவாசத்தைபோல் ஒரேமாதிரியாக தோன்றும். ஆனல், அங்கே ஒவ்வொருவனும் அன்பினிடவும் ஞானத்தினிடவும் விவாகத்துக்குத் தக்கபடி சுவாசிக்கிறபடி யினுல், சுவர்க்கத்தில் வித்தியாசமானது கூர்மையாய் பேதம் கண்டுபிடிக்கப்படுகிறது. ஆதலால், தேவர்கள் அந்த விவாகத் தால் தெரிந்துகொள்ளப்படுகிற படியினுல், அவர்கள் சுவாசத் தாலும்கூட தெரிந்துகொள்ளப் படுகிறுர்கள். இந்தக்காரணத் துக்காகதான், அந்த விவாகத்தில் இல்லாத எவனுவது சுவர்க் கத்துக்கு வந்தால் அவன் இருதய வேதனையை உணர்ந்து, மரண வேதனையி லிருப்பவன்போல சுவாசம்விட வருந்தி, மூச்செறிந்து மன்ருடுகிறுன். ஆகையினுல் கூட அப்பேர்ப் பட்டவர்கள் தலைகீழாய் அங்கிருந்து கீழே தாங்களே விழு கிறுர்கள். தங்களைப்போன்ற சுவாசம் விடுகிறவர்களுடன் தாங்கள் சேருகிறவரையில் அவர்களுக்கு ஓய்வில்லை; ஏனென் ருல், அப்பொழுது அன்னுவயத்தின் மூலமாய் அவர்கள் ஒரேமாதிரி ஆசையிலும், ஆகையினுல் ஒரேமாதிரி சிந்தனை யிலுமிருக்கிறுர்கள். ஞானி விஷயத்தில், சிலரால் ஜந்து ஜீவன் என்று சொல்லப்படுகிற அதிக சுத்தமான இரத்தம்தான் சுத்தப்படுத்தப்படுகிற தென்றும், மனிதன் அன்பினிடவும் ஞானத்தினிடவும் விவாகத்தில் இருக்கிற அளவு அது சுத் தப்படுத்தப்படுகிற தென்றும். இவைகளிலிருந்து விசதமாகி றது. இந்த அதிக சுத்த இரத்தந்தான், அந்த விவாகத்துக்கு அடுத்து அன்னுவயப்படுகிறது; இந்த இரத்தமானது சரீரத் தின் இரத்தத்தில் ஓடுகிறபடியினுல்,பின்கூறிய இரத்தமும்கூட அதன்மூலமாய் சுத்தப்படுத்தப்படுகிறதென்று ஏற்படுகிறது.

அன்பானது புத்தியில் அசுத்தப்படுத்தபட்டிருக்கிறவர்களில், அது எதிரிடையா யிருக்கிறது. ஆனால் முன் சொல்லியபடி, யாருக்கும் இரத்தத்தின் எந்த அனுபோகத்தினாலும் இதை பரிசோதனைசெய்ய முடியாது; ஆனால், இவைகள் இரத்தத்துடன் அன்னுவயப்படுகிறபடியினால், அன்பின் ஆசைகளிலிருந்து, அவன் அதை பரிசோதனை செய்யலாம்.

424. **XIX.** **புத்தியிலும் புத்தியினாலும் அசுத்தப்படுத்தப்பட்ட அன்பானது, ஸ்தூலமானதாகவும், இந்திரியபம்பந்தமானதாகவும், சரீர சம்பந்தமானதாகவும் ஆகிறது.**

சூக்கும அன்பிலிருந்து பிரிக்கப்பட்ட ஸ்தூல அன்பு, சூக்கும அன்புக்கு விரோதமாயிருக்கிறது; எனென்றால், ஸ்தூல அன்பு என்பது தன்னையே நேசித்தலும், உலகத்தை நேசித்தலுமா யிருக்கிறது; சூக்கும அன்பு ஆண்டவரை நேசித்தலும், அயலானை நேசித்தலுமா யிருக்கிறது; தன்னையும் உலகத்தையும் நேசித்தல், கீழேயும் வெளியேயும் பார்க்கிறது, ஆண்டவரிடத்து அன்பு மேலேயும் உள்ளுக்குள்ளாயும் பார்க்கிறது. ஆகையினால், ஸ்தூல அன்பானது சூக்கும அன்பிலிருந்து பிரிக்கப்பட்டால், மனிதனிட சுய தன்மையிலிருந்து உயர்த்தப்பட முடியாது; ஆனால், அது அதில் அமிழ்ந்திருந்து, அது அதை நேசிக்கிற அளவு, அதனுடன் பற்றவைக்கப்பட்டிருக்கிறது. பிறகு, புத்தி ஏறி, ஞானத்தைச் சேர்ந்தவைகளை சுவர்க்கத்து வெளிச்சத்தால் பார்க்கிறபோது, அன்பானது ஞானத்தை பின்னுக்கு இழுத்து, தன் சுய தன்மையுடன் அதை தன்னுடனே சேர்த்துக்கொள்ளுகிறது, அங்கே ஞானத்தைச் சேர்ந்தவைகளை தள்ளுகிறது, அல்லது அவைகளை பொய்ப்படுத்துகிறது, அல்லது கீர்த்தியை அடைய அவைகளை பேசும்படி

யான வழியில் ஒழுங்காக்குகிறது. படிப்படியாய் ஏறவும், சூக்குமமாகவும் அதிசூக்குமமாகவும், ஸ்தூல அன்புக்கு சக்தி யிருக்கிறதுபோல், அம்மாதிரியே, படிப்படியாய் கீழே இறங் கவும், இந்திரிய சம்பந்தமுள்ளதாகவும் சரீர சம்பந்தமுள்ள தாகவும் ஆக அதற்கு சக்தியுண்டு ; உபயோகத்தைக் கோரும் அன்பிலிருந்தல்லாமல், ஆனல் தன்னிடமே கொள்ளும் அன் பிலிருந்து மாத்திரம் அதிகாரத்தை விரும்புகிறதற்கு தக்க படி, அது அதிக ஆழமாய் இறங்குகிறது. பேய்என்று சொல் லப்படுவது இந்த அன்புதான். இந்த அன்பிலிருக்கிறவர்கள், பரமார்த்த அன்பிலிருக்கிறவர்களைப்போல அதே மாதிரியாக பேசவும் செயல்படவும், சக்தியுள்ளவர்களாயிருக்கிறார்கள் ; ஆனல், இதை அவர்கள் ஞாபகத்திலிருந்து அல்லது சுவர்க் கத்து வெளிச்சத்துக்கு உயர்த்தப்பட்ட புத்தியிலிருந்து அக் காலத்தில் செய்கிறார்கள். அப்படியிருந்தும், அவர்கள் சொல்லுகிறதும், செய்கிறதுமான பொருள்கள், ஒத்துப்பார்க் கில், மேலுக்கு அழகாகத் தோன்றி, ஆனல் உள்ளே முழுமை யும் சொத்தையாயிருக்கிற பழங்களைப்போலவும், அல்லது ஓடுகள் உரமானதாக தோன்றி, ஆனல்முழுமையும் புழுஅரித் ததாயிருக்கிற வாதுமைப் போலவும், இருக்கின்றன. சூக்கும உலகத்தில் இந்தப் பொருள்கள் மனோபாவங்கள் என்று சொல்லப்படுகின்றன. அவைகளினல் மோகினிகள் என்று சொல்லப்பட்ட அங்கிருக்கும் பரத்தையர்கள் தாங்களே அழகான உடுப்புகளால் மினுக்கிக்கொண்டு அழகு செய்துக் கொள்ளுகிறார்கள் ; ஆனல், அந்த மனோபாவம் நீக்கப்பட்ட போது, அந்த மோகினிகள் ஆவேசங்கள்போல தோன்று கிறார்கள் ; தாங்களே சோதியுள்ள தேவர்களாக செய்துக் கொள்ளுகிற பேய்களைப் போல் அவர்களிருக்கிறார்கள்.

ஏனென்றால், மனிதன் தனியாயிருக்கும்போது சரீர அன்பு செய்கிறபடி, அந்த அன்பு அதன்புத்தியை அதன் உயர்ச்சியிலிருந்து பின்னிட்டு இழுத்து, தன்னிட சுய அன்பிலிருந்து நினைக்கும்போது, அப்பொழுது இயல்புக்கு அனுகூலமாக கடவுளுக்கு விரோதமாகவும், உலகத்துக்கு அனுகூலமாக சுவர்க்கத்துக்கு விரோதமாகவும், நரகத்தின் தீமைகளுக்கும் பொய்களுக்கும் அனுகூலமாக திருச்சபையின் உண்மைகளுக்கும் நன்மைகளுக்கும் விரோதமாகவும், ஆகையினால் ஞானத்துக்கு விரோதமாயும், அவன் நினைக்கிறான். ஸ்தூல மனிதர்கள் என்று சொல்லப்பட்டவர்கள் யாரென்று இவைகளிலிருந்து அறிந்து கொள்ளலாம். புத்தி விஷயத்தில் அவர்கள் ஸ்தூலமாயில்லை, ஆனால் அன்பு விஷயத்தில் அவர்கள் ஸ்தூலமாயிருக்கிறார்கள்; அதாவது கூட்டத்தில் பேசும்போது அவர்கள் புத்தியில் ஸ்தூலமாயில்லை, ஆனால் தாங்களே ஜீவனோடு பேசுகையில் அப்படியிருக்கிறார்கள். ஜீவனில் அப்படியிருக்கிறபடியினால், இறந்த பிறகு அன்பிலும் ஞானத்திலும் இரண்டிலும் ஸ்தூல ஜீவன்கள் என்று சொல்லப்படுகிறவர்களாகிறார்கள். பிறகு தன்னையே நேசித்தலிலிருந்து அரசாளும் மேலான அன்பிலும், அதே காலத்தில் புத்தியின் மேலான உன்னதத்திலும் உலகத்திலிருந்தவர்கள், சரீரத்தில் எகிப்து தேசத்துவாசனைக்கட்டிய பிரேதங்களைப் போலவும், மனதில் ஸ்தூலமாயும் மதிகெட்டவர்களாயும் தோன்றுகிறார்கள். இந்த அன்பே அப்படியிருக்கிறதென்று இக்காலத்தில் உலகத்தில் யாருக்குதெரியும்? அப்படியிருந்தும், உபயோகத்தைக் கோரும் அன்பிலிருந்து அரசாளும் அன்பு ஒன்று இருக்கிறது, ஆனால் தனக்காக அல்லாமல், பொது நன்மைக்காக உபயோகத்தைக்கோரும் அன்பிலிருந்து அது

இருக்கிறது. ஆயினும் மனிதனானவன் ஒரு அன்பை மற்றொன்றிலிருந்து பேதம் காணமாட்டான்; என்றாலும், அவைகளுக்குள்ளிருக்கும் வித்தியாசம் சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் இருக்கும் வித்தியாசத்தைப்போலிருக்கிறது. அரசாளும்படி கொள்ளும் இந்த இரண்டு அன்புகளுக்குள்ளும் இருக்கும் பேதங்களை **சுவர்க்கமும் நரகமும்** எனும் நூலில் பிரிவுகள் 551முதல் 565 வரையில் பார்க்கப்படலாம்.

425. **XX. பகுத்தறிவுடைமை என்று சொல்லப்படும் விவேகத்துடன் அறியும் சக்தியும், சுதந்தரம் என்று சொல்லப்படும் செயல்படும் சக்தியும் இன்னு மிருந்திருக்கின்றன.**

மனிதனுக்கு இருக்கிற இந்த இரண்டு சக்திகளும் மேலே (பிரிவுகள் 264 முதல் 267 வரையில்) சொல்லப்பட்டன. தான் ஸ்தூலமாயிருப்பதால் சூக்குமமாக அதாவது தூய குணமடைய சக்தியுடையவனாயிருக்க, மனிதனுக்கு இந்த இரண்டு சக்திகளும் இருக்கின்றன. ஏனென்றால், மேல் சொல்லியபடி, சூக்குமமாகிறதும், சீர்படுகிறதும், மனிதனிட அன்பாயிருக்கிறது; தன்னிட புத்தியின் மூலமாய், தீமை எதுவென்றும், நன்மை எதுவென்றும், ஆகையினால் உண்மை எதுவென்றும், பொய் யெதுவென்றும் தெரிந்தாலொழிய, அவன் சூக்கும மாகமாட்டான், சீர்படுத்தப்படவுமாட்டான். இவைகள் தெரிந்தபோது, இதையாவது அதையாவது தெரிந்தெடுக்க அவன் சக்தியுள்ளவனாயிருக்கிறான். அவன் நன்மையை தெரிந்தெடுத்தால், நன்மைக்கு வருகிற சாதனங்களைப்பற்றி அவன் புத்தியினால் அவன் தெரியப்படுத்தப்படலாம். மனிதனானவன் நன்மைக்கு வர சக்தியுள்ளவனாயிருக்கிற எல்லாசாதனங்களும் ஏற்படுத்திவைத்திருக்கின்றன. இவைகளைத் தெரிந்து, விவேகத்துடன் அறிந்து கொள்ளல்,

பகுத்தறிவுடைமைக்கு சேர்ந்தது, அவைகளை இச்சித்து செய்தல் சுதந்தரத்தைச் சேர்ந்தது. சுதந்திரம், தெரிந்து கொள்ளவும், விவேகத்துடன் அறிந்து கொள்ளவும், அவைகளை நினைக்கவும் இச்சித்தலை கூட கருதுகிறது. சூக்கும அல்லது பரத்தைச் சேர்ந்த பொருள்கள் புத்திக்கு எட்டாததென்றும், ஆகையினால், புத்தி நீங்கலாய் அவைகள் நம்பப்பட வேண்டுமென்றும், திருச்சபையின் சித்தாந்தத்தை அனுசரித்து நம்புகிறவர்கள், பகுத்தறிவுடைமை என்றும் சுதந்தரமென்றும் சொல்லப்படும், இந்த சக்திகளைப்பற்றி யாதொன்றும் தெரியாதவர்களாயிருக்கிறார்கள். சுதந்தரமென்று சொல்லப்பட்ட சக்தியை மறுக்கிறது தவிர வேறு யாதொன்றும் அவர்கள் செய்ய முடியாது. ஒருவன் தானே நன்மையைச்செய்ய முடியாதென்றும், ஆகையினால் மோட்சத்தை அடையும் இச்சையுடன் எந்த நன்மையும் செய்யப்படாதென்றும், திருச்சபையின் சித்தாந்தத்தால் நம்புகிறவர்கள், மனிதன் ஆதீனமுடையவனாயிருக்கிற, இந்த இரண்டு சக்திகளையம் சமய கோட்பாட்டிலிருந்து நிராகரிக்கிறது தவிர, வேறொன்றும் செய்ய முடியாதவர்களாயிருக்கிறார்கள். ஆகையினால் கூட, இவைகளில் ஸ்திரப்பட்டவர்கள் இறந்த பிறகு, அவர்கள்விசுவாசத்துக்கு தக்கபடி, இரண்டிலிருந்தும் நீக்கப்படுகிறார்கள்; அவர்கள் இருந்திருக்கக்கூடிய சுவர்க்கத்து சுதந்திரத்துக்குப் பதிலாக, நரகத்து சுதந்திரத்தில் அவர்கள் இருக்கிறார்கள்; அவர்கள் இருந்திருக்கக்கூடிய பகுத்தறி உடைமையிலிருந்து வந்த வானோர், ஞானத்துக்குப் பதிலாக நரகத்தைச் சேர்ந்த வெறியிலிருக்கிறார்கள். அதிசயம் என்னவென்றால், இந்த இரண்டு சக்திகளுக்கும் தீமைகளை செய்வதிலும், பொய்களை நினைப்பதிலும் ஓரிட முண்டென்றும், அவர்கள் ஒத்துக்கொள்வது

தான்; தீமைகளை செய்யும் சுதந்திரம் அடிமைத்தனமென்றும், பொய்களை நினைக்கும் ஞானவிசிட்டம் அறிவீனமானதென்றும், அவர்களுக்குத் தெரியாது. ஆனால், சுதந்திரமும் பகுத்தறிவுடைமையுமாகிய இந்த இரண்டு சக்திகளும் மனிதனுடையதல்லவென்றும், ஆனால் மனிதனிலிருக்கும் ஆண்டவருடையதென்றும், மனிதனுக்கு அவனுடையதாக அவைகளை உபயோகப்படுத்திக் கொள்ள விடப்படாதென்றும் மேலும், அவைகள் அவனில் எப்பொழுதும் ஆண்டவருடையதா யிருப்பதினால், அவனுக்கு அவைகள் அவனிட சொந்தமாக கொடுக்கப்பட முடியாதென்றும், மனதில் சாக் றதையாய் வைக்கப்படவேண்டும்; அப்படி யிருந்தாலும் அவைகளில்லாமல், அவனுக்கு உய்வில்லாமையால், அவைக மனிதனிடமிருந்து எப்பொழுதும் எடுத்துக்கொள்ளப்படுகி தில்லை; ஏனென்றால், மேல் கூறியபடி இந்த சக்திகளில்லா மல், அவனை தூய குணமுள்ளவனாக செய்யப்பட முடியாத ஆகையினால் மனிதன் தன்னிடமிருந்தே உண்மையை நினை கவும், தன்னிடமிருந்தே நன்மையைச் செய்யவும், சக்தியி லாதவனென்று திருச்சபையினால் கற்பிக்கப்படுகிறான். ஆனா மனிதனானவன் தன்னிடமிருந்தே உண்மையை நினைக்கிறத யும், தன்னிடமிருந்தே நன்மையைச் செய்கிறதாயும் தவி வேறுவிதமாய் உணராதபடியினால், தன்னிடமிருந்தேபோ அவன் உண்மையை நினைக்கிறதாயும், தன்னிடமிருந்தேபோ நன்மையை செய்கிறதாயும், அவன் நம்பவேண்டு மென்ப தெளிவாய் விசதமாகிறது. ஏனென்றால், இதை அவன் நம்பாவிட்டால், அவன் உண்மையையாவது நினைக்கிறதில்லை அல்லது நன்மையையாவது செய்கிறதில்லை, அதனால் அவனுக்கு சமயமென்பதில்லை; அல்லது தன்னிடமிருந்தே உண்

மையை நினைத்து நன்மையைச் செய்கிறான். இப்படி செய்தால், தெய்வத்தினுடையதை தனதாக வைத்துக்கொள்ளுகிறான். மனிதனானவன் தன்னிட மிருந்தேபோல் உண்மையை நினைத்து நன்மையை செய்யவேண்டு மென்பது, புதிய எருசலேம் நகரத்து வாழ்க்கை போதத்தில் ஆரம்பத்திலிருந்து முடிவுவரையில் பார்க்கப்படலாம்.

**426. XXI. சூக்கும அன்பும் அதிசூக்கும அன்பும், அயலானிடத்தும் ஆண்டவரிடத்தும் காண்பிக்கும் அன்பாயிருக்கிறது; ஸ்தூல அன்பும், இந்திரிய சம்பந்தமான அன்பும், உலகத்தையும் தன்னையும் நேசித்தலாயிருக்கிறது.**

முன் காண்பித்தபடி, அயலானிடத்து அன்பு என்றால், உபயோகங்களிடத்து அன்பு கூறுதல் என்றும், ஆண்டவரிடத்து அன்பு என்றால், உபயோகங்களைச் செய்தல் பொருட்டு கொள்ளும் அன்பு என்றும் கருதப்படுகிறது. இந்த அன்புகள் ஏன் சூக்குமமாகவும் அதிசூக்குமமாகவும் இருக்கின்றன வென்பதற்குக் காரணம், உபயோகங்களைநேசித்தலும், அவைகளிடத்து கொண்ட அன்பினால் அவைகளை செய்தலும், மனிதனிட சுயதன்மையின் அன்பிற்கு வேறானதாயிருக்கிறது என்பதாயிருக்கிறது. ஏனென்றால், ஞானத்துடன் உபயோகங்களை நேசிக்கிறவன் தன்னைப்பற்றி மதிக்கிறதில்லை, ஆனால் அவர்கள் நன்மைக்காக இயக்கப்படுகிற தனக்கு புறம்பான மற்றவர்களை ஆதரிக்கிறான். இந்த அன்புகள் மற்றவர்கள் பொருட்டு செய்யும் உபயோகங்களுக்கல்லாமல், தனக்காகவே செய்து கொள்ளும் உபயோகங்களை ஆதரிக்கிறபடியினால், இவைகளுக்கு எதிரிடையான அன்புகள், தன்னிடத்தும் உலகத்தினிடத்தும் பாராட்டும் அன்புகளாயிருக்கின்றன; இந்த கொள்கையிலிருந்து செயல்படுகிறவர்கள்,

தெய்வ ஒழுங்கை புரட்டி, ஆண்டவருக்கு பதிலாக தங்களை யும், சுவர்க்கத்துக்குப் பதிலாக உலகத்தையும் வைக்கிறார்கள்; அதனால் தான் அவர்கள் ஆண்டவரையும் சுவர்க்கத்தையும் விலக்கி பார்க்கிறார்கள்; அவைகளை விலக்கி பார்த்தல் நரகத்தை பார்க்கிறதாயிருக்கிறது. இந்த அன்புகளைப்பற்றி இன்னம் அதிகமாய் மேலே (பிரி. 424) பார்க்கப்படலாம். ஆனால், மனிதனானவன் தனக்காக நன்மைகளை செய்து கொள்ளும் அன்பை உணர்ந்து பார்க்கிறதுபோல், உபயோகங்களுக் காக உபயோகங்களை செய்யும் அன்பை உணர்ந்து பார்க்கிற தில்லை; அதனால்கூட அவன் உபயோகங்களை செய்யும் போது, அவைகளை உபயோகங்களுக்காகசெய்கிறதும், அல்லது தனக்காக செய்கிறதும், அவனுக்கு தெரியாது. ஆனால், அவன் தீமைகளை நீக்குகிற அளவு, உபயோகங்களுக்காக, உபயோகங் களைச் செய்கிறதாக, அவனுக்கு தெரிந்திருக்கட்டும்; ஏனென் றால், அவன் தீமைகளை நீக்குகிற அளவு, அவன் உபயோகங் களை தன்னிடமிருந்தல்லாமல், ஆண்டவரிடமிருந்து செய்கி றான். தீமையும் நன்மையும் எதிரிடையானவைகள்; ஆகையி னால், எவனொருவன் எவ்வளவு தூரம் தீமையில் இல்லாதிருக் கிறானோ அவ்வளவு தூரம் அவன் நன்மையிலிருக்கிறான். ஒரே காலத்தில் இரண்டு அதிகாரிகளுக்கு எவனும் ஊழியம் செய்ய முடியாதபடியினால், தீமையிலும் நன்மையிலும் ஒரே காலத் தில் எவனும் இருக்கமுடியாது. தான் செய்யும் உபயோகங் கள் உபயோகத்துக்காகவா, தனக்கே ஆகவா அதாவது, அந்த உபயோகங்கள் சூக்குமமானதா, அல்லது அவைகள் கேவலம் ஸ்தூலமானதாவென்று, மனிதனானவன் எந்த விவேகத்தினா லும் பார்க்காவிட்டாலும், அவன் தீமைகளை பாவங்களாக நினைக்கிறானா அல்லது இல்லையா என்கிற இந்த சோதனையினால்

அதை தெரிந்துகொள்ள சக்திபுடையவனுயிருக்கிருன் என்று தெரிந்திருக்கும்பொருட்டு, இவைகள் சொல்லப்பட்டன. அவைகள் பாவங்களென்று நினைத்து, அந்த காரணத்துக்காக அவைகளை செய்யாமல் அவன் விலங்கினுல், அப்பொழுது அவன் செய்யும் உபயோகங்கள், பரமார்த்தமானவைகளா யிருக்கின்றன. அவன் பாவங்களை வெறுப்புடன் நீக்குகையில் உபயோகங்களுக்காக உபயோகங்களிடத்து அன்பை, விவே கத்துடன் பார்க்க ஆரம்பிக்கிருன், அப்படி பார்த்தலும் அவைகளின் ஒரு சூக்கும சுகானுபவத்திலிருந்து உண்டா கிறது.

427. XXII. சித்தத்துடனும் புத்தியுடனும், அவை களின் சேர்க்கையுடனும் இருப்பதுபோல், தருமத்துடனும் விசவாசத்துடனும், அவைகளின் சேர்க்கையுடனும் விஷயம் ஒரேமாதிரியிருக்கிறது.

அவைகளின் பிரகாரம் சுவர்க்கங்கள் விசேஷித்து அறி யப்படுகிற அதிசூக்குமஅன்பென்றும், சூக்கும அன்பென்றும் இரண்டு அன்புகளிருக்கின்றன. அதிசூக்கும அன்பென்பது ஆண்டவரிடத்து அன்புகூறுதல், சூக்கும அன்பு என்பது அயலானிடத்து அன்புகூறுதல். அதிசுக்கும அன்பு நன் மையை நேசித்தல் என்பதும், சூக்கும அன்பு உண்மையை நேசித்தலென்பதுமாகிய, இதனுல் இந்த அன்புகள் பேதங் காட்டப்படுகின்றன; ஏனென்றுல், அதிசூக்கும அன்பிலிருக் கப்பட்டவர்கள், நன்மையினிடத்து இருக்கும் அன்பிலிருந் தும், சூக்கும அன்பிலிருக்கப்பட்டவர்கள் உண்மையினிடத்து அன்பிலிருந்தும், உபயோகங்களைச் செய்கிருர்கள். அதி சூக்கும அன்பின் விவாகம் ஞானத்துடனும், சூக்கும அன் பின் விவாகம் விவேகத்துடனும் இருக்கின்றன; ஏனென்றுல்,

நன்மையிலிருந்து நன்மையைச்செய்தல், ஞானத்தைச் சேர்ந்தது, உண்மையிலிருந்து நன்மையைச் செய்தல் விவேகத்தைச் சேர்ந்தது; ஆகையினால், அதிசூக்கும அன்புநன்மையைச்செய்கிறது, சூக்கும அன்பு உண்மையைச் செய்கிறது. அதிசூக்கும அன்பிலிருக்கப்பட்டவர்கள், ஞாபகத்தின்பேரில் அல்லாமல், தங்கள் உயிரின் பேரில் ஞானம் என்பதை எழுதிவைக்கப்பட்டிருக்கிறார்க ளென்பவைகளினால் தவிர வேறு விதமாய் இந்த இரண்டு அன்புகளுக்குள்ளும் இருக்கும் வித்தியாசத்தை விவரிக்க முடியாது ; அவர்கள் தெய்வீக உண்மைகளைப்பற்றி ஏன் பேசாமல், அவைகளை செய்கிறார்களென்பதற்கு இது தான் காரணம். ஆனால், சூக்கும அன்பிலிருக்கப்பட்டவர்கள், தங்கள் ஞாபகத்தின்பேரில் ஞானம் என்பதை எழுதி வைக்கப்பட்டிருக்கிறார்கள் ; ஆகையினால், தெய்வீக உண்மைகளைப்பற்றி அவர்கள் பேசி, ஞாபகத்திலிருக்கும் பத்ததிகளிலிருந்து அவைகளைச் செய்கிறார்கள். அதிசூக்கும அன்பிலிருக்கப்பட்டவர்கள், தங்கள்உயிரின்பேரில் ஞானம் என்பதை எழுதிவைக்கப்பட்டிருப்பதினால், தாங்கள் கேட்பது, உண்மையா அல்லது இல்லையா யென்று அவர்கள் உடனே அறிந்து கொள்ளுகிறார்கள் ; அது உண்மையாயென்று கேட்கப்பட்ட போது, அது அப்படி யிருக்கிறது அல்லது அது அப்படியில்லை என்று மாத்திரம் பதில் சொல்லுகிறார்கள். "உள்ளதை உள்ளதென்றும்,இல்லதை இல்லதென்றும் சொல்லுங்கள்" (மத்தே. V. 37) என்று, ஆண்டவர் சொன்ன வார்த்தைகளால் கருதப்பட்டவர்கள், இவர்கள் தான். அவர்கள் இவ்வித குணமுடையவர்களானபடியினால், விசுவாசம் என்பது என்ன? அது ஞானமல்லவா ? தருமம் என்பது என்ன ? அது செய்தலல்லவா ? என்று கூறி, விசுவாசத்தைப்பற்றி எதையும் கேட்க இஷ்ட

மில்லாதவர்களா யிருக்கிறார்கள். விசுவாசமானது, அறிந்து கொள்ளப்படாததை நம்புதலென்று அவர்களுக்கு சொன்னால், இந்த மனிதன் பிதற்றுகிறான் என்று சொல்லி பின் திரும்புகிறார்கள். மூன்றாவது சுவர்க்கத்திலிருப்பவர்களும், எல்லாரிலும் மிகவும் புத்திசாலிகளானவர்களும் இவர்கள்தான். தீமைகளை நரக சம்பந்தமானதென்று வெறுத்து, ஆண்டவரை மாத்திரம் பூஜை செய்து, தாங்கள் கேட்ட தெய்வீக விஷயங்களை உடனே வாழ்க்கையில் பிரயோகித்தவர்கள், அவ்விதமானவர்களாக உலகத்தி லாய்விடுகிறார்கள். இவர்கள் பேதைமையிலிருக்கிறபடியினால், குழந்தைகளைப்போல் மற்றவர்களுக்கு தோன்றுகிறார்கள்; மேலும் ஞானத்தின் உண்மைகளைப்பற்றி அவர்கள் யாதொன்றையும் பேசாதபடியினாலும், அவர்கள் சம்பாஷணையில் இறுமாப்பு இல்லாதபடியினாலும், அவர்கள் பேதைமையானவர்களாகக்கூட தோன்றுகிறார்கள். அப்படியிருந்தும், யாராவது பேசுவதை கேட்டால், சப்தத்திலிருந்து அவனிட அன்பைச்சேர்ந்த எல்லா பொருள்களையும், பேச்சிலிருந்து அவனிட விவேகத்துக்குச்சேர்ந்த எல்லா பொருள்களையும் அறிந்து கொள்ளுகிறார்கள். ஆண்டவரிடமிருந்து, அன்பினிடவும் ஞானத்தினிடவும் விவாகத்திலிருக்கப்பட்டவர்களும், மேல் கூறிய சுவர்க்கத்தின் அன்னியையத்தை குறி காட்டுகிறவர்களும், இவர்கள்தான்.

428. ஆனால் அயலானிடத்து அன்பாயிருக்கிற சூக்குமஅன்பிலிருருக்கிறவர்கள், தங்கள் உயிரின்பேரில் ஞானத்தை அல்லாமல், விவேகத்தை எழுதி வைக்கப்பட்டிருக்கிறார்கள்; ஏனென்றால், மேல் கூறியபடி நன்மையினிடத்து ஆசையிலிருந்து, நன்மை செய்தல் ஞானத்தைச் சேர்ந்தது, உண்மையினிடத்து அன்பிலிருந்து நன்மையைச்செய்தல் விவேகத்தைச்

சேர்ந்தது. விசுவாசம் என்ன வென்றும் கூட இவர்களுக்கு தெரியாது. விசுவாசம் என்பது சொல்லப்பட்டால், உண்மையைஅவர்கள் அறிந்து கொள்ளுகிறார்கள், தருமம் என்பது சொல்லப்பட்டால், உண்மையைச் செய்தலென்று அறிந்து கொள்ளுகிறார்கள்; அவர்களுக்கு நம்பவேண்டுமென்று சொல்லப்பட்டால், யார் உண்மையை நம்புகிறதில்லை, அது வெறும்பேச்சு என்று சொல்லுகிறார்கள். உண்மையை தங்களிட சுவர்க்கத்து வெளிச்சத்தில் அவர்கள் பார்க்கிறபடியினால், இதை அவர்கள் சொல்லுகிறார்கள்; ஆகையினால் தாங்கள் பார்க்காததை நம்புதல், பேதமை என்றும் அல்லது அறிவீனமென்றும் அவர்கள் சொல்லுகிறார்கள் இவர்கள்தான் மேல்சொல்லிய சுவர்க்கத்து சுவாசாசயங்களாயிருக்கிறார்கள்.

429. ஆனால் ஸ்தூல சூக்கும அன்பிலிருக்கப்பட்டவர்கள், ஞானம் என்பதும் விவேகம் என்பதும் தங்களிட உயிரின்பேரில் எழுதிவைக்கப் படாமலிருக்கிறார்கள், ஆனால் இந்த கொஞ்சம் விசுவாசமானது தருமத்துடன் சேர்ந்திருக்கிறவரையில், வேதத்திலிருந்து கொஞ்சம் விசுவாசம் அவர்களுக்கு உண்டு. இவர்களுக்கு தருமம் என்னவென்றும், அல்லது விசுவாசம் உண்மையா என்றும் தெரியாதபடியினால், இவர்கள், ஞானத்திலும் விவேகத்திலும் சுவர்க்கத்தில் இருக்கப்பட்டவர்கள் மத்தியில் இருக்க சக்தியில்லாதவர்களா யிருக்கிறார்கள், ஆனால் அறிவில் மட்டும் இருக்கிறவர்கள், மத்தியில் இருக்கிறார்கள். என்றாலும் அவர்களில் தீமைகளை பாவங்களாக நீக்கினவர்கள், இறுதியான சுவர்க்கத்திலிருக்கிறார்கள். அங்கே இரவில் சந்திரனிட வெளிச்சத்தைப்போல் ஒரு வெளிச்சத்தில் இருக்கிறார்கள். ஆனால், தெரியாததில் ஒரு விசுவாசத்தில் தாங்களே ஸ்திரப்படாமல், அதே காலத்தில்

உண்மையினித்து ஏதோ ஒரு ஆசையிலிருந்திருக்கிறவர்கள், தேவர்களால் கற்பிக்கப்பட்டு, உண்மைகளை அவர்கள் ஏற்றுகொள்ளுதலுக்கும், அவைகளோடு அன்னுவயப்படுகிற அவர்கள் வாழ்க்கைக்கும் தக்கபடி சூக்கும அன்பில், ஆகையினால் விவேகத்திலிருக்கிற கூட்டங்களில் சேர்க்கப்படுகிறார்கள். இவர்கள் சூக்குமமாகிறார்கள். மற்றவர்கள் ஸ்தூல சூக்குமமாய் நிற்கிறார்கள். ஆனால், தருமம் நீங்கலாய், விசுவாசத்தில் வாழ்ந்தவர்கள், எந்த நன்மையிலும், ஆகையினால் நன்மையினிடவும் உண்மையினிடவும் சுவர்க்கத்திலிருக்கப் பட்டவர்களிருக்கிற எந்தவிவாகத்திலும், இல்லாதபடியினால் நீக்கப்பட்டு பாலைவனங்களுக்கு துரத்தப்படுகிறார்கள்.

430. அன்பையும் ஞானத்தையும் குறித்து இந்த பாகத்தில் அறிவித்த எல்லாவிஷயங்களும், தருமம் என்பதினால் சூக்கும அன்பையும், விசுவாசம் என்பதனால், விவேகத்துக்கு மூலமாக உண்மையையும், கருதப்பட்டால் மாத்திரம், தருமத்துக்கும் விசுவாசத்துக்கும்சொல்லப்படலாம். சித்தமானது அன்பின் ஆசயமாகவும், புத்தியானது விவேகத்தின், ஆசயமாகவும் இருப்பதினால், நீங்கள் சித்தத்தையும் புத்தியையும் பற்றியாவது, அன்பையும் விவேகத்தையும் பற்றியாவது பேசினால் ஒன்றே.

431. மேல்கூறியதுடன் இந்த ஞாபகத்தில் வைக்க வேண்டிய விஷயத்தை சேர்க்கிறேன். சுவர்க்கத்தில், உபயோகத்தினிடத்து அன்பிலிருந்து தாங்கள் இருக்கும் கூட்டத்தின் பொருட்டு உபயோகங்களை செய்கிறவர்கள், மற்றவர்களைவிட அதிக புத்தியுள்ளவர்களாகவும் அதிக சுகமுள்ளவர்களாகவும் ஆகிறார்கள். அவர்களுக்கு,உபயோகங்களைச் செய்தலென்பது, ஒவ்வொருவனிட வேலையில், உண்மையாயும், நேர்மையாயும்

நீதியாயும், நம்பிக்கையாயும் செயல்படுதலாயிருக்கிறது. இதை அவர்கள் தருமம் என்கிருர்கள் ; ஆராதனையில் பூஜையைச் சேர்ந்த செயல்களை தருமத்தின் அடையாளங்கள் என்கிருர்கள், மற்றவைகளை கடன்களென்றும் உபகாரங்களென்றும் சொல்லுகிருர்கள் ; எவனுவது ஒருவன் தன்னிட சொந்தத் தொழிலின் கடைமைகளை உண்மையாயும், நேர்மையாயும், நீதியாயும், நம்பிக்கையாயும் செய்யும்போது, கூட்டமானது தன்னிட நன்மையில், ஜீவித்து, பிடிவாதமாய் நிற்கிறதென்றும், ஆண்டவரிடமிருந்து உள்ளே வரும் ஒவ்வொன்றும் உபயோகமாய் இருப்பதினுலும், அது பகுதிகளிலிருந்து கூட்டத்துக்கும், கூட்டத்திலிருந்து பகுதிகளுக்கும் போகிறபடியினுலும், ஆண்டவரில் இருக்கிறதென்பது இதுதான் என்றும், அவர்கள் சொல்லுகிருர்கள். பாகங்கள் என்பது அங்கே தேவர்களாயிருக்கிருர்கள், கூட்ட மென்பது அவர்களின் கூட்டமாயிருக்கிறது.

**கருப்பம் தரித்தபிறகு மனிதனிட ஆரம்ப உருவத்தின் சுபாவம்.**

432. பார்க்க முடியாதபடியினுல், கருப்பம் தரித்தபிறகு, கருப்பையில் மனிதனிட ஆரம்பம் அல்லது முதன்மையானதைப்பற்றி எந்த மனிதனுக்கும் தெரியாது; மேலும் ஸ்தூல கண்ணினுல் பார்க்கமுடியாத சூக்கும பொருளிலிருந்து அது வருகிறது. கருப்பம் தரித்தல் உண்டாகிற, தந்தையிடமிருந்து வரும் விதையாயிருக்கிற மனிதனிட ஆரம்பத்தைக்கூட பரிசோதிக்க இஷ்டப்படுகிற சிலர் உலகத்திலிருப்பதினுலும், ஆரம்பமாயிருக்கிற அவனிட முதல் உருவத்திலிருந்து மனிதன் நிறைவில் இருக்கிருனென்றும், பிறகு வளர்ச்சியினுல் பூரணமாக்கப்படுகிருனென்றும், நினைக்கும் பிழையில் இவர்களில் அநேகர் விழுந்துவிட்டபடியினுலும், அந்த பிரதம ரூப

சம்பந்தமான அல்லது முதன்மையான பொருள் உருவத்தில் என்னமாயிருக்கிறதென்றும், எனக்கு · தெரியப்படுத்தப்பட்டிருக்கிறது. தங்களுக்கு ஆண்டவரால் வெளிப்படுத்தப்பட்ட தேவர்களால் எனக்கு தெரியப்படுத்தபட்டது. அதை அவர்கள் தங்கள், ஞானத்தைச்சேர்ந்த விஷயமாக செய்துவிட்டபடியினாலும், தங்களுக்கு .தெரிந்ததை மற்றவர்களுக்கு தெரிவித்தல் அவர்களிட ஞானத்தின் ஆனந்தமானபடியினாலும், உத்திரவின்பேரில் சுவர்க்க வெளிச்சத்தில் என் கண்கள் முன்பாக மனிதனிட ஆரம்ப ரூபத்தை ஓர்விதமாய் காண்பித்தார்கள். அது பின்கூறும் மாதிரியிருந்தது. எந்த உபாங்கமுமில்லாமல் முன்புறத்தில், கொஞ்சம் முகத்தைப்போன்ற மென்மையான ரூபக்குறிப்புடன் ஓர் மூளையின் மிகவும் சிறிய பிரதிமைபோன்றது பார்க்கப்பட்டது. மேல்புறத்து கூன்முதுகுள்ள பாகத்தில் இந்த ஆரம்ப ரூபம் ஒன்றை ஒன்று அடுத்திருக்கும் சிற்றுண்டைகளின் அல்லது சிறு கோளங்களின் கூட்டமாயிருந்தது; ஒவ்வொரு சிறுகோளமும் இன்னும் அதிகமாய் நுண்ணியதான மற்றவைகளோடு நெருக்கமாய் சேர்க்கப்பட்டிருந்தது; இவைகளில் ஒவ்வொன்றும் அதே மாதிரி மிகவும் நுண்ணிய சிறுகோளங்களால் சேர்க்கப்பட்டிருந்தது. இவ்விதமாக அது மூன்று அந்தஸ்துகளாக இருந்தது. முன்புறத்தில், தட்டையான பாகத்தில், முகத்தின் ஓர் வகை ரூபக் குறிப்பு தோன்றியது. புறவளைவான பாகம் துலக்கமாயிருந்த ஒரு மிகவும் நேர்த்தியான தோலினால், சுற்றிலும் மூடப்பட்டிருந்தது. மிகவும் சிறிய மாதிரியில், மூளையின் ஓர் சாயலாயிருந்த இந்த புறவளைவான பாகம், அதன் முழு ரூபத்தில் மூளையானது இரண்டு அர்த்த கோளங்களாக பிரிக்கப்பட்டிருப்பதுபோல, இரண்டு மணமஞ்சங்களைப்போல் கூட பிரிக்கப்பட்டிருந்தன; வலது படுக்கை அன்பின் ஆசயமென்றும், இடது படுக்கை ஞானத்தின் ஆசயமென்றும், ஆச்சரியகரமான இணைக்கப்

பட்ட பொருள்களால், அவைகள் கணவன் கனைவிபோன்றும், அந்தரங்க சினேகிதர்கள் போன்றும், இருந்ததாகவும் எனக்கு சொல்லப்பட்டது. மேலும், நிருமாணம் விஷயத்திலும் பாய்ச்சல் விஷயத்திலும் உள்ளிருக்கும் இந்த சிறிய மூளையின் ஏற்பாடுகள், சுவர்க்கத்தின் ஒழுங்கிலும் ரூபத்திலும் இருந்ததாகவும், அதன் புறம்பான ஏற்பாடுகள், அந்த ஒழுங்குக்கும் ரூபத்துக்கும் எதிரிடையாயிருந்ததாகவும், சுவர்க்கத்து பிரகாசமாய் பிரகாசிக்கும் வெளிச்சத்தில் காண்பிக்கப்பட்டது மனிதனுனவன் பரம்பரையான துன்மார்க்கத்தால், எல்லாவித தீமையிலும் பிறந்திருப்பதாலும், இந்த தீமைகள் அங்கே அமிதமாய் குடியிருக்கிறபடியினாலும், ஆண்டவரிடமிருந்து வரும் அன்பினிடவும் ஞானத்தினிடவும், முன்கூறியபடி ஆசயங்களாக யிருக்கிற உயர்ந்த அந்தஸ்துகள் திறக்கப்பட்டால் ஒழிய, இந்ததுன்மார்க்கமானது,நீக்கப்படாதபடியினாலும், இவைகள் பார்க்கப்பட்டு, காண்பிக்கப்பட்ட பிறகு, சுவர்க்க ஒழுங்கிலும் ரூபத்திலுமிருந்த உள்ளுக்குள்ளான இரண்டு அந்தஸ்துகளும் ஆண்டவரிடமிருந்து வரும் அன்பினிடவும் ஞானத்தினிடவும் ஆசயங்களாயிருந்ததாயும் சுவர்க்கத்து ஒழுங்குக்கும் ரூபத்துக்கும் நேர் எதிரிடையாயிருந்த புறம்பான அந்தஸ்து,நரகத்தைச் சேர்ந்த அன்புக்கும் பைத்தியத்திற்கும் ஆசயமாயிருந்ததாயும், தேவர்கள் சொன்னார்கள். அன்பும் ஞானமும் அதன் சாரத்தில் ஆண்டவராயிருக்கிறதின் பொருட்டு அன்பும் ஞானமும் மனிதனேயாகிறபடியினாலும், மனிதனிட இந்த முதன்மைப் பொருள் ஒரு ஆசயமாயிருப்பதினாலும், அது ஒன்றன்பின் ஒன்றாய்க்கூட உடுத்துக்கொள்ளுகிற மானிட ரூபத்தை அடைய ஒரு தொடர்ச்சியான வேதனை, அந்த முதன்மைப் பொருளிலிருக்கிறதென்று ஏற்படுகிறது.

---

# New Light upon the Philosophy of India

OR

# Swedenborg and Saiva Siddhanta

**The Times Literary Supplement**, London :—

"This learned work by a distinguished Indian scholar of Saiva Siddhanta, the well—known philosophy of the Tamil people seeks to show the analogies and correspondences between that system and the teaching of Swedenborg."

**Saivam** :—" Therefore the Saivites are bound to feel grateful to the author of this book."

**Mr. T. V. Seshagiri Iyer**, late Judge of the Madras High Court in the **Swarajya:-** " Thoughtful and well reasoned discourse upon ultra mundane topics. I welcome Mr. Gopal Chetty's contribution both for its own sake and for the possibility it suggests for inaugurating a cosmopolitan religious movement."

**Rao Sahib S. Ramachandra Rao, M. A**—

............"I believe that no Hindu household would be full without it."

**Col. T. F. Dowden, R. E.** (ret), England:—"........... There are a few men who are influencing the world and are world powers for good and I reckon you amongst the best of them."

**Dr. L. D. Barnet, London,** the greatest European Orientalist and many others have spoken highly of the book

**Price Rs. 3-0-0**

# Translations from 'Swedenborg"

## பரம இச்சாஞான தீபிகை

## (Tamil "Doctrine of Uses")

அநாதி முத்த சித்துருவாகிய சிவபெருமானின் இச்சா ஞான சத்திகளின் சுபாவத்தையும், விரிவான தொழிற்பாடுகளேயும் குறித்து, இந்த ஞானநூல் எழுதப்பட்டுள்ளது. இது வரையில் கிரகிக்கமுடியாத சிதம்பர இரகசியங்கள் போன்ற அநேக தத்துவ சாஸ்திர உண்மைகள் இந்நூலில் யாவருமறிய முதல் முதல் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

விலை ரூ. 1-0-0

## OPINIONS

**Mr. M. S. Purnalingam Pillay, B.A., L.T.,** writes:—"His exposition of the relationship of the three great verities or entities in the way of the South Indian Saiva Siddhantam, is really admirable and the Tamil world cannot but be indebted to you for.............."

**Mr. T. Baktavatsalam Pillay, B.A.,** writes :—I commend the book to the public, and would exhort you to bring out works of the same kind in the near future for the edification of the religiously and philosophically inclined people.

**Mr. T. Ramalingam Pillay M.A.,** writes :—"I see it is on high metaphysical subject in a learned style suited to the gravity of the theme."

**Mr. V. M. Kalyanasundram Pillay** writes :—"I heartily thank you for your valuable work on behalf of the Siddhanta Public of South India."

**Mr. M. Balasubramania Mudaliar, B.A, B.L.** writes :—"I have read your Tamil book on 'பரம இச்சா ஞான தீபிகை எனும் காரிய சித்தாந்தம்' with considerable interest and instruction."

திருவாளர் ந. மு. வேங்கிடசாமி நாடார் :— "அன்பு ஞானம் என்பவைகளைப்பற்றிய சில புதிய கருத்துகள் இந்நூலில் வெளியிடப்பட்டிருக்கின்றன."